கும்பகோணம் அத்வைத ஸபை

# ...பான் விழா நினைவு மாலை







...பகோணத்தில் அத்வைத சபை ஸ்தாபித்த (1894) ஸ்ரீமத் பரிவ்ராஜகாசார்ய ...ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளாகிய ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ சங்கராசார்ய ஸ்வாமிகளவர்கள். மஹாமஹோபாத்யாயர்களாய் விளங்கிவந்த ...ரைகுடி ஸ்ரீ ராஜு சாஸ்த்ரிகள், திருவையார் ஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள், ...பரம் ஸ்ரீ ஹரிஹர சாஸ்த்ரிகள் முதலிய பல பண்டிதர்களும் புதுக்கோட்டை ...ன் ப்ரம்மஸ்ரீ ஏ. சேஷய்யா சாஸ்த்ரிகள் முதலியவர்களும் கூடிய காட்சி.

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், கும்பகோணம்.

...மை பதிவு] 1945 [விலை ரூ. 2—8—0




॥ श्रीः ॥

॥ श्रीगुरुभ्यो नमः ॥

कुम्भघोणे विराजमानायाः अद्वैतसभायाः

सुवर्णमहोत्सवे समर्पिता

# ॥ द्राविडी मालिका ॥

॥ ॐ ॥

## ॥ समर्पणम् ॥

अथात आदेशो नेति नेति । न ह्येतस्मादिति नेत्यन्यत्परमस्ति ॥

(बृहदारण्यके)

सत्यं ज्ञानमनन्तं ब्रह्म ॥ (तैत्तिरीयके)

सर्वं खल्विदं ब्रह्म ॥ (छान्दोग्ये)

नेह नानास्ति किंचन ॥ (कठवल्ल्याम्)

अहं ब्रह्मास्मि ॥ (बृहदारण्यके)

ब्रह्म वेद ब्रह्मैव भवति ॥ (छान्दोग्ये)

॥ ओं तत् सत् ॥

ஸ்ரீ:
ஸ்ரீ குருப்யோ நம:

# கும்பகோணம் அத்வைத ஸபை
# பொன் விழா நினைவு மாலை

இஃது
கும்பகோணம் அத்வைத ஸபையின் பொன் விழாவிலே
அத்வைத வுண்மை எல்லா அநுபவ நூல்களிலும் ஊடுருவியுள்ளதைத்
தெளிந்தெடுத்தெழுதிச் சமர்ப்பித்த

## தமிழ்க் கட்டுரைகளின் தொகுதி

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான
**ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**
அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடன்
விளங்குவது






श्रीकामकोटिर्विजयते

**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**
57, மேல டபீர் தெரு :: கும்பகோணம்

ஜூலை, 1945

 [விலை ரூ. 2—8—0

# விஷய ஸூசிகை

விஷயம் | பக்கம்






The Liberty Press, G.T., Madras

உ

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளாய் விளங்கும்
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸம்யமீந்த்ரர்கள் கும்பகோணம்
அத்வைத சபையின் பொன் விழாத்
தருணத்தில் அனுக்ரகித்தருளிய

# ஸ்ரீமுகம்

*தமிழ் மொழி பெயர்ப்பு*

---

உலகிலே பிறவி யெடுத்த யாவர்க்கும் உதவியளிக்கும் பொருள்களுக்குள் உண்மைப் பொருளாம் பரம்பொருளை விளக்கித் தருவதும் எவ்வுதவியைக் காட்டிலும் மேலான உதவி இல்லையோ அத்தகைய பேருதவியைச் செய்வதும் அத்வைத வித்தையே யாம். துன்பத்தி லுழலும் ஜீவர்களுடைய துன்பம் அனைத்தையும் துடைப்பதே பேருதவியாகும். உண்மை யுணர விரும்புவோர் எவ்வுண்மையை யுணர்ந்ததும் பூர்ண சாந்தியை அடைகின்றனரோ, அதுவே உண்மைப் பொருள். "ஒருமையை யுணர்பவனுக்கு மயக்கமேது? துயரமேது?" எனப் பொருள் படும் வாக்கியம் ஈசாவாஸ்ய உபநிடதத்தில் உள்ளது, "ஒருமை யுணர்த்தும் அத்வைத வித்தை துயரங்களையெல்லாம் வேருடன் அழிக்குந் தன்மையை யுடையது" என்று இவ்வாக்கியம் முழக்குகிறது.

"துவைதம் மாயை, அத்வைதமே உண்மை" (மாண்டுக்யம், ஆகம ப்ரமாணம் 17), என்றும் "அது உண்மை; அது ஆன்மா; நீ அது ஆகின்றாய்" (சாமவேதம் சாந்தோக்யோபநிடதம், 6, 16) என்றும் கூறும் வாக்கியங்கள் அத்வைத தத்துவத்தின் உண்மையை அறிவுறுத்துகின்றன.

அத்வைத வித்தையானது துயரங்களுக்குக் கொள்கலன்களாகிய ஆன்மாக்களிடை கண்கூடாகக் காணும்

துயர்க் கூட்டத்தை எவ்வாறு விலக்குகின்றது? துயரம், அச்சம் ஆதியவற்றை அடியுடன் நீக்க வேறு வழிகள் இல்லையா?

துயரத்தின் வேர் அழிக்கப்படாமலே துயரம் முழுவதும் அழிதல் இயலாது. வேள்வி வேட்டல், உபாஸனை முதலியவைகளும் பொருள்களும் அவ்வப்பொழுது ஏற்படும் துயரங்களைச் சிறிதளவு நீக்க வல்லவையாயினும், மறுமுறையும் துளிர்க்காதபடி துயரொழித்தல் என்பது துயரத்தின் மூலத்தை யொழித்தாலன்றி முடியாது.

இத் துயரத்திற்கு மூல காரணம் யாது?

'பிறவி' யென்பர் ஆராய்ச்சியாளர். "உடலுடையவனுக்கு இன்ப துன்ப நீக்கங்களே இல்லை" என்பது வேதம்.

அப் பிறவிக்குக் காரணம் யாது?

"கருமம்" என்பர் அவ் வுய்த்துணர்வார்.

மனிதன் கருமம் புரிவதை விட்டுவிடின், துயரம் முழுதும் நீங்குவது கைக்கிட்டும். ஆதலால், வீட்டில் விருப்புள்ளவன் (பக்தி, ஞானம் முதலிய) வேறு வழிகளைச் சிந்திக்கமாட்டான் என்ற ஐயுறவு தோன்றலாம்.

முற் பிறவிகளிலும், இப் பிறவியிலும் இந்த விநாடி வரை செய்யப்பெற்ற கருமங்களுக்கு மூலமாகிய ஒன்றை அழிக்காமல் 'கருமங்களை ஆற்றுதொழிதல்' என்பது வாய்ச் சொல்லாகவே முடியும். ஆயின், அக் கருமங்களுக்கு அடிக் காரணம் யாது?

பற்றே என்பர் தந்திரகாரர். அப் பற்றினையும், அப் பற்றினைப் பற்றியெழும் வெறுப்பு, அச்சம் ஆதியவற்றையும், குற்றமென்று சொற்றனர். எப்பொருளாயினும், அதில் விழைவோ, வெறுப்போ இருக்கும் வரை அப்பொருளைக் கொள்ளவோ, தள்ளவோ மனிதன் முயன்று கொண்டே யிருப்பான்.

அந்தக் குற்றத்திற்கும் அடிக் காரணம் யாது?

"இரண்டாவதன் குற்றமே" என்பர் பரம்பொருளுணர்ந்தோர். "இரண்டாவதினின்றும் அச்சம் ஏற்படுகின்றது" என்பது மறைமுடி. இரண்டாம் பொருளின் தோற்றமே இல்லையாயின், பற்றுக் கோடற்றமையினால் செயலுக்குக் காரணமான அச்சத்துக்கும், வெறுப்புக்கும், விருப்புக்கும் இடமே யிராது.

"எப்பொழுது இவனுக்கு எல்லாம் ஆத்மாவாயிற்றோ, அப்பொழுது எதனால் எதைப் பார்க்க வியலும்? எதனால் எதை நுகர முடியும்? எதனால் எதை யறிய முடியும்?" என்பது வேதம்.

அந்த இரண்டாம் பொருள் தோற்றுதற்குக் காரணம் என்னை?

'பொய்யறி' வென்பர் மேன்மை மிக்க ஆராய்ச்சியாளர்.

நியாயமறிந்த ஆசிரியர்களால் ஸம்ஸார மனைத்துக்கும் முதல் வித்து என்று முடிவு கட்டப்பட்ட அப்பொய்யறிவு இரண்டற்ற ஒன்றை அறிந்துணர்ந் தனுபவிப்பதாலேயே நீங்கும்; இம் முறையில் ஜீவர்களுக்கு அத்வைத வித்தை பெரிதும் உதவுகின்றது. இரண்டெனும் பொய்யான அஞ்ஞானத்தை நீக்குதல் இரண்டற்ற ஒன்றெனும் உண்மையை அறிந்துணர்ந் தனுபவிப்பதாலன்றி வேறு எதனாலும் ஆகாது. ஏன்?

(1) மற்ற எதுவும் அவ் வஞ்ஞானத்திற்கு எதிர் ஆகாமையால்.

(2) ஞான மொன்றே அஞ்ஞானத்தை நீக்குமாகையால்.

மன அமைதி, இறைவனருள் முதலிய யாவும் இத்தகைய அத்வைத ஸாக்ஷாத்காரத்தையே கொடுக்கின்றன.

"இது முழுவதும் பிரும்மமே" என்று வேதங்களிற் கூறப்படும் அந்த அத்வைதம் "ஆனந்தமே பிரும்மம் என்று அறிந்தார்" என்றும், "அறிவும் ஆனந்தமும் பிரும்ம" மென்றும் வேதங்களில் இனிமையாகப் பாடப்

படுவதால் அம்மெய்ப் பொருள் 'பரமானந்த கன' மாத லின் ஜீவர்களுடைய மேன்மையான புருஷார்த்தமாகின் றது. அதனைக் கூறும் அத்வைத வித்தையும் மக்களிடம் அன்னையார் தந்தையார் இருவரினும் அதிகம் அன்பு கொண்டது ஆதலால் பெரிதும் உதவுகின்றது.

இரண்டற்ற பரம்பொருளொன்றே உண்மைப் பொருள் என்பதில் மக்களின் நன்மையைக் கோரும் வேத அன்னை பொருந்து வழியைத் தானே விளக்குகிறாள்.

உலகில் காரணத்தினும் அதிகமான அம்சம் காரியத் தில் யாதுள்ளது? "குடத்துக்கு மண்ணே காரணம்" குடத்தில் மண்ணுருண்டையைவிட அதிகமான அம்சம் யாதிருக்கிறது? பெயர் மாற்றமும், உரு மாற்றமும். 'குடம்' என்பது பெயர் மாற்றம். பாதம், பெருத்த வயிறு முதலியவற்றையுடைய வடிவம் உருமாற்றம்.

இவ் விரண்டுமே நாம ரூபங்கள் என்று ஆங்காங்கு வேதங்களிலே கூறப்படுகின்றன. "பரவெளியே பெய ரையும், உருவத்தையும் தாங்குகிறது. இவ் விரண்டும் எதனுள் அடக்கமோ, அதுவே பிரும்மம்" "(எவன்) எல்லா உருவங்களையும், விரித்துப் பெயர் வைத்து அவற் றைக் கூறிக்கொண்டிருக்கிறானோ, அவனே தீரனான பரமாத்மா."

"பெய ருருவங்களை விளக்குகிறேன்" என்பன வேதங்கள். அறிந்தவன் பெய ருருவங்களினின்றும் விடு பட்டவன்.

"மண்ணே குடம்; காரணமே காரியம்; பெயர் மாற்றமும் உருமாற்றமும் கற்பனை மாத்திரமே." அத னாலேதான் வேதம் கூறுகின்றது:—"காரிய உருவம் வாயால் மொழியப்படும் பெயர்; மண் என்பது மாத் திரமே உண்மை" என்று. இங்கு மண் மாத்திரமே என்னும் தேற்றேகாரத்தால், காரிய உருவத்தின் கற்ப னைத் தன்மையும், காரணத்தினுடைய உண்மைத் தன்மை யும் குறிக்கப்படுகின்றன.

இவ்வாறு காரணத்தின் காரணம், அக் காரணத்தின் காரணம் என்று காரண வரிசையை ஆராயுங் காலத்து,

'பரமகாரணம் பிரும்ம' மென்று நிச்சயித்து, பிரும்மம் ஒன்றினுக்கு மட்டுமே வெறும் வார்த்தையிலன்றி பொருளிலே ஸத்யத்வம் என்னும் பேருண்மையும், மற்ற யாவற்றினுக்கும் பிறிநிலே ஏகாரத்தால் ஸத்யத்திற் கெதிரான கற்பனைத் தன்மையும், பொருத்தங்களைக் காட்டும் வாயிலாக, வேதத்தால் தெளிவுற விளக்கப்பெற்றன. ஒரு நூலின் கருத்தைத் தெளிவதற்குப் பொருத்தங் காட்டலே சான்றும். சாந்தோக்கியத்தில் "அது நீ ஆகிறாய்" என்று அத்வைதத் தன்மை எடுத்துக் காட்டப்பெற்ற அத்தியாயத் தொடக்கத்திலேயே, "சௌமியனே, காணப்படும் இப் பொருளின் படைப்புக்கு முன் அவ் வுண்மைப் பர ப்ரும்மம் இரண்டற்ற ஒன்றே" என்று பரம காரணமாக எடுத்துக் காட்டப் பெற்றமையால், அத்தகைய அத்வைத பிரும்ம தத்துவத்திற்குப் பேருண்மைத் தன்மை நிலைபெற்றதாயிற்று.

இவ்வாறு பிறவற்றிற்கு எளிதல்லாத முறையில் உலகினுக் குதவும் ஒப்பற்ற அத்வைத வித்தை தடையின்றி எங்கும் பரவுவதற்கு ஊக்கஞ் செலுத்தும் 'அத்வைத சபை' என்னும் நங்கைக்கு நகமுதல் முழுவதுமே பொன்மயனான பரமாத்மாவே பர்த்தாவாயிருந்து, அகர முதலாய் க்ஷகர விறுதியாய் உள்ள ஸம்ஸ்கிருத *ஸுவர்ணங்களுக்குச் சமமான எண்ணிக்கையுடைய (51) ஆண்டை அடைந்ததற் கறிகுறியாகக் கொண்டாடப் பெறும் 'பொன் விழா' வில், ஆஸ்திக உலகமாம் மேகம் பொழியும் சுவர்ணதாரையில் (இவளை) நீராட்டி, புலவர் குழாத்தின் முகத்தில் விளங்கும் சுவர்ணத்தாலான (நல்ல எழுத்துக்களாலான) முகத்தணி யணிவித்து, ஆயிர மணிகளா லலங்கரித்து, இவளது குழந்தைகளை நிகர்த்த ஆஸ்திக மக்களனைவரையும், சிறப்பாக வீட்டின்பம் விரும்புவாரையும், பல்லாயிர மாண்டு பரிபாலித்து, அவருள்ளங்களைப் பேரானந்தத்திலே திளைக்கச் செய்வாராக என்று ஆசீர்வதிக்கின்றோம்.

**நாராயண ஸ்ம்ருதி.**

---

* ஸுவர்ணம் : (1) நல்லெழுத்து (2) பொன்.



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்



கும்பகோணம் அத்வைத ஸபா பொன் விழா கொண்டாடிய ஸமயத்தில் எடுத்த படம்
[28—2—45 — 7—3—45]

வைதிகோத்தமர்களான பண்டிதர்களால் அலங்கரிக்கப்பட்ட ஸபையின் மத்தியில் ஆசார்யவர்யர்களான ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் ஸிம்மாதனத்தில் அமர்ந்து அனுக்ரஹிக்கும் காட்சி.




கும்பகோணத்தில் அத்வைத சபையை ஸ்தாபித்த
ஸ்ரீ பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீ ஜகத்குரு
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளின் படம்



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய

ஜகத்குரு ஸ்ரீமத் சங்கரபகவத் பாதர்களின் படம்



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள்
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

# முன்னுரை

ஒருவன் பாடுகிறான். ராகத்தில் அநேகவிதமாக ஸ்வரங்களில் ஸஞ்சாரம் செய்கிறான். ஒரு மணி பாடினால், அதில் சில நிமிஷங்கள்தான் மூர்ச்சனை ஏற்படுகிறது. அப்பொழுது எல்லோரும் தன்னை மறக்கிறார்கள்; கரகோஷம் செய்கிறார்கள்.

ஒரு பெரிய மரம் வளர்ந்திருக்கிறது. ஒரு கொடி படர்ந்திருக்கிறது. இலைகள் நிறைந்திருக்கின்றன. பூக்கள் மலர்ந்திருக்கின்றன. பிஞ்சுகள் விடப்பட்டிருக்கின்றன. காய்கள் தொங்குகின்றன. பழங்கள் பளுவாயும் உதிர்ந்துகொண்டும் இருக்கின்றன. வேரை நாக்கில் ருசி பார்த்தால் 'சப்' என்னும் ரசம் வெளியாகிறது. பட்டையை ருசி பார்த்தால் துவர்க்கிறது, இலை கசக்கிறது, காய் புளிக்கிறது, பழம் தித்திக்கிறது; தித்திப்பு முதிர்ந்தால் மட்டுமே பழுத்து காம்பினின்று விடுபடுகிறது. விடுபடுதலே வீடு. இதுவே பந்த மோக்ஷம். மதுரம் நிறைந்தபொழுது, மோக்ஷம் தானே வருகிறது. பட்டையும் இலைகளும் கிளைகளும் பிஞ்சுகளுமே மரத்தில் அதிகம். பழுத்த பழம் எப்பொழுதோ, எங்கேயோ, ஓரிடத்தில்.

இங்ஙனமே சாஸ்திரங்களும்; இங்ஙனமே கலைகளும். இயற்கையே இங்ஙனமிருக்கும்பொழுது, பெரியோர்களின் கருத்தின் வளர்ச்சியும் இங்ஙனமே. எந்த வேதத்தைப் பார்த்தாலும் எந்த சாஸ்திரத்தைப் பார்த்தாலும், எந்த பிரபந்தத்தைப்பார்த்தாலும், வேரிலும் பட்டையிலும் கட்டையிலும் பிஞ்சிலும் இருப்பதுபோல், கசப்பும் புளிப்பும் துவர்ப்பும்போல் வேறுபட்ட துவைதமான எண்ணங்களும் வாக்கியங்களுமே காணப்படும். ஆனால், அந்த சாஸ்திரமோ கலையோ கருத்தின் வளர்ச்சியோ பூர்ணமடைந்திருந்தால் அங்கு, 'தான்' என்பதை இழந்த அத்வைதம் என்னும் மதுரமான பழம் பழுக்காமலிராது. ஆனாலும், தேடித்தான் பார்க்கவேணும். புண்ய புருஷர்களுக்குக் கையிலும் வந்து விழும். அத்வைதமென்னும் மதுரத்திற்கு

விரோதமான துவைதத்தையே கருத்தாகக்கொண்ட நூல்களி லும், அந்நூல்கள் பூர்ணமாக வளர்ச்சியைப் பெறும்பொழுது, அங்கு தன்னையறியாது அத்வைதம் மிளிரும். கசப்பென்னும் ஒரு சுவையையே பிரதானமாகக் கொண்ட வேப்ப மரமும், தான் பழுக்கும்பொழுது, மதுர ரஸத்தைப் பிரிந்திருக்க முடிய வில்லை. புளிப்பென்னும் ஒரே ரசத்தைப் பிரதானமாகக் கொண்ட புளியமரத்திலும், பழுக்கும்பொழுது, மதுரம் மிளிரா திருக்கவில்லை. அதுபோன்று, மத்வ மதத்தையே ஆதாரமாகக் கொண்டு, 'மத்வ மதத்தை விடாதீர்கள்' என்று கீர்த்தனம் செய்த புரந்தர விடல தாஸரும், பகவானுடைய ஸ்வரூப வைபவத் தைச் சொல்லிக்கொண்டு வரும்பொழுது, கீழ்வருமாறு புகழ் கின்றார்: 'ஸாமான்யமல்ல ஸ்ரீஹரிஸேவை' என்று ஆரம்பித்து ஸர்வத்ர ஸ்ரீஹரி வியாப்தனென்றும் ஸர்வேச்வரனென்றும் ஸர்வாந்தர்யாமீச்வரனென்றும் ஸர்வமும் அவனேன்றும் 'ஸர்வ மூர்த்தி ஸ்ரீவிடல' என்று முடிக்கிறார். பர்த்ருஹரி என்னும் மஹானும், தான் மோக்ஷத்தை யடையும்பொழுது, அத்வைத மோக்ஷத்தைப் பரிஹஸிப்பது என்ற நிலையிலேயே அத்வைத மோக்ஷத்தின் ஸ்வரூபத்தை உலகத்திற்கு வெளிப்படுத்துகிறார். தான் மோக்ஷ ஸாதனமாக இதுகாறும் அணிந்துவந்த விபூதி ருத்ராக்ஷங்களைப் பார்த்து அவர் சொல்லுவதாவது:—"நான் உங்களிடம் விடைபெற்றுக் கொள்கிறேன். இதுகாறும் உங்களை அணிந்ததின் பயனாக பரமாத்மா இன்று ஸந்தோஷித்துவிட் டார். அதன் பயனாக என்னை மோக்ஷமென்னும் காரிருளில் மூழ்த்திவிட்டார். இனி உங்களை நான் எவ்வாறு ஆராதிப்பேன்?" என்று மோக்ஷத்தை நிந்தித்துக்கொண்டே, மோக்ஷத்தை வெளி யிடுகிறார்.

भस्मोद्धूलन भद्रमस्तु भवते भो स्नान तुभ्यं नमः
हा सोपानपरंपरे गिरिसुताकान्तालयालंकृते ।
अद्याराधनतोषितेन विभुना युष्मत्सपर्यासुखा-
लोकोच्छेदिनि मोक्षनामनि महामोहे निलीयामहे ॥

குலசேகராழ்வார் திருமாலைப் பார்த்து, "நான் உன் திருவடி களை நமஸ்கரிக்கின்றேன்; ஆனால், அத்வைதத்துக்காக அன்று.

உன் பக்தி ஒன்றிருந்தால் போதும்'' என்ற கருத்துடன் சொல்லும்போதும், திருமாலின் திருவடியைத் தொழுவது அத்வைதத்தைக் கொடுக்க யோக்யதையுள்ளது என்று அறிவிக்கிறார்:

नाहं वन्दे तव चरणयोर्द्वन्द्वमद्वन्द्वहेतोः
कुंभीपाकं गुरुमपि हरे नारकं नापनेतुम् ।
रम्या रामा मृदुतनुलतानन्दने नापि रन्तुं
भावे भावे हृदयभवने भावयेयं भवन्तम् ॥

—முகுந்த மாலை

அப்பைய தீக்ஷிதர், மறைமுடிகளுக்கெல்லாம், ஆகமங்களுக்கெல்லாம், புராணங்களுக்கெல்லாம், மனு முதலிய தர்மநூல்களுக்கெல்லாம், எல்லா பிரபந்தங்களுக்கும், பாரதம் முழுவதிற்கும், பிரும்ம ஸூத்ரங்களுக்கும், பெரியோர்களான பண்டைய ஆசார்யர்களுக்கெல்லாம், அத்வைதமாம் வேத முடிவே முடிவு என்கிறார் :

यद्यप्यद्वैत एव श्रुतिशिखरगिरामागमानां च निष्ठा
साकं सर्वैः पुराणैः स्मृतिनिकरमहाभारतादिप्रबन्धैः ।
तत्रैव ब्रह्मसूत्राण्यपि च विमृशतां भान्ति विश्रान्तिमन्ति
प्रत्नैराचार्यरत्नैरपि परिजगृहे शंकराद्यैस्तदेव ॥

—சிவார்க்கமணி தீபிகை

ஆயினும், துவைத விசிஷ்டாத்வைத நிலைகளிலிருந்து சிவகிருபையைப் பெற்றவனுக்கே அவ்வுண்மை திறக்கும் என்றும் சொல்கிறார் :

तथाप्यनुग्रहादेव तरुणेन्दुशिखामणेः ।
अद्वैतवासना पुंसामाविर्भवति नान्यथा ॥

—சிவார்க்கமணி தீபிகை

ஸ்ரீ ஆதி சங்கராசார்ய ஸ்வாமிகளும்,

देहबुद्ध्या तु दासोऽहं जीवबुद्ध्या त्वदंशकः ।
आत्मबुद्ध्या त्वमेवाहम् इति वेदान्तडिण्डिमः ॥

"தேகம் நான் என்ற எண்ணம் இருக்கும்வரை, பரமனுக்கு யான் பணிசெய்யும் ஊழியன் ; தேஹத்திற்கு வேறான ஜீவனென்று

ஒரு தனிப்பொருள் யான் என்ற எண்ணமிருக்கும் வரை, யான் பரமனின் ஒரு பகுதி; 'எங்கும் நிறைந்த அவ்வறிவே யான்' என்று மனமென்னும் கட்டு விலகியபொழுது, 'பரமனே யான்' என்று மறைமொழிகள் முரசறைகின்றன" என்கிறார்.

இவ்வுண்மையை எல்லாப் பிரமாண நூல்களிலும், பெரியோர்களின் வாக்குகளிலும், மஹா கவிகளின் கவிதைகளிலும், சக்திக்கியன்ற மட்டும், தெளிந்தெடுப்பதே இப்பிரபந்தத்தின் கருத்து. ஸங்கீதத்தில் எல்லா ஸ்வரங்களும் வளர்ந்தே மூர்ச்சனையைக் கொடுக்கின்றன. மர வர்க்கங்களில் கசப்பு, உறைப்பு, உப்பு, துவர்ப்பு, புளிப்பு என்னும் மற்ற ஐந்து சுவைகளின் முடிவே தித்திப்பு என்னும் மதுரம். அதுவே பலன்; அதுவே பக்வம்; பக்வமே மதுரம். காவ்யங்களிலும், சிருங்காரம் வீரம் சோகம் ஆச்சரியம் ஹாஸ்யம் பயம் குரூரம் அருவருப்பு இவைகளின் முடிவே சாந்தமென்னும் ஒன்பதாவது ரஸம்; அது நிறைதலே முக்தி; "சாந்தமே சிவம்; சிவமே அத்வைதம்" என்பது மறைமொழி. அதுபோல் கோடி கோடியாய்ப் பிரிந்து கிடக்கும் துவைதக் கருத்துக்களுடைய முடிவே அத்வைத நிலை.

ஓம் சாந்தி! ஓம் சாந்தி! ஓம் சாந்தி:!

---

உ

ஸ்ரீகுருப்யோ நம:

# அத்வைத ஸித்தாந்த வினாவிடை

வினா :—ஸர்வ வித்தைகளின் உட்கருத்தும், ப்ராசீன ஆசிரியர் அனைவருடைய உள்ளக் கருத்தும் என்ன?

விடை :—அவையாவும் அத்வைத உண்மையிலே நிஷ்டை கொண்டவையாய் நிற்கின்றன.

விடை :—இவ்வாறு கூறுவதற்கு ஏதேனும் ஆதாரமுண்டா?

விடை :—ஸ்ரீ அப்பைய தீக்ஷித ஸ்வாமிகள் ஸ்ரீகண்ட பாஷ்ய உரையின் ஆரம்பத்தில், "உபநிஷத்துக்கள், ஆகமங்கள், புராணங்கள், ஸ்மிருதிகள், மகாபாரதம் முதலிய பிரபந்தங்கள் ஆகிய அனைத்திற்கும் இரண்டற்ற அத்வைதக் கருத்துக்களை விளக்குவதிலேயே நோக்கம். ஆராய்ந்து பார்த்தால், பிரும்ம சூத்திரங்களும் அத்வைதக் கொள்கைகளையே விளக்குகின்றன. அதனாலேதான் உலகினுக்கு எக்காலத்தும் நன்மை புரிகின்றவர்களான பழமை மிக்க ஸ்ரீமத் சங்கர பகவத்பாதர் முதலிய ஆசிரியர்கள் அவ் வுயரிய இரண்டற்ற அத்வைதக் கொள்கைகளை ஏற்றுக்கொண்டு, அவற்றை விளக்கி உதவி புரிந்தார்கள்" என்று காப்புக் கவிகளிலே கூறியிருக்கிறார்கள்.

வினா :—இவ்வாறு கூறுவதற்கு அனுபவிகளுடைய வாக்கியம் ஏதாவது ஆதாரமாக இருக்கிறதா?

விடை :—இருக்கிறது. ஸ்ரீ தாயுமான ஸ்வாமிகள்

வேதமுடன் ஆகம புராணமிதி காசமுதல் வேறுமுள கலைகளெல்லாம்
மிக்காக அத்துவித துவிதமார்க் கத்தையே விரிவா எடுத்துரைக்கும்,
ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை யுண்டுபணு ஞானமாகும்,
ஊகமனு பவவசன மூன்றுக்கும் ஒவ்வும் ; ஈ துபயவாதிகள் சம்மதம்

என்று கூறுகிறார்.

வினா :—இன்னம் ஏதாவது ஆதாரம் உண்டா?

விடை :—தமிழ்த் தெய்வமாகிய ஔவையார்

தேவர் குறளும் திருநான்மறை முடியும்
மூவர் மொழியும் முனிமொழியும்—கோவை
திருவாசகமுந் திருமந்திரமும்
ஒரு வாசக மென் றுணர்

என்று கூறி இருக்கிறார்.

(1) திருக்குறள் (2) வேதாந்தம் (3) மூவர் தேவாரம் (4) வியாச முனிவருடைய பிரும்ம சூத்திரம் அல்லது குருகை முனிவரின் திருவாய்மொழி (5) திருக்கோவையார் (6) திருவாசகம் (7) திருமூலர் அருளிய திருமந்திரம் ஆகிய நூல்கள் ஒரே பொருள் உள்ளவை.

வினா :—இந்த ஔவையார் வாக்கால் என்ன தெரிகிறது?

விடை :—தமிழ் நாட்டிலுள்ள பழைமை பொருந்திய உயர் கருத்துடைய எல்லாப் பெருநூல்களுக்கும் நான்மறைகளின் முடியிலுள்ள கொள்கையே கொள்கை என்று ஏற்படுகிறது. இதனால் தமிழ் வழங்கும் நாட்டு மக்களுடைய அநாதிசமயக் கொள்கை நால்வேத சமயக்கொள்கையே என்பது தெரிகிறது.

வினா :—தமிழ் மொழியின் அமைப்பில், இவ்வுண்மையை விளக்கக்கூடிய சான்றுகள் உள்ளனவா?

விடை :—உள்ளன. ஒரு மொழி வழங்கும் நாட்டிற்கு அந்நாட்டில், அனாதியாக வழங்காத ஒரு பொருளோ கருத்தோ பிறநாட்டிலிருந்து புதிதாக வந்தால், அப்பொருளுக்கோ, கருத்துக்கோ, அந்நாட்டு மொழியில் பெயர் ஏற்படுவதில்லை. தற்காலம், மேனாட்டிலிருந்து வந்த பொருள்களான ரயில், மோட்டார், சைகிள், சோப் முதலியவற்றிற்கும் இன்ஷ்யூரன்ஸ், பாங்க், மில், மெஷின் முதலியவற்றிற்கும் நம் தமிழில் ஒரு சொல்லாகப் பெயர் ஏற்படவில்லை. எந்நாட்டிலிருந்து எப்பொருள், கருத்து முதலியன வந்தனவோ, அந்நாட்டு மொழியின் மொழிப்பெயராலேயே இந்நாட்டிலும் அவை வழங்கி வருகின்றன.

வினா :—இந்த உவமானம் எதற்கு ?

விடை :—அதுபோலவே, வேதசமயக் கருத்துக்களும், கொள்கைகளும், அனுஷ்டானங்களும் பிறநாட்டிலிருந்து ஏதோ ஒருகாலத்தில் தமிழ்நாட்டிற்குப் புதிதாக வந்திருந்தால், அவைகளுக்குத் தமிழ்மொழியில் தனிச் சொற்பெயர்கள் ஏற்பட்டிரா. வேதவேதாந்தங்களுக்கு ஒத்து என்றும், மறை என்றும்,யஜ்ஞத்திற்கு வேள்வி என்றும், பிராம்மணனுக்குப் பார்ப்பான் என்றும் தனிச்சொற்கள் தமிழ்மொழியிலேயே அமைந்திருக்கின்றன. 'தமிழானது வளம் பெற்றுப் பூரணமொழியாக நிலைக்குங் காலத்திலேயே மறைகளின் தத்துவங்கள் தமிழ் மக்களிடையே நிலைபெற்றிருந்தன' என்பதற்கு இத் தனிமொழிகள் சான்று.

வினா :—பண்டைக் காலத்திலேயே வேற்று நாடுகளிலிருந்து நம் நாட்டிற்கு வந்த கொள்கை முதலியவைகளைக் குறிக்கத் தமிழ்ச் சொற்கள் வழங்காமல், அப் பிறநாட்டுச் சொற்களை வழங்கியதற்குச் சான்றுகள் உண்டா ?

விடை :—வடநாட்டில் மஹாவீரஜினர், புத்தர் முதலியவர்களால் புதிதாகத் துவக்கப்பட்ட ஜைனம், புத்தம் ஆகிய இம் மதங்கள் தமிழ்நாட்டில் புகுந்து சுமார் 1000 வருஷ காலம் வரை இருந்தும், அச்சமய சம்பந்தமான சொற்கள், அந்நாட்டுப் 'பாலி' முதலிய சொற்களாகவே இருக்கின்றன. அவற்றைக் குறிக்கும் சொற்கள் தமிழில் அமையவில்லை. சமணர், சாவகர், புத்தர், ஆருகதர், பிடகம் முதலிய சொற்கள் அந்நாட்டுப் பிராகிருதச் சொற்களே. 'அமணர்' முதலிய சொற்களும், பாகதமொழியின் சிதைவே.

ஆதலால், தமிழ்நாட்டில் அறுதியாய் உள்ள எல்லா உயரிய நூல்களுக்கும் வேதக் கருத்தே கருத்து.

[நம் நாட்டின் தென் வட பாகங்கள் மட்டுமேயன்றி உலக முழுவதும், ஒரே மூலக் கலைப்பண்புடையதென்று பல சின்னங்களாலே தெளிவாகிறது. உதாரணமாக, உலகத்திலுள்ள எந்நாட்டிலும் வாரத்திற்கு ஏழு நாள்கள்தான் ; ஞாயிறு, திங்கள், செவ்வாய் முதலிய ஒரே வரிசை தான். இவ் வரிசைக்குக் காரணம் மாத்திரம் எந் நாட்டாருக்கும் தெரியாது. நான்மறை

களின் ஆறு அங்கங்களிலொன்றான சோதிடத்தில் மாத்திரமே, ஹோரைக் கணக்கைச் சொல்லும் போது, இவ் வரிசைக்குக் காரணம் தெரிகிறது. மறைகள், ஒரு நாட்டிற்கு மாத்திரமல்லாமல், உலக முழுவதுமே உய்ய, ஆண்டவனால் வெளியாக்கப்பட்டவை. கலியுகம் ஆரம்பிக்குமுன்னர்வரை, அநேகமாய் உலகம் முழுவதுமே, மறைவழக்கம் நிலைநின்றதெனலாம். அதன் சில சின்னங்களே எங்கும் இக்காலத்தும் காணப்படுகின்றன. மனனம் செய்பவனே மனிதன். அவனே மானவன் என்று வழங்கப்படுகிறான். மேனாட்டார் மான் (Man) என்கிறார்கள். மூலத்தில் மனித வர்க்கத்திற்கெல்லாம் ஒற்றுமையே யன்றி, வேற்றுமைக் கிடமில்லை.]

இக்கருத்தைக் கொள்ளாதவர் பெரியோர்களால் பாவிகளாகக் கருதப்பட்டிருக்கிறார்கள். அன்னவரைப்பற்றி திருஞான சம்பந்த சுவாமிகள் குறிப்பிட்டிருக்கிறார் :

"மறை வழக்கமில்லாத மாபாவிகள்" என்றும்

"வைதிகத்தை யொழுகாதவர்" என்றும்

இங்கு 'ஒழுகாதவர்' என்பதற்கு 'வைதிக ஆசாரமற்றவர்' என்பதும் 'மறை வழக்கமில்லாத' என்பதற்கு 'வைதிக அனுஷ்டான மில்லாதவர்' என்பதும் பொருள்.

ஒவ்வொரு மனிதனும், நித்தியம் அவசியம் செய்து கொண்டுவரும் உண்ணல், உடுத்தல், நீராடல், உறங்கல், மலஜலங்கழித்தல் முதலியவற்றை வைதிக விதி மீறாது அம்முறைப் படி நடத்துவதே ஆசாரம். ஜபம், பூஜை, ஹோமம், நீறணிதல் முதலிய விசேஷ நியமங்களே அனுஷ்டானம்.

வினா :—வேதாந்தத்தின் கருத்தை விசேஷமாக விளக்கியிருப்பவர் யார்?

விடை :—சைவத் திருமுறைகளுள் ஒன்றான திருமந்திரத்தைப் பாடிய திருமூல நாயனார்.

வினா :—திருமுறைகளில் இவருக்கும் இவருடைய நூலுக்கும் என்ன சிறப்பு?

விடை:—இந்தத் திருமூலர் கூடுவிட்டுக் கூடுபாய்ந்த சித்தர்; பதினெண் சித்தர்களிலும் ஒருவர்; அறுபத்து மூன்று நாயன்

மார்களிலும் ஒருவர். இவரைத் தவிர்ந்த இதர நாயன்மார் களுக்குச் சித்தர் கணத்தில் இடமில்லை. இவ்வாறு, இவ் விரண்டு சிறப்பும் பெற்றவர் இவரொருவரே. சிறந்த ஆசிரியர் எழுதிய தாகையால், நூலும் சிறந்த ஆதாரமாயிருக்கிறது.

மேலும், திருமந்திரத்தைத் தவிர மீதியுள்ள திருமுறை நூல்கள் தோத்திரங்களாக மட்டும் இருக்கின்றன. திருமுறை களிற் சேராத இதர சைவ நூல்கள் சாத்திரங்களாக மாத்திரம் இருக்கின்றன. இந்தத் திருமந்திரம் மட்டும், தோத்திரமாகவும் இருக்கிறது, சாத்திரமாகவும் இருக்கிறது; திருமுறையாகவும் இருக்கிறது. அதனுலேதான், 'திருமந்திரம்' திருமுறைகளுள் ளும் சிறந்த ஆதாரமாகக் கொள்ளப்படுகிறது.

வினு :—'திருமந்திர'த்தில் வேதாந்த தத்துவத்தை விளக் கும் பாடல்கள் எவை?

விடை :—நூற்றுக்கணக்காக இருக்கின்றன. அவற்றுள் சில இங்கு எடுத்துக் காட்டப்படுகின்றன.

1. வேதாந்தங் கண்டோர் பிரம்மமித் தியாதரர்
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள்
வேதாந்த மல்லாத சித்தாந்தங் கண்டுளோர்
சாதா ரணமன்ன சைவ ருபாயமே.

(பிரம்ம-மித்தியா-தரர்—'பிரம்ம ஸத்யம்; ஜகந்மித்யா' என் பது வேதாந்தத் துணிபு. இவ்விரு தத்துவங்களை விளக்கவே, இவ்விரு பதங்களையும் நாயனுர் குறிப்பாகக் காட்டியிருக்கிருர்.)

இவ்விரு தத்துவங்களை ஸதா தாரணை செய்பவர்களே "வேதாந்தங் கண்டோர்" என்றவாறு. இறுதியில் இருக்கும் "உபாயமே" என்றும் சொல் "அடையும் வழி" என்னும் பொருளைக் குறிக்கும்.

2. வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்
வாழ்க்கைப் புனல்வழி மாற்றிச் சித்தாந்தத்து
வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே
தாழ்க்குந் தலையினேன் சற்சீடனுமே.

(வாழ்க்கைப் புனல் வழிமாற்றி—ஸம்ஸார நிலையில் வெளி நோக்கிச் செல்லும் 'அறிவு' என்னும் பிரவாஹத்தின் போக்கை ஆன்மாவிடம் செல்லும்படி திருப்பி).

3. வேதாந்தந் தன்னி லுபாதிமே லேழ்விட
நாதாந்த பாசம் விடும்; நல்ல தொம்பதம்
மீதாந்த காரணே பாதியேழ் மெய்ப்பரன்
போதாந்த தற்பதம் போமசி யென்பவே.

இப்பாட்டு 'தத்' என்னும் பதமும் 'த்வம்' என்னும் பதமும் 'அஸி' என்னும் பதமும் அடங்கிய வேதாந்த மஹா வாக்கியத்தின் பொருளை விரித்துக் கூறுவது. (ஜீவனுடைய ஸ்வரூபத்தை மூடிக்கொண்டிருக்கும் உபாதிகளும், ஈசனுடைய ஸ்வரூபத்தை மூடிக்கொண்டிருக்கும் உபாதிகளும் 'அஸி' என்னும் சொல் விளக்குங்கால் போய்விடுகின்றன.)

4. தொந்தத் தசிமூன்றில் தொல்கா மியமாதி
தொந்தத் தசிமூன்றில் தொல்தா மதமாதி
வந்த மலங்குண மாளச் சிவன் தோன்றின்
இந்துவின் முன்இருள் ஏகுதல் ஒக்குமே.

(தொந்தத்தசி = த்வம், தத், அசி—நீ அதுவாய் இருக்கிறாய்.)

பூர்ணசந்திரன் தோன்றியவுடன் இருள் நாசமடைவது போல், ஞானியின்முன் மலமாயை நாசமடைகின்றது. ஆதலால், அம் மாயை 'அநித்யம்' என்பது அத்வைதக் கொள்கை.

5. ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய வை விட்டாற் காயமுபாதானம்
ஏகிய தொந்தத் தசியென்ப மெய்யறி
வாகிய சீவன் பரசிவ னாமே.

'ஸோயம் தேவதத்த:' என்னும் வாக்கியம், தர்க்க சாஸ்திரத்தில், "அன்று அங்குக் காணப்பட்ட தேவதத்தனே, இன்று இங்குக் காணப்படுகிறான்" என்ற பொருளில் திருஷ்டாந்தமாகக் கூறப்பட்டிருக்கிறது. அன்று, அங்கு என்னும் அடைமொழிகளையும், இன்று, இங்கு என்னும் அடைமொழிகளையும் விட்டுவிட்டால் நின்றது ஒன்றும் தேவதத்தனே என்று விளக்கப்பட்டிருக்கிறது. இதைத் திருமூல நாயனார் இங்கு உதாரணமாகக் காட்டி, "த்வம், தத், அஸி" என்னும் வேதாந்த மஹாவாக்கியத்திலும், த்வம் (நீ) என்னும் பதத்தின் பொருளில் அடையாகவுள்ள கட்டுண்டிருக்கும் ஜீவத் தன்மை

யையும், 'தத்' (ஈசன்) என்னும் பதத்தின் பொருளில் அடையாக வுள்ள தன்னினும்வேறாக உலகத்தைப் படைக்கும் ஈசத்தன்மை யையும், உண்மையறிந்துகொண்டு விட்டுவிட, மெய்யறிவாகிய சிவன் பரமசிவனுமே என்ற சுத்தமான அத்வைதப் பொருளை இந்தப் பாட்டில் விளக்கியிருக்கிறார்.

வினா:—திருமுறைகளில் 'திருவாசகம்' அத்வைத நூல் என்பதற்கு என்ன ஆதாரம்?

விடை:—திருப்பெருந்துறையில் சிவபெருமானிடமிருந்து உபதேசம் பெற்றதும், மாணிக்கவாசகர்

இன்றெனக் கருளி யிருள்கடிந்துள்ளத்து எழுகின்ற ஞாயிறே போன்று
நின்ற நின்றன்மை நினைப்பற நினைந்தே நீயலாற் பிறிது மற்றின்மை
சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாந் திருப்பெருந் துறை
[யுறை சிவனே
யொன்றுநீ யல்லை யன்றி யொன்றில்லை யாருன்னை யறியகிற் பாரே

என்று கூறுகிறார். இங்கு, "நீயலாற் பிறிது மற்றின்மை" "ஒன்று நீயல்லை யன்றியொன்றில்லை" என்பன சிறந்த அத்வைதக் கொள்கையை விளக்குகின்றன.

வினா:—இதற்கு வேறு ஏதாவது ஆதாரம் கூறமுடியுமா?

விடை:—கொற்றவன்குடி என்னும் ஊரினராகிய உமாபதிசிவாசாரியார், 'சங்கற்ப நிராகரணம்' என்று ஒரு நூல் எழுதி யிருக்கிறார். அவர், அந்நூலின் கடைசியிலே, சைவ வாதி மதத்தைக் கண்டிக்கிறார். அதன் கடைசியில், அவர், சைவ வாதிகளின் மதமும் அத்வைதமே ஆகிவிடுகிறதே என்று கூறுகிறார். அதற்கு எடுத்துக் காட்டாக, முற்கூறிய "இன்றெனக் கருளி" என்னும் திருவாசகத்தைக் கூறி, மாணிக்க வாசகரும் அத்வைதி யாகிவிடுகிறார் என்று நூலை முடித்திருக் கிறார்.

வினா:—சைவசித்தாந்த சாத்திரத்தில் எது அத்வைதத் தைக் கூறுகிறது?

விடை:—சைவ சாத்திரத்திற்கு முதனூலாகிய சிவஞான போதமே அத்வைதத்தைக் கூறுகிற நூல்தான்.

3

வினா :—அது எப்படி ?

விடை :—"ஓர் அரச குமாரன் பிறவியிலிருந்து வேடர் கூட்டத்தில் வளர்ந்தான். அதனால், தன்னை வேடனாகவே நினைத்தான். அவன் உண்மையில் அரசகுமாரனா யிருந்தும், தன்னை வேடனாக நினைத்தது அஜ்ஞான மயக்கத்தாலேதான். பின்பு அரசன் அவனைத் தேடிக் கண்டு அவனுக்கு அறிவுறுத்த, அஜ்ஞானத்தாலே தோன்றிய வேடத்தன்மை நீங்கித் தனது உண்மையான அரச குமாரத் தன்மையை அடைந்தான்" என்ற கதையை உதாரணமாகக் காட்டி, 'சீவனும் பரம் பொருளும் ஒன்றல்ல என்ற வேற்றுமைத் தோற்றம் மயக்கமே; சீவன் முக்காலத்தும் சிவனே' என்பது,

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனை

என்னும் சிவஞான போதம் 8-ம் சூத்திரத்தால் விளக்கப்படுகிறது.

இவ் விஷயத்தில் இதே உதாரணம் முற்காலத்திலேயே மறைமுடியாம் பிருஹதாரண்ய உபநிஷத்தின் பாஷ்யத்தில், முதல் அத்தியாயத்தில் 20 கண்டிகையில், ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாசாரிய ஸ்வாமிகளால் விளக்கப் பெற்றிருக்கிறது. இதனால், "சீவனானவன் முத்தி நிலையில் மாத்திரமே யன்றி, முக்காலத்தும் எப்பொருளும் சிவமே" என்ற நியாயத்தால், 'ஸம்ஸார நிலையிலும் தானறியாமற் போனாலும் அவ் வரசகுமாரனைப்போல உண்மையில் பரம்பொருளே. பரம் பொருளைத் தவிர வேறல்லன்' என்ற அத்வைத வேதாந்த உண்மை தெளிவாகிறது.

வினா :—இதற்கு இன்னும் ஏதாவது ஆதாரம் உண்டா ?

விடை :—"யாவையும் சூனியம் சத்தெதிராதலின்" என்னும் சிவஞான போதம் ஏழாவது சூத்திரத்தில், 'ஸத்தாகும் சிவத்தின் ஞானம் உதயமான பொழுது, அச் சிவத்தைத் தவிர வேறுள்ள எல்லாப் பொருள்களும் சூனியமாய் விடுகின்றன' என்ற தத்துவம் விளக்கப்படுவதால், 'பரமாத்மாவின் ஸாக்ஷாத்காரம் ஏற்படுங்கால், உலகம் இல்பொருளாகின்றது' என்னும் அத்வைத வேதாந்த தத்துவம் வலியுறுத்தப்படுகிறது.

வினா :—இன்னம் ஏதாவது ஆதாரம் உண்டா?

விடை :—சிறந்த அநுபவாத்வைதியாகிய தாயுமான ஸ்வாமிகள், சிவஞான போதம் இயற்றிய மெய்கண்டாரை

> பொய் கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
> மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ?

என்று 'எந்நாட் கண்ணி'யிலே புகழ்கிறார்.

வினா :—'தாயுமானவர் சிறந்த அத்வைதி' என்பதற்கு ஆதாரம் என்ன?

விடை :—அவருடைய பாடல்கள் யாவும் சுத்த அத்வைத தத்துவத்தையே விளக்குகின்றன. உதாரணமாகச் சிலவற்றைக் கூறலாம். "சுத்த நிர்க்குணமான பரதெய்வமே" என்று 'சுகவாரி'யில் இறைவனை நிர்க்குணனாகக் கூறுகிறார். "இந்திர ஜாலங் கனவு கானலின் நீரென வுலகம்" எனப் 'பொருள் வணக்க'த்தில் உலகத்தைப் பொய்யென்று அறிவிக்கிறார். "அத்துவித வஸ்துவை", "அத்துவித ஆனந்த சித்த முண்டாம்" "அத்துவித அனுபவத்தை" என்று பல விடங்களில், அத்வைதச் சொற்களைப் பிரயோகிக்கிறார். இவற்றால், தாயுமானவர் சிறந்த அநுபவ அத்வைதி என்பது தெளிவு. அநுபவ அத்வைதியாகிய தாயுமானவரால் புகழப் பெறுகின்ற மஹாநுபாவரும், அத்வைதியாக இருக்கவேண்டுமாதலால், மெய்கண்டார் கூறும் மதம் அத்வைத மதமே யாகும். தாயுமானவர் முற்கூறிய பாட்டிலேயே "அத்துவித மெய்கண்ட" என்ற தொடரால், "அத்துவிதமே மெய்; அதற்கு மாறான துவிதம் பொய்", என்னும் கருத்தையும் வெளியிடுகிறார்.

வினா :—சைவமும் அத்வைதமும் ஒன்றே என்பதற்கு இன்னம் ஏதேனும் ஆதாரம் உண்டா?

விடை :—மெய்கண்டாருடைய சீடராகிய சிவ ஞான வள்ளல் 'வள்ளலார் சரித்திரம்' எழுதியிருக்கிறார். அவர் சிறந்த சைவராகக் கொள்ளப்படுவது போலவே, சிறந்த அத்வைதியாகவும் கொள்ளப்படுகிறார்.

வினா :—இது எவ்வாறு தெரிகிறது?

விடை :—

சைவசித் தாந்தமெல்லாம் தானவ னாகிநிற்றல்
மையறு வேத சித்த மற்றது நானே யென்னல்
உய்வகைக் கிரண்டு மொன்றென் றேதியென்னுயிர்க்கிலாபஞ்
செய்தசற் குரவனீயே திருப்புலி வனத்துளானே

என்று குருவைத் துதிக்கிறார். இதில் முத்திக்காம் இவ்விரண்டு சித்தாந்தங்களும் ஒன்றே என்று கூறுவதால், சைவசித்தாந்தமும் அத்வைதமே யாகிறது.

வினா :—மற்றும் சைவசித்தாந்தத்தில் அத்வைதக்கொள்கை எங்குக் காணப்படுகிறது ?

விடை :—'சித்தியார்' என்னும் அருணந்தி சிவத்தின் நூலுக்கு முற்பட்ட சைவ நூல்களிலெல்லாம், அத்வைத வேதாந்தமே விசேஷித்துக் கூறப்படுகிறது. சிவஞான போதத்தினும் பழைமையான திருவுந்தியார் என்னும் சைவ சாஸ்திரத்தில்,

ஏகனுமாகி யனேகனு மானவன்
நாதனு மான னென்றுந்தீபற
நம்மையே ஆண்டானென் றுந்தீபற

என்றும்,

அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபெற
தானாகத் தந்தென் றுந்தீபற

என்றும் கூறப்பட்டிருக்கிறது.

இதனால், "ஏகனே அனேகமாயினான்; அநேக மானபின், அவைகட்கு நாதனாக வேண்டி வந்தது. பின்பு, ஏகமெனும் அத்வைத தத்துவத்தை வெளிப்படுத்த, குருவாய் நம்மை வந்தாண்டான். அவன் ஏகனாயிருக்கும்போது, அகளனாகவும் நாதனாய் நிற்கும்போது ஸகளன்(ஸகுணன்) ஆகவும் நிற்கிறான்." என்னும் அத்வைத வேதாந்தக் கொள்கை தெளிவுறுத்தப் படுகிறது.

வினா:—வேதாந்தத்தின் பொருள் அத்வைதமே என்பதை இன்னம் யார் விளக்கியிருக்கிறார்கள்?

விடை:—"மறைமுடி வாக்கியங்களுக்கெல்லாம் இரண்டற்ற பரம்பொருளைக் கூறுவதிலேயே கருத்து" என்று ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசாரிய ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளியிருக் கிறார்கள்.

வினு:—இதுவரை கூறியவற்றால் என்ன தெரிகிறது?

விடை:—துயருறும் ஏழைகளாம் மானிட மக்களைக் கருணையுடன் கைதூக்கிவிடும் ஒரே நோக்கத்துடன் உழைக்கும் எல்லா நூல்களின் ஆசிரியர்களும், முக்தியை யடைவதற்குப் படி படியாக அமைத்த கருமம், பக்தி, வழிபாடு, யோகம் முதலிய கொள்கைகளில் வெளிக் கருத்துடையவராயினும், அவர்களுக்கு அத்வைதத்திலேதான் உள்ளக் கருத்து என்பது தெளிவாகத் தெரிகிறது.

வினு:—"அத்வைதம்" என்பதற்குப் பொருள் என்ன?

விடை:—"அத்வைதம்" என்பது வடசொல். இது ந + த்வைதம் = அத்வைதம். 'ந' 'அ' என்றும் மாறும். இது 'நஞ்' என்று கூறப்படும். இதற்கு இன்மை என்பது பொருள். த்வைதம் என்றால் வேறுபாடு. எனவே, 'அத்வைதம்' என்ற சொற்கு "வேறுபாடில்லாதது" என்பது பொருள்.

வினு:—'அத்வைதம்' என்பதற்கு, 'வேறுபாடல்லாதது' என்று பொருள் சொன்னால் என்ன?

விடை:—பெரியோர் எல்லோரும் இன்மைப் பொருளையே கொண்டிருக்கின்றனர். சிவஞானபோத ஆசிரியரும், 8ம் சூத் திரத்தில், "அந்நியமின்மையின் அரன்கழல் செலுமே" என்று இன்மைப் பொருளையே கொண்டிருக்கிறார்.

வினு:—வியாகரண சாஸ்திரம் 'ந'கரத்திற்கு என்ன பொருள் கூறுகிறது?

விடை:—'ந' என்னும் நகரத்திற்கு, அன்மை, இன்மை, உவமை முதலிய ஆறு பொருள்களையும் கூறிப் பின்னர், இவ் வெல்லாப் பொருளுக்கும் பொதுப் பொருளாக, "நிவ்ருத்தம் அல்லது ஆரோபம்" என்பதைக் கூறியிருக்கிறது. 'ஆரோபம்' என்றால், ஓரிடத்தில் இல்லாத பொருள் அங்குத் தோற்றுவது.

இதைக்கொண்டு, (த்வைதம்=தோற்றம்) "தோற்றம் அல்லது தோற்றமாம் த்வைதத்தின் நிவிருத்தி" என்னும் பொருளே ஸமஸ்கிருத இலக்கணப்படி அத்வைதமென்னும் சொல்லின் கருத்தாய் முடிகின்றது.

வினா :—இவ்விதப் பொருளை யார் கூறியிருக்கிறார் ?

விடை :—மஹாபாஷ்ய மியற்றிய பதஞ்சலி முனிவர்.

வினா :—ஒருவன் துவைதக் கொள்கையை உடையவனாயிருந்தால் என்ன ?

விடை :—துவைதம் வேத சம்மதமன்று.

வினா :—வேதத்திலே துவைதத்தை (வேறுபாட்டை) த் தெரிவிக்கும் வாக்கியங்கள் காணப்படுகின்றனவே, அவற்றிற்கு என்ன பயன்?

விடை :—முடிவான அத்வைதத்தைப் போதிப்பதே அவற்றின் பயன்.

வினா :—இவ்வாறு யாரேனும் கூறி யிருக்கிறார்களா ?

விடை :—தாயுமானவர் " துவிதமே அத்துவித ஞானத்தை யுண்டுபண்ணு ஞானமாகும்" * என்று கூறுகிறார் என்பது முன்னரே தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

அன்றியும், அவையாவும் அநுவாத அர்த்தவாதங்கள். துவைதத்தைத் தெரிவிப்பதில் அவற்றிற்கு உண்மைக் கருத்து இல்லை. வேற்றுமையானது கண், காது முதலிய பிரத்யக்ஷப் பிரமாணத்தினாலே அறியப்படுவதால், அவற்றை வேதம் அறிவிக்க வேண்டிய அவசியம் இல்லை.

வினா :—அநுவாத அர்த்தவாதங்கள் என்றால் என்ன ?

விடை :—இவற்றை ஒருவகையான புகழ்ச்சி வாக்கியங்கள் என்று கூறலாம். உதாரணமாக, பனிக்காலத்தில் காலைவேளையில் உண்டாகும் குளிரை நெருப்பிலே காய்ந்தால் போக்கிக் கொள்ளலாம். இது யாவருக்கும் தெரிந்ததே. இதை வேதம் ஓரிடத்தில், 'அக்கினி குளிருக்கு மருந்து' என்று கூறுகிறது. இம் மாதிரி இதர பிரமாணங்களாலே தெரிந்தவற்றை வேதம் பல

* 11-ம் பக்கம் பார்க்க.

விடங்களிலே சொல்லுகிறது. இத்தகைய வாக்கியங்களே "அநுவாத அர்த்தவாதங்கள்" என்று கூறப்படுகின்றன.

வினு:—இத் தகைய அர்த்தவாதங்களைக் கூறும் வேத வாக்கியங்கள் பிரமாணமா, இல்லையா ?

விடை:—இல்லை.

வினு:—ஏன் ?

விடை:—'பிரத்யக்ஷம்' முதலிய சான்றுகளால் தெளிவாகத் தெரிந்தவற்றைத் தெரிவிக்க, வேதம் வேண்டியதில்லை. இதர பிரமாணங்களால் அறிய முடியாதவற்றை அறிவிக்கவே வேதம் ஏற்பட்டது,

வினு:—இங்கு எது பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களால் அறியக்கூடியது? எது அறியமுடியாதது?

விடை:—ஐந்துவிதமான துவைத ஞானங்களும், பிரத்தியக்ஷத்தாலோ, அல்லது, அநுமானத்தாலோ அறியக்கூடியவை.

வினு:—அந்த ஐந்துவிதத் துவைதங்கள் யாவை?

விடை:—(1) ஜீவனுக்கும் ஈசனுக்கும் வேறுபாடு (2) ஜீவனுக்கும் ஜடத்துக்கும் வேறுபாடு (3) ஜீவர்களுக்குள் பரஸ்பரம் வேறுபாடு (4) ஜடங்களுக்குள் பரஸ்பரம் வேறுபாடு (5) ஜடத்துக்கும் ஈசனுச்கும் வேறுபாடு என்னும் இந்த ஐந்துமே.

வினு:—இந்த ஐந்தும் பிரத்யக்ஷத்தாலோ அல்லது அநுமானத்தாலோ அறியப்படுகின்றன. இந்தப் பிரமாணங்களால் அறியக்கூடாதது எது ?

விடை:—ஸர்வ பரிபூரணமான பரமாத்ம அத்வைத ஞானம். அது ஒன்றுதான் பிரத்யக்ஷம் முதலியவற்ருல் அறிய முடியாதது ஆதலால், அந்த ஒன்றைத் தெரிவிப்பதற்குத் தான் வேதம் அவசியம் வேண்டியிருக்கிறது. அந்த அத்வைதத்தை தெரிவிப்பதாலேதான் வேதம் வேதமாகிறது. அத்வைதம் ஒன்று தான் வேதத்தின் பொருள். அறியப்படாததை அறிவிப்பதே வேதத்தின் கடமை.

வினு:—ஒரு நூலிலே துவைத வாக்கியங்களும், அத்வைத வாக்கியங்களும் இருக்குமானுல், அந்த நூலுக்குத் துவைதத்தைத் தெரிவிப்பதில் தாத்பரியமா ?

விடை:—எந்தப் பிரபந்தத்திலேனும், கரும மார்க்கத்தையும் பக்தி மார்க்கத்தையும் அறிவிக்கும் துவைத வாக்கியங்கள் ஆயிரக்கணக்காக இருப்பினும், அதில் அத்வைத வாக்கியம் ஒன்று இருந்துவிட்டால், அப்பிரபந்தம் முழுவதும் அத்வைதக் கருத்துக்கொண்டதே என முடிவு கூறலாம். ஏனெனில், அத்வைத ஸாக்ஷாத்காரத்திற்கு, துவைத நிலையிலிருந்து செய்ய வேண்டிய கரும ஞான யோகங்களும், அந்தரங்க சாதனங்களான சமம், தமம் முதலியவைவையும் அவசியம் அபேக்ஷிக்கப் படுகின்றன.

வினா:—'கருமம்' முதலியவற்றால் அத்வைத அறிவு உண்டாகும் என்பதற்கு ஆதாரங்கள் உண்டா?

விடை:—"அந்தப் பரம்பொருளை வேதமோதல், ப்ரும்ம யஜ்ஞம், த்ானம், தவம் முதலியவற்றால்..........."

எனத் தொடங்கும் உபநிஷத் வாக்கியமும், அப்பைய தீக்ஷித ஸ்வாமிகளுடைய

இளம்பிறை யணிந்த ஈசன தருளால்
அத்வைத வாஸனை ஆடவர்க் குண்டாம்

என்ற பொருள் கொண்ட சுலோகமும்,

ஸ்ரீ சங்கரபகவத்பாத ஸ்வாமிகளுடைய "வர்ணாச்ரம தர்மத்தோடு கூடிய தவத்தாலும், பகவானுடைய திருவருளைப் பெறுவதாலும், மனிதர்களுக்கு அறிவு ஏற்படும்" என்ற திருவாக்கும் இதைத் தெரிவிக்கின்றன.

வினா:—துவைத அறிவு, அத்வைத அறிவிற்கு வேண்டுதல் போல, அத்வைத அறிவு துவைத அறிவிற்கு வேண்டுமல்லவா?

விடை:—இதே வண்ணம், துவைத உபாஸனத்திற்கு அத்வைத ஞானம் வேண்டுமென்பதில்லை. அவசியமில்லை யென்பது மாத்திரமே யன்று; அத்வைத ஞானம் உதயமானால், துவைத நிலையும் அதன் காரியங்களுமே அடியோடு குலைந்துவிடும். ஆதலால், துவைதத்திற்கு அத்வைத வாக்கியங்கள் அங்கமாக மாட்டா.

வினா:—இதனால் ஏற்பட்ட முடிவு என்ன?

விடை :—கீழ்க்கூறியவாறு, எந்த நூலிலேனும், ஓர் அத்வைத வாக்கியம் இருப்பினும், அந்நூலிலுள்ள துவைத வாக்கியங்களெல்லாம் அவ் வத்வைத ஞானத்திற்கு அங்கமாகி, அவ் வத்வைத ஞானத்திலேயே உட்கருத்துக் கொண்டவை யாகின்றன.

வி ஞ :—வேதத்திலுள்ள அநுவாத அர்த்தவாத வாக்கியங்கள் எல்லாம் பயனற்றவைகளா?

விடை :—இல்லை. அத்வைத ஞானமாகிய பூர்ணப்ரம்ஹ ஸாக்ஷாத்காரத்தை யடைவதற்குச் சித்த சுத்தியும், சித்த ஒருமைப்பாடும் அவசியம் வேண்டும். அவற்றையடைய, அக்னி ஹோத்ரம் செய்தலும் தெய்வ வழிபாடு முதலியவற்றைச் செய்தலும் வேண்டும். இதனால், அத்வைத ப்ரம்ம ஸாக்ஷாத்காரத்திற்குக் கருமோபாஸனங்களே முதற்படிகள் என்பது விளங்கும். இந்தக் கருமோபாஸநங்களைப் புகழ்வதால், இந்த அர்த்த வாதங்கள் பூர்ண ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரத்தைப் படிப்படியாகப் பேசுகின்றனவாய் இருக்கின்றன.

வி ஞ :—ஒரு மனிதனுக்கு அத்வைத மதக் கருத்துக்களில் நாட்ட முண்டாவதெப்படி?

விடை :—"இளமதி புனைந்த ஈசனதருளால்
அத்துவித வாசனை ஆடவர்க்குண்டாம்
மற்றெவ் வகையிலும் இல்லவே இல்லை"

என்று ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதஸ்வாமிகள் காப்புக் கவிகளில் கூறியிருப்பது முன்பே எடுத்துக்காட்டப் பெற்றது.

வி ஞ :—இவ் வத்துவைத தத்துவத்தைப் பரகதியாகக் கொண்ட பண்டித மணிகள் செய்யவேண்டியதென்ன?

விடை :—எந்த எந்த நூல்கள் எந்த எந்த முறையில் இரண்டற்ற அத்வைத உண்மையை அறிவுறுத்துகின்றன என்பதைத் தங்களுடைய நுண்ணிய அறிவால் ஆராய்ந்து அமைந்த கருத்துக்களையும், அத்வைத சித்தாந்தத்தின் சொரூபத்தையும், அது ஆன்மாக்கள் முத்தியடைய உதவும் விதத்தையும், உண்மையை ஆராய விரும்பும் மக்களுக்கு முன்னிலையில் சமர்ப்

பித்து, அவர்களுக்குத் தொண்டாற்றுவதே அத்வைத தத்துவத்தைப் பரகதியாகக் கொண்டுள்ள பண்டிதமணிகள் ஆற்ற வேண்டிய அவசியமான கடமைகளில் ஒன்றாகும்.

வினு :—அத்வைத மதத்திற்கே சிறப்பான சித்தாந்தங்கள் யாவை ?

விடை :—

(1) ஒன்றான பரம்பொருளே எல்லாமாய்த் தோற்றுகிறது.
(2) உலகத் தோற்றம் உண்மையன்று.
(3) ஞானத்தால் மட்டுமே முத்தி பெறமுடியும்.
(4) சீவனும் பரம்பொருளும் வேறல்ல.
(5) பரம்பொருள் நிர்க்குணமானது.
(6) ஜீவன்முத்தி.
(7) ஸத்தியத்தின் மூவகை நிலை.
(8) அரிக்கும், அரனுக்கும் (தக்ஷிணாமூர்த்திக்கும் நடராஜனுக்கும் போலவும், இராமனுக்கும், கிருஷ்ணனுக்கும் போலவும்) வேறுபாடில்லை.

இந்தக் கொள்கைகள் அத்வைதமதத்திற்கே சிறப்பானவை.

ஒன்றான பரம்பொருளே எல்லாமாய்த் தோற்றுகிறது.

வினு :—"ஒன்றான பரம்பொருளே எல்லாமாய்த் தோற்றுகிறது" என்பது எவ்வாறு தெரிகிறது ?

விடை :—நான்கு வேதங்களும் "இவ்வுலகம் முழுவதும் புருஷனே" என்று முழங்குகின்றன வாதலால், "புருஷன் என்பவன் பூரணப் பொருள். பூரணப் பொருள் உண்மைப்பொருள். எனவே, ஒன்றான பரம்பொருளே எல்லாம். பரம்பொருள் தான் உண்மைப்பொருள். வேறொன்று முண்மையில்லை" என்பது இரண்டற்ற அத்வைதத்தில் தனிச் சிறப்பமைந்ததொரு முடிபாகும்.

வினு :—இதற்கு என்ன ஆதாரம் ?

விடை :—திருநாவுக்கரசு சுவாமிகள், 'துறந்தானை' எனத் தொடங்கும் திருநாகேச்சுரத் திருத்தாண்டகத்தில்

நீர் நிலந்தீ வெளி காற்றாகி நிற்பனவு
நடப்பனவு மாயினானை (6 திருமுறை திருநாகே. திருத்தாண்ட 6)

என்று, இங்குக் கூறிய உண்மையை விளக்கியிருக்கிறார்.

## உலகத்தோற்றம் உண்மையன்று

வினா :—உலகம் பரம்பொருள் தானே?

விடை :—ஆம்.

வினா :—ஆனல், உலகம் கடவுளைக் காட்டிலும் வேறுபட்டதாய், அறிவற்றதாய், தனிப்பட்டதாய்த் தோன்றுகிறதே! இதுவும் உண்மை தானே?

விடை :—இல்லை. இத் தோற்றம் உண்மையன்று, பொய். முன்னது உண்மையானுல், பின்னது பொய்யாகவே வேண்டும்.

வினா :— எப்படிப் பொய்?

விடை :—"ஒருவன் இருளில் ஓரிடத்திற்குச் செல்கிருன். வழியில், ஒரு பழுதை கிடக்கிறது. அதைப் பாம்பு என்று எண்ணிவிடுகிருன்; பயப்படுகிருன்."

இங்கு, உண்மையான பழுதையில், பாம்பென்ற தோற்றம் உண்டானது பொய்தானே? இதுபோலேதான், உண்மையான பரம்பொருளில் உலகத் தோற்றம் உண்டானது பொய்.

வினா :—ஒருவனுக்கு 'உலகம் பரம்பொருளினும் வேறுபட்ட'தென்ற எண்ணம் எதை அடிப்படையாகக் கொண்டு ஏற்பட்டது?

விடை :—அறியாமையை அடிப்படையாகக் கொண்டு ஏற்பட்டது. இவ்வாறு அறியாமையை அடிப்படையாகக் கொண்டு தோற்றுவது உண்மைக்கு மாருன அறிவே யாகும். அதனாலே தான், உண்மைக்கு மாருன ஞானத்தால் ஏற்பட்ட உலகத்தோற்றம் பொய்யே என்னும் கொள்கை இரண்டற்ற அத்வைதத்திலே தனிச்சிறப்பமைந்ததொரு முடிபாகும்.

வினா :—இதற்கு ஆதாரமென்ன?

விடை :—திருநாவுக்கரசர்,

பொய்ம்மாயப் பெருங்கடலில் புலம்பாநின்ற
புண்ணியங்காள், தீவினைகாள், திருவே, நீங்கள் (6. திருவாரூர் 1.)

என்றும்,

பொய்விரா மேனிதன்னைப் பொருளெனக் காலம் போக்கி
(4. திருச்சோற்றுத்துறை 1.)

என்றும் கூறுகிறார்.

[இதனால், ஸம்ஸார ஸாகரமே மாயமென்றும், மாயை பொய்யென்றும், அத்வைத வேதாந்த சித்தாந்தத்தைச் செவ்வனே விளக்கியருளி யிருக்கிறார்.]

வினா :—இன்னம் எதில் விளக்கப்பட்டிருக்கிறது ?

விடை :—திருவாசகத்தில்,

மாய வாழ்க்கையை மெய்யென்றெண்ணி
மதித்திடா வகை நல்கினான் (சென்னிப்பத்து 5.)

என்றும்,

திருமந்திரத்தில்,

ஆயும் பொய்ம் மாயை யகம்புறமாய் நிற்கும்
(8 தந்திரம் பராவத்தை 7)

என்றும்,

தாயுமானார் பாடலில்,

சகம் பொய்யெனத் தம்பட்டம் அடியே

என்றும் கூறப்பட்டிருக்கின்றன.

வினா :—உலகைத் தியானிப்பவனுக்கு முக்தி கிடைக்குமா ?

விடை :—கிடைக்காது. பொய்யான உலகைத் தியானிப்பவனுக்குப் பந்தந் தான் ஏற்படும். மெய்யான பரம்பொருளைத் தியானிப்பவனுக்கே முக்தி யேற்படும்.

வினா :—இது எதனால் தெரிகிறது ?

விடை :—சாந்தோக்ய உபநிடதம் 6-வது அத்தியாயத்தில், 16-வது கண்டத்தில், "காய்ச்சிய மழுவை ஏந்துதல்" என்னும் உதாரணத்தால் இது விளக்கப்படுகிறது.

வினா :—எப்படி ?

விடை:—"பொய்யைக் கடைப்பிடித்தவன் திருடன். அவன் காய்ச்சிய மழுவைக் கொள்ளும்போது எரிக்கப்படுகிறான். அவனுக்குப் பந்தம் ஏற்படுகிறது. திருடாதவன் மெய்யைக் கடைப்பிடித்தவன். அவனுக்கு விடுதலை ஏற்படுகிறது" என்னும்

பொருளை விளக்கிவிட்டு, அடுத்த வாக்கியத்திலேயே "அது போல, 'எல்லாம் பரமாத்மாவே; நீயும் அவனே' என்ற மெய்யைக் கடைப்பிடித்தவன் பந்தத்தினின்று விடுபட்டு, வீட்டையடைகிறான்" என்று உத்தாலகர் என்னும் முனிவர் தம் குமாரனை சுவேதகேதுவுக்கு உபதேசித்திருக்கிறார்.

இவ்விடத்துள்ள "அது நீயாயிருக்கிறாய்" என்னும் மஹா வாக்கியம், மோக்ஷத்தின்பொருட்டு உபதேசிக்கப்பட்டதாதலால், "நான் பருத்தவன்" என்னும் உலகோருடைய வாக்யத்தைப்போல பொய்யான வொற்றுமையை யறிவிப்பதன்று"

இதன் விரிவைப் பின்னர்க் காணலாம்.

## ஞானத்தாலேதான் முத்திபெற முடியும்

விஞ :—முத்தியை எதனுல் பெறமுடியும்?

விடை :—அறிவால் — அதாவது ஞானத்தாலேதான் — பெற முடியும்.

விஞ :—ஏன்?

விடை :—புருஷ ஸூக்தத்தில் உள்ள "அந்தப் பரம் பொருளை யறிந்தவன், இவ்வுலகிலே(யே) அழிவற்றவனுகிறான். (நற்)கதிக்கு வேறு வழி இல்லை" என்னும் பகுதி இதற்கு ஆதாரம். இதனுல், "அறிவால் மட்டுமே முத்தி பெறமுடியும்" என்பது தெரிகிறது.

விஞ :—இதை இன்னும் யார் விளக்கியிருக்கிறார்?

விடை ;—திருநாவுக்கரசு நாயனுர்

> என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
> றன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே
> (தனி திருக்குறுந்தொகை 3, 2)

என்றும்,

> தானத்தைச் செய்து வாழ்வான் சலத்துளே யழுந்துகின்றீர்
> வானத்தை வணங்கவேண்டில் வம்மின்கள் வல்லீராகில்
> ஞானத்தை விளக்கையேற்றி நாடியுள் விரவவல்லார்க்கு
> ஊனத்தை யொழிப்பர்போலும் ஒற்றியூருடைய கோவே
> (திருநாவுக்கரசர்-திருவொற்றியூர்-திருநேரிசை 3)

என்றும் கூறுகிறார்.

வினா :—இன்னும் யார் கூறுகிறார்கள் ?

விடை :—நம்மாழ்வார் திருவாய் மொழியில்,

> பிறவித்துயரற ஞானத்துள் நின்று
> துறவிச் சுடர்விளக்கந் தலைப்பெய்வார் (1. 7. 1.)

என்றும் கூறுகிறார்.

வினா:—இன்னும் யார் இவ்வாறு கூறுகிறார்கள்?

விடை :—திருமூலர் திருமந்திரத்தில், (சமாஜப் பதிப்பு 1674-ம் பாடலில்)

> ஞானத்தினாற்பத நண்ணு சிவஞானி

என்றும்,

தாயுமானவர்,

> தன்னையறிந்தவர் தம்மைத் தானாகச் செய்தருளுஞ் சமர்த்தை
> (மண்டலத்தின். 5)

என்றும் கூறுகிறார்.

வினா :—இதைப்பற்றி இன்னும் எங்கே விவரிக்கப்பட்டுள்ளது ?

விடை :—பிரபுலிங்க லீலையில்,

> உரைசெயிற் பரமஞான மொன்றுமே முத்திக்கேது
> சரியை நற்கிரியை யோகந்தாமொரு மூன்று ஞான
> மருவுதற்கேது வென்று மறைபுகன்றுரைக்கு மிந்தக்
> கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவரன்றே
> (சித்தராமய்யர் கதி 69)

என்று விவரிக்கிறார்.

வினா :—ஒருவனுக்கு எத்தகைய அறிவு ஏற்படவேண்டும்?

விடை :—எல்லாம் ஆன்மாவானபடியால், எல்லாம் இரண்டற்ற ஒன்றே என்ற அறிவு ஏற்படவேண்டும்.

வினா :—“ஆன்மா” என்பதற்குப் பொருளென்ன?

விடை :—ஆன்மா, பரம்பொருள், புருஷன், பிரும்மம், முதலியன ஒரு பொருட் சொற்கள்.

வினா :—எல்லாம் இரண்டற்ற ஒரே ஆன்மா என்றறியாமல், எல்லாம் வெவ்வேறானவை, இரண்டானவை என்று கொண்டால் என்ன தவறு?

விடை :—"தன்னிலும் வேறாக இரண்டாவது பொருள் உண்டு" என்று எண்ணும்போதுதான், ஆசை முதலியன தோன்றுகின்றன. இவ் வாசை முதலியன துயரம் தோன்றுவதற்கான விதைகள். இவை வளர்வதற்கு "இரண்டென்னும் துவைத அறிவு" பற்றுக்கோடா யிருக்கிறது.

வினா :—எது முத்தி?

விடை :—துயரத்திற்குக் காரணம், "ஒரே பரம்பொருள் எல்லாமாய் நிற்கின்றது" என்பதை யறியாததிலிருந்து முளைத்த இரண்டென்னும் துவைதத் தோற்றமாதலால், அந்த இரண்டென்னும் துவைதத் தோற்றத்தை நீக்கிவிடுதலே முத்தியாகும்.

வினா :—இரண்டென்னும் தோற்றத்தைச் சிதையச் செய்வதெப்படி?

விடை :—இருளில் ஒரு தூண் திருடன்போலத் தோன்றுகிறது. வெளிச்சத்தில் 'தூண்' என்ற உண்மை தெரிந்ததும், தூணிலிருந்து திருடனென்ற தோற்றம் போய்விடுகிறது. அது போலவே, எல்லாமாகிய, ஒருவனேயாகிய, உண்மையனாகிய பரம்பொருள் என்ற அறிவு ஏற்பட்டவுடனே இரண்டென்னும் தோற்றம் இல்லாதாகிவிடுகிறது.

வினா :—தோற்றம் இல்லையானால், எஞ்சி நிற்பது யாது? அதனாலேற்படும் பயன் என்ன?

விடை :—இரண்டென்னும் தோற்றம் இல்லாமல் போகவே, எஞ்சி நிற்பது எல்லாம் ஒரே உண்மைப் பொருளேயான ஞானமேயாகும். இந்த ஞானந்தான் முத்திக்கு மூலகாரணம். இதனாலேயே, "ஞானத்தால் மட்டுமே முத்திபெற முடியும்" என்பது அத்வைதத்தில் தனிச் சிறப்பமைந்ததொரு முடிபாகிறது.

வினா :—இத் தகைய பேரறிவு எவ்வாறு ஏற்படும்?

விடை :—நல்லொழுக்கம், பக்தி, தியானம், பகுத்தறிவு, பற்றின்மை, இறைவனருள் முதலியவற்றால் ஏற்படும். இதைத்தான், முற்கூறிய 'பிரபுலிங்க லீலை'ப் பாடல் வலியுறுத்துகிறது.

வினா :—பந்தத்துக்குக் காரணமாகிய உலகம் பொய்யென்பதனால் என்ன சித்திக்கிறது?

விடை :—பந்தம் பொய்யாகவில்லையானால், அறிவால் நீங்காது. பொய்யாதலாலேதான், அறிவாலேயே நீங்கும். இருள் பிரகாசத்தாலேயே நீங்கும். பொய்ப்பாம்பு, பழுதை யென்ற அறிவாலேதான் நீங்கும். வேறு எதனாலும் நீங்காது. அறிவால் நீங்கும் பொருள் பொய்ப்பொருளே யாகும். 'அறிவால் உலக பந்தம் நீங்கும்' என்று வேதமொழிகள் கூறுகின்றன. அவ்வேத மொழிகள் ஒருபோதும் பொய்யாக மாட்டா. ஆதலால், உலகம் பொய்தான். பரம்பொருள் உண்மைதான். அது எங்கும் நிறைந்ததுதான். அதையறிந்துணர்ந்து அனுபவிக்கும் நிலையே முத்தி.

## சீவனும் பரம்பொருளும் வேறல்ல

வினா :—வேதம் சீவனையும் பரம்பொருளையும் பற்றி என்ன கூறுகிறது?

விடை :—"பொருள்களெல்லாம் கற்பனை. அவை யாவும் உண்மையில் பரம்பொருளே" என்று கூறிய வேதமே, "அது நீயாய் இருக்கிறாய்" "இந்த ஆன்மா பிரும்மம்" என்ற தொடர்களால் சீவர்களும் பரம்பொருளும் வேறல்லர் என்பதையும் தெரிவிக்கிறது.

வினா:—வேதத்தில் 'அது' என்னும் சொல்லால் எது குறிக்கப்படுகிறது?

விடை :—பரம்பொருள் குறிக்கப்படுகிறது.

வினா :—'நான்' என்னும் சொல்லால் எது குறிக்கப்படுகிறது?

விடை :—'சீவான்மா' குறிக்கப்படுகிறது.

வினா :—உலகைப் பரம்பொருள் என்று கூறி, சீவான்மாவைப் பரம்பொருள் என்று கூறாமற் போனால் என்ன குற்றம்?

விடை :—அங்ஙனம் கூறாமற் போனால், பரம்பொருளைத் தவிர வேறொரு பொருள் இருப்பதாக முடியும். இருந்தால்; 'துவைத புத்தி துயரந்தரும்' என்று முன்பே கூறினோம். அது மாத்திரமில்லாமல் பரமாத்மாவின் பூரணத் தன்மைக்கும் பங்கம் ஏற்படும்

வினு :—'அது நீயாய் இருக்கிறாய்' முதலிய உபதேசங்களுக்கு வேற்றுமையாகவே பொருள் கூறலாமா ?

விடை :—சிலர் அவ்விதம் கூறுகின்றனர். 'நான் கறுப்பாயிருக்கிறேன்' 'நான் பருத்தவனுயிருக்கிறேன்' என்ற விடத்துக் 'கறுத்துப் பருத்த தன் தேகம் வேறு; ஆன்மா வேறு' எனினும், இரண்டையும் ஒன்றுபடுத்தி உலகோர் கூறுவது போலவே, ஜீவனையும் அவனின் வேறான ஈசனையும் இவ் வாக்கியம் ஒன்றுபடுத்திக் கூறுகிறது என்றும், வேறு சிலர், "ஒரு நிலையில் ஒன்றாகும், அந்நிலை முடிவான உண்மைநிலையன்று" என்றும் உரை காண்கிறார்கள்.

வினு :—ஏன் ?

விடை :—ஆன்மாவையும் அதனின் வேறான உடலையும் நான் பருத்தவன் என்று ஒன்றுபடுத்திக் கூறுவதே அஞ்ஞான மயக்கத்தால் ஏற்படுவது. ஆதலால், அது பொய்யே. அவ் வெண்ணமே பிறப்பிறப்பென்னும் துன்பத்திற்குக் காரணம். தாயுமான ஸ்வாமிகளும்,

> அநியாயமா யிந்த உடலை நானென்றெண்ணி
> யந்தகற் காளாகவோ ! (சச்சிதாநந்த சிவம்)

என்று கதறுகிறார். இவ் வெண்ணத்தை அநியாய மென்கிறார்.

வினு :—அதனால் என்ன ஏற்படுகிறது ?

விடை :—"நீ அதுவாக இருக்கிறாய்" என்ற உபதேசம் மோக்ஷத்திற்காக மறைமுடியில், ஞானோபதேசமாக உள்ளது. இவ் வுண்மையுபதேசத்தை அநியாயமும், பொய்யும், அந்தகற்காளாக்குவதுமான 'நான் பருத்தவன்' என்ற பாமர வாக்கியத்தைப் போலக் கொள்வது உண்மைநிலையில் அமையாததாகும்.

வினு :—ஜீவாத்ம பரமாத்ம அபேதமே உண்மையாயிருக்க, வேறாகத் தோன்றும் தோற்றத்திற்கு வேதம் எதை உவமையாகக் கூறுகிறது ?

விடை :—உண்மையான ஒரு சூரியன் அநேக ஜலத்துளிகளில் பிரதிபலிக்கும்பொழுது உண்மையல்லாத அநேக சூரிய பிம்பங்கள் ஏற்படுவதை விளக்கிக் காட்டியிருக்கிறது. நிறைந்து

ஒன்றாயிருக்கும் ஆகாயம் என்னும் வெளி, சுவர் போடப்பட்ட 'மடம்' என்னும் ஒரு கட்டடத்தினாலும் குயவனாலாக்கப்பட்ட 'கடம்' என்னும் ஒரு குடத்தினாலும் சிறிது பெரிது என்னும் தோற்றத்திற்கும் வழங்கப்படுதலுக்கும் உள்ளாகிறது. இதுவும் சிலவிடங்களில் உவமையாகக் கூறப்பட்டிருக்கிறது.

வினா:—இவ் வுவமைகள் எதை விளக்க வந்தன?

விடை:—இவ் வுவமைகள் 'சீவத்தன்மை உண்மையன்று' என்பதை விளக்குவதற்காக மட்டும் அறிவிக்கப்பட்டவை. உவமான உவமேயங்களில் மற்ற எல்லா அம்சங்களும் பொருந்தியிருக்கவேண்டுமென்பது அவசியமில்லை.

வினா:—சீவன் ஸம்ஸார நிலையில் பரம்பொருளினின்றும் வேறுபட்டவனாகவே இருக்கட்டும்; முத்திநிலையில் புதிதாக ஒற்றுமை யேற்படட்டுமே. அந்த விதத்திலும் முத்தியில் அத்வைதம் ஏற்பட்டு விடுகிறதல்லவா?

முக்காலத்தும் சிவனே சீவனும் மற்றெல்லாமும் என்று ஏன் கொள்ள வேண்டும்?

விடை:—சீவன் தோற்றத்தாலல்லாமல், உண்மையிலேயே பரம்பொருளினும் வேறுபட்டவனாயின், முத்திநிலையிலும் அச் சீவன் பரம்பொருளுடன் ஒன்றாகமாட்டான். அப்படியொன்றுவதாகத் தோன்றிடினும், அது மெய்யாகாது. பொய்யாயின் முத்தியேயன்று. ஸம்ஸார நிலையில் தோற்றும் வேற்றுமையே மெய்யாகவும், முத்தியில் தோற்றும் ஒற்றுமை பொய்யாகவும் ஆகும்பொழுது, ஸம்ஸார நிலையே மோக்ஷமாகும். பொய்யறிவினால் 'பிறவிக் கடல்' என்றும், மெய்யறிவினால் 'மோக்ஷம்' என்றும் மேற்கூறிய மறைமுடியாம் சாந்தோக்யம் 'மஹாவாக்யப்ரகரண'த்தில் பறை சாற்றியிருக்கிறதே!

வினா:—மோக்ஷம் புதிதாகத் தோன்றும் ஒற்றுமை என்று கூறுவதில் இன்னும் ஏதாவது குற்றம் உண்டா?

விடை:—உலகில் புதிதாக உற்பத்தியாகும் எத்தனையோ காரியங்களைப்போல், முத்தியும் ஒரு காரியப்பொருள் என்று ஏற்பட்டுவிடும்.

வினா :—முத்தியை உற்பத்தியுடைய ஒரு காரியப் பொருள் என்று கொண்டால் என்ன ?

விடை :—"உண்டாகும் காரியப்பொருளெல்லாம் அழிந்தே தீரும்". ஆதலால் இம் முத்தியும் அழிந்துவிடும். அழியக்கூடியதை முத்தியென்று யாரும் விரும்பார். எனவே, முத்தியென்பதே சித்திக்காது.

வினா :—முத்தியை உயர்ந்த உலகில் ஏற்படும் ஒரு வாஸமாகவோ, அல்லது தனது ஆத்மஸ்வரூபத்தைத் தவிர வேறான ஓர் இன்பமாகவோ கொண்டால் என்ன குற்றம் ?

விடை :—ஐம்புலன்களாலோ அல்லது உள்ளத்தாலோ தன்னினும் வேறாக அனுபவிக்கப்படும் காட்சிப் பொருள்கள் முதலியவையும் இன்பங்களும் அழிவனவேயாகும். அவ்வகைப் பொருளாய்க் கொண்டால், முத்தியும் அழிய நேரும். ஆதலால், ஜீவனென்னும் அறிவுப் பொருளே உண்மையில் பரிபூரண அகண்ட பரமாத்ம வடிவாக எக்காலத்தும் இருந்தும், மாயையென்னும் அநாதிப் பொய்த் திரையால் மூடப்பட்டுத் தான் வேறுபட்டவனென்ற பொய் யெண்ணத்தோடிருக்க, மாயாதீதமான திருவருள் கூடும்பொழுது, ஞானக்கதிரவன் உதயமாக, அம் மாயையென்னும் இருட்படலம் ஒழிய, தனக்கென்றுமுள்ள பூர்ணானந்தத் தன்மையே முத்தியாகும். அதுவே சிவம். அதுவே வேதப்பொருள். அது உற்பத்தியாவதுமன்று; தன்னைத் தவிர வேறான காட்சிப் பொருளுமன்று; வேறான இன்பப்பொருளுமன்று.

வினா :—பரமாத்மாவுக்குப் பூர்ணத்தன்மை உண்டென்று கூறிவிட்டு, அவனைத் தவிர வேறுபட்ட 'ஜீவன்' என்னும் பொருள் இருப்பது அப் பூரணத்திற்குக் குறைவேற்படுத்துமல்லவா ?

விடை :—ஆம். பரமாத்மாவைத் தவிர வேறுபட்ட பொருள் இருப்பதாகக் கூறுவது, பரமாத்மாவின் பூர்ணத்தன்மைக்குக் குறைவுதான். நானென்னு மகங்காரத்தையே அப் பூர்ணத்தில் கரைத்துவிட்டாலல்லாது, பூர்ணத்தன்மை பூர்ணமாகாது. பரமாத்மாவல்லாத பொருளைப் பரமாத்மாவிலே கரைத்தால், அது கரைந்தாலும் வேறு வேறே. பனிக்கட்டியை ஜலத்

தில் கரைத்தால், பூர்ணமாய் ஜலமாகிவிடும். ஜலமும் பூர்ணமாகி விடும். கரைதலுக்கு முன்னமே இரண்டும் ஒன்றே. கரைந்தபின் னரும் ஒன்றே. ஜலத்தைத்தவிர வேறான உப்பையோ சர்க்கரையையோ கரைத்தால், கரைதலும் பூர்ணமாகாது; ஜலமும் பூர்ணமாகாது. "ஓடும் ஆறுகள் கடலையடைந்ததும், அவற்றின் பெயரும் உருவும் நீங்கி அவை மறைகின்றன. அவ்வாறே பரம் பொருளை யறிந்தவன் பெயருருவங்களை விட்டு மேலான பரம் பொருளை யடைகிறான்" என்று வேதங் கூறுகிறது. இதற்கு இன்னொருதாரணமுங் கூறலாம்.

பிறவியிலிருந்து ஆடுகளின் கூட்டத்தில் வளர்ந்த புலி 'தான் புலியில்லை, ஆடு' என்று நினைப்பதுபோல பிரும்மத்தினின்றும் தான் வேறுபட்டவனென்று எண்ணும் வேற்றுமைத் தோற்றம் அஞ்ஞான மயக்கமே.'

இந்த 'ஆறு-கடல்' உதாரணத்தாலும், ஆடு வளர்த்த புலியுதாரணத்தாலும், ஜீவனுக்கும் பரம்பொருளுக்கும் இயற்கையிலேயே பேதமில்லையென்பதும், இடையிலே தோன்றும் பேதம் 'உபாதி' யென்னும் வரையறையால் ஏற்பட்டது என்பதும் தெரிகின்றன.

வினா :—'உபாதி' யென்றால் என்ன?

விடை :—கடல்நீர் சூரிய கிரணங்களால் இழுக்கப்பட்டு, வானத்தை யடைகிறது. அப்பொழுது, அது 'கார்' என்று பெயர்பெறுகிறது. அதுவே வானத்தினின்று விடுபட்டதும் "நீர்" என்ற பெயரைப் பெறுகிறது. இப்படி ஒரே பொருள் பல இடங்களுக்குத் தக்கபடி பல பெயர்களைப் பெறுவதற்குக் காரணமாயிருக்கும் வானம், மலை முதலியவற்றை 'உபாதி' யென்று சொல்லலாம்.

வினா :—இந்த உபாதி திருஷ்டாந்தத்தால் கிடைத்தது என்ன?

விடை :—ஒரே நீருக்குப் பல பெயர்கள் வருவது உபாதியாலேதான்; வேறு வேற்றுமையில்லை. உண்மையில் எல்லாம் ஒரே நீர்தான். அதேபோல ஜீவனுக்கும் பரம்பொருளுக்கும் வேறுபாடில்லை. இதைத் தான் மேற்கூறிய வேத வாக்கியம் நன்கு தெரிவிக்கிறது.

வினா :—சீவப் பிரும்ம அபேதத்தைப்பற்றித் திருமுறைகளில் கூறப்பட்டிருக்கிறதா ?

விடை :—திருஞான சம்பந்தர்,

"பத்திப்பேர் வித்திட்டே" (திருக்கழுமலம், திருத்தாளச்சதி, 7)

என்த் தொடங்கும் தேவாரத்தில்

......மெய்ப் பரம்பொருள்
சேர்வார்தாமே தானகச்செயுமவ னுறையுமிடம்

என்று கூறுகிறார்.

மாணிக்கவாசகர்

"சிந்தனைத் தெளிவித்துச் சிவமாக்கி" (கண்டபத்து 4) என்றும்,

"சித்தமலமறுவித்துச் சிவமாக்கி" (அச்சோப் பதிகம் 1) என்றும்

உரைக்கின்றார்.

திருமூலர் தமது திருமந்திரத்தில்,

"நானென்ன நீயென்ன வேறில்லை" (சம்பிரதாயம் 11) என்றும்,

"தானே சிவமான தன்மை தலைப்பட" (நின்மலாவத்தை 11) என்றும்

சீவனெனச் சிவனென்ன வேறில்லை
சீவனார் சிவனாரை யறிகிலர்
சீவனார் சிவனாரை யறிந்தபின்
சீவனார் சிவனாயிட் டிருப்பரே (7 போதன் 1)

என்றும் திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார்.

வினா :—இன்னும் யாருடைய வாக்கு ஆதாரமாயிருக்கிறது?

விடை :—

"முச்சகமே யாகி முழுதுமகண் டாகார
சச்சிதா னந்த சிவந்தானென்ப தெந்நாளோ" (நிலைபிரிந்தோர். 8)

"நீ யென நானென்ன வேறில்லை" (பாயப்புலி. 58)

என்னும் தாயுமானவர் வாக்குகள் சான்றுகளாயிருக்கின்றன.

## பரம்பொருள் நிர்க்குணமானது

வினா :—பரம்பொருள் சகுணமா ? நிர்க்குணமா ?

விடை :—பரம்பொருள் உண்மையில் நிர்க்குணமானது. இது அத்வைதத்தில் சிறப்பானதொரு கொள்கை.

வினு :—பரம்பொருள் சகுணமானதே என்று கூறினுல் என்ன?

விடை :—அவ்வாறு கூறினல், பரம்பொருளல்லாததும் பரம்பொருளைப் போன்று அழியாததுமான ஒரு குணகணத்தை ஒப்புக்கொள்ள வேண்டிவரும். உண்மையில் எல்லாம் பரம்பொருளாதலின் அக் குணகணமும் பரம்பொருளே. குணங்கள் வேறு; குணங்களையுடைய அப்பரம்பொருள் வேறு என்ற வேற்றுமையில்லாததால், குணபரிபூர்ணமான அப்பரம்பொருள் நிர்க்குணமே.

வினு :—பரம்பொருளல்லாதது ஏதேனும் உண்டோ?

விடை :—இல்லை. இருக்குமாயின், பரம்பொருள் பரிபூர்ணமானது என்பது பொருந்தாது. இதனுலேயே பரம்பொருள் நிர்க்குணமானது என்பதும் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இவ்வித நிர்க்குண பூர்ண ஸாக்ஷாத்காரம், அவரை ஸகுணமாகக் கொண்டு உபாஸித்து அருள் பெறுவதனுலேதான் ஏற்படுகிறது.

வினு :—இதற்கு ஏதேனும் ஆதாரம் உண்டா?

விடை :—

இளமதி புனைந்த ஈசனதருளால்
அத்துவித வாசனை ஆடவர்க் குண்டாம்
மற்றெவ்வகையினும் இல்லவே இல்லை

என்னும் அப்பைய தீக்ஷிதர் வாக்கு முன்னரே எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது.

வினு :—சகுணப் பிரும்ம நிர்க்குணப் பிரும்ம விஷயத்தில் பிரமாணமென்ன?

விடை :—(1) "பரம்பொருளும் அபரம்பொருளும் ஆன பிரும்மம் ஓங்காரம்" (ப்ரச்னோபநிஷத் 5, 5) (2) எல்லாப்பூதங்களும் இந்தப் பிருமத்தினுடைய அம்சம். இவருடைய 'த்ரிபாத்' ஆன அம்ருதம் பிரகாசமுள்ள ஸ்வரூபத்திலிருக்கிறது. எவ்விதம் கால் பங்கைக் காட்டிலும் முக்கால் பாகம் அதிகமோ, அவ்விதமே கல்பித ப்ரபஞ்சத்தைக் காட்டிலும் 'வாஸ்தவ புருஷன் பெரியவன்' (சாந்தோ. 3-12-6) (3) சகுணத்தைக் காட்டிலும் வேறான நிர்க்குணமானது பூர்ணமானது (பரிச்சேதமற்றது)

(4) எந்த 'பூமா'வில் இருப்பவன், வேறான பார்க்கும் பொருளைப் பார்ப்பதில்லையோ, கேட்கத் தகுந்ததைக் கேட்பதில்லையோ; எண்ணத் தகுந்த மற்றொன்றை எண்ணுவதில்லையோ (எந்த நிலையில் இருப்பவன் இரண்டாவது ஒரு பொருளையும் அறிவதில்லையோ) அதுதான் பூமா. பரிச்சேதமற்ற பரமாத்மா நிர்க்குணமானது" (சாந்தோ. 7-23-24) என்தொடங்கும் வேதப் பகுதிகள் சகுணத்தையும், நிர்க்குணத்தையும் நன்கு நிரூபிக்கின்றன.

வினா:—பரம்பொருள் நிர்க்குணமானது என்பதற்குத் தமிழில் ஏதேனும் ஆதாரம் உண்டா?

விடை:—

இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே
(6. அண்டமுங் கடந்த. 10)

என்னும் திருநாவுக்கரசர் திருவாக்கும்;

போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியன் (சிவபுராணம், 77)

என்னும் மாணிக்க வாசகர் வாசகமும் ஆதாரங்கள்.

வினா:—பரம்பொருள் நிர்க்குணமானால், இந்த சகுணப் பிரிவினை ஏன் ஏற்பட்டது?

விடை:—சாதாரணமாக மனிதர் எங்கும் நிறைந்த பரம்பொருளையறிந்து அனுபவித்து ஆனந்திக்கும் ஆற்றலற்றவராதலால், நிறைந்த நிர்க்குணமான அப் பரம்பொருளே அவ் வான்மாக்களிடம் கருணையால், சகுணமான ஒரு வடிவத்தைத் தோற்றுவித்துத் திருவருட் சொரிந்து, அதன்மூலம் அவர்களைத் தன்மயமாக்கிக் கொள்ளும். உண்மையில், அது பரம்பொருள். எங்கும் நிறைந்தது. நிர்க்குணமானது. உண்மை தெரியாத போது சகுணம். இதனாலேதான் வேதம் பரம்பொருளை இரண்டு வகையாகப் பிரித்துக் கூறியது.

வினா:—இதற்கு ஏதேனும் திருஷ்டாந்தம் உண்டா?

விடை:—நெய்யானது, உருகிய நிலையில் வெண்மை நிறமும் கட்டியான தன்மையும் இல்லாதிருந்தும், சீதள சம்பந்தம் ஏற்படுங்கால், அதில் கெட்டியும் வெண்மையும் தோற்

றுவதுபோல, ஒரு குணமும் குறியுமில்லாத பரம்பொருள் அஜ்ஞானத்தினின்றும் நீங்காத ஆன்மாக்களை நோக்கிக் கருணை யென்னும் சீதளத்தைத் தழுவி சகல கலியாண குணங்களையும் சக்திகளையும் தோற்றுவித்து ஏற்றுக்கொள்கிறது.

வினா :—இதற்கு ஏதாவது ஆதாரம் உண்டா ?

விடை :—பரம்பொருள் சகுண ரூபமாய்ப் பிராமண வடிவங்கொண்டு தன்னைக் கடைத்தேற வைத்த மேன்மையை மாணிக்கவாசகர்,

" இந்திரஞாலம் போலவந்தருளி" (கீர்த்தித்திருவகவல், 94) என்றும்

" இந்திரஞாலங் காட்டிய வியல்பும்" (கீர்த்தித்திருவகவல், 43)

என்றும் போற்றி, நிர்க்குணம் சகுணமாயிற்றென்ற கருத்தைக் குறிப்பிடுகிறார்.

## ஜீவன்முத்தி (உயிருடன் வீடுபெறுதல்)

வினா :—முத்தி இம்மைப் பயனா ? மறுமைப் பயனா ?

விடை :—முத்தி இம்மைப் பயனாகும் என்பதாலேதான் 'ஜீவன்முத்தி' ஒப்புக்கொள்ளப்படுகிறது.

வினா :—இவ்வாறு கூறுவதற்கு ஆதாரம் என்ன ?

விடை :—" அவனை இவ்விதம் அறிந்தவன் இம்மையில் அமிருதத்துவம் என்னும் முத்தியை அடைந்தவனாகிறான் " என்று கூறப்பட்டிருக்கிறது. இது, 'இஹ' என்னும் இம்மைச் சொல்லுடன் கூடி, 'புருஷஸூக்த'த்தில் இருக்கிறது.

வினா :—இம்மை என்னும் சொல்லுக்குப் பொருள் என்ன ?

விடை :—இம்மை என்னும் சொல்லுக்குப் பகவானால் கீதையில் 'உடலை விடுவதற்குமுன்' என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது.

வினா :—ஜீவன்முக்தியைத் தெரிவிக்கின்ற வேறு ஆதாரங்கள் எவை ?

விடை :—'இம்மையிலறிந்தால் உண்மையிருக்கிறது' என்பது கேனோபநிஷதம். வாமதேவ முனிவருக்குக் கருவிலேயே

முத்தி கிடைத்ததென்று கருப்பத்தில் இருந்துகொண்டே இவற்றையறிந்தேன்'' என்று தொடங்கும் ஐதரேய உபநிஷத்தும் விளக்குகிறது.

வினு:—தமிழ்மொழியில் ஜீவன்முத்தியைத் தெரிவிக்கின்ற ஆதாரம் யாது?

விடை:—சடகோப முனிவர் அருளிய திருவாய்மொழியிலே யுள்ள

நன்ருய் ஞாலம் கடந்துபோய் நல்லிந்திரியமெல்லா மீர்த்து
ஒன்ருய்க் கிடந்த வரும்பெரும் பாழுலப்பிலதனை யுணர்ந்துணர்ந்து
சென்ருங் கின்பதுன்பங்கள் செற்றுக்களைந்து பசையற்ருல்
அன்றேயப்பொழுதே வீடதுவே வீடு வீடாமே (8, 8, 6)

என்னும் திருவாய்மொழி ஆதாரம்.

வினு:—மரணத்திற்குப் பின்னர்தான் முத்தி கிடைக்குமென்று கூறினுலென்ன?

விடை:—முத்திக்கு வேண்டிய சித்த சுத்தி உயிருள்ளபோதே கிட்டாதாயின், மரணத்தால் மாத்திரம் தோன்றும் என்பது பொருத்தமாய் இல்லை. 'இந்த ஜன்மத்தில் ஜீவித்திருக்கும்பொழுதே முத்தியடைவது' என்பதுதான் பொருத்தமாயிருக்கிறது. இந்த ஜீவன்முத்தியே ஸாக்ஷான்முத்தி யாகிறது.

வினு:—கிரமமுத்தி என்பது என்ன?

விடை:—யாகஞ் செய்தல், தெய்வ வழிபாடு, யோகப் பயிற்சி முதலியவற்றிலே சித்தி பெற்றவனுக்கும், துறவறத்தை முறைப்படி யனுஷ்டிப்பவனுக்கும், கைலாசம் வைகுண்டம் முதலிய சகுணப் பிரும்ம உலகம் கிடைக்கும். இதைப் 'படிப்படியாய் அடையும் முத்தி' என்று கூறலாம். இதைத்தான் வேதம் முதலியன 'கிரமமுத்தி' என்று கூறுகின்றன.

வினு:—சகுணப் பிரும்ம உலகத்தில் இருப்பவர்கள், நிர்க்குணப் பிரும்மத்தில் அடங்குவதெவ்வாறு?

விடை:—'மஹா பிரளயம்' என்னும் ஊழிக்காலத்தில் இறைவனுடைய திரிமூர்த்தியுருவங்களும் மறைந்துவிடும். அந்தக் காலத்தில் மேற்கூறிய முத்தர்களுக்கு நிர்குணப்பிரும்ம சாக்ஷாத்

காரம் ஏற்படும். உடனே அவர்கள் நிர்குணப் பிரும்மத்தில் அடங்குவர்.

வினு:—உயிர் நீங்கும் வரை ஸர்வாத்ம பாவம் ஏற்படாதவர்களுக்கு ஊழிக்காலத்தில் ஸர்வாத்ம பாவம் ஏற்படுவதெவ்வாறு?

விடை:—அவ்வூழிக் காலம்வரை இறைவன் முன்னிலையில் இருந்த ஒரு விசேஷத்தினுல், அத்வைத ஞானம் உதயமாகி, இறைவனது சகுணமூர்த்தியும் மறையும் அக்காலத்தில் இவனது சீவத்தன்மையும் அழிந்து நிர்குணப் பிரும்மத்தில் ஐக்கியமாகிறுன்.

வினு:—இப்படிக் கூறுவதற்கு ஏதேனும் ஆதாரம் உண்டா?

விடை:—உண்டு. "பிரளயம் வந்தகாலத்து அவரனைவரும் பிரும்மாவுடன் ஆன்ம ஞானிகளாய், பரார்த்த காலத்தின் முடிவில் மோக்ஷத்தை யடைகின்றனர்." (முண்டகோபநிஷத், 3, 2, 6) என்னும் வேதவாக்கியம் மேற்கூறியதை விளக்குகிறது.

## ஸத்தியத்தின் மூவகை நிலை

வினு:—'ஸத்தியம்' அல்லது 'ஸத்தை' என்பதற்குப் பொருளென்ன?

விடை:—'உண்மை' என்பது பொருள்.

வினு:—இந்த ஸத்தை எத்தனை வகைப்படும்?

விடை:—(1) பாரமார்த்திக ஸத்தை (2) வியாவஹாரிக ஸத்தை (3) பிராதிபாஸிக ஸத்தை என்று மூன்று வகைப்படும்.

வினு:—பாரமார்த்திக ஸத்தை என்பது என்ன?

விடை:—பழுதையிலே தோன்றும் பாம்பு முதலியவை பொய்யாய்த் தோன்றும் பொருள், அடிப்படையான பழுதையைக் கண்டதும் விலகிவிடுகிறது. கனவிலே கண்ட பொருளும், விழித்துக்கொண்டவுடன் போய்விடுகிறது. இவ்வாறே மலையும் காடும் நிறைந்த இந்த உலகம் முழுவதும் அதற்கு ஆதாரமாகிய பரம்பொருளைக் கண்டதும் போய்விடுகிறது. இதுவே பரம்

பொருளைக் காணும் நிலையில் 'பாரமார்த்திக ஸத்தை' என்று கூறப்படும்.

வினா :—வியாவஹாரிக ஸத்தை என்பது யாது?

விடை :—கனவு, மயக்கம் முதலியவை நீங்கிய ஸாதாரண விழிப்புடன் வியவஹாரங்களைக் கவனிக்கும் உண்மைக்கு வியாவஹாரிக ஸத்தை என்று பெயர்.

வினா :—பிராதிபாஸிக ஸத்தை என்பது என்ன?

விடை :—கிளிஞ்சல் வெள்ளியாகத் தோற்றும் மயக்கநிலையிலும், கனாநிலையிலும் உண்டாவது பிராதிபாஸிக ஸத்தை என்னும் தோற்ற உண்மை.

வினா :—பாரமார்த்திகம் முதலிய ஸத்தைகளைத் தெரிவிக்கும் வேதப் பகுதி என்ன?

விடை :—'ஸத்தியம் ஸத்தியமாயும், பொய்யாயுமாயிற்று' (ப்ரஹ்ம. 6 அநு.) என்னும் தைத்திரீய உபநிடதம் பாரமார்த்திக உண்மைப் பொருளாகிய பிரும்மமே வியாவஹாரிக உண்மையான பூமி முதலிய உருவத்துடனும், பிராதிபாஸிக மாகிய பொய், கனவு முதலிய உருவத்துடனும் இருந்தது என்று எடுத்துச் சொல்லுகிறது.

வினா :—'ஸத்தியத்திற்கு ஸத்யம்' எனத் தொடங்கும் வேதப் பகுதி எதை விளக்குகிறது?

விடை :—"ஸத்தியத்திற்கு ஸத்தியம்; அவையெல்லாவற்றிற்கும் இவன் ஸத்தியம்" என்னும் வேதம், அந்தப் பாரமார்த்திக ஸத்யமான பரம்பொருளே வியவஹார உலக உருவமாகவும் உலக நிலையிலேயே பொய்யாகிவிடுகின்ற தோற்றப் பொருள்களாகவும் ஆகி நிற்கின்றான் என்று சிருஷ்டிக் கிரமத்தைக்கூறி, ஸத்தைகளின் மூவகை நிலைகளையும் விளக்குகிறது.

வினா :—இதற்குத் தமிழ் நூல்களில் ஆதாரம் இருக்கிறதா?

விடை :—மாணிக்கவாசக ஸ்வாமிகள்,

இந்திரஞால விடர்ப்பிறவித்துய ரேகுவதாகாதே

(திருப்படையாட்சி, 3)

என்று பாடி, ஸம்ஸார வாழ்க்கையை இந்திரசாலத்துக்கு ஒப்பிட்டிருக்கிறார்.

தாயுமான ஸ்வாமிகளும்,

இந்திர சாலங்கனவு கானனீரென வுலக மெய்க்குத் தோன்ற
(பொருள் வணக்கம், 6)

என்றருளியிருக்கிறார்.

வினா :—இவ்விதம் கூறுவதன் பயன் என்ன ?

விடை :—இவ்வாறு கூறுவதன் பயன் தோற்றங்களை யொழித்து நிறைந்து நிற்பதே.

## அரியும், அரனும் ஒன்றே

வினா :—சிவனுக்கும், திருமாலுக்கும் வேறுபாடு உண்டா ?

விடை :—அத்வைதக் கொள்கையின்படி, வியவஹார நிலையிலுங்கூட சகுணப் பிரும்மத்தை யுபாஸிக்கும்போது சிவனுக்கும் திருமாலுக்கும் வேறுபாடில்லை.

வினா :—இப்படிக் கூறுவதற்கு வேத ஆதாரம் உண்டா ?

விடை :—"எதனிடமிருந்து இவ்வுலகப் பொருள்கள் பிறந்தனவோ, எதனால் பிறந்தவை வாழ்கின்றனவோ, எதனுள் ஒடுங்குகின்றனவோ, அதையறிந்துகொள், அது பிரும்மம்" என்று வேதங்களில் கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறு மூவகைச் செயல்கள் இருப்பதனாலேதான், ஒரே பரம்பொருளுக்கு அயன், அரி, அரன் என்னும் பெயர்களும், உருவங்களும் கொள்ளப் பட்டன.

வினா :—இவ்வாறு வேறுபாடில்லை என்பதற்கு, உலக வியவஹாரத்தில் ஏதாவது உதாரணம் கூறமுடியுமா ?

விடை:—முடியும். உலகியலிலேகூட இராமனுக்கும் கண்ணனுக்கும் வேற்றுமையில்லை. தென்முகக் கடவுளுக்கும், சிவபெருமானுக்கும் வேற்றுமையில்லை. ஆதலால், அரன், அரி முதலிய மூர்த்திகளை வேறுபடுத்தி ஆத்திரங்கொள்ள இடமில்லை.

வினா :—தொண்டரடிப் பொடியாழ்வாரின் வாழ்க்கையில் ஒரு ஸம்பவம் தெரியுமா ?

விடை :—தெரியும். தொண்டரடிப்பொடியாழ்வார், ஆழ்வார் பன்னிருவரில் ஒருவர். அவர் ஸ்ரீரங்கத்தில் அரங்கனைப் பாடிக்கொண்டிருந்தார். அவரிடம், சில அடியார்கள் வந்து,

"திருப்பதியிலிருக்கும் திருவேங்கடமுடையானைத் தாங்கள் பாடவேண்டு"மென்று கோர, திருவேங்கடமுடையான் விஷ்ணுவே என்று அவர் அறிந்திருந்தும், "அரங்கனைப் பாடிய வாயால் குரங்கனைப் பாடமாட்டேன்" என்று கூறித் திருவேங்கடமுடையானைத் தூக்கியெறிந்துவிட்டார். அதனாலேதான் திருவேங்கடமுடையானுக்கு ஒரு ஆழ்வார் பாடல் குறைவு.

வினா :—திருவேங்கடமுடையானைக் குரங்கன் என்று கூறக் காரணம் என்ன ?

விடை :—திருப்பதி மலையில் குரங்குகள் அதிகமாயிருப்பது தானும்.

வினா :—அபேத உண்மையினை அறிந்திருந்தும், தொண்டரடிப்பொடியாழ்வாரும், அவர் போன்ற சிலரும் பிடிவாதமாயிருப்பதற்குக் காரணமென்ன ?

விடை :—அவரவர் உபாஸனாமூர்த்தியிடமிருக்கும் அன்பு மேலீடுதான் காரணம்.

வினா :—எல்லா ஆழ்வார்களும் இப்படித் தான் பிடிவாதம் கொண்டிருக்கிறார்களா ?

விடை :—இல்லை. சாந்தம் மேலிட்ட சில ஆழ்வார்கள், ஹரிஹராத்வைதத்தையே வெள்ளிடை மலைபோல் விளக்கிப் பரம்பொருளை வழிபட்டிருக்கிறார்கள்.

வினா :—ஏதேனும் உதாரணம் உண்டா ?

விடை :—பொய்கையாழ்வார்

அரன் நாரணன் நாமம் ; ஆன்விடை புள்ளூர்தி;
யுரைநூன் மறை; உறையுங் கோயில்—வரைநீர்;
கரும மழிப்பளிப்புக் கையதுவே நேமி ;
யுருவ மெரிகார்மேனி யொன்று (முதற்றிருவந்தாதி, 5)

என்றும், பேயாழ்வார்

"தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவுஞ் சக்கிரமுஞ்
சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால்—சூழுந்
திரண்டருவி பாயுந் திருமலைமே லெந்தைக்
கிரண்டுருவு மொன்றா யிசைந்து (மூன்றாந் திருவந்தாதி, 63)

என்றும் ஹரிஹராபேதத்தைத் தெளிவாகக் கூறியிருக்கிறார்கள்.

வினா:—ஆழ்வார்களில் இன்னம் யாராவது ஹரிஹரா பேதத்தைக் கூறுகின்றனரா ?

விடை:—பழம் பாடல் ஒன்று.

அரியுமாகி யயனுமாகி யண்டமெங்கு மொன்றதாய்
பெரியதாகி யுலகுதன்னி னின்றபாத மொன்றலோ
விரிவிதென்று வேறுசெய்து வேடயிட்ட மூடரே
அறிவிலேடு பாருமிங்கு மங்குமெங்கு மொன்றதே

என்று கூறுகிறது. இந்தப் பாசுரம் மூர்த்திகளின் அபேதத்தைக் கூறுகிறது.

வினா:—இந்தப் பாசுரத்திலுள்ள 'பெரியதாகி யுலகுதன்னில் நின்ற பாதம் ஒன்று' என்பது எதைக் குறிக்கிறது ?

விடை:—சிவபெருமானைக் குறிக்கிறது. இது சிவபெருமானது அறுபத்து நான்கு மூர்த்தங்களுள் ஒன்றாகிய ஏகபாத மூர்த்தத்தைக் குறிக்கிறது.

வினா:—இந்த மூர்த்தி எப்படி காட்சியளிக்கும் ?

விடை:—ஹரி, ஹரன், ப்ரம்மா மூன்று மூர்த்திகளும் சேர்ந்து, நடுவில் சிவபெருமானும் ஒருபுறத்திலே திருமாலும், இன்னொருபுறத்திலே பிரும்மாவுமாக காட்சியளிக்கும். மூன்று மூர்த்திகளுக்குமாக ஆறு பாதங்கள் இருக்கவேண்டிய இடத்தில் அவ்வாறின்றி, ஒரே பாதந் தான் இருக்கும். இதுவும் மூன்றும் ஒன்றுதான் என்பதற்கு ஓர் ஆதாரமாகும்.

வினா:—இத்தகைய மூர்த்தங்களை எந்தக் கோயில்களில் காணலாம் ?

விடை:—மதுரை, சிதம்பரம் போன்ற க்ஷேத்திரங்களிலுள்ள திருக்கோயில்களில் காணலாம்.

வினா:—ஹரிஹராபேதத்தைத் தெரிவிக்க வேறு ஏதாவது ஆதாரம் உண்டா ?

விடை:—உபநிஷத்துக்களிலுள்ள குறிப்புக்களாலும் ஹரிஹராபேதம் தெரிகிறது.

வினா:—அவை யாவை ?

விடை:—"சாந்தம்" என்றும் "அத்வைதம்" என்றும் அடைமொழியிட்டு (மாண்டூக்கிய வேதப் பகுதியில்) 'சிவம்' என்னும் சொல்லால் பரம்பொருள் கூறப்பெறுகிறது. "அது விஷ்ணுவினுடைய பரமபதம்" என்னும் பொருளுடைய கடவல்லி வேதப்பகுதி 'விஷ்ணு' என்னும் சொல்லால் பரம்பொருளைக் கூறுகிறது.

ஓம் தத் ஸத்

உ

ஸ்ரீகுருப்யோ நம:

# தொல்காப்பியத்தில் அத்வைதம்

(வித்வான் A. R. மலையப்ப சாஸ்திரிகள், திருச்சிராப்பள்ளி.)

பழந் தமிழிலக்கணமாகிய தொல்காப்பியத்தில், பொருளதிகாரத்தில், புறத்திணையியலில் 21-வது சூத்திரமாகிய "கூதிர் வேனில்" என்று தொடங்குஞ் சூத்திரத்தில்,

ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையின், ஒன்றொடு புணர்ந்து
தொல்லுயிர் வழங்கிய வலிப்பலி யானும்

என்னும் வரிகள் காணப் பெறுகின்றன. "பகைவர் நாணும்படியாக உயர்ந்தோரான் நன்கு மதித்தலைக் கருதி, இன்னது செய்யேனாயின், இன்னது செய்வலெனத் தான் கூறிய பகுதி யிரண்டனுள் ஒன்றினோடே பொருந்திப் பல பிறப்பினும் பழகி வருகின்றன உயிரை அங்கியங் கடவுட்குக் கொடுத்த அவிப்பலியானும்" என்று நச்சினார்க்கினியர் இதற்குப் பொருள் கூறுகிறார்.

இத்தகைய வீரனுக்கு நூல்களில் நல்ல வழி கூறப்பட்டிருக்கிறது.

द्वाविमौ पुरुषौ लोके सूर्यमण्डलभेदिनौ ।
परिव्राड् योगयुक्तश्च रणे चाभिमुखो हतः ॥

த்வாவிமௌ புருஷௌ லோகே ஸூர்யமண்டலபேதிநௌ |
பரிவ்ராட் யோகயுக்தஶ்ச ரணே சாபிமுகோ ஹத: ||

என்று ஸ்மிருதி கூறுகிறது. "போர்க்களத்தில் எதிரிகளை எதிர்த்து நின்று மாய்ந்தவனும், யோகாப்பியாசமுடைய துறவியும், சூரிய மண்டலத்தைப் பிளந்து கொண்டு செல்வர்" என்பது இதன் பொருள்.

இந்த வகையில் உயிர் துறவாதார்க்குச் சிறப்பில்லாத வேறு வழி கூறப்பட்டிருக்கிறது.

இந்த சுலோகத்தில் போர் வீரனோடு சந்யாசியும் சேர்த்துக் கூறப்படுவதை யாதாரமாக வைத்துக் கொண்டு, இந்தச் சூத்திரத்திற்கு "எதிரிகள் நாணும்படி பெரியோர்களை யடைந்து, வேதாந்த நூல்களில் கூறப்பட்டபடி, ஒன்றாகிய பரம்பொருளோடு ஒன்றுபட்டு, அநாதியான உயிரை அவியைப் போல அர்ப்பணம் செய்வதாலும்" என்று பெரியோர் பொருள் கூறுகின்றனர்.

இங்கு "ஒன்றான பரம்பொருளோடு புணர்தலென்றது, அத்வைத மதத்தினர் கூறும் "ஜீவப்ரம்மைக்கியமே" யாகும்.

இங்கு உயிரை விடுதல் 'அவிப்பலி' என்று கூறப்பட்டிருக்கிறது.

ब्रह्मार्पणं ब्रह्महविः ब्रह्माग्नौ ब्रह्मणाहुतम् ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्म समाधिना ॥

ப்ரஹ்மார்(ப்)பணம் ப்ரஹ்மஹவி: ப்ரஹ்மாக்நௌ ப்ரஹ்மணாஹுதம்
ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம் ப்ரஹ்மகர்ம ஸமாதிநா ||

"அர்ப்பணமாகிய தொழிலும் பிரும்மம்; ஹவிஸ்ஸும் பிரும்மம்; அக்னியும் பிரும்மம்; ஹோமம் செய்யப்பட்டதும் பிரும்மம்; இந்த பிரும்ம கர்ம ஸமாதியினால் ஒருவன் அடைய வேண்டியதும் பிரும்மமே." என்று பகவத்கீதை கூறியபடி, இது அத்வைத வேதாந்திகளின் கருத்தான ஜீவப்பிரம்மைக்கியத்தையே குறிப்பதாகும். இந்த வகையிலே பார்த்தாலும், இது அத்வைதிகள் கூறும் முக்திக்கு பெரிதும் நெருங்கிய தொடர்புடையது.

தொல்காப்பியர் பொருளதிகாரத்து அகத்திணையில் 26-ம் சூத்திரத்தில் "ஓதலுந் தூது முயர்ந்தோர் மேன" என்றார். இங்கு, முற்கூறிய இரண்டனுள் முதலாவதாகிய 'ஓதல்' என்பதை விளக்குவதற்காக வேண்டி "கல்வி யாண்டு மூன்றிறவாது" (தொல். பொருள். கற்பியல் 47) என்ற சூத்திரத்தையும் அருளியிருக்கிறார்.

'கல்வி' - துறவறத்தினைக் கூறும் வேதாந்தம் முதலிய கல்வி; 'வேண்டிய யாண்டு இறவாது'-படிக்க வேண்டிய வருஷங்களைக் கடவாமல்; 'மூன்று இறவாது'-அக் கல்வி யெல்லாம், மூன்று

பதத்தைக் கடவாமல். ஆகவே, ‘வேதாந்தம் முதலிய வித்தை யாவற்றையும் கற்க, எத்தனையாண்டுகள் வேண்டுமோ அத்தனை ஆண்டுகள் கற்க வேண்டும்’ என்பதும், அவ்வித்தைகளெல்லாம் மூன்று சொற்களில் அடங்கும்’ என்பதும் இதிலே கூறப்படு கின்றன.

மூன்று சொற்கள் யாவை? ‘அது’ ‘நீ’ ‘ஆனாய்’ என்பன.

இச் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதும் விசேடவுரை வருமாறு:—“மூன்று பதமாவன.—அது வென்றும், நீயென்றும், ஆனாயென்றும் கூறும் பதங்களாகும்; அவை பரமும், சீவனும், அவ்விரண்டும் ஒன்றுதலும் ஆதலின், இம்மூன்று பதத்தின்கண்ணே தத்துவங்களைக் கடந்த பொருளை யுணர்த்தும் ஆகமங்களெல்லாம் விரியுமாறு உணர்ந்து கொள்க.”

“அது நீ ஆனாய்” என்னும் இது அத்வைத மஹா வாக்கியம்; ஆதலால் மேற்கண்ட சூத்திரங்களிலே அத்வைத ஸித்தாந்தம் அமைந்திருக்கிறது.

“நூலே கரகம் முக்கோல் மனையே யாயுங் காலை யந்தணர்க் குரிய” (தொல். பொருள் மரபியல் 70) என்பது சூத்திரம்.

இதற்கு, “முந்நூலும், குண்டிகையும், முக்கோலும் யாமை மனையும் போல்வன அந்தணர்க்கு உரிய” என்பது பொருள்.

அந்தணர்க்குரிய இலக்கணம் கூறவந்த இந்தச் சூத்திரத்தில் ‘முக்கோல்’ என்று கூறப்படுகிறது. “அரி, அயன், அரன் என்னும் தெய்வங்களுக்குள் வேற்றுமையில்லை; மூன்றும் ஒன்றே’ என்பதற்கு அடையாளமாகத் தான் ‘முக்கோல்’ என்னும் ‘திரி தண்டம்’ கூறப்பட்டிருக்கிறது என்று பெரியோர் கூறுவர்.

கலித்தொகையின் உரையிலும், நச்சினார்க்கினியர் இந்தக் கருத்தை விளக்கி யிருக்கிறார். “உறியிலே தங்கிய கமண்டலத்தையும், அரி, அயன், அரன் என்னும் மூவரும் ஒருவரென்று சொல்லுதல் தன்னிடத்தே அமைந்த முக்கோலையும், முறைமைப் படத் தோளிலே வைத்து, எறித்தலைச் செய்கின்ற ஞாயிற்றின் கதிர்களைத் தாங்குகையினாலே எடுக்கப்பட்ட குடை நிழலிலே.... அரி, அயன், அரன் என்னும் மூவரையும் ஒருவனாக வல்லது

வேறாக நினையாத நெஞ்சத்தாலே, ஐம் பொறியும் நமக்கு ஏவல் செய்தலை இயல்பாக வுடைய கோட் பாட்டையும், உமக்குரிய ஒழுக்கத்தையும் உடைய அந்தணர்'' (கலித். 9 உரை) என்பது அவ்வுரைப் பகுதி.

மூவிலை யொருதாட் சூல மேந்துதல்
மூவரும் யானென் மொழிந்த வாறே.''

(திருவொற்றியூரொருபா வொருபது, 6)

(மூவிலையும், ஒரு தண்டு முடைய திரி சூலத்தை ஈசன் ஏந்தி யிருப்பது மும்மூர்த்திகளும் யானே என்று விளக்குவதற்கே) என்னும் பட்டினத்தார் பாடலும் இங்கு நினைவிற்கு வருகிறது.

பிராம்மணர்களுக்குரிய துறவறம், பஹூதகம், குடீசகம், ஹம்ஸம், பரம ஹம்ஸம் என நான்கு வகையாகப் பிரிந்திருக்கிறது. அவற்றில் முதலிரண்டு சந்யாச வகைகளுக்கு சிகையும், முக்கோலும், மனையும், கரகமும் உண்டு. இக்காலத்தில் நான்காவதான பரமஹம்ஸம் ஒன்றே அதிகம் வழக்கத்தில் இருக்கிறது. அக்காலத்து, மேலாசிரமத்தைக் காட்டிலும் முதலிரண்டு ஆசிரமத்தோர்களே அதிகம் இருந்திருப்பாராகையால், அவர்கள் இல்வாழ்வாரைக் காட்டிலும் மதிப்பு மிகுந்தவராய் இருந்தமையால், பொதுவாக அந்தண தருமங்களைக் குறிப்பிட அவர்களுடைய தருமங்களே தொல்காப்பியத்தில் மேற்கோளாக உள்ளன.

பாரதத்தில் அஞ்ஞாத வனவாசத்தில் தருமபுத்திரர், கங்க பட்டர் என்னும் பெயருடன், ஸந்நியாசத்தின் இம்முதலாசிரமத்தையே கைக்கொண்டார். மாறு வேஷம் தரிப்பினும், சிகையஜ்ஞோபவீதங்களுக்கு நஷ்டம் வராதிருக்குமாறு, பரமஹம்ஸாசிரமத்தை விட்டு, அந்தண வேடத்துடன் இப்பஹூதகாசிரமத்தைக் கைக்கொண்டார். அவர் இவ்வாரம்ப ஸந்யாஸாசிரமத்தில் இருந்தவராயினும், விராட அரசனுடன் சொக்கட்டானாடிக்கொண்டிருந்தமையால், இவ்வகைத் துறவிகள் ஓதல், தூது முதலிய காரியங்களிலும் ஈடுபடுத்தப் பட்டிருப்பார்களென்பது கொள்ளற் பாலது.

இவ்வாறு மும்மூர்த்திகளுள்ளும் அபேதங் காண்பது அத்வைத மதத்திற்கே அமைந்த சிறந்ததொரு கொள்கை. இந்த

'முக்கோல்' என்ற சொல்லை யாதாரமாக வைத்துக் கொண்டு ஆராயும்போது, முற்காலத்திலிருந்த பிராம்மணர்களனைவரும் அத்வைத வேதாந்திகளாகவே இருந்தனர் என்பது நன்கு விளங்குகிறது.

தொல்காப்பியம், மரபியலில்:—

> " நிலந்தீ நீர்வெளி விசும்போ டைந்துங்
> கலந்த மயக்க முலக மாதலின்
> இருதிணை யைம்பா லியனெறி வழாஅமைத்
> திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்."
>
> (தொல். பொருள். மரபியல் 89)

என்ற சூத்திரத்திற்கு,

" நிலனும், தீயும், நீரும், காற்றும், ஆகாயமுமென்னும் ஐம்பெரும் பூதமுங் கலந்த கலவை யல்லது உலகமென்பது பிறிதில்லாமையின் அவற்றைச் சொல்லுமாறு சொல்லாது இருதிணைப் பொருளென வேறுபடுத்து வழங்குகின்ற வழக்கெல்லாம், மரபில் திரியாத சொல்லோடு தழீஇ வரல் வேண்டும்" என்பது பொருள்.

உலகமும், பிரும்மம், உயிரும் பிரும்மம், எல்லாம் பிரும்மம், பிரும்மத்தைத் தவிர வேறொரு பொருளும் இல்லை. அவ்வாறானால், உலகம் பரம்பொருளாகத் தெரியவில்லையே, தனிப் பொருளாக வல்லவோ தோன்றுகிறது!

ஆம். அது தோற்றந்தான். பழுதையில் பாம்பு தோன்றுவது போல, பரம்பொருளினிடம் உலகம் தோன்றுகிறது. இது தான் மாயை—மயக்கம். இது அத்வைத சித்தாந்தம்.

உலகம் உண்மையில் பரம்பொருளானால், வியவகார நிலையில் 'உலகம்' என்று கூறப்படக் காரணம் என்ன? 'பரம் பொருள்' என்றே ஏன் கூறக்கூடாது?

**देहात्मप्रत्ययो यद्वत् प्रमाणत्वेन कल्पितः।**
**लौकिकं तद्वदेवेदं प्रमाणन्त्वात्मनिश्चयात् ॥**

என்று ஸ்ரீ பகவத் பாதாசாரிய ஸ்வாமிகளின் முன்னோரான ஆசிரியர் அருளி யிருக்கின்றனர். " எல்லாம் பரம்பொருளாயி

னும், உலக வியவஹாரத்தில் எதெது எவ்வெப் பெயரால் வழங்கப் படுகிறதோ அதை யதை அவ்வப் பெயரால் வழங்கவேண்டும்" என்று இதில் கூறப்படுகிறது. இதைப் பின்பற்றித் தான் "நிலந்தீ நீர்வளி" என்னும் இச்சூத்திரம் மரபியலில் வைக்கப்பட்டது.

இதனாலே தான் உலகம் மயக்கத்தால் தோற்றமளிக்கிறதாயினும், வியவஹார நிலையில் உலகம் என்றே கூறப்படுகிறது. அதிஷ்டானமாகிய பரம்பொருளாகக் கூறப்படுகிறதில்லை.

இந்தத் தொல்காப்பியச் சூத்திரத்தில், இச்சூத்திரத்தின் பொருளை விளக்கும் பேராசிரியர் உரையில், "உலகமென்பது பிறிதில்லாமையின்" என்று கூறுவதிலும், இதுவரை கூறிவந்த அத்வைதக் கருத்து அமைந்திருப்பது விளங்குகிறது.

அன்றியும், "கடம் முதலான (காரிய) பதார்த்தங்கள், நாம ரூபங்களால் வேறாகச் சொல்லப்பட்டாலும் அவை (காரணமாகிய) மண்ணென்பதே உண்மை" என்னும் சாந்தோக்ய உபநிஷத்தின் பொருளும் இங்கு அமைந்திருக்கிறது.

உ
ஸ்ரீகுருப்யோ நம:

# திருக்குறளில் அத்வைதம்.

பிரும்ம ஸ்ரீ. P. ஸ்ரீநிவாஸ அய்யர், கும்பகோணம்.

*அகர முதலவெழுத் தெல்லா மாதி பகவன் முதற்றே யுலகு.*

"எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன. அது போல உலகம் ஆதியாகிய பகவானை முதலாக உடையது" என்பது இதன் பொருள்.

ஒரு மட் பாண்டத்தைச் செய்ய வேண்டுமானல், மண்ணும், குயவன் திரிகை முதலியனவும் வேண்டும். இவ்விரண்டும் மட்குடம் என்னும் காரியத்தைச் செய்யப்பயன்படுங் காரணங்களே. காரியமான பின்பும், காரியத்தினின்றும் பிரியாமலிருப்பது உபாதான காரணமாகும். அவ்வாறின்றி, காரியமாகும் வரையில் உதவிசெய்து, காரியமானபின் பிரிந்துவிடக் கூடியவை துணைக்காரணங்கள். குடம் செய்யக் காரணமாயிருந்த மண், குடம் செய்யப்பட்ட பின்னரும், குடத்தினின்றும் பிரிக்க முடியாதவாறு இருக்கிறது. இங்கு மண் உபாதான காரணமாகும். இவ் வுபாதான காரணமே முதற் காரணம் என்று கூறப்படும்.

அகரம் எல்லா எழுத்துக்களிலும் இருக்கிறது. 'அகரமின்றேல் மற்ற எழுத்துக்கள் தோன்ற மாட்டா' என்பதை,

"அகர வுயிரெழுத் தனைத்துமாகி" (பொருள் வணக்கம். 12.)

என்னும் தாயுமானவர் பாடலாலும்,

"அக்கரங்களின்றும் அகரவுயிரின்றேல்
இக்கிரமத் தென்னு மிருக்கு."

என்னும் ஔவை குறள் உதாரண வெண்பாவாலும் அறியலாம். இதனால், அகரம் எழுத்துக்களுக்கெல்லாம் முதற்காரணம் (உபாதான காரணம்) என்பது நன்கு விளங்கும்.

இதை உவமானமாக வைத்து, 'உலகம் இறைவனை முதலாக உடையது" என்ற உவமேயம் கூறப்படுவதால், இறைவன் உல

குக்கு (உபாதான காரணம்) முதற்காரணம் என்பது தெளிவாகும்.

இவ்வாறு இறைவனை முதற்காரணமாகக் கூறுவது அத்வைத மதத்திற்கே சிறப்பான தத்துவமாகும்.

இந்தக் கடவுள் வாழ்த்திலுள்ள கடவுளைக் குறிக்கும் சொற்களை நன்கு ஆராய்ந்தால், அவற்றுள், 'மலர் மிசையேகினான்' (1,3) என்பது பிரம்ம தேவனையும் பொறி வாயிலைந் தவித்தான் (1,6) (ஹ்ருஷீகேசன் = இந்திரியங்களுக்குத் தலைவன்,) 'அறவாழியந்தணன்' (1,8) என்பன திருமாலையும், 'எண் குணத்தான்' (1,9) என்பது சிவபெருமானையும் பொது நோக்காகக் கூறுகின்றன என்று சொல்லலாம்.

இதிலிருந்து, ஸகுண ப்ரம்ஹோபாஸனையில், இவ்வாசிரியருக்கு எல்லா மூர்த்திகளும் சமமானவை என்பது தெரியும்.

இக் கடவுள்வாழ்த் ததிகாரத்திலுள்ள கடவுளைக் குறிக்கும் சொற்களுக்கு, இதர மதத்தினர் தங்கள் தங்கள் கொள்கைகளுக்கேற்பப் பொருள் கூறுவதை யாராய்ந்தாலும், இவர் தெய்வ வழிபாட்டில் அத்வைத நோக்கமான பொது நோக்கங் கொண்டவர் என்பது தெளிவாய் விளங்கும்.

"எந்த இறைவனைச் சைவர்கள் 'சிவன்' என்றும், வேதாந்திகள் 'பிரும்மம்' என்றும், பௌத்தர்கள் 'புத்தன்' என்றும், நையாயிகர்கள் 'கர்த்தா' என்றும் ஜைனர்கள் 'அருகன்' என்றும், மீமாம்ஸகர்கள் 'கருமம்' என்றும் கூறுகின்றார்களோ அந்தத் திருமால் உங்களுக்குவேண்டிய வரங்களைக் கொடுக்கட்டும்" என்ற பொருளுள்ள அத்வைத கருத்தமைந்த சுலோகம் ஒன்று ஸம்ஸ்கிருதத்தில் உண்டு*

இந்த அத்வைதக் கருத்து, திருக்குறளில் கடவுள் வாழ்த்ததிகாரத்தில், ஆசிரியர் ஆண்டிருக்கும் கடவுட் பெயர்களில் அமைந்திருக்கிறது.

---

* यं शैवास्समुपासते शिव इति ब्रह्मेति वेदान्तिनो
बौद्धा बुद्ध इति प्रमाणपटवः कर्तेति नैयायिकाः ।
अर्हन्नित्यथ जैनशासनरताः कर्मेति मीमांसकाः
सोयं नो विदधातु वाञ्छितफलं त्रैलोक्यनाथो हरिः ॥

இருள் சேரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு. (1,5)

இறைவனது மெய்ம்மை சேர்ந்த கீர்த்தியை விரும்பினவரிடத்து, மயக்கத்தைப் பற்றி வருகின்ற நல்வினை, தீவினை என்னும் இரண்டு வினையும் உளவாகா'' என்பது இந்தக் குறளின் பொருள்.

இந்தக் குறளின் விசேட வுரையில், பரிமேலழகர் '' இன்ன தன்மைத்தென ஒருவராலுங் கூறப்படாமையின் அவிச்சையை இருள் என்றும்'' என்று கூறுகிறார்.

அவித்தையை, அதாவது, மாயையை அநிர்வாச்சியமாகக் கூறுவது அத்வைத மதத்திற்கே உரியது.

உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. (3,4)

(பதவுரை) உரன் என்னும் தோட்டியான் - திண்மை யென்னும் சம்மட்டியால், ஓரைந்தும் - பொறிகளாகிய யானைகளைந்தினையும், காப்பான் - தத்தம் புலன்கள்மேற் செல்லாமல் காப்பவன், வரனென்னும் வைப்பிற்கு - எல்லா நிலத்தினும் மிக்கதென்று சொல்லப்படும் மோக்ஷம் என்ற உலகத்திற்கு, ஓர் வித்து - விதையாவான்.

இந்தக் குறளில் 'இந்திரிய நிக்ரஹம் மோக்ஷத்தை அடைய ஏதுவாகும்' என்று கூறப்பட்டிருக்கிறது. இதிலும் அத்வைத மதக் கருத்து நுட்பமாக அமைந்திருக்கிறது.

இதர மதத்தினர் பரம்பொருளை (வீட்டை) ஸகுணமாகவும், மோக்ஷம் இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் சிறந்த தோருலகம் என்றும் கூறுகின்றனர். ''குணத்தோடு கூடியவை எல்லாம் இந்திரியங்களால் அறியக் கூடியவை'' என்ற நியதிப்படி, அவர்கள் மதத்திலே கூறப்படும் 'வீடு' இந்திரிய விஷயமாகி விடுகிறது. அவர்கள் கருத்துப்படி, ''இந்திரியங்களுக்கு விஷயமாகும் ஒன்று இந்திரிய நிக்ரஹத்துக்கும் விஷயமாகும்''; இவ்வாறு கூறுவது பொருந்தாது.

அத்வைதிகள் கருத்துப்படி, மோக்ஷம் இந்திரிய விஷயமன்று. இந்தக் கருத்து, 'உரனெனும்' என்னும் இந்தக் குறளில் கூறப்பட்டிருப்பதால், இதுவும் அத்வைத மதக் கருத்துடையது என்று சொல்லலாம்.

"ஒருவன் இந்திரியங்களுக்கு விஷயமாகும் பொருள்களி லிருந்து இந்திரியங்களை மனத்தாலே திருப்பினால், ஆத்மாவில் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் அந்தப் பிரும்மத்தை அவன் அறிகிறான்" என்ற பொருளுள்ள

**इन्द्रियाणीन्द्रियार्थेभ्यो मनसा विनिवर्तयेत् ।**
**ततः पश्यति तद्ब्रह्म ज्वलदात्मनि संस्थितम् ॥**

(महाभारत—अनु. 167-31-37)

*இந்த்ரியாணீந்த்ரியார்யேப்யோ மனஸா விநிவர்(த்)தயேத் ।*
*ததஃ பஶ்யதி தத் ப்ரஹ்ம ஜ்வலதாத்மநி ஸம்ஸ்திதம் ॥*

(மஹாபாரதம்—அநு. 167-31-37)

என்னும் மஹாபாரத ச்லோகத்தையும் இதற்கு ஆதாரமாகக் கொள்ளலாம்.

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. (35, 10)

(பதவுரை) பற்று அற்றான் பற்றினை - எல்லாப் பொருளையும் பற்றி நின்றே பற்றற்றவனிடத்துப் பற்றினை, பற்றுக - ஒருவன் கடைப்பிடிக்க; பற்றுவிடற்கு - விடாது வந்த பற்றுவிடற்கு; அப்பற்றை - அந்தப் பற்றினை, பற்றுக - பற்றிக் கொள்க.

இப்பிறப்பில் உயிருடனேயே முத்தியடைய முடியும். உறுதியான ஞான நிஷ்டை வேண்டும். அதற்கு என்ன வேண்டும்? மயக்கம் நீங்க வேண்டும். அதற்குப் பற்றற்று இருக்க வேண்டும். பற்றற்றிருக்க என்ன செய்ய வேண்டும்? பற்றற்றவர்களுடன் சேர்ந்திருக்க வேண்டும்.

**सत्सङ्गत्वे निस्सङ्गत्वं निस्सङ्गत्वे निर्मोहत्वम् ।**
**निर्मोहत्वे निश्चलितत्वं निश्चलितत्वे जीवन्मुक्तिः ॥**

*ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம் நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம் ।*
*நிர்மோஹத்வே நிஶ்சலிதத்வம் நிஶ்சலிதத்வே ஜீவன்முக்திஃ ॥*

என்றார் ஸ்ரீமத் சங்கர பகவத் பாதஸ்வாமிகள் (பஜகோவிந்தம்).

பற்றற்றோன் என்பவன் யாவன்?

தாமரையிலைத் தண்ணீர் போல, உலகப் பொருள்களைப் பற்றி நின்றும் பற்றற்றிருப்பவனே பற்றற்றோன். இதனால், ஜீவன்முக்திக்கு அடிப்படையான காரணம் மேற்கூறிய பற்றற்றவர்களுடன் பற்று வைப்பது என்பது விளங்கும். ஜீவன்முக்தி

அத்வைத மதத்திற்கே சிறப்பானது. அந்த முத்தியை யடைதற்குக் காரணம், இந்தக் குறளில் கூறப்பட்டிருப்பதால், இதுவும் அத்வைத மதக் கருத்துடையது என்பது தெளிவு.

இந்த விஷயத்தை இன்னொரு வகையாகவும் விளக்கலாம். இறைவனிடம் மற்ற எல்லாக் குணங்களும் இருப்பன போன்று "பற்றற்ற தன்மை" என்ற குணமும் உண்டு. இறைவன் இந்தக் குணமு முடையவன்; அநாதியாக வருந் தேகாபிமானத்தை விடக் கருதிய வீட்டை விரும்புகிறவன், அவ்விறைவனைப் பற்றற்ற தன்மை யுடையவ னென்றே தியானிப்பான்.

ஒரு சமஸ்தானாதிபதி; கானலோலன்; நல்ல படிப்பாளி; கொடையாளி: யானை குதிரைகளை நிரம்ப உடையவன். அவனிடம் ஸங்கீத வித்வான்கள் 'கான லோலன்' என்ற கருத்தோடு செல்கின்றனர். பண்டிதர்கள் 'புலவன்' என்ற கருத்தோடு அணுகுகின்றனர். ஏழைகள் 'கொடையாளி' என்ற கருத்தோடு அடைகின்றனர். அரசனும் அவரவர்களுக்கு அவ்வவ்வாறு இருந்து வந்தவர்களை மகிழ்விக்கிறான். அதுபோல, இறைவனைப் பற்றற்றவனென்று தியானிப்பவனுக்கும், சமாதியனுஷ்டிப்பவனுக்கும் இறைவன் 'பற்றற்ற தன்மை'யை அளிக்கிறான். இத்தகைய பற்றற்ற தன்மையை யடைந்தவன் 'மயக்கமின்மை'யையும் திண்மையான பக்குவத்தையும் பெற்று 'ஜீவன்முக்த'னாக விளங்குவான்.

இம் முறையில் பார்த்தாலும், இக்குறள் அத்வைத மதக் கொள்கையான 'ஸகுணோபாஸன'த்திற்கு அடிப்படையான காரணத்தைக் கூறுவது விளங்கும்.

உலகில் தோன்றும் பொருள்களுக்கெல்லாம் ஆதாரம் உண்மையான பிரும்மம் ஆகும். அதனை வெவ்வேறாக நினைக்கும் நினைவிற்கு 'அத்யாஸம்' என்று பெயர். உதாரணமாக, ஒருவன் செல்லும் வழியில், ஒரு கயிறு கிடக்கிறது; அதை அவன் அறியாமையால் 'பாம்பு' என்று நினைத்து விடுகிறான். அந்த பொய்யான பாம்பு நினைவைத் தான் 'அத்யாஸம்' என்று கூறுவர். இவ் வத்யாஸத்தை நீக்குவது அறிவே யாகும்.

> எப்பொருளெத் தன்மைத்தாயினு மப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பதறிவு. (36,5)

(பதவுரை) எப்பொருள் - எந்தப்பொருளும், எத்தன்மைத்து ஆயினும் - எந்தத் தன்மையை யுடையதாகத் தோன்றினும், அப்பொருள் - அந்தப் பொருளிடத்தில், மெய்ப்பொருள் - (அதற்காதாரமாக) மெய்ப் பொருளாகிய கடவுளை; காண்பது - காண்பதே, அறிவு - அறிவாகும்.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர், தமது விசேட வுரையில், "பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்ற வுண்மையினைக் காண்பதென்ற வாறாயிற்று. அஃதாவது, 'கோச் சேரமான் யானைகட்சேஎய் மாந்தரஞ் சேரலிரும்பொறை' என்ற வழி, அரசனென்பதோர் சாதியும், சேரமான் என்பதொரு குடியும், யானை நோக்கினை யுடையானென்பதோர் வடிவும், சேயென்பதோர் இயற் பெயரும், மாந்தரஞ் சேரலிரும் பொறை யென்பதோர் சிறப்புப் பெயரும் ஒரு பொருளின்கட் கற்பனையாகலின்" எனக் கூறியிருக்கிறார். இதுவே "அத்யாஸம்" ஆகும்.

"எல்லாப் பிராணிகளிடத்தும் இந்த இறைவன் மறைந்திருக்கிறான். நுட்பத்தை யறியுந் தன்மையுள்ளவர்கள் ஞானத்தினால், அவ்விறைவனைக் காண்கிறார்கள்." (கடோபநிஷத். 3,12) என்ற கடோபநிஷத் பகுதியும், இந்தக் குறளும் பொருளொற்றுமை யுள்ளன. மேற்கூறிய "அத்யாஸம்" அறிவினாலேதான் நீங்கும் என்ற அத்வைத உண்மை இந்தக் குறளில் விளங்கிக் கொண்டிருக்கிறது.

இன்னும், "அத்யாஸம் நீங்குவது ஞானத்தினாலே தான்" என்று முன் கூறினோம் அந்த ஞானத்தாலே, பேரின்பமும்—அஃதாவது முத்தியும்—கிடைக்கும் என்பது அத்வைத தத்துவம்.

இருணீங்கி இன்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சியவர்க்கு. (56,2)

(பதவுரை) மருள் நீங்கி - அஞ்ஞானத்தை நீக்கி, மாசு அறுகாட்சியவர்க்கு - குற்றமற்ற அறிவுடையோர்க்கு, இருள் நீங்கி - பிறப்பிற்குக் காரணமாகிய அஞ்ஞானம் நீங்க, இன்பம் பயக்கும் - பேரின்பமாகிய வீடு பலிக்கும்.

'அறிவால் முத்தி கிடைக்கும்' என்னும் அத்வைத தத்துவம் இந்தக் குறளில் நன்கு கூறப்படுகிறது.

'முத்தி' என்பது பரமுத்தி, அபர முத்தி என இருவகைப்படும். ஜீவான்மா, பரமான்மாவாக ஆவதே 'பரமுத்தி'யாகும். இதையே 'மோக்ஷம்' என்பார்கள். மோக்ஷம், பரமுத்தி, பிரும்மம், பரமான்மா, என்பவை ஒரே பொருளுள்ள சொற்கள்.

பிருஹதாரண்யக உபநிஷத்தில் 'பிரஹ்ம லோகம்' என்ற ஒரு சொல் காணப்படுகிறது. இது பரமுத்தியைப் பற்றிக்

கூறும்போது 'பிரும்மமான லோகம்' எனப் பண்புத்தொகையாக விரிக்கப்படும்.

> பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
> செம்பொருள் காண்பதறிவு. (36,8)

(பதவுரை) பிறப்பென்னும் பேதைமை நீங்க - பிறப்பென்று சொல்லப்படுகின்ற உயர்வில்லாத தன்மை நீங்க, சிறப்பென்னும் செம்பொருள் காண்பது - வீடென்று கூறப்படுகின்ற உயர்வான பொருளைக் காணுதலே, அறிவு - அறிவாகும்.

இந்தக் குறளில் 'சிறப்பென்னும் செம்பொருள்' என்ற தொடரால் ஆசிரியர் வீட்டினையும் செம்பொருளையும் ஒன்றாகக் கூறுகிறார். இங்கு, பிருஹதாரண்யகத்தில் கூறப்பட்டபடி 'பிரம்மமான லோகம்' என்ற தொடரின் பொருள் அமைந்திருப்பதால், இது அத்வைத மதத்திற்கே சிறப்பான 'பர முத்தி'யைக் கூறுவதாகும்.

முத்தியை, ஒருவன் இப்பிறப்பில் உயிருடனிருக்கும்போதே அடைந்து விடலாம். ஆனால், உலகப்பற்றை—ஆசையை—அவன் ஒழித்திருக்க வேண்டும். இத்தகைய முத்திக்குத் தான் 'ஜீவன் முக்தி' என்று பெயர்.

> இன்ப மிடையறா தீண்டுமவா வென்னுந்
> துன்பத்துட் டுன்பங் கெடின். (37,9)

(பதவுரை) அவா வென்னுந் துன்பத்துள் துன்பம் கெடின் - ஆசையென்னும் பெருந்துன்பம் நீங்கின், இடையறாது - இடைவிடாமல், இன்பம் ஈண்டும் - இவ்வுலகத்தின் கண்ணும் பேரின்பம் வரும்.

இந்தக் குறள் 'ஜீவன்முக்தி'யை நன்கு விளக்குகிறது. கடோபநிஷத்தில், "அழியுந்தன்மையுள்ள மனதினுடைய (மனதிலுள்ள) ஆசைகளெல்லாம் எப்பொழுது நீக்கப் படுகின்றனவோ, அப்பொழுதே அவன் அழியாத்தன்மையுள்ளவனாகிறான். இங்கேயே முக்தியை—பிரும்மத்தை-அடைகிறான்.

> ஆராவியற்கை யவாநீப்பின் அந்நிலையே
> பேராவியற்கை தரும்.

(பதவுரை) ஆரா இயற்கை அவாநீப்பின் - நிரம்பாத் தன்மையையுடைய அவாவினைப் போக்கின அந்நிலையே; பேரா இயற்கை தரும் - அது, அப்பொழுதே நித்தியமாகிய வீட்டினைத் தரும்.

என்ற குறள் அமைந்திருக்கிறது.

இந்தக் குறளில், 'அவா நீப்பின் அந்நிலையே பேராவியற்கை தரும்' என்ற தொடரால் ஆசிரியர், அத்வைத மதத்திற்கே சிறப்பான 'ஜீவன்முக்தி'யைக் கூறுகிறார் என்பது தெளிவாகிறது.

(பதவுரை) எப்பொருள் - எந்தப்பொருளும், எத்தன்மைத்து ஆயினும் - எந்தத் தன்மையை யுடையதாகத் தோன்றிலும், அப்பொருள் - அந்தப் பொருளிடத்தில், மெய்ப்பொருள் - (அதற்காதாரமாக) மெய்ப் பொருளாகிய கடவுளை, காண்பது - காண்பதே, அறிவு - அறிவாகும்.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர், தமது விசேட வுரையில், "பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்ற வுண்மையினைக் காண்பதென்ற வாறாயிற்று. அஃதாவது, 'கோச் சேரமான் யானைகட்சேஎய் மாந்தரஞ் சேரலிரும் பொறை' என்ற வழி, அரசனென்பதோர் சாதியும், சேரமான் என்பதொரு குடியும், வேழநோக்கினை யுடையானென்பதோர் வடிவும், சேயென்பதோர் இயற்பெயரும், மாந்தரஞ் சேரலிரும் பொறை யென்பதோர் சிறப்புப் பெயரும் ஒரு பொருளின்கட் கற்பனையாகலின்" எனக் கூறியிருக்கிறார். இதுவே "அத்யாஸம்" ஆகும்.

"எல்லாப் பிராணிகளிடத்தும் இந்த இறைவன் மறைந்திருக்கிறான். நுட்பத்தை யறியுந் தன்மையுள்ளவர்கள் ஞானத்தினால், அவ்விறைவனைக் காண்கிறார்கள்." (கடோபநிஷத். 3,12) என்ற கடோபநிஷத் பகுதியும், இந்தக் குறளும் பொருளொற்றுமை யுள்ளன. மேற்கூறிய "அத்யாஸம்" அறிவினாலேதான் நீங்கும் என்ற அத்வைத உண்மை இந்தக் குறளில் விளங்கிக் கொண்டிருக்கிறது.

இன்னும், "அத்யாஸம் நீங்குவது ஞானத்தினாலே தான்" என்று முன் கூறினோம் அந்த ஞானத்தாலே, பேரின்பமும்—அஃதாவது முத்தியும்—கிடைக்கும் என்பது அத்வைத தத்துவம்.

இருணீங்கி இன்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சியவர்க்கு. (56,2)

(பதவுரை) மருள் நீங்கி - அஞ்ஞானத்தை நீக்கி, மாசு அறுகாட்சியவர்க்கு - குற்றமற்ற அறிவுடையோர்க்கு, இருள் நீங்கி - பிறப்பிற்குக் காரணமாகிய அஞ்ஞானம் நீங்க, இன்பம் பயக்கும் - பேரின்பமாகிய வீடு பலிக்கும்.

'அறிவால் முத்தி கிடைக்கும்' என்னும் அத்வைத தத்துவம் இந்தக் குறளில் நன்கு கூறப்படுகிறது.

'முத்தி' என்பது பரமுத்தி, அபர முத்தி என இருவகைப்படும். ஜீவான்மா, பரமான்மாவாக ஆவதே 'பரமுத்தி'யாகும். இதையே 'மோக்ஷம்' என்பார்கள். மோக்ஷம், பரமுத்தி, பிரும்மம், பரமான்மா, என்பவை ஒரே பொருளுள்ள சொற்கள்.

பிருஹதாரண்யக உபநிஷத்தில் 'பிரஹ்ம லோகம்' என்ற ஒரு தொகைச் சொல் காணப்படுகிறது. இது பரமுத்தியைப் பற்றிக்

கூறும்போது 'பிரும்மமான லோகம்' எனப் பண்புத் தொகையாக விரிக்கப்படும்.

> பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
> செம்பொருள் காண்பதறிவு. (36,8)

(பதவுரை) பிறப்பென்னும் பேதைமை நீங்க - பிறப்பென்று சொல்லப்படுகின்ற உயர்வில்லாத தன்மை நீங்க, சிறப்பென்னும் செம் பொருள் காண்பது - வீடென்று கூறப்படுகின்ற உயர்வான பொருளைக் காணுதலே, அறிவு - அறிவாகும்.

இந்தக் குறளில் 'சிறப்பென்னும் செம்பொருள்' என்ற தொடரால் ஆசிரியர் வீட்டினையும் செம்பொருளையும் ஒன்ருகக் கூறுகிருர். இங்கு, பிருஹதாரண்யகத்தில் கூறப்பட்டபடி 'பிரம்மமான லோகம்' என்ற தொடரின் பொருள் அமைந்திருப்பதால், இது அத்வைத மதத்திற்கே சிறப்பான 'பர முத்தி'யைக் கூறுவதாகும்.

முத்தியை, ஒருவன் இப்பிறப்பில் உயிருடனிருக்கும்போதே அடைந்து விடலாம். ஆனல், உலகப்பற்றை—ஆசையை—அவன் ஒழித்திருக்க வேண்டும். இத் தகைய முத்திக்குத் தான் 'ஜீவன் முக்தி' என்று பெயர்.

> இன்ப மிடையரு தீண்டுமவா வென்னுந்
> துன்பத்துட் டுன்பங் கெடின். (37,9)

(பதவுரை) அவா வென்னுந் துன்பத்துள் துன்பம் கெடின் - ஆசையென்னும் பெருந்துன்பம் நீங்கின், இடையருது - இடைவிடாமல், இன்பம் ஈண்டும் - இவ்வுலகத்தின் கண்ணும் பேரின்பம் வரும்.

இந்தக் குறள் 'ஜீவன்முக்தி'யை நன்கு விளக்குகிறது. கடோபநிஷத்தில், " அழியுந் தன்மையுள்ள மனதினுடைய (மனதிலுள்ள) ஆசைகளெல்லாம் எப்பொழுது நீக்கப்படுகின்றனவோ, அப்பொழுதே அவன் அழியாத்தன்மையுள்ளவனுகிருன். இங்கேயே முக்தியை—பிரும்மத்தை-அடைகிருன்.

> ஆராவியற்கை யவாநீப்பின் அந்நிலையே
> பேராவியற்கை தரும்.

(பதவுரை) ஆரா இயற்கை அவாநீப்பின் - நிரம்பாத் தன்மையையுடைய, அவாவினைப் போக்கின அந்நிலையே; பேரா இயற்கை தரும் - அது, அப்பொழுதே நித்தியமாகிய வீட்டினைத் தரும்.

என்ற குறள் அமைந்திருக்கிறது.

இந்தக் குறளில், 'அவா நீப்பின் அந்நிலையே பேராவியற்கை தரும்' என்ற தொடரால் ஆசிரியர், அத்வைத மதத்திற்கே சிறப்பான 'ஜீவன்முக்தி'யைக் கூறுகிருர் என்பது தெளிவாகிறது.

---

# திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவர் மொழி (முதல் ஏழு திருமுறை)யில் அத்வைதம்

வித்வான் ஆ. ரா. மலையப்ப சாஸ்திரிகள், திருச்சிராப்பள்ளி.

சைவ சமயாசாரியார் நால்வரில், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனுர் ஆகிய மூவரும் பாடிய திருப்பாடல்களே தேவாரம்; 'தேவர் குறளும்' என்ற செய்யுளில் தேவாரம் 'மூவர் மொழி' என்றே குறிக்கப்படுகிறது.

இவர்களில், திருஞான சம்பந்தர் சீர்காழியில் பிராம்மண வருணத்தில், கௌண்டின்ய கோத்திரத்தில் பிறந்தவர். மூன்ரும் வயதில், உமாதேவியாரால் ஞானப்பால் ஊட்டப்பெற்றவர். மதுரைக்குச்சென்று சமணரை வாதில் வென்று கழுவேற்றியவர். உயிரற்று எலும்புக்கூடாயிருந்த பூம்பாவையைப் பெண்ணுக்கினவர்; தமிழ் நாட்டிலுள்ள பல திருப்பதிகளுக்குச் சென்று, பதிகம் பாடி செயற்கரிய பல விந்தைகளைச் செய்தவர். தமது திருமணத்தில் வந்திருந்தவர்களை யெல்லாம் அங்குத் தோன்றிய சோதியிலே கலக்கச் செய்து, தாமும் இரண்டறக் கலந்து, அத்வைத முத்தியை யடைந்தார். இவரது காலம் கி. பி. 7-ம் நூற்ருண்டு என்று கருதப்படுகின்றது.

திருநாவுக்கரசர் திருவாமூரில் வேளாளர் குலத்தில் பிறந்தவர். இவரது பிள்ளைத் திருநாமம் மருணீக்கியார் என்பது. இவர், அரசனுக்கு மந்திரியாய் இருந்தார். வயது வந்ததும் சமண மதத்தில் சேர்ந்து, பின்னர் சிவபெருமான் தந்த சூலை நோயின்மூலம், பழையபடி சைவ சமயத்திற் சேர்ந்தார். இதனுற் கோபங்கொண்ட அரசன் அவரைப் பலவாறு துன்புறுத்தியும், சிவபெருமா னருளால் அவர் இறவாமல் இருத்தலைக்கண்டு, கடைசியிலே கருங்கல்லிலே கட்டிக் கடலிற் போட்டான். ஈசுவர கிருபையால் கல்லும் தெப்பமாயிற்று. இதைக் கண்ட அரசன் தானே சைவனுனன். பின்பு இவர் பல க்ஷேத்திரங்களுக்குச்

சென்று, சிவபெருமானைத் துதித்தார். இவரது காலமும் 7-ஆம் நூற்றாண்டான திருஞான சம்பந்தர் காலமே.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக் கைலாயத்தில் ஈசுவரனுக்குத் திருத்தொண்டு புரிந்து வந்தவர். சாபத்தால் மானிடராய்ப் பிறந்தார். இவரது விவாஹத்திலே சிவபெருமான் ஒரு கிழவராகத் தோன்றி, இவரைத் தடுத்தாட் கொண்டார். இவரும் பல க்ஷேத்திரங்களையும் தரிசித்துத் தேவாரம் பாடினார். முதலையுண்ட பாலனை உயிர்ப்பித்துத் தருதல் முதலிய பல அற்புதங்களை நிகழ்த்தினார். இவரது காலம் 8 அல்லது 9-ஆம் நூற்றாண்டென்பார்கள்.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள், திருஞான சம்பந்தர் தேவாரம் முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசர் தேவாரம் நான்கு, ஐந்து, ஆறாந் திருமுறைகளாகவும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய தேவாரம் ஏழாந் திருமுறையாகவும் அமைந்துள்ளன. இம் மூவரும் வைதிக சைவர்கள், துவைத சைவர்கள் அல்லர். இவர்கள் சிவபெருமானை வேதத்தில் கூறப்படுகின்றவராயும், வேத ஸ்வரூபராகவுமே கூறுகின்றனர். வேதாந்திகளின் கருத்தும், வைதிக சைவர்களின் கருத்தும் ஒன்றாய் இருக்கும் என்று, பின்பு "அத்வைத சாஸ்திரமே வைதிக தரிசனமும் பிரும்ம வாதமுமாம்" என்ற வியாஸத்தில் நிரூபிக்கப் பெற்றிருக்கிறது. இவர்கள் வைதிக சைவர்கள் ஆதலால், இம் மூவருடைய கருத்துக்களும் அத்வைதக் கருத்துக்களாய் இருக்கின்றன.

"ஒன்றான பரம்பொருளே எல்லாமாய்த் தோன்றுகிறது" என்பது அத்வைத சித்தாந்தம். இது அடியிற்கண்ட தேவாரங்களில் விளங்குகிறது.

> தேவராயும் அசுரராயும் சித்தர்செழு மறைசேர்
> நாவராயும் நண்ணுபாரும் விண்ணெரிகால் நீரும்
> மேவராய விரைமலரோன் செங்கண்மால் ஈசனென்னும்
> மூவராய முதலொருவன் மேயது முதுகுன்றே.
>
> —திருஞான சம். திருமுதுகுன்றம் 1.

முதலொருவன்—உபாதான காரணம் என்னும் முதற் காரணமாக கூறப்படும் ஒரே பரம்பொருள்.

பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதிப்பார்
எற்றுநீர்தீக் காலுமேலை விண்இய மானனொடு
மற்றுமாதோர் பல்லுயிராய் மாலயனும் மறைகள்
முற்றுமாகி வேறுமானான் மேயது முதுகுன்றே.

—திருஞான. 1, திருமுதுகுன்றம் 2.

'வேறுமானான்' என்ற தொடர் பரம்பொருள் ஸகுண ப்ரும்ம நிலையில் மாலாகவும், அயனாகவும், அஷ்டமூர்த்தியாகவும், வானுளோர்க்குப் பற்று முதலியனவாகவும் தோன்றினாலும், உண்மையில் அவற்றினும் வேறுபட்ட நிர்க்குண பிரும்மமாக இருக்கிறது என்ற தத்துவத்தை விளக்குகிறது.

விண்ணோர் பெருமானே விகிர்தா விடையூர்தி
பெண்ணாண் அலியாகும் பித்தா பிறைசூடி

—திருஞான. 1, திருஎருக்கத்தம்புலியூர் 3.

வையகம் நீர்தீ வாயுவும் விண்ணும் முதலானான்.

—திருஞான. 1, திருப்புறவம் 10.

குருந்தவன் குருகவன் கூர்மையவன்
பெருந்தகை பெண்ணவன் ஆணுமவன்
கருந்தடம் மலர்க்கண்ணி காதல் செய்யும்
மருந்தவன் வளநகர் மாற்பேறே.

—திருஞான. 1, திருமாற்பேறு 1.

புவிமுதலைம் பூதமாய்ப் புலனைந்தாய் நிலன்ஐந்தாய்க்
கரணம் நான்காய், அவையவைசேர் பயனாருவா
யல்லவுரு வாய்நின்றான் அமரும் கோயில்.

திருஞான. 1, திருக்கழுமலம் 7.

'சிவபெருமான் புவிமுதல் ஐம்பூதமாகத் தோன்றினாலும் உண்மையில் அவருக்கு உருவமில்லை' என்ற அத்வைதக் கருத்தை 'அல்லவுருவாய் நின்றான்' என்ற தொடர் தெளிவு படுத்துகிறது.

சோதியைச் சுண்ண வெண்ணீ றணிந்திட்ட எம்
ஆதியை ஆதியும் அந்தமு மில்லாத
வேதியை வேதியர்தான் தொழும் வெண்ணியில்
நீதியை நினையவல்லார் வினை நில்லாவே.

—திருஞான. 2, திருவெண்ணியூர் 2.

எளியாய் அரியாய் நிலம்நீ ரொடுதீ
வளிகா யமெென வெளிமன் னியதூ-
ஒளியாய் உனையே தொழுதுன்னு மவர்க்
களியாய் கழிப்பா லையமர்ந் தவனே.

—திருஞான. 2, திருக்கழிப்பாலை 4.

மண்ணொடுநீர் அனல்காலோ டாகாயம் மதியிரவி
எண்ணில்வரும் இயமானன் இகபரமும் எண்திசையும்
பெண்ணினொ டாண்பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா விரும்பினனே.

—திருஞான. 2, திருவெண்காடு 3.

நிலம்நீரொ டாகாசம் அனல்காலாகி நின்றைந்து
புலன்நீர்மை புறங்கண்டார் பொக்கஞ் செய்யார் போற்றேவார்
சலம்நீத ரல்லாதார் தக்கோர்வாழுந் தலைச்சங்கை
நலம்நீர கோயிலே கோயிலாக நயந்தீரே.

—திருஞான. 3, திருத்தலைச்சங்காடு 6.

அந்த மாயுல காதியு மாயினன்
வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்
சிந்தையே புகுந்தான்திரு வாரூரெம்
எந்தை தானெனை யேன்றுகொ ளுங்கொலோ.

—திருஞான. 3, திருவாரூர், பண். 1.

குற்றம்நீ குணங்கள்நீ கூடல்ஆல வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்தும்நீ யருத்தமின்ப மென்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் உரைப்பதென்மு கம்மனே.

—திருஞான. 3, திருவாலவாய் 3.

எல்லாமாய் நின்ற பூர்ண நிர்க்குணப் பரம்பொருள் துவைதமான சகுண நிலையில் குற்றமே இல்லாததாகவும், குணங்களே யுடையதாகவும் நிற்கிறது; தத்வ ஞானத்தால் ஏற்பட்ட அத்வைத நிலையில், குற்றம், குணம், சுற்றம் முதலிய எல்லாம் தானேயாகி வேற்றுமையற்று அத்வைதப் பொருளாய் அனுபவானந்தமாய்ப் பிரகாசிக்கிறது. இந்தக் கருத்தைத் தெரிவிப்பதற்காகவே, "குற்றம் நீ, குணங்கள் நீ" கூறப்பட்டிருக்கிறது.

மாயவன் சேயவன் வெள்ளியவன் விடஞ்சேரும் மைமிடற்றன்
ஆயவனாகியொ ரந்தர மும்மவனென்று வரையாகம்
தீயவன் நீரவன் பூமியவன்.

—திருஞான. 3, திருநாரையூர் 3.

இந்தப் பாட்டில், ஸகுணோபாஸனையில் ஹரி, ஹரன் முத லிய மூர்த்திகளுக்குள் வேற்றுமை யில்லை என்பதும் கூறப்பட் டிருக்கிறது.

வானவர் தீவளி நீர்நிலனாய் வழங்கும் பழியாகும்
ஊனமர் இன்னுயிர் தீங்குற்ற முறைவால் பிறிதின்றி
நானம ரும்பொருளாகி நின்றான்

—திருஞான. 3, திருநாரையூர் 5.

இந்தத் தேவாரத்தில் "பிறிதின்றி நானமரும் பொருளாகி நின்றான்" என்ற தொடரிலே, 'சிவனுக்கும் பரம்பொருளுக் கும் வேறுபாடில்லை' என்னும் அத்வைதக் கொள்கை அமைந் திருக்கிறது.

ஊழியும் இன்பமுங் காலமுமாகி உயருந் தவமாகி
ஏழிசை யின்பொருள் வாழும்வாழ்க்கை வினையின் புணர்ப்பாகி
நாழிகையும் பலஞாயி றாகி

—திருஞான. 3, திருநாரையூர் 7.

கண்ணானாய் மணியானாய் கருத்தானாய் அருத்தானாய்
எண்ணானாய் எழுத்தானாய் எழுத்தினுக்கோர் இயல்பானாய்
விண்ணானாய்

திருநாவுக். 4. திருஐயாறு 7.

காலமும் நாள்களூழி படையாமுன் ஏகஉருவாகி மூவர்உருவில்
சாலவுமாகி மிக்கசமயங்கள் ஆறின் உருவாகிநின்ற தழலோன்

—திருநாவுக். 4. தச புராணம் 3.

ஞாயிறாய் நமனுமாகி வருணனாய்ச் சோமனாகித்
தீயறா நிருதி வாயுத் திப்பிய சாந்தனாகி

—திருநாவுக். 4. திருப்பயற்றூர் 6.

ஆவியாய் அவியுமாகி அருக்கமாய்ப் பெருக்க மாகிப்
பாவியர் பாவந்தீர்க்கும் பரமனாய்ப் பிரமனாகிக்
காவியங் கண்ண ளாகிக் கடல்வண்ண மாகிநின்ற
தேவியைப் பாகம் வைத்தார் திருப்பயற் றூரனாரே.

—திருநாவுக். 4. திருப்பயற்றூர் 7.

பரமனாய்ப் பிரமனாகி என்பது சகுணப் பிரும்மோபாசனை யில் உபாசனா மூர்த்திகளாகிய பரமன், பிரும்மா முதலிய மூர்த்தி களுக்குள் வேறுபாடில்லை என்னும் அத்வைதக் கருத்தைத் தெரிவிக்கிறது.

தந்தையாய்த் தாயுமாகித் தரணியாய்த் தரணியுள்ளார்க்
கெந்தையு மென்னநின்ற ஏழுல குடனுமாகி
எந்தை யெம்பிரானே யென்றென் றுள்குவா ருள்ளத்தென்றுஞ்
சிந்தையுஞ் சிவமு மாவார் திருப்பயற்றூர னாரே.

—திருநாவுக். 4. திருப்பயற்றூர் 8.

நீரவன் தீயினோடு நிழலவன் எழிலதாய
பாரவன் விண்ணின் மிக்க பரமவன் பரமயோகி
யாரவ னண்ட மிக்க திசையினோ டொளிக ளாகிப்
பாரகத் தமுதமானார் பழனத்தெம் பரமனாரே.

—திருநாவுக். 4, திருப்பழனம் 4.

சோதியாய்ச் சுடரு மானார் சுண்ண வெண்சாந்து பூசி
ஓதிவா யுலகம் ஏத்த உகந்துதாம் அருள்கள் செய்வார்
ஆதியாய் அந்தமானார் யாவரும் இறைஞ்சி யேத்த
நீதியாய் நியமமாகி நின்றநெய்த் தானனாரே.

—திருநாவுக். 4. திருநெய்த்தானம் 9.

தானலா துலகமில்லை.

—திருநாவுக். 4, திருஐயாறு 1.

ஊனவ னுயிரினோடும் உலகங்கள் ஊழியாகித்
தானவர் தனமு மாகி.

—திருநாவுக். 4, திருக்காஞ்சித் திருமேற்றளி 5.

மாயனாய் மாலனாகி மலரவனாகி மண்ணாய்த்
தேயமாய்த் திசை எட்டாகித் தீர்த்தமாய்த் திரிதர்கின்ற
நாயமாய்க் காயத்துள் ளார்.

திருநாவுக். 4, திருமேற்றளி 6.

'மாலனாகி மலரவனாகி' என்பது சகுணோபாசனையில் மூர்த்தி அபேதத்தைக் குறிக்கிறது.

கடலகம் ஏழினோடும் புவனமுங் கலந்த விண்ணும்
உடலகத் துயிரும் பாரும் ஒள்ளழலாகி நின்று
தடமலர்க் கந்தமாலை தண்மதி பகலுமாகி
மடலவிழ் கொன்றை சூடி மன்னும்ஆப் பாடியாரே.

—திருநாவுக். 4, திருஆப்பாடி 1.

ஆதியும் அறிவுமாகி அறிவினுட் செறிவு மாகிச்
சோதியுட் சுடருமாகித் தூநெறிக் கொருவனாகிப்
பாதியிற் பெண்ணுமாகிப் பரவுவார் பாங்கராகி
வேதியர் வாழுஞ் செய்ஞ்ஞல் விரும்பும்ஆப் பாடியாரே.

—திருநாவுக். 4, திருஆப்பாடி 9.

'அறிவுமாகி அறிவினுட் செறிவுமாகி' என்றதனால் சிவபெருமான், ஞான ரூபமாயும், ஞானத்தால் ஏற்படுவதாகிய மூர்த்தியாகவும் இருக்கிறார் எனவும் கூறப்பட்டிருக்கிறது.

> சிந்தையுந் தெளிவு மாகித் தெளிவினுட் சிவமுமாகி
> வந்தநற் பயனுமாகி வாள்நுதல் பாகமாகி
> மந்தமாம் பொழில்கள் சூழ்ந்த மண்ணித்தென் கரைமேல் மன்னி
> அந்தமோ டளவிலாத அடிகள்ஆப் பாடியாரே.
>
> —திருநாவுக். 4, திருஆப்பாடி 5.

முதல் வரியில், சிந்தைத் தெளிவிலிருக்கும் சிவமென்ற குறிப்பால், ஆன்ம ஞானத்தால் சிவமாகிய முக்தி கிடைக்கும் என்ற கருத்தும் குறிக்கப்பட்டிருக்கிறது. 'அந்தமோ டளவிலாத' என்பது இறைவனின் நிர்க்குணத் தன்மையைக் குறிப்பதாகும்.

> உள்ளுமாய்ப் புறம்புமாகி உருவுமாய் அருவுமாகி
> வெள்ளமாய்க் கரையுமாகி விரிகதிர் ஞாயிறாகிக்
> கள்ளமாய்க் கள்ளத்துள்ளாற் கருத்துமாய் அருத்தமாகி
> அள்ளுவார்க் கள்ளல் செய்திட் டிருந்தஆப் பாடியாரே.
>
> —திருநாவுக். 4, திருஆப்பாடி 7.

'உருவுமாய் அருவுமாகி' என்பது, சகுணோபாசனையில், உருவுள்ளவரானாலும், உண்மையில் அருவாய் இருக்கிறார் என்னும் அத்வைத தத்துவத்தைத் தெரிவிக்கிறது.

> மயக்கமாய்த் தெளிவுமாகி மால்வரை வளியு மாகித்
> தியக்கமாய் ஒருக்கமாகிச் சிந்தையுள் ஒன்றி நின்ற
> இயக்கமாய் இறுதியாகி எண்திசைக் கிறைவ ராகி
> அயக்கமாய் அடக்கமாய ஐயர்ஆப் பாடி யாரே.
>
> —திருநாவுக். 4, திருஆப்பாடி 8.

> நீருமாய்த் தீயுமாகி நிலனுமாய் விசும்பு மாகி
> ஏருடைக் கதிர்க ளாகி
>
> —திருநாவுக். 4, திருப்புகலூர் 8.

> உருவமும் உயிருமாகி ஓதிய உலகுக்கெல்லாம்
> பெருவினைப் பிறப்பு வீடாய்நின்ற எம்பெருமான்.
>
> —திருநாவுக். 4, திருவண்ணாமலை 3.

> இரவியும் மதியும் விண்ணும் இருநிலம் புனலுங் காற்றும்
> உரகமார் பவனம் எட்டுத் திசையொளி உருவ மானாய்.
>
> —திருநாவுக். 5, திருவண்ணாமலை 7.

எண்ணுரு அனேகர் போலும் இன்னம்பர் ஈசனூரே.

—திருநாவுக். 4, திருஇன்னம்பர் 1.

'போலும்' என்ற சொற்கள் இறைவனிடம் இவை ஆரோபிக்கப்பட்டவை என்பதைத் தெரிவிக்கின்றன.

அலைக்கின்ற நீர்நிலங் காற்றனல் அம்பர மாகிநின்றீர்
கலைக்கன்று சேருங் கரத்தீர் கலைபொரு ளாகி நின்றீர்.

—திருநாவுக். 4, திருவீழிமிழலை 3.

அட்ட மூர்த்திய தாகிய அப்பரோ.

திருநாவுக். 5, திருமறைக்காடு 3.

ஞால மேவிசும் பேநலந் தீமையே
கால மேகருத் தேகருத் தாற்றெழும்
சீல மேதிரு வீழி மிழலையுள்
கோல மேஅடி யேனைக் குறிக்கொளே.

—திருநாவுக். 5, திருவீழிமிழலை 3.

மறிகடலுங் குலவரையும் மண்ணும் விண்ணும்
திருந்தொளிய தாரகையுந் திசைக ளெட்டுந்
திரிசுடர்கள் ஓரிரண்டும் பிறவு மாய
பெருந்தகை

—திருநாவுக். 6, கோயில், பெரிய திருத்தாண்டகம் 4.

எல்லாஞ் சிவனென்ன நின்றாய் போற்றி
எரிசுடராய் நின்ற இறைவா போற்றி.

திருநாவுக். 6, திருஅதிகை வீரட்டானம், போற்றித் திருத்தாண்டகம் 1.

பிறவாதே தோன்றிய பெம்மான் தன்னை

—திருநாவுக். 6, திருப்புன்கூரும் திருநீடும், திருத்தாண்டகம் 1.

பின்றானும் முன்றானு மானான் தன்னைப்
பித்தர்க்குப் பித்தனாய் நின்றான் தன்னை
நன்றாங் கறிந்தவர்க்குந் தானே யாகி
நல்வினையுந் தீவினையு மானான் தன்னை.

—திருநாவு. 6, திருப்புன்கூரும் திருநீடூரும், திருத்தாண்டகம் 2.

இங்குப் 'பித்தர்' என்பது ஜீவன்முத்தரைக் குறிக்கிறது. 'நன்றாங் கறிந்தவர்க்குந் தானேயாகி' என்பது 'ஞானத்தாலே தான் முத்தி' என்பதையும், சீவப் பிரும்ம அபேதத்தையும் தெரிவிக்கிறது.

ஓசை யொலியெலா மானாய் நீயே
உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலா மானாய் நீயே
மலையான் மருகனாய் நின்றாய் நீயே.

—திருநாவுக். 6, திரு ஐயாறு, திருத்தாண்டகம். 1.

எல்லா உலகமு மானாய் நீயே
யேகம்பம் மேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மை யறிவாய் நீயே
ஞானச்சுடர் விளக்காய் நின்றாய் நீயே.

—திருநாவுக். 6, திரு ஐயாறு, திருத்தாண்டகம் 7.

நீராகி நெடுவரைக ளானான் கண்டாய்
நிழலாகி நீள்விசும்பு மானான் கண்டாய்
பாராகிப் பௌவமே யானான் கண்டாய்
பகலாகி வானாகி நின்றான் கண்டாய்
ஆரேனுந் தன்னடியார்க் கன்பன் கண்டாய்
அணுவாகி ஆதியாய் நின்றான் கண்டாய்.

—திருநாவுக். 6, திருமழபாடி, திருத்தாண்டகம் 7.

அல்லாய்ப் பகலானாய் நீயே யென்றும்
ஆதிக் கயிலாயன் நீயே யென்றுங்
கல்லா லமர்ந்தாயும் நீயே யென்றுங்
காளத்திக் கற்பகமும் நீயே யென்றும்
சொல்லாய்ப் பொருளானாய் நீயே யென்றுஞ்
சோற்றுத் துறையுறைவாய் நீயே யென்றும்
செல்வாய்த் திருவானாய் நீயே யென்றும்
நின்றநெய்த் தானவென் நெஞ்சு ளாயே.

திருநாவுக். 6, திருநெய்த்தானம், திருத்தாண்டகம் 3.

ஊனவன்காண் உடல்தனக்கோர் உயிரானான்காண்
உள்ளவன்காண் இல்லவன்காண் உமையாட்கென்றுந்
தேனவன்காண் திருவவன்காண் திசையானான்காண்
தீர்த்தன்காண் பார்த்தன்றன் பணியைக்கண்ட
கானவன்காண் கடலவன்காண் மலையானான்காண்.

திருநாவுக். 6, திருவலிவலம், திருத்தாண்டகம் 2.

பாரானை மதியானைப் பகலானானைப்
பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்துநின்ற
நீரானைக் காற்றானைத் தீயானானை.

—திருநாவுக். 6, திருவீழிமிழலை, திருத்தாண்டகம் (1) 1.

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவ ரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி யுலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

—திருநாவுக். 6, கயிலாயம், போற்றித் திருத்தாண்டகம் (1) 6.

மண்ணிலங்கு நீரனல்கால் வானுமாகி
மற்றவற்றின் குணமெலா மாய்நின்றாரும்

—திருநாவுக். 6, திருவெண்ணியூர், திருத்தாண்டகம் 5.

மண்ணதனில் ஐந்தை மா நீரில் நான்கை
வயங்கெரியில் மூன்றை மா ருதத்தி ரண்டை
விண்ணதனி லொன்றைவிரி கதிரைத்
தண்மதியைத் தாரகைகள் தம்மின் மிக்க
எண்ணதனில் எழுத்தை ஏழிசையை.

—திருநாவுக். 6, திருக்கற்குடி, திருத்தாண்டகம் 3.

ஊனாகி உயிராகி யதனுள் நின்ற
உணர்வாகிப் பிறவனைத்தும் நீயாய் நின்றாய்.

—திருநாவுக். 6, திருவானைக்கா, திருத்தாண்டகம் (1) 2.

பரந்தவன்காண் பல்லுயிர்களாகி யெங்கும்
பணிந்தெழுவார் பாவமும் வினையும் போகத்
துரந்தவன்காண் தூமலரங் கண்ணி யான்காண்
தோற்ற நிலையிறுதிப் பொருளாய் வந்த
மருந்தவன் காண்.

—திருநாவுக். 6, திருஏகம்பம், திருத்தாண்டகம் (1) 2.

.........நீர்நிலந்தீ வெளி காற்றாகி
நிற்பனவும் நடப்பனவு மாயி னானை.

—திருநாவுக். 6, திருநாகேச்சரம், திருத்தாண்டகம் 6.

தக்கனது பெருவேள்வி தகர்த்தா னாகித்
தாமரையான் நான்முகனுந் தானே யாகி
மிக்கதொரு தீவளிநீர் ஆகா சமாய்
மேலுலகுக் கப்பாலா யிப்பாலானை.

—திருநாவுக். 6, திருமுதுகுன்றம், திருத்தாண்டகம் 5.

'தாமரையான் நான்முகனுந் தானேயாகி' என்பது குருேபாஸனையில் மூர்த்திபேதம் இல்லை என்ற அத்வைதக் கருத்தைத் தெரிவிக்கிறது.

துறவாதே யாக்கை துறந்தான் தன்னைச்
சோதி முழுமுதலாய் நின்றான் தன்னைப்
பிறவாதே எவ்வுயிர்க்குந் தானே யாகிப்
பெண்ணினோ டாணுருவாய் நின்றான் தன்னை.
—திருநாவுக். 6, திருமுதுகுன்றம், திருத்தாண்டகம் 8.

நீரானைக் காற்றானைத் தீயா னானை
நீள்விசும்பாய் ஆழ்கடல்க ளேழுஞ் சூழ்ந்த
பாரானைப் பள்ளியின்முக் கூடலானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே.
—திருநாவுக். 6, திருப்பள்ளியின் முக்கூடல், திருத்தாண்டகம் 1.

ஊனவனை உடலவனை உயிரானானை
உலகேழு மானானை உம்பர் கோவை.
திருநாவுக். 6, திருப்பள்ளியின் முக்கூடல், திருத்தாண்டகம் 9.

விரிந்துபல வுயிராகி விளங்கி னான்காண்.
—திருநாவு. 6, திருப்புத்தூர், திருத்தாண்டகம் 1.

ஒன்று வுலகனைத்து மானார் தாமே
ஊழிதோ றூழி உயர்ந்தார் தாமே
நின்றாகி யெங்கும் நிமிர்ந்தார் தாமே
நீர்வளி தீயா காச மானார் தாமே.
—திருநாவுக். 6, திருவாலங்காடு, திருத்தாண்டகம் 1.

அல்லும் பகலுமாய் நின்றார் தாமே
அந்தியுஞ் சந்தியு மானார் தாமே
சொல்லும் பொருளெலா மானார் தாமே
தோத்திரமுஞ் சாத்திரமு மானார் தாமே
பல்லுரைக்கும் பாவெலா மானார் தாமே.
—திருநாவுக். 6, திருவாலங்காடு, திருத்தாண்டகம் 5.

சிவனாகித் திசைமுகனாய்த் திருமாலாகிச்
செழுஞ் சுடராய்த் தீயாகி நீருமாகிப்
புவனாகிப் புவனங்க ளனைத்து மாகிப்
பொன்னாகி மணியாகி முத்து மாகிப்
பவனாகிப் பவனங்க ளனைத்து மாகி
பசுவேறித் திரிவானோர் பவனாய் நின்ற
தவனாய தலையாலங் காடன் தன்னை
—திருநாவுக். 6, திருத்தலையாலங்காடு, திருத்தாண்டகம் 4.

'சிவனாகித் திசை முகனாய்த் திருமாலாகி' என்ற தொடர் ஸகுணப் பிரும்ம உபாஸனையில் ஹரிஹராதி மூர்த்திகளுக்குள் வேறுபாடில்லை என்ற அத்வைத தத்துவத்தை நன்கு தெரிவிக்கிறது.

விண்ணாகி நிலனாகி விசும்பு மாகி
வேலைசூழ் ஞாலத்தார் விரும்பு கின்ற
எண்ணாகி எழுத்தாகி இயல்பு மாகி
ஏழுலகுந் தொழுதேத்திக் காண நின்ற
கண்ணாகி மணியாகிக் காட்சியாகிக்
காதலித்தங் கடியார்கள் பரவ நின்ற
பண்ணாகி இன்னமுதாம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே.

—திருநாவுக். 6, திருப்பாசூர், திருத்தாண்டகம் 1.

விரிந்தானைக் குவிந்தானை வேத வித்தை
வியன் பிறப்போ டிறப்பாகி நின்றான் தன்னை.

—திருநாவுக். 6, திருஆலம்பொழில், திருத்தாண்டகம் 6.

விண்ணவனை மேருவில்லா வுடையான் தன்னை
மெய்யாகிப் பொய்யாகி விதியா னானைப்
பெண்ணவனை ஆணவனைப் பித்தன் தன்னைப்
பிணமிடுகா டுடையானைப் பெருந்தக் கோனை
எண்ணவனை எண்டிசையுங் கீழும் மேலும்
இருவிசும்பும் இருநிலமு மாகித் தோன்றுங்
கண்ணவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே.

—திருநாவுக். 6, திருக்கஞ்சனூர், திருத்தாண்டகம் 4.

உருத்திரனை உமாபதியை உலகா னானை
உத்தமனை நித் திலத்தை ஒருவன் தன்னைப்
பருப்பதத்தைப் பஞ்சவடி மார்பி னானைப்
பகலிரவாய் நீர்வெளியாய்ப் பரந்து நின்ற
நெருப்பதனை.

—திருநாவுக். 6, திருக்கஞ்சனூர், திருத்தாண்டகம் 5.

நின்ற திருத்தாண்டகங்களிலுள்ள எல்லாப் பாடல்களுமே, 'ஒன்றான பரம் பொருளே எல்லாம்' என்ற அத்வைதக் கருத்தைத் தெரிவிக்கின்றன. அவற்றுள் முதலிரண்டு பாடல்கள் மட்டும் இங்கு உதாரணமாக எழுதப் பெறுகின்றன.

இரு நிலனய்த் தீயாகி நீரு மாகி
இயமான னயெறியுங் காற்று மாகி
அரு நிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெரு நலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிற ருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெரு நலையாய் இன்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.

—திருநாவுக். 6, பொது, நின்ற திருத்தாண்டகம் 1.

'பிறருருவுந் தம் முருவுந் தாமே யாகி' என்பது ஜீவப் பிரும்ம அபேதத்தைக் குறிக்கிறது.

மண்ணாகி விண்ணாகி மலையு மாகி
வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியு மாகிக்
கலையாகிக் கலைஞானந் தானே யாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகிப்
பிரளயத்துக் கப்பாலோ ரண்ட மாகி
எண்ணாகி பெண்ணுக்கோ ரெழுத்து மாகி
யெழுஞ் சுடரா யெம்மடிகள் நின்ற வாறே.

—திருநாவுக். 6, பொது, நின்ற திருத்தாண்டகம் 2.

அப்பன்நீ அம்மைநீ ஐய னும்நீ
அன்புடைய மாமனும் மாமி யும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொரு ளும்நீ
ஒருகுலமுஞ் சுற்றமும் ஓரு ரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்று வாய்நீ
துணையாயென் நெஞ்சந் துறப்பிப் பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்தும்நீ
யிறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே.

—திருநாவுக். 6. பொது, தனித் திருத்தாண்டகம் 1.

நின்னாவார் பிறரன்றி நீயே யானாய்
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து மானாய்
மன்னானாய் மன்னவர்க்கோ ரமுத மானாய்
மறைநான்கு மானாய் ஆறங்க மானாய்
பொன்னானாய் மணியானாய் போக மானாய்
பூமிமேல் புகழ்தக்க பொருளே உன்னை
என்னானாய் என்னானாய் என்னி னல்லால்
ஏழையேன் என்சொல்லி யேத்து கேனே.

—திருநாவுக். 6, பொது, தனித் திருத்தாண்டகம் 7.

நிற்பனவும் நடப்பனவும் நிலனும் நீரும்
நெருப்பினொடு காற்ருகி நெடுவா னுகி
அற்பமொடு பெருமையுமாய் அருமை யாகி
அன்புடையார்க் கெளிமையதாய் அளக்க லாகாத்
தற்பரமாய்ச் சதாசிவமாய்த் தானும் யானும்
ஆகின்ற தன்மையனை நன்மை யோடும்
பொற்புடைய பேசக் கடவோம் பேயர்
பேசுவன பேசுதுமே மிழையற் றேமே.

—திருநாவுக். 6, மறுமாற்றத் திருத்தாண்டகம் 7.

இந்தத் தேவாரத்தில், ' தானும் யானும் ஆகின்ற தன்மையன்' என்ற தொடரால், சிவனுக்கும் சீவனுக்கும் வேறுபாடில்லை யென்ற அத்வைதக் கருத்தும் வெளியாகிறது.

ஊனு யுயிரானு யுடலானு யுலகானுய்
வானுய் நிலனுய் கடலானுய் மலையானுய்.

—சுந்தரர். 7, திருவெண்ணெய் நல்லூர் 7.

பாரோடு விண்ணும் பகலுமாகிப் பனிமால் வரையாகிப் பரவையாகி
நீரோடுதீயு நெடுங் காற்றுமாகி நெடு வெள்ளிடையாகி நிழலுமாகித்
தேரோட வரையெடுத்த வரக்கன் சிரம்பத் திறுத்தீ ரும செய்கை யெல்லா
மாரோடுங் கூடாவடி கேளிது வென்னடி யோமு மக்காட் செயவஞ்சுதுமே.

—சுந்தரர். 7, திருக்கோத்திட்டையும் திருக்கோவலூரும் 10.

ஆக்குமழிவு மமைவுநீ யென்பனுன் சொல்லுவார்
சொற்பொரு ளவைநீ யென்பனு
ளுக்குஞ் செவியுங் கண்ணு நீயென்பனு னலனே
யினி காணுனை நன்குரைத்தேன்
னோக்கு நிதியம் பலவெத்தனையுங் கலத்திற்பகப்
பெய்து கொண்டேற நுந்தி
யார்க்குங் கடலங் கரைமேன்ம கோதை யணியார்
பொழி லஞ்சைக்களத் தப்பனே.

—சுந்தரர். 7, திருஅஞ்சைக்களம் 7.

தரிக்குந் தரைநீர் தழல்காற்றந் தரஞ்சந்திரன்
சவிதா விய மானவ னுனீர்.

—சுந்தரர். 7, திரு அரிசிற்கரைப்புத்தூர் 3.

நிலந் நிள்ர்நீர் நெருப்பொடுகாற் ருகர்சமாகி
நிற்பனவு நடப்பனவா நின்மலன்.

—சுந்தரர். 7, திருக்கலைய நல்லூர் 7.

நிலனே நீர்வெளிதீ நெடுவானக மாகிநின்ற புலனே.

—சுந்தரர். 7, திருக்கற்குடி 8.

மண்ணீர் தீவெளிகால் வருபூதங் களாகி மற்றும்
பெண்ணோ டாணலியாய்ப் பிறவாவுரு வானவனே.

—சுந்தரர். 7, திருக்கடவூர் 6.

காற்றானைத் தீயானைக் கதிரானை மதியானை.

—சுந்தரர். 7, திருக்கருப்பறியலூர் 2.

ஒருமேக முகிலாகி யொத்துலகந் தாணு
யூர்வனவு நிற்பனவு மூழிகளுந் தானுய்ப்
பொருமேவு கடலாகிப் பூதங் களைந்தாய்ப்
புனைந்தவனைப் புண்ணியனைப் புரிசடையி னானை.

—சுந்தரர். 7, திருக்கானாட்டு முள்ளூர் 2.

'சிவபெருமான் ஒருவரே எல்லாமாய்த் தோன்றுகிறார்' என்பது இதுவரை கூறப்பட்டது. இனி,

விரிகதிர் ஞாயி றல்லர் மதியல்லர் வேத விதியல்லர் விண்ணும் நிலனும்
திரிதரு வாயுவல்லர் செறுதீயு மல்லர் தெளிநீரு மல்லர் தெரியில்
அரிதரு கண்ணியாளை ஒருபாகமாக அருள்காரணத்தில் வருவார்
எரியர வாரமார்பர் இமையாரும் அல்லர் இமைப்பாரும் அல்லர் இவரே.

—திருநாவுக். 4, சிவனெனுமோசை 2.

மண்ணல்லை விண்ணல்லை வலயமல்லை
மலையல்லை கடலல்லை வாயுவல்லை
எண்ணல்லை யெழுத்தல்லை யெரியுமல்லை
இரவல்லை பகலல்லை யாவுமல்லை
பெண்ணல்லை ஆணல்லை பேடுமல்லை
பிறிதல்லை யானும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயையல்லை
உணர்வரிய ஒற்றியூ ருடைய கோவே.

—திருநாவுக். 6, திரு ஒற்றியூர் திருத்தாண்டகம் 9.

என்ற தேவாரங்கள் சிவபெருமான் முற்கூறிய இவை யாவு மல்லாதவரா யிருக்கிறார் என்று அத்வைத தத்துவத்தை அபவாத முறையால் தெரிவிக்கின்றன.

'உலகத் தோற்றம் உண்மை யன்று' என்பது அத்வைத சித்தாந்தம். இதை விளக்கும் தேவாரப் பாடல்கள் வருமாறு :—

பொய்யினால் மிடைந்த போர்வை புரைபுரை அழுகிவீழ
மெய்யனாய் வாழமாட்டேன் வேண்டிற் றொன்றவர் வேண்டார்.
—திருநாவுக். 4, திருநேரிசை திருஅதிகை வீரட்டானம் (3) 2.

பொய்விரா மேனி தன்னைப் பொருளெனக் காலம் போக்கி.
—திருநாவுக். 4, திருச்சோற்றுத்துறை 1.

நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
—திருநாவுக். 5, திருஆனைக்கா 6.

நில்லா வாழ்வு நிலைபெறு மென்றெண்ணி
—திருநாவுக். 5, திருக்கருவிலாக் கொட்டிட்டை 7.

பொய்ம் மாயப் பெருங் கடலிற்
புலம்பா நின்ற புண்ணியங் காள்
தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்கு
—திருநாவுக். 6. திருத்தாண்டகம் திரு ஆரூர் (4) 1.

இம்மாயப் பிறப்பெனுங் கடலாங்
துன்பத் திடைச் சுழிப்பட் டிளைப்பேனை.
—திருநாவுக். 6, திருவானைக்கா (1) 5

தந்தையார் தாயாருடன் பிறந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தாமாரே
வந்தவா றெங்ஙனே போமாறேதோ
மாயமா மிதற்கேதும் மகிழவேண்டாம்.
—திருநாவுக். 6, பலவகைத் திருத்தாண்டகம் 10.

பொய்த் தன்மைத் தாயமாயப் போர்வையை மெய்யென்றெண்ணும்
வித்தகத்தாய வாழ்வு வேண்டிநான் விரும்ப கில்லேன்.
—சுந்தரர். 7. திருவாரூர் 9.

மாய மாய மனங் கெடுப்பானை மனத்துளே மதியா யிருப்பானைக்
காய மாய மூமாக்குவிப்பானைக் காற்றுமாய்க் கனலாய்க் கழிப்பானை.
—சுந்தரர். 7. திருநீடூர் 8.

வாழ்வாவது மாயம் மிது மண்ணாவது திண்ணம்.
—சுந்தரர். 7, திருக்கேதாரம் 1.

ஞானத்தாலேதான் முத்திபெற முடியும் என்பது அத்வைத சித்தாந்தம். இதை விளக்கும் தேவாரப் பாடல்கள் ;

அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற்
றைம்புலனும் அடக்கி ஞானம்

புகலுடையார் தம்முள்ளப் புண்டரிகத்துள்
ளிருக்கும் புராணர் கோயில்.

—திருஞான. 1, திருவீழிமிழலை 6

உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய்யட்டி உயிரெனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்துநோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே.

—திருநாவுக். 4, பொது, தனித்திரு நேரிசை 4.

ஞானங் காட்டுவர் நன்னெறி காட்டுவர்.

—திருநாவுக். 5, திருவன்னியூர், திருக்குறுந்தொகை 3.

கல்வி ஞானக் கலைப்பொரு ளாயவன்.

—திருநாவுக். 5, திருக்கானூர், திருக்குறுந்தொகை 6.

விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே.

—திருநாவுக். 5. பொது, தனித் திருக்குறுந்தொகை (2) 10.

முன்னை ஞான முதல்தனி வித்தினை
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே.

—திருநாவுக். 5, பொது, தனித் திருக்குறுந்தொகை (3) 2.

ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்
ஞானத்தால் தொழு வேனுனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாய்உனை நானுந் தொழுவனே.

—திருநாவுக். 5, பொது, தனித் திருக்குறுந்தொகை 3.

ஞான மூர்த்தியை நான்மறக் கிற்பனே.

—திருநாவுக். 5, பொது, மறக் கிற்பனே யென்னுந் திருக்குறுந்தொகை 5.

தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னிற் றன்னை யறியிற் றலைப்படும்
தன்னிற் றன்னை யறிவில னாயிடில்
தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே.

—திருநாவுக். 5, பொது, சித்தத் தொகைத் திருக்குறுந்தொகை 29.

இதில் 'சீவ பிரும்ம அபேதமும்' எதிர்மறை முகத்தால் கூறப்பட்டிருக்கிறது.

கான நாடு கலந்து திரியிலென்
ஈன மின்றி யிருந்தவஞ் செய்யி லென்
ஊனை யுண்டல் ஒழிந்துவான் நோக்கிலென்
ஞான னென்பவர்க் கன்றிநன் கில்லையே.

திருநாவுக். 5, பொது, பாவநாசத் திருக்குறுந்தொகை 6.

இருளாய வுள்ளத்தி னிருளை நீக்கி
இடர் பாவங் கெடுத்தேழை யேனை யுய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற்
சிவலோக நெறியறியச் சிந்தை தந்த
அருளானை

—திருநாவுக். 6, திருப்புள்ளிருக்கு வேளூர், திருத்தாண்டகம் 4.

பெருகுநிலைக் குறியாளர் அறிவு தன்னைப்
பேணியஅந் தணர்க்கு மறைப் பொருளை.

—திருநாவுக். 6, திருச்செங்கட்டாங்குடி, திருத்தாண்டகம் 3.

ஞானச் சுடர் விளக்காய் நின்றாய் நீயே.

—திருநாவுக். 6, திருவையாறு, திருத்தாண்டகம் (2) 7.

சிவனே ஞான மானாய்.

—திருநாவுக். 6, திருவானைக்கா, திருத்தாண்டகம் (1) 2.

நற்பதத்தார் நற் பதமே ஞான மூர்த்தி.

—திருநாவுக். 6, பொது, தனித் திருத்தாண்டகம் 4.

தம்மையும் நோக்கித் தகவெனும் வேலியிட்டுச்
செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையு மன்றே.

—திருநாவுக். 4, பொது, தனித் திருநேரிசை (2) 2.

'ஜீவனும் பரம்பொருளும் வேறல்ல' என்னும் அத்வைதக் கருத்தை விளக்கும் தேவாரங்கள்:—

பத்திப்பேர் வித்திட்டே பரந்தஐம் புலன்கள்வாய்ப்
பாலே போகா மேகாவாப் பகையறும் வகை நினையா
முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக் குணங்கள்வாய்
மூடாவூடா நாலந்தக் கரணமும் ஒருநெறியாய்ச்
சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்
சேர்வார் தாமே தானாகச் செய்யுமவ னுறையுமிடம்.

—திருஞான சம். 1, திருக்கழுமலம் 7.

'மெய்ப் பரம் பொருள்' என்றது, "மூவகை ஸத்தை களுள்ளும், சிறந்த பாரமார்த்திக ஸத்தையா யிருக்கிறது பரம் பொருள்" என்கிற கருத்தைத் தெரிவிக்கிறது.

ஊனினுள் ளுயிரை வாட்டி யுணர்வினர்க் கெளிய ராகி
வானினுள் வானவர்க்கும் அறியலா காத வஞ்சர்
நானெனிற் றானே யென்னும் ஞானத்தார் பத்தர் நெஞ்சுள்
தேனும்இன் னமுதுமானார் திருச்செம்பொன் பள்ளியாரே.

—திருநாவுக். 4, திருச்செம்பொன்பள்ளி, திருநேரிசை 1.

தொண்டலால் துணையுமில்லை தோலலா துடையுமில்லை
கண்டலர் தருளுமில்லை கலந்தபின் பிரிவதில்லை.

—திருநாவுக். 4, திருஐயாறு, திருநேரிசை 4.

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.

—திருநாவுக். 6, திருஆரூர், திருத்தாண்டகம் (2) 7.

தீயாகி நாறாகி நேர்மையாகி

—திருநாவுக். 6, பொது, நின்ற திருத்தாண்டகம் 5.

திருஞான சம். 3-ம் திருமுறை, திருநாரையூர் 5-ல்

"நானமரும் பொருளாகி நின்றான்" என்பதும்,

திருநாவுக். 6-ம் திருமுறை, திருப்புன்கூரும் திருநீடூரும், திருத்தாண்ட. 2-ல்

"நன்றாங் கறிந்தவர்க்குந் தானே யாகி" என்பதும்,

திருநாவுக். 6-ம் திருமுறை, நின்ற திருத்தாண்டகம் 1-ல் உள்ள

"பிறருருவுந் தம் முருவுந்தா மேயாகி" என்பதும்,

திருநாவுக். 6-ம் திருமுறை, மறுமாற்றத் திருத்தாண்டகம் 7-ல்

"தானும் யானும் ஆகின்ற தன்மையனை" என்பதும்,

சிவப் பிரும்ம அபேதத்தைத் தெரிவிக்கின்றன என்பது முன்பே காட்டப்பட்டது.

'பரம்பொருள் நிர்க்குணமானது' என்பது அத்வைதக் கொள்கை. இதர மதத்தினர் பரம் பொருளை ஸகுணமாகக்

கூறுகின்றனர். 'குணத்தோடு கூடியவை யெல்லாம் இந்திரிய விஷயங்களே' என்ற நியதிப்படி, அவர்கள் மதத்திலே கூறப்படும் பரம்பொருள் இந்திரிய விஷயமாய் விடுகிறது. தேவாரத்திலோ, சிவபெருமான் 'இந்திரியங்களுக்கு விஷய மாகாதவன், அளவை களுக்குக் கட்டுப்படாதவன்' என்ற குறிப்புக்கள் காணப்படு கின்றன. இவற்றால், சிவபெருமான் நிர்க்குணன் என்பது தெளிவு.

காணுமா றரியபெரு மானாகிக் காலமாய்க் குணங்கள் மூன்றாய்ப்
பேணுமூன் றுருவாகிப் பேருலகம் படைத்தளிக்கும் பெருமான் கோயில்.

—திருஞான. 1, திருவீழிமிழலை 5.

'காணுமா றரிய பெருமான் குணங்கள் மூன்றாய்' என்றது, உண்மையில் நிர்க்குணமாகிய பரம்பொருள் உபாஸனையின் போது, ஸகுணன் என்ற கருத்தைத் தெரிவிக்கிறது.

மறையும் அவை யுடையானென நெடியானென இவர்கள்
இறையும்அறி வொண்ணாதவன் மேயவ் வெழில்நகரே.

—திருஞான. 1, திருக்கொடுங்குன்றம் 9.

உம்பராலும் உலகின் னவராலும்
தம்பெருமை யளத்தற் கரியான்.

—திருஞான. 1, திருநறையூர்ச் சித்தீச்சரம் 5.

அண்ணலா யிருப்பார் இவர்தன்மை யறிவாரார்.

—திருஞான. 3, திருப்பல்லவனீச்சரம் 4.

நலஞ்சுடரே நால்வேதத் தப்பால் நின்ற
சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்து நின்ற
சொலற் கரிய சூழலாய்.

—திருநாவுக். 6, பொது, தனித் திருத்தாண்டகம் 4.

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி னல்லால்
ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்
ஓரூர னல்லன் ஓருவமனில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே.

—திருநாவுக். 6, பொது, வினாவிடைத் திருத்தாண்டகம் 10.

சுருதியார்க்குஞ் சொல்ல வொண்ணாச் சோதியெம் மாதியான்.
—சுந்தரர். 7, திருஎதிர் கொள்பாடி 10.

முன்னவ னெங்கள் பிரான்முதல் காண்பரி தாயபிரான்.
—சுந்தரர். 7, திருப்பழ மண்ணிப் படிக்கரை 1.

வானுடையான் பெரியான் மனத்தாலு நினைப்பரியான்.
—சுந்தரர். 7, திருநனிபள்ளி 3.

தோற்ற வுண்மை, வியாவஹாரிக உண்மை, பாரமார்த்திக உண்மை என உண்மை மூன்று வகைப்படும். அவற்றுள்,

காதலாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச் சிவா யவே.
—திருஞான. 3, நமச்சிவாயத் திருப்பதிகம் 1.

என்ற தேவாரத்தில் 'மெய்ப் பொருளாவது' என்ற சொல், 'வியாவஹாரிக ஸத்தியத்தினும் மேம்பட்ட பாரமார்த்திக ஸத்தியமாகப் பரம்பொருளாய் இருக்கிறது' என்பதைத் தெரிவிக்கிறது.

ஸகுணோபாஸனையின் போது, ஹரி, ஹரன் முதலிய மூர்த்திகளுக்குள் வேறுபாடில்லை என்னும் அத்வைத தத்துவம்,

" விரை மலரோன் செங்கண்மால் ஈசனெனும்
மூவராய முதல் ஒருவன் "
—திருஞான. 1, திருமுதுகுன்றம் 1.

" மாலயனும் மறைகள் நான்கும் முற்றுமாகி "
—திருஞான. 4, திருமுதுகுன்றம் 2.

என்ற பகுதிகளாலே தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

" மாயவன் சேயவன் வெள்ளியவன் விடஞ்
சேரும்மை மிடற்றன் "
—திருஞான. 3, திருநாரையூர் 3.

' பரமனைப் பிரமனை '
—திருநாவுக். 4, திருப்பயற்றூர் 7.

" மாயனாய் மாலனாகி மலரவனாகி "
—திருநாவுக். 4. திருக்காஞ்சித் திருமேற்றளி 6.

" தாமரையான் நான்முகனுந் தானே யாகி"

—திருநாவுக். 6, திருமுதுகுன்றம், திருத்தாண்டகம் 5.

" சிவனாகித் திசைமுகனாய்த் திருமாலாகி"

—திருநாவுக். 6, திருத்தலையாலங்காடு, திருத்தாண்டகம் 4.

என்ற பகுதிகள் ஹரிஹராதி மூர்த்திகளின் அபேதத்தைத் தெரிவிக்கின்றன என்று முன்பே ஆங்காங்கு எடுத்துக் காட்டப்பெற்றிருக்கிறது.

'ஜீவன்முக்தி' அத்வைதத்தில் சிறந்த தத்துவம். தேவாரத்தில், சிவபிரானிடத்தில் ஜீவன்முக்த இலக்கணம் கூறப்பெற்றிருக்கிறது.

" விரைந்து கைதொழு வாரையும் காதலன்
வரைந்து வைதெழு வாரையும் வாடலன்"

—திருநாவுக். 5, திருவீழிமிழலை, திருக்குறுந்தொகை (1) 1.

" பித்தர்க்குப் பித்தனாய் நின்றான் தன்னை"

—திருநாவுக். 6, திருப்புன்கூரும் திருநீடூரும், திருத்தாண். 2.

" வேண்டாமை வேண்டுவது மில்லான் தன்னை"

—திருநாவுக். 6, திருஆவடுதுறை, திருத்தாண்டகம் (1) 9.

என்பன உதாரணங்கள்.

சிவம்.

ஸ்ரீ

ஸ்ரீ குருப்யோ நம:

# திருவாசகம் (எட்டாந் திருமுறை)
# திருக்கோவையாரில் அத்வைதம்

வித்வான் A. R. மலையப்ப சாஸ்திரிகள், திருச்சிராப்பள்ளி

ஸ்ரீ மாணிக்கவாசகர் பாண்டியநாட்டில் திருவாதவூரில் பிறந்தவர். அவரது பிள்ளைத் திருநாமம் வாதவூரர். அவர் அரிமர்த்தன பாண்டியன் என்பவனிடம் மந்திரியாய் இருந்தார். ஒருநாள் அரசன் அவரிடம் நிரம்பப் பொன் கொடுத்துக் குதிரை வாங்கி வரச் சொன்னான் அவர் சென்று திருப்பெருந்துறையை அடைந்தார். முன்பு ஆல நிழலிலிருந்து சனகாதி நால்வருக்கு அத்வைத தத்வோபதேசஞ் செய்த சிவபிரான் அங்கு அன்று ஒரு குருந்த மர நிழலிலே குரு வடிவங்கொண்டு பூத கணங்களைச் சீடர் வேடங் கொள்ளச் செய்து அத்வைத தத்வோபதேசம் செய்து கொண்டிருந்தார்.

மந்திரி அவ்வழகிய தத்வோபதேசத்தில் ஈடுபட்டுத் தாம் கொணர்ந்த பொருள்களை யெல்லாம் சத் விஷயங்களில் செலவிட்டு, அவருடைய உபதேசத்தைப் பெற்று, அங்கேயே துறவியாக வாழ்ந்து சிவபெருமானுக்குப் பாமாலை சூட்டத் தொடங்கினார். அப் பாடல்களைக் கேட்டருளிய சிவபெருமான், அப் பாடல்களில் உயர்ந்த மாணிக்கங்கள்போல வாசகங்கள் அமைந்திருந்தமை நோக்கி, அவ் வாதவூரடிகளுக்கு 'மாணிக்கவாசகர்' என்ற திருப்பெயர் கொடுத்து, அங்கேயே அமர்ந்திருக்கும்படி கட்டளையிட்டு மறைந்தருளினார்.

நாட்கள் பல சென்றும், குதிரைகளையும் மந்திரியையும் காணாத மன்னன், ஆட்களைக் கொண்டு, அவரைத் தேடிப் பிடித்துச் சிறையி லடைத்துத் துன்புறுத்தினான். வாதவூரர் ஈசனை வேண்டினார். மனமிரங்கிய சிவபெருமான் நரிகளையெல்லாம் குதிரைகளாக்கித் தமது கணங்களைக் குதிரை செலுத்துபவ

ராக்கித் தாம் அவர்களுக்குத் தலைவராய் இருந்துகொண்டு, குதிரைகளைக் கொண்டுவந்தார். அரசன் மனமகிழ்ந்து வாத வூரரை விடுதலை செய்தான். அன்றிரவே அந்த மாயக் குதிரைக ளெல்லாம் நரியாகிக் குதிரை லாயத்திலுள்ள இதர் குதிரைகளை யும் கடித்துவிட்டுச் சென்றுவிட்டன. அரசன் மிகவும் கோபங் கொண்டு மந்திரியை மறுபடியும் தண்டித்தான்.

அப்பொழுது சிவபெருமான், வைகையில் வெள்ளம் வரச் செய்து, பிட்டுக்கு மண் சுமந்து, தானும் பிரம்படி பட்டு; மன் னனையும் பிரம்படி படச்செய்து, தாம் 'ஈசுவரன்' என்பதை யுணர்த்தினர். இதனல், வாதவூரர் சிறந்த சிவஞானி என்பதை யுணர்ந்த மன்னன், அவரிடம் மன்னிப்புக் கோரி, அவரை விடு வித்தான்.

அதுமுதல் அவர் பல க்ஷேத்திரங்களுக்கும் சென்று, தோத்திரம் பாடிக் கடைசியில் சிதம்பரத்துக்கு வந்தார். அங் குச் சிவபெருமான் ஓர் அந்தணராக வந்து, இவர் பாடிய பாடல்களை யெல்லாம் ஏட்டில் எழுதிக்கொண்டு, அதைத் திரு வாசகமாகவும் அவரைக் கொண்டே ஒரு கோவையும் பாடச் செய்து அதையும் தம் கையாலேயே எழுதி, கனக சபையில் அப் புத்தகத்தை வைத்து, அங்கேயே மறைந்தருளினர். இந் நூல்களுக்குத் தாங்களே பொருள் கூறவேண்டுமென்று கேட் டுக் கொண்டவர்களுக்கு, மாணிக்கவாசகர் இந் நூல்களுக்குப் பொருள் இவரே என்று ஸ்ரீ சிதம்பரேசரைச் சுட்டிக்காட்டி அத்வைத முத்தியை அடைந்தார்.

இவரது திருவாசகமும், திருக்கோவையாரும் எட்டாந் திருமுறை. "ஒன்றான பரம்பொருளே எல்லாமாய்த் தோன்று கிறது" என்பது அத்வைத சித்தாந்தம். இதைத் தெரிவிக்கிற திருவாசகப் பகுதிகள் வருமாறு:—

"ஊனாய் உயிராய் உணர்வாய் என்னுட் கலந்து
தேனாய்"
—திருவம்மானை 16.

"இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
யன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
யாதியனே யந்த நடுவாகி யல்லானே" —சிவபுராணம் 70-73.

'எல்லாமாய் அல்லவுமாய்' என்ற குறிப்புக்கள் பரம் பொருளது உண்மையான நிர்க்குணத் தன்மையைக் காட்டு கின்றன.

" வானாகி மண்ணாகி வெளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே "

—திருச்சதகம் 15.

" பூதங்க ளைந்தாகி புலனாகிப் பொருளாகிப்
பேதங்க ளனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனை "

—கண்டபத்து 10'

" நீயலாற் பிறிது மற்றின்மை
சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாந்
திருப் பெருந்துறை யுறை சிவனே
ஒன்று நீயல்லை யன்றி யொன்றில்லை "

—கோயிற் றிருப்பதிகம் 7.

" வேறோர் பரிசிங் கொன்றில்லை; மெய்ம்மை
யுன்னை விரித் துரைக்கில் " —குழைத்தபத்து. 5.

" சோதியுமா யிருளாயி னார்க்கு " —திருப்பொற்சுண்ணம் 20.

" தேறும் வகைநீ திகைப்பும்நீ
தீமை நன்மை முழுதும்நீ " —குழைத்தபத்து, 5.

" உண்மையாய் இன்மையுமாய்ப் பூத்தானே " —திருவேசறவு 8.

" மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்கு "

—திருப்பொற் சுண்ணம் 20.

" அண்ணாமலை யானடிக் கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றாற்போற்
கண்ணா ரிரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணாரொளி மழுங்கித் தாரகைகள் தாமகலப்
பெண்ணாகி யாணா யலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்
கண்ணா ரமுதமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேயிப் பூம்புனல் பாய்ந்தாடேலோ ரெம்பாவாய் "

—திருவெம்பாவை 18.

" ஆதியு மந்தமு மில்லா வரும்பெருஞ் சோதியை "

—திருவெம்பாவை 1.

" ஆதியு மந்தமு மாயினார்க்கு ஆடப்பொற் சுண்ண
மிடித்து நாமே " —திருப்பொற் சுண்ணம் 20.

" அத்தனே யண்ட ரண்டமாய் நின்ற
ஆதியே " —பிடித்த பத்து 8.

" நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோடெண் வகையாய்ப் புணர்ந்துநின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத் தானொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ " —தோணோக்கம் 5.

" இரந்திரந் துருகவென் மனத்துள்ளே
யெழுகின்ற சோதியே யிமையோர்
சிரந்தனிற் பொலியுங் கமலச் சேவடியாய்
திருப்பெருந் துறையுறை சிவனே
நிரந்த வாகாய நீர்நிலந்தீகா
லாயவை யல்லையா யாங்கே
கரந்த தோருருவே களித்தன னுன்னைக் கண்ணுற
கண்டுகொண் டின்றே. —கோயிற் றிருப்பதிகம் 6.

இவ்வாறு, யாவும் பிரும்மமென ஆரோபம் பற்றிக் கூறினும், அதிஷ்டானம்பற்றி, 'நிரந்த வாகாயம் நீர்நிலந்தீ காலாய்' என்னும் ஆரோபத்தை மறுக்க, உடனே 'அவை யல்லையா யாங்கே கரந்த தோருருவே' என்று கூறப்பெற்றிருக்கிறது.

" நிற்பதுவுஞ் செல்வதுவு மானோன் காண்க "
—திருவண்டப் பகுதி 53.

" பெண்ணா ணலியெனும் பெற்றியன் " —திருவண்டப் பகுதி 57.

உலகத் தோற்றம் உண்மை யன்று என்பது அத்வைத சித்தாந்தம். அதை விளக்கும் திருவாசகப் பகுதிகள் :—

" பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப்
பெய்த்தேர் முகக்குறும் பேதை குணமாகாமே
தீர்த்தாய்" —திருத்தோணோக்கம் 1.

" பொய்யாயின வெல்லாம் போயகல வந்தருளி "
—சிவபுராணம் 37.

" இந்திர ஞாலம் காட்டிய வியல்பும் " —கீர்த்தித் திருவகவல் 43.

முத்த வுலகிற் பிறப்போர் டிறப்பென்னுஞ்
சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த —திருக்கோத்தும்பி 6.

" இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை" —திருவண்டப்பகுதி 79.

" மாய வாழ்க்கையை மெய்யென் றெண்ணி
மதித்திடா வகை நல்கினன் " —சென்னிப் பத்து 5.

" இந்திர ஞால விடர்ப் பிறவித் துயர் " —திருப்படையாட்சி 3.

" மாயப் பிறப்பறுக்கும் மன்னனடி போற்றி "—சிவபுராணம் 14.

" இந்திர ஞாலம் போல வந்தருளி " —கீர்த்தித் திருவகவல் 94.

" பொய்யாய செல்வத்தே " —திருக்கோத்தும்பி 17,

" புவனியிற் போய்ப் பிறவாமையில் நாள்நாம்
போக்குகின்றோம் அவமே இந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்க "
—திருப்பள்ளியெழுச்சி 10.

ஞானத்தாலே தான் முத்தி கிடைக்கும் என்பதும் சிவபெருமான் ஞான ஸ்வரூபன் என்பதும் அடியிற் காணும் திருவாசகப் பகுதிகளிலே கூறப்படுகின்றன.

" சிந்தை தனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட "
—கண்டபத்து 1.

'சிவமாக்கி யெனையாண்ட' என்றது அத்வைதக் கொள்கையான ஜீவ ப்ரும்ம அபேதத்தையும் தெரிவிக்கிறது.

" சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட "
—அச்சோப் பதிகம் 1.

இங்குள்ள 'சிவமாக்கி யெனையாண்ட' என்பதும் ஜீவ ப்ரும்ம அபேதத்தைத் தெரிவிக்கிறது.

" மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச் சுடரே " —சிவபுரா. 38.

" அறிவாந் தேற்றனே, தேற்றத் தெளிவே " —சிவபுரா. 81, 82.

" பொய் கெட்டு மெய் யானார் " —சிவபுராணம் 86.

இங்கு, ஞானத்தால் மாயம் கெட்டு, பரமார்த்த ஸத்யமாகிய பரம்பொருளானார் என்று கூறப்பட்டிருக்கிறது. மெய் = பாரமார்த்திக ஸத்யம்.

'சீவனும் பரம்பொருளும் வேறல்ல' என்பது அத்வைத சித்தாந்தம். அதை விளக்கும் திருவாசகப் பகுதிகள் :—

" ஈசனே நீயல்லதில்லை இங்குமங்கும் என்பதும்
பேசி னேனோர் பேதமின்மை " —திருச்சதகம் 78.

" பேத மில்லாதோர் கற்பளித்த " —திருக்கழுக்குன்றப் பதிகம் 6.

" பேதங் கெடுத்தருள் செய் பெருமை " —திருவார்த்தை 7.

வான்கெட்டு மாருதமாய்ந் தழனீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
கூன்கெட் டுயிர்கெட் டுணர்வு கெட்டென் னுள்ளமும் போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ ?

—திருத்தெள்ளேணம் 18.

சிவமானவாபாடித் தெள்ளேனங் கொட்டாயோ

—திருத்தெள்ளேணம் 4.

' பரம்பொருள் நிர்க்குணமானது ' என்பது அத்வைதக் கொள்கை.

" ஒருநாமம் ஓருருவம் ஒன்று மில்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ "

—திருத்தெள்ளேணம் 1.

" போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே "

—சிவபுராணம் 77.

இதர மதத்தினர் பரம்பொருளை ஸகுணமாகக் கூறுகின்றனர். " குணத்தோடு கூடியவை யெல்லாம் இந்திரிய விஷயங்களே " என்ற நியதிப்படி, அவர்கள் மதத்தில் கூறப்படும் பரம்பொருள் இந்திரிய விஷயமாய் விடுகிறது. திருவாசகத்திலோ, 'சிவபெருமான் இந்திரியங்களுக்கு விஷயமாகாதவன்', 'அளவைகளுக்குக் கட்டுப்படாதவன்' என்ற குறிப்புக்கள் காணப்படுகின்றன. இவற்றால் சிவபெருமான் நிர்க்குணன் என்பது தெளிவு.

" குணங்கள் தாம் இல்லா இன்பமே " —கோயிற்றிருப்பதிகம் 4.

" சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க "

—திருவண்டப் பகுதி 40, 41.

நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க.

—திருவண்டப் பகுதி 49.

" இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை" —திருவண்டப்பகுதி 79.

" மாய வாழ்க்கையை மெய்யென் றெண்ணி
மதித்திடா வகை நல்கினன் " —சென்னிப் பத்து 5.

" இந்திர ஞால விடர்ப் பிறவித் துயர் " —திருப்படையாட்சி 3.

" மாயப் பிறப்பறுக்கும் மன்னனடி போற்றி "—சிவபுராணம் 14.

" இந்திர ஞாலம் போல வந்தருளி " —கீர்த்தித் திருவகவல் 94.

" பொய்யாய செல்வத்தே " —திருக்கோத்தும்பி 17.

" புவனியிற் போய்ப் பிறவாமையில் நாள்நாம்
போக்குகின்றோம் அவமே இந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்க "

—திருப்பள்ளியெழுச்சி 10.

ஞானத்தாலே தான் முத்தி கிடைக்கும் என்பதும் சிவ பெருமான் ஞான ஸ்வரூபன் என்பதும் அடியிற் காணும் திருவாசகப் பகுதிகளிலே கூறப்படுகின்றன.

" சிந்தை தனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட "

—கண்டபத்து 1.

'சிவமாக்கி யெனையாண்ட' என்றது அத்வைதக் கொள்கையான ஜீவ ப்ரும்ம அபேதத்தையும் தெரிவிக்கிறது.

" சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட "

—அச்சோப் பதிகம் 1.

இங்குள்ள 'சிவமாக்கி யெனையாண்ட' என்பதும் ஜீவ ப்ரும்ம அபேதத்தைத் தெரிவிக்கிறது.

" மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச் சுடரே " —சிவபுரா. 38.

" அறிவாந் தேற்றனே, தேற்றத் தெளிவே " —சிவபுரா. 81, 82.

" பொய் கெட்டு மெய் யானார் " —சிவபுராணம் 86.

இங்கு, ஞானத்தால் மாயம் கெட்டு, பரமார்த்த ஸத்ய மாகிய பரம்பொருளானார் என்று கூறப்பட்டிருக்கிறது. மெய் = பாரமார்த்திக ஸத்யம்.

'சிவனும் பரம்பொருளும் வேறல்ல' என்பது அத்வைத சித்தாந்தம். அதை விளக்கும் திருவாசகப் பகுதிகள்:—

" ஈசனே நீயல்லதில்லை இங்குமங்கும் என்பதும்
பேசி னேனோர் பேதமின்மை " —திருச்சதகம் 78.

" பேத மில்லாதோர் கற்பளித்த " —திருக்கழுக்குன்றப் பதிகம் 6.

" பேதங் கெடுத்தருள் செய் பெருமை " —திருவார்த்தை 7.

வான்கெட்டு மாருதமாய்ந் தழனீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
கூன்கெட் டுயிர்கெட் டுணர்வு கெட்டென் னுள்ளமும் போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ ?

—திருத்தெள்ளேணம் 18.

சிவமானவாபாடித் தெள்ளேணங் கொட்டாயோ

—திருத்தெள்ளேணம் 4.

'பரம்பொருள் நிர்க்குணமானது' என்பது அத்வைதக் கொள்கை.

" ஒருநாமம் ஓருருவம் ஒன்று மில்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ "

—திருத்தெள்ளேணம் 1.

" போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே "

—சிவபுராணம் 77.

இதர மதத்தினர் பரம்பொருளை ஸகுணமாகக் கூறுகின்றனர். "குணத்தோடு கூடியவை யெல்லாம் இந்திரிய விஷயங்களே" என்ற நியதிப்படி, அவர்கள் மதத்தில் கூறப்படும் பரம்பொருள் இந்திரிய விஷயமாய் விடுகிறது. திருவாசகத்திலோ, 'சிவபெருமான் இந்திரியங்களுக்கு விஷயமாகாதவன்', 'அளவைகளுக்குக் கட்டுப்படாதவன்' என்ற குறிப்புக்கள் காணப்படுகின்றன. இவற்றால் சிவபெருமான் நிர்க்குணன் என்பது தெளிவு.

" குணங்கள் தாம் இல்லா இன்பமே " —கோயிற்றிருப்பதிகம் 4.

" சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க "

—திருவண்டப் பகுதி 40, 41.

நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க.

—திருவண்டப் பகுதி 49.

" ஒற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்
துற்றவர் வருந்த வுறைப்பவர்க் கொளித்தும்
இத் தந்திரத்திற் காண்டு மென்றிருந்தோர்க்
கத் தந்திரத்தி னவ்வயி னொளித்தும் "

—திருவண்டப் பகுதி 128—132.

" உரு மூன்றுமாகி யுணர்வரிதா மொருவனுமே"—திருப்பூவல்லி 6.

" உரையுணர் விறந்து நின்றுணர்வதோ ருணர்வே "

—கோயிற்றிருப்பதிகம் 3.

'உரு மூன்றுமாகி' என்பது, ஸகுணோபாஸனையில் மூர்த்திகளுக்குள் வேறுபாடில்லை என்பதைத் தெரிவிக்கிறது.

" யாருன்னை யறியகிற் பாரே " —கோயிற் றிருப்பதிகம் 7.

" அருவா மொருவனே சொல்லுதற்கரிய ஆதியே "

—கோயிற்றிருப்பதிகம் 8.

" மன வாசகங் கடந்தான் " —உயிருண்ணிப்பத்து 7.

" சொல்லற் கரியானை " —சிவபுராணம் 91.

" தேவர் கோவறியாத தேவ தேவன் " —திருச்சதகம் 30.

" அரியொரு பிரமற் களவறி யாதவன் "

—கீர்த்தித் திருவகவல் 115.

" அளவியை யார்க்கும் அறிவரி யோன் " —திருக்கோவை 10.

சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்து மென்சிந்தையுள்ளு
முறைவானுயர் மதிற்கூடலி னாய்ந்த வொண்டீந் தமிழின்
றுறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச் சூழல்புக்கோ
விறைவா தடவரைத் தோட்கென் கொலாம்புகுந் தெய்தியதே.

—திருக்கோவை 20.

கோம்பிக் கொதுங்கிமே யாமஞ்ஞை குஞ்சரங்கோ ளிழைக்கும்
பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கப் பணைமுலைக்கே
தேம்பற் றுடியிடை மான்மட நோக்கி தில்லைச் சிவன்று
ளாம்பொற் றடமலர் சூடுமென் னாற்றல கற்றியதே.

—திருக்கோவை 21.

பச்சோந்தியாகிற விஷயத்துக்குத் தூரியமாகிற மயிலானது தான் சுமர்த்தா யிருந்தும், தன்னைப் பாராமல் தன் கண்ணைக்

கொடுத்துவிட்டது ; தன்னைப் பார்த்தால் கொடாது. தன் வியாபகத்தைப் பார்த்தபோது, தன்னிச்சை யென்று தெரிந்தது. இது தன் னிச்சையென்று பார்க்கின்றதற்கு வினை தேவையில்லை. மயிலானது குஞ்சரத்தையுங் கொல்லும்படியான விஷமுள்ள பாம்பைப் பிடித்து விழுங்குஞ் சக்தியுள்ளதாகியும், பெரிய ஜந்துவாகியு மிருந்தும், சிறிய ஜந்துவாகிய பச்சோந்தியைக் கண்டவுடனே, (தன்னைப் பார்த்தால் கண்ணைக் கொடாது) தன்னைப் பார்க்காமல் அதற்குப் பயந்து சமீபத்திற் சென்று கண்ணைக் காட்டியவுடனே, அது கொத்துகின்றது. எப்போது கண்ணைக் கொடுத்ததோ, அப்போதே தன் பலங் குறைந்துவிட்டது. அதுபோலத் துரியமென்னும் மயிலானது சத்தாமாத்திரமாகியும் அவஸ்தாத் திரயம் முதலியவைகளைச் சாக்ஷியாக விருந்து அறியுஞ் சக்தியுள்ளதாகியு மிருந்தும், அசத்தாகியும் அல்பமாயு மிராநின்ற விஷயத்தைப் பார்த்தவுடன், (தன்னைப் பார்த்தால் தனது ஞானங் கெடாது) அங்ஙனந் தன்னைப் பார்க்காமல் தன் கண்ணாகிய ஞானத்தைப் பச்சோந்தியாகிற விஷயத்திற்குக் கொடுத்துத் தனது வியாபக விளக்கத்தையும் மறந்துவிட்டது. ஆதலால் விஷய வாசனையி லறிவைச் செலுத்தாமல், தனது ஞான விளக்கத்தை விடாதிருக்க வேண்டும்.

சுபம்



ஸ்ரீ

குருப்யோ நம:

# திருமந்திரமும் அத்வைதமும்

ஆ. ரா. மலையப்ப சாஸ்திரிகள், திருச்சிராப்பள்ளி

தேவர் குறளும் திருநான் மறைமுடியும்
மூவர் மொழியும் முனி மொழியும்—கோவைத்
திருவா சகமுந் திருமந் திரமும்
ஒருவா சகமென் றுணர்

என்பது ஔவைப் பிராட்டியின் திருவாக்கு.

திருக்குறள் முதலிய நூல்களின் கருத்தும், வேதாந்தத்தின் கருத்தும் ஒன்றே என்று இப்பாடல் தெரிவிக்கிறது.

தாயுமானவர் என்னும் ஞானி ச்ரேஷ்டர்,

வேதமுடன் ஆகம புராணமிதி காசமுதல் வேறுமுள கலைகளெல்லாம்
மிக்காக வத்துவித துவிதமார்க் கத்தையே விரிவாயெடுத் துரைக்கும்
ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை உண்டுபணு ஞானமாகும்
ஊகமனுபவ வசனம் மூன்றுக்கு மொவ்வுமீ துபயவாதிகள் சம்மதம்

என்று கூறுகிறார். இந்த அருப்பவி கூறுகிறபடி, உலகிலுள்ள உயர்ந்த நூல்கள் யாவும் அத்வைத மார்க்கத்தையே கூறுகின்றன என்பது தெளிவு. 'திருமந்திரம்' என்னும் தெய்வத் திருநூலுக்கும் இந்த நியதி பொருந்தும். அத் திருமந்திரத்தில் விளங்கும் அத்வைதக் கருத்துக்களை ஒருவாறு எடுத்துக் காட்டுவதே இந்த வியாஸத்தின் நோக்கம்.

நூலின் சிறப்பு :—'திருமூலர்' என்னும் தத்துவஞானி மூவாயிரம் ஆண்டுகளுக்குமேல் நிஷ்டையில் இருந்தார். ஆண்டுக்கொருமுறை நிஷ்டையிலிருந்து எழுந்து ஒரு பாட்டுப் பாடுவார். அதைச் சீடர்கள் குறித்துக்கொள்வார்கள். உடனே, திருமூலர் மறுபடியும் நிஷ்டையில் ஆழ்ந்துவிடுவார். இதனால், இந்நூலில் மூவாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்கள் இருக்கின்றன.

இந்தத் திருமந்திரம் சைவத் திருமுறை பன்னிரண்டனுள், பத்தாந் திருமுறையாக இருக்கிறது. இந்நூல், 9 தந்திரங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. காரணம், காமிகம் முதலிய ஆகமங்கள் இவ் வொன்பது தந்திரங்களுள்ளும் அடங்கியிருக்கின்றன என்று கூறுகிறார்கள்.

திருமந்திரம் ஐந்தாந் தந்திரத்தில், சுத்த சைவம், கடுஞ் சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம் என்றும் நான்கு சைவங்கள் கூறப்படுகின்றன. இவற்றுள் சுத்த சைவமும், கடுஞ் சுத்த சைவமுமே சிறந்தவை. இவற்றிற்கும் வேதாந்தத்திற்கும் வேறுபாடில்லை என்று திருமூலர் கூறுகிறார். சுத்த சைவம்,

கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்
முற்பத ஞான முறைமுறை நண்ணியே
தொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவ சித்தாந்தரே. —சுத்த சைவம் 3.

[துரிசு அற்று - மாயை நாசமடைந்து; தற்பரம் - சாந்தோக்ய உபநிஷத்திலுள்ள மஹா வாக்கியத்தி லமைந்த 'தத்' என்னும் சொல்லால் குறிக்கப்படும் பொருள். ஞானத்தைப் பெற்று, மாயை நாசமடைந்து, ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றுபடுதல் என்பது அத்வைத மதத்திற்கே சிறப்பானது.]

வேதாந்தம் சுத்தம் விளங்கிய சித்தாந்த
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற காட்சியர்
பூதாந்த வேதாந்த மாகப் புனஞ்செய்ய
நாதாந்த பூரணர் ஞான நேயத்தரே. —சுத்த சைவம் 4.

என்பன சுத்த சைவத்திலிருக்கும் மந்திரங்களில் இரண்டு. பின் பாடலில் வேதாந்தம் சுத்தம் என்று கூறப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

வேடங்கடந்து விகிர் தன்றன் பான்மேவி
ஆடம்பர மின்றி ஆசாபாசஞ் செற்றுப்
பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்படச்
சாடுஞ்சிவ போதகர் சுத்த சைவரே. —கடுஞ் சுத்த சைவம் 1.

[பாசம், பசுத்துவம் நீங்கப் பதித்வம் ஏற்படுமென்பது சந்தாளுசாரியார் முதலிய சைவ சித்தாந்திகளின் கருத்து. "மேற்கூறியவை நாசமடைய முத்தி ஏற்படுகிறது" என்பது வேதாந்திகள் கொள்கை. இந்தப் பாட்டில் "பாழ்பட"

என்று கூறப்பட்டிருத்தலால், சந்தானசாரியார் கருத்துப்படி 'நீக்கம்' என்பதில்லை. எனவே, திருமூலர் குறிப்பிடுவது வேதாந்தக் கொள்கையைத் தான் என்பது தெளிவு.]

நானென்றுந் தானென்றும் நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலாற்
றானென்று நானென்றுஞ் சாற்றகில் லேனே.

—கடுஞ் சுத்த சைவம் 4.

இந்த மந்திரம் வேதாந்திகள் கூறும் ஜீவ ப்ரும்ம அபேத மென்னும் அத்வைதக் கொள்கையைக் கூறுகிறது. இவ்வாறு உயர்ந்த சுத்த சைவ, கடுஞ் சுத்த சைவ சித்தாந்தங்களுக்கும் வேதாந்தத்துக்கும் வேறுபாடில்லை என்பதை மேலும் பல இடங்களிலே கூறுகிறார். அவற்றுள் சில வருமாறு :—

தானான வேதாந்தந் தானென்னுஞ் சித்தாந்த
மானத் துரியத் தணுவன் றனைக்கண்டு
தேனார் பராபரஞ் சேர்சிவ யோகமா
யான மலமற் றருஞ்சித்தி யாதலே.

—ஆறந்தம் 3.

[நானது வானேனென்னும் வேதாந்தமும், அதுநானேனென்னுஞ் சித்தாந்தமு மொன்றுதல் கெடாத துரியத்தில் (அகச் சமாதியில்) அணுவுக்கு மணுவாயுள்ள கூடஸ்த வறிவைத் தரிசித்தும் ஆனந்தமே வடிவாகியும், மகத்துக்கு மகத்தாகியும் எல்லாமா யல்லவுமாயுள்ள பிரும்மத்தைப் புறச் சமாதியிற் றரிசித்தும், மற்றெவ்வகை யேதுக்களினாலுங் கெடாத பஞ்ச மலங்களையுங் கெடுத்துச் சகச சமாதியி லரிய சிவஞானத்தை கைகூடுதலே.]

வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப
நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி
போதாந்த தற்பதம் போயிரண் டைக்கியஞ்
சாதா ரணஞ்சிவ சாயுச்சிய மாமே.

—ஆறந்தம் 23.

[வேதாந்தத்தில் தொம்பத வாச்சியார்த்தமாகப் பொருந்திய சீவன், நாதாந்தத்திற் பாச நீங்க விஞ்சிநின்ற நல்ல கூடஸ்தனென்னும் பெயரும், தற்பத லிலக்கியார்த்தப் பிருமமென்னும் பெயரும் போய், அசிபத லிலக்கியார்த்தத்தி லிரண்டினுக்கு

மைக்கியமென்று மியல்பாகப் பெற்றிருத்தலே சீவன் முத்தித் தன்மை யெனப்படும்.]

சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்
அவமவ மாகு மவ்வவ் விரண்டுஞ்
சிவமாஞ் சதாசிவன் செய்தொன்ற ஞல்
நவமான வேதாந்த ஞானசித் தாந்தமே. —ஆறந்தம் 24.

[சிவமே தானுதல் வேதாந்த சித்தாந்தங்களி னுணர்ச்சியின் பயனுகும்; ஏனைய நான்கந்தங்களையும் அவமாமென விடுத்து ஐக்கியமா முறைமையிற் சதாசிவனைப் பொருந்தாது போவானேல், அற்புதமான வேதாந்த சித்தாந்த ஞானக் கண் மிகவும் பயனற்றனவாகும்.]

சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலாற்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே. —ஆறந்தம் 25.

[சித்தாந்தத்திலுஞ் சீவன்முத்தி கைகூடலால் அச் சித்தாந்தத்தில் வேதத்தை யனுசரித்துச் சோகம்பாவனை செய்து நிற்பவர் சீவன்முத்தி யடைந்தவ ராவார்; சித்தாந்தமு வேதாந்தமுஞ் செஞ்சொலாற் சிவத்தி லைக்கியஞ் செப்புவன வாதலால், சித்தாந்தம் வேதாந்த மிரண்டும் பக்குவர்க்குச் சிவத்தை தன்னில் அபேதமாகத் தெரிசிப்பிக்கும்.]

சிவனைப் பரமனுட் சீவனுட் காட்டும்
அவமற்ற வேதாந்த சித்தாந்த மானு
னவமுற் றவத்தையின் ஞானஞ் சிவமாம்
தவமிக் குணர்ந்தவர் தத்துவத் தோரே. —ஆறந்தம் 26.

[குற்றமற்ற வேதாந்த சித்தாந்தமானது அத்துவித சிவத்தைச் சீவேசருக்குள் விட்டுவிடாத விலக்கணையாற் காட்டும்; அது மேலான துரியாவத்தையில் அறிவே சிவமென்னும் பொருளாது, மிக்க தவப்பேற்றினு லதனை யுணர்ந்தவர்க ளுண்மை ஞானிக ளாவார்கள்.]

வேதமோ டாகம மெய்யா மிறைவனூ
லோதுஞ் சிறப்பும் பொதுவுமென் றுள்ளன
நாத னுரையவை நாடிலிரண் டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே. —ஆறந்தம் 28.

[வேதங்களோடு ஆகமங்களுஞ் சிவபெருமானுற் சொல்லப் பட்டவைகளே. அவைக ளதி தீவிர பக்குவர்க்குரிய ஞானத்தை யறிஞராற் சொல்லுஞ் சிறப்பென்றும், ஏனை, அபக்குவர்க்குரிய சரியை, கிரியை, யோகங்களைப் பொதுவென்றுங் கொண்டுள் ளன. கடவுள் வாக்கியமாகிய வவ்விரண்டினது சித்தாந்தமும் அனுபவ ஞானிகட் கத்துவிதமே யாகும். அதனைத் தாந்திரிக மாயாவதிகளாகிய வறிவிலார் துவிதமெனக் கொள்ளா நிற் பர்கள்.]

மன்னிய சோகமா மாமறை யாளர்தஞ்
சென்னிய தான சிவோகமா மீதெ ன்ன
வன்னது சித்தாந்த மாமறை யாய்பொரு
டுன்னிய வாகம நூலெனத் தோன்றுமே. —ஆறந்தம் 34.

நிலைபெற்ற சோகம்பாவனையையுடைய (அந்தணர்களினது) வேதாந்திகளினது முடிந்த பொருள் சிவோகமாம். இதுவே நமது முடிபுமெனக் கொண்ட வனுபவஞ் சித்தாந்தமாகும். அதனற் பெருமை வாய்ந்த வேதத்தி லாராய்ந்து தெளிந்த மெய்ப் பொருளையே தன்னிடத்திலுமுள்ள வாகம நூலெனச் சிறப்புற்று விளங்கும்.

முதலாகும் வேத முழுதா கமமப்
பதியான வீசன் பகர்ந்த திரண்டு
முதிதான வேத முறைமுறை யாலமர்ந்
ததிகாதி வேதாந்த சித்தாந்த மாகவே. —ஆறந்தம் 35.

[வேத முதலிற் றோன்றியதாகும்; சிறிதும் வேதத்தோடு முரண்படாத வாகம மதன் பின்னர் தோன்றியதாகும்; இவ்விரண் டையும் பதிப்பொருளாகிய விறைவனே சொல்லியதாகும்; புண்ணியர்க ளிடத்தில் விருப்பமுள்ள வேதமானது, அவரவரது பக்குவ தார தம்மியங்களை யுணர்ந்து மூன்று காண்டங்களையும் பூருவஞ் சித்தாந்தமென்று மிரண்டு நியமங் காரணமாக வுணர்த்தி நின்று, கடைசியி லெவற்றினு முடிவான வேதாந்த சித்தாந்தமாகவே முடித்துவிடும்.]

வேதத்தை ஓத அதிகாரமுள்ளவர்களுக்குப் பயன்படுவது வேதாந்தம். அத்தகைய அதிகார மில்லாதவர்களும் பயன் பெறுவதற்காக ஏற்பட்டதே (ஆகமாந்தம்) சைவ சித்தாந்தம் ஆகும்.

சைவ மார்க்கம் நான்கினுள், சுத்த சைவ, நடுஞ் சுத்த சைவ மார்க்கத்தைக் கண்டவர்கள் வேதாந்திகள் என்று முன்பு கூறப்பட்டது. அப்படியில்லாமல் அசுத்த சைவராயும், மார்க்க சைவராயும் இருப்பவர் சாதாரண சைவர் என்று திருமூலர் சாற்றுகிறார். வேதாந்தி என்ற சொல்லுக்குப் பொருளைத் திருமூலர் மேலும் விளக்குகிறார் :—

வேதாந்தங் கண்டோர் பிரம்ம மித்தியாதரர்,
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள்
வேதாந்த மில்லாத சித்தாந்தங் கண்டுளோர்
சாதாரண மன்ன சைவ ருபாயமே. —மார்க்க சைவம் 9.

(பிரம்ம மித்தியாதரர் = "பிரம்மம், ஸத்யம்; ஜகத் மித்தியை" என்று கூறும் அத்வைதிகள்.)

இத்தகைய பிரம்ம மித்தியாதரரே வேதாந்திகள் என்று கூறுவதையும், இத்தகைய வேதாந்தி யில்லாதாரைச் சாதாரண சைவர் என்று கூறுவதையும் இதனால் அறிந்துகொள்ள முடிகிறது.

இந்தச் சாதாரண சைவ சித்தாந்தி செய்ய வேண்டுவ தென்ன ?

"வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்
வாழ்க்கைப் புலன்வழி மாற்றிச் சித்தாந்தத்து
வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே
தாழ்க்குந் தலையினேன் சற்சீட னாமே" —6 தந். பக்குவன் 13.

[இருவகைப் பற்றுக்களையு மொருங்கே விட்டொழியும் மார்க்கம் வேதாந்த மாதலால், அப்பற்றுக்களை விட்டொழிந்து, விட்ட பொருளின்மேல் புலன்வழிச் செல்லும் மனத்தைத் தடுத்து, அசுத்த சைவ, மார்க்க சைவ சித்தாந்தங்களில் விருப்பத்தை விட்டுவிட்டு, சிரேஷ்டனாகிய வேதாந்தியின் பாதத்தில் நமஸ்கரித்து அடிமையாகத் தக்கவனே சற்சீடனாவான்.]

இந்த மந்திரத்தினாலும் 'வேதாந்தமே சிறந்தது. வேதாந்தியே சிறந்தவன்' என்று கூறுகிறார் என்பது மிகத் தெளிவு.

உலகிலுள்ள எவ்வுயிர்களும், சர்வ துக்க நிவிருத்தியும் நித்யானந்த ப்ராப்தியும் பெற விரும்புவது இயற்கை. ஆனால், அவை, பொருளல்லாதவற்றைப் பொருளெனக் கொள்ளும்

மயக்கங் காரணமாக உண்டாகும் காமமும் வெகுளியும் உள்ள வரையில் உண்டாக மாட்டா; பொருளைப் பொருளாகவும், பொருளல்லாதவற்றைப் பொருளல்லாதவையாகவும் அறியும் அறிவு உதித்துக் காம வெகுளி மயக்கங்களை ஒழித்து, பிரம்ம ஞானம் அடைந்தால்தான் உண்டாகும். இதுவே முத்தி. இம் முத்திக்குச் சாதனமாயுள்ளது வேதம். இவ் வேதத்தின் வழி நின்கின்றவரே வைதிகர்: வைதிகர் வேதத்தோடு ஸ்மிருதி முதலியவற்றையும் பிரமாண நூற்களாகக் கொள்கின்றனர். இந் நூற்கள் கருமம், பக்தி, ஞானங்களைச் சொல்லுகின்றன. கர்மத்தால் சுவர்க்கம் முதலிய பதவியும், பக்தியினல் இஷ்ட தேவதா லோக ப்ராப்தியும் உண்டாகும். பத ப்ராப்திகளெல்லாம் அழியும் நிலைமையை உடையன; ஆதலால், அதி தீவிரமுள்ள முமுக்ஷுக்கள் அவற்றை விரும்புவதில்லை. அவர்கள் ஞானத்தையே விரும்புவர்.

ஞானம், பேத ஞானம், அபேத ஞானம் என்று இரண்டு வகைப்படும். எங்கெங்கே பேதங் காணப்படுகிறதோ, அங்கங்கு துவைதங் காணப்படுகிறது. துவைதமுள்ள விடத்துத் துக்கம், காரியம், கண்டத்துவம், நிலையாமை, அசத்தியத்துவம் ஆகியவை காணப்படுகின்றன. துக்கமுள்ளவிடத்து அஞ்ஞானம் இருக்கிறது. ஆதலால், பேத ஞானத்தால், சர்வ துக்க நிவிருத்தியும், நித்தியானந்த பிராப்தியுமான முத்தி உண்டாகுமென்று சொல்லமுடியாது.

அபேத ஞானத்தால், மேலே கூறிய குற்றம் ஒன்றும் ஏற்படாது. எனவே, அத்தகைய அபேத ஞானத்தால் சர்வ துக்க நிவிருத்தியும், நித்யானந்த ப்ராப்தியுமான முத்தி யுண்டாகிறதென்று சொல்வதில் ஆக்ஷேபமே யில்லை. இவ்வாறு அபேத ஞானத்தால் பெறும் முத்தியே ‘ஸாக்ஷாத் முத்தி’ என்று கூறப்படுகிறது.

கர்மம், பக்தி முதலியன ஸாக்ஷாத்தாக முத்தியைக் கொடுக்காதபோதிலும், முத்திக்கு நேர் சாதனமான அபேத ஞான முண்டாவதற்குச் சாதனமா யிருக்கின்றன.

ஒன்றான பரம்பொருளே எல்லாமாய்த் தோன்றுகிறது என்பது அத்வைதக் கொள்கை. மண் கடமாயும் தோன்று

கிறது; கடமல்லாமலும் இருக்கிறது. பொன் பூஷணமாயும் தோன்றுகிறது; முழுப் பொன்னுகவும் இருக்கிறது. மண் காரணம்; கடம் காரியம். பொன் காரணம்; பூஷணம் காரியம்.

இவற்றைப்போல், காரணமான பரம்பொருள் காரிய ரூப உலகமாகவும் தோன்றுகிறது. "எல்லாமாய் அல்லவுமாய்" என்ற ஆன்றோர் வாக்கு இங்கு அறியத்தக்கது.

இந்த விஷயத்தைச் சிறந்த உதாரணங்களைக் கொண்டு திருமூல நாயனர் திருமந்திரத்தில், மிகவும் லளிதமாய்க் கூறுகிறார்.

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை;
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம். —பராவத்தை 22.

'அத்துவித உண்மை' என்னும் நூலின் ஆசிரியர் இந்தப் பாடலுக்கு பாஷ்யம் எழுதுகிறவர்போல,

மரத்தை நோக்கின் மதகரியு மறைந்து தோன்றுமதை நோக்கின்
மரத்தை மறைத்துத் தான்விளங்கும் வாறுபோலச் சகமுழுதும்
பரத்தை நோக்கினதின் மறைந்து பரமாய் விளங்குஞ் சகநோக்கில்
பரத்தை மறைத்துத் தான்விளங்கும் பரமே யனைத்து மாதலினல்

என்று கூறிப் பொருள் விளக்குகிறார்.

பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்;
தன்னை மறைத்தது தன் கர ணங்களாம்
தன்னின் மறைந்தது தன் கர ணங்களே. —பராவத்தை 21.

என்னும் மந்திரமும் மேற்கூறிய மந்திரத்தின் கருத்தைக் கொண்டதா யிருக்கிறது.

"ஒன்றான பரம்பொருளே எல்லாமாய்த் தோன்றுகிறது" என்ற இதே கருத்தைத் தெரிவிக்கும் திருமந்திரங்கள் வருமாறு:—

தானே படைத்திடும் தானே காத்திடும்
தானே துடைத்திடும் தானே மறைத்திடும்
தானே யிவைசெய்து தான்முத்தி தந்திடும்
தானே வியாபித் தலைவனு மாமே. —திருவருள் வைப்பு 18.

உணர்வு மவனே யுயிரு மவனே
புணர்வு மவனே புலனு மவனே
இணரு மவன் றன்னை யெண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றனே. —சர்வ வியாபி 10.

நீரு நிலனும் விசும்பங்கி மாருதத்
தூரு முடம்புறு சோதியு மாயுளன்
பேரும் பராபரன் பிஞ்ஞக னெம்மிறை
ஊருஞ் சகல னுலப்பிலி தானே. —சர்வ வியாபி 20.

மாயை மறைக்க மறைந்த மறைப்பொருண்
மாயை மறைய வெளிப்படு மப்பொருண்
மாயை மறைய மறையவல்லார் கட்குக்
காயமு மில்லை கருத்தில்லை தானே. —சுத்தா சுத்தம் 3.

(ஞானிகள் சீவன்முத்தர் என்ற கருத்தும் இதில் கூறப் பட்டிருக்கிறது.)

கடங்கடந் தோறுங் கதிரவன் றேன்றில்
அடங்கிட மூடி லவற்றி லடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்
தடங்கிட நின்றது மப்பரி சாமே. —சிவாதித்தன் 2.

தானே விரிசுடர் மூன்றுமொன் றய்நிற்கும்
தானே அயன் மாலெனநின்று தாபிக்கும்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே. —சிவாதித்தன் 3.

மண்ணொன்று தான்பல நற்கல னயிடும்
உண்ணின்ற யோனிகட் கெல்லா மொருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணு
அண்ணலுமவ் வண்ண மாகி நின்றனே. —நின்மலாவத்தை 48.

தானே திசையொடு தேவருமாய் நிற்குந்
தானே வடவரை யாதியுமாய் நிற்குந்
தானே யுடலுயிர் தத்துவமாய் நிற்குந்
தானே யுலகிற் றலைவனு மாமே. —அணைந்தோர் தன்மை 11.

"உலகத் தோற்றம் உண்மை யன்று" என்பதற்கு ஆதாரங்கள் :—

ஒன்றது வாலே யுலப்பிலி தானகி
நின்றது தான்போல் உயிர்க் குயிராய்நிலை

துன்றி யவையல்ல வாகுந்துணை யென்ன
நின்றது தான்விளை யாட்டென்று நேயமே.

—திருவருள் வைப்பு 20.

ஆயும் பொய்ம் மாயை யகம்புற மாய்நிற்கும்
வாயு மனமுங் கடந்த மயக்கறின்
தூய வறிவு சிவானந்த மாகிப்போய்
வேயும் பொருளாய் விளைந்தது தானே. —பராவத்தை 7.

ஐயைந்து மட்டுப் பகுதியு மாயையும்
பொய்கண்ட மாமாயை தானும் புருடன்கண்
டெய்யும் படியா யெவற்றுமா யன்றாகி
உய்யும் பராவத்தை யுள்ளுறல் சுத்தமே. —பராவத்தை 26.

பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைந்தென்
விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்
பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் சுருக்கும்
அருத்தமு மத்தனை யாய்ந்துகொள் வார்க்கே.

—ஐந்திந்திரிய மடக்கு முறைமை 6.

மாயா வுபாதி வசத்தாகுஞ் சேதனத்
தாய குருவரு ளாலே யதிற்றாண்ட
ஓயு முபாதியோ டொன்றியொன் றாதுயிர்
ஆய துரியம் புகுந்தறி வாகவே.

—சீவன் 4.

'சீவனும் பரம்பொருளும் வேறல்ல' என்பது வேதாந்தத்தில் சிறந்ததொரு கொள்கை.

சீவ னெனச்சிவ னென்னவே றில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே.

—போதன் 1.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளம் புலனைந்துங் காளா மணிவிளக்கே.

—சிவ பூசை 1.

அறிவொன்றி லாதன வையேழு மொன்றும்
அறிகின்ற வென்னை யறியா திருந்தேன்
அறிகின்றாய் நீயென் றருள்செய்தார் நந்தி
அறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே.

—மத்திய சாக்கிராவத்தை 15.

சிவன்சத்தி சீவன் செறுமல மாயை
அவஞ்சேர்த்த பாச மலமைந் தகலச்
சிவன்சத்தி தன்னுடன் சீவனார் சேர
அவஞ்சேர்த்த பாச மணுககி லாவே. —சூக்கும பஞ்சாக்கரம் 2.

அறிவறி யாமை நீவி யவனே
பொறிவா யொழிந் தெங்குந் தானான போதன்
அறிவா யவற்றினுட் டானா யறிவின்
செறிவாகி நின்றவச் சீவனு மாமே. —அறிவுதயம் 9.

நீயது வானா யெனநின்ற பேருரை
யாயது நானானே னென்னச் சமைந்தறச்
சேய சிவமாக்குஞ் சீர்நந்தி பேரரு
ளாயது வாயனந் தானந்தி யாமே. —தத்துவமசி வாக்கியம் 10.

ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய விட்டு விடாத விலக்கணைத்
தாருப சாந்தமே தொந்தத்தசி யென்ப
வாகிய சீவன் பரன்சிவ னாமே. —தத்துவமசி வாக்கியம் 3.

(தொந்தத்தசி = த்வம், தத் அசி என்னும் மஹா வாக்கியத்தி லடங்கிய பதங்கள்.)

ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய வவ்விட் டாகாய முபாதானம்
ஏகிய தொந்தத் தசியென்ப மெய்யறிவு
ஆகிய சீவன் பரன்சிவ னாமே. —முச்சூனிய தொந்தத்தசி 6.

தானவ னாக வவனேதா னாயிட
வான விரண்டி லறிவன் சிவமாகப்
போனவ னன்பிது நாலா மரபுறத்
தானவ னாகுமோ ராசித்த தேவரே. —அருச்சனை 9.

தான்வரை வற்றபின் னுரை வரைவது
தானவ னானபின் னுரை நினைவது
காமனை வென்ற கண்ணுரை யுகப்பது
தூமொழி வாசகஞ் சொல்லுமி னீரே. —வரையுரை மாட்சி 1.

நானென நீயென வேறில்லை நண்ணுதல்
ஊனென வூனுயி ரென்ன வுடனின்று
வானென வானவர் நின்று மனிதர்கள்
தேனென வின்பந் திளைக்கின்ற வாறே. —சம்பிரதாயம் 11.

நானென்றுந் தானென்று நாடினே னாடலு
நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பது

நானென்ற ஞான முதல்வனே நல்கினன்
நானென்று நானு நினைப்பொழிந் தேனே. —ஞானோதயம் 8.

நின்றவிச் சாக்கிர நீடுரி யத்தின்
மன்றனு மங்கே மணஞ்செய்ய நின்றிடும்
மன்றன் மணஞ்செய்ய மாயை மறைந்திடும்
அன்றே இவனு மவன் வடிவாமே. —பராவத்தை 9.

தானே சிவமான தன்மை தலைப்பட
ஆன மலமு மப்பாச பேதமு
மான குணமும் பரான்மா வுபாதியும்
பானுவின் முன்மதி போற் படராவே. —நின்மலாவத்தை 11.

தானவ னாகும் சமாதிகை கூடினல்
ஆன மலமறு மப்பசுத் தன்மை போம்
ஈனமில் காய மிருக்கு மிருநிலத்
தூனங்க ளெட்டு மொழிந்தொன்று வோர்கட்கே.
—நின்மலாவத்தை 17.

கருட னுருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவி னுருவங் குறித்தவப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. —ஞானகுரு தரிசனம் 4.

அவனும் அவனும் அவனை யறியார்
அவனை யறியி லறிவானு மில்லை
அவனும் அவனும் அவனை யறியில்
அவனும் அவனும் அவனிவ னாமே.
—சம்பிரதாயம் 12.

தானவ னாகிய தற்பரந் தாங்கினேன்
ஆனவை மாற்றிப் பரமத் தடைந்திடும்
ஏனை யுயிர்வினைக் கெய்து மிடஞ்சென்றும்
வானு நிலனும் புகுந்தும் வருந்துமே. —உடலிற் பஞ்ச பேதம் 13.

தானவ னாகிய ஞானத் தலைவனை
வானவ ராதியை மாமணிச் சோதியை
ஈரமில் ஞானத் தின்னருட் சத்தியை
ஊனமி லாடனை யூனிடைக் கண்டதே. —நின்மலாவத்தை 21.

தொம்பதந் தற்பதந் தோன்று மசிபதம்
நம்பிய சீவன் பரஞ்சிவ னய்நிற்கும்
அம்பத மேலைச் சொருபமா வாக்கியஞ்
செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே. —முப்பதம் 5.

தொம்பதந் தற்பதஞ் சொல்லு மசிபதம்
நம்பிய முத்துரி யத்துமே னுடவே
யும்பத முப்பத மாகு முயிர்பரன்
செம்பொரு ளான சிவமென லாமே. —தத்துவமசி வாக்கியம் 6.

சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படுஞ்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. —சிவ தரிசனம் 1.

சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்
சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தங்
கத்துஞ் சிலுகுங் கலகமுங் கைகாணார்
சத்தம் பரவிந்து தானுமென் றெண்ணியே.

—அணைந்தோர் தன்மை 13.

அகன்றான கலிடமேழு மொன் றாகி
இவன்றா னெனநின் றெளியனு மல்லன்
சிவன்றான் பலபல சீவனு மாகி
நவின்றா னுலகுறு நண்பனு மாமே. —தோத்திரம் 30.

பெருநெறியான பிரணவ மோர்ந்து
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறியான திருகை யிருத்திச்
சொருபம தானோர் துகளில் பார்ப் பாரே.

—அந்தண ரொழுக்கம் 4.

அண்ண விருப்பிட மாரு மறிகிலர்
அண்ண விருப்பிட மாய்ந்து கொள்வார்களுக்
கண்ண லழிவின்றி யுள்ளே யமர்ந்திடும்
அண்ணலைக் காணி லவனிவ னாமே.

—கால சக்கரம் 27, ஞானகுரு தரிசனம் 5.

செற்றிடுஞ் சீவ வுபாதித் திறனேழும்
பற்றும் பரோபாதி யேழும் பகருரை
உற்றிடுங் காரிய காரணத் தோட்ற
அற்றிட வச்சிவ மாகு மணுவனே. —காரிய காரண வுபாதி 1.

(அணுவன் = சீவன்.)

சீவ துரியத்துத் தொம்பதஞ் சீவனார்
தாவு பரதுரி யத்தினிற் றற்பத
மேவு சிவதுரி யத்தசி மெய்ப்பத
மோவி விடுந்தத் துவமசி யுண்மையே.

—தத்துவமசி வாக்கியம் 1.

ஆருற கன்ற வணுத்தொம் பதஞ்சுத்த
மீருன தற்பத மெய்துப சாந்தத்துப்
பேரு கியசீவ னீங்கிப்பிர சாதத்து
வீருன தொந்தத் தசிதத்வ மசியே. —தத்துவமசி வாக்கியம் 2.

தானென் றவனென் றிரண்டென்பர் தத்துவந்
தானென் றவனென் றிரண்டற்ற தன்மையைத்
தானென் றிரண்டுன்னூர் கேவலத் தானவர்
தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே. —நிர்மலாவத்தை 45

'எல்லாம் ஆன்மா வானபடியால், எல்லாம் இரண்டற்ற ஒன்றே' என்ற ஞானத்தால் தான் முத்திபெற முடியும் என்பது அத்வைதக் கொள்கை. இதை விளக்கும் திருமந்திரச் செய்யுட் கள் வருமாறு :—

முத்திக்கு வித்து முதல்வன்றன் ஞானமே
பத்திக்கு வித்துப் பணிந்துற்றுப் பற்றலே
சித்திக்கு வித்துச் சிவபரந் தானுதல்
சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே. —உபசாந்தம் 1.

ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே. —ஞானம் 1.

'ஞானத்தால் தான் முத்தி சித்திக்கும்' என்று 'முத்திக்கு வித்து' என்னும் பாட்டில் உடன்பாட்டானும், பின் பாட்டில் 'ஞானத்தைத் தவிர மற்றவை முத்தியைத் தரமாட்டா' என எதிர்மறை முகத்தானும் கூறப்பட்டன.

தன்னை யறியா துடலைமுன் றானென்றான்
தன்னைமுன் கண்டான் றுரியந் தனைக்கண்டான்
உன்னுந் துரியமு மீசனோ டொன்றாக்காற்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானே. —கேவல சகல சுத்தம் 38.

தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமற் றானே கெடுகின்றான்
தன்னை யறியு மறிவை யறிந்தபின்
தன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே. —அறிவுதயம் 1.

முன்னை யறிவினிற் செய்த முதுதவம்
பின்னை யறிவினைப் பெற்று லறியலாம்
தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாகுமே. —நின்மலாவத்தை 15.

விஞ்ஞானத் தோர்க் காணவமே மிருதனு
எஞ்ஞானத் தோர்க்குத் தனுமாயை தானென்ப
அஞ்ஞானத் தோர்க்குக் கன்மந் தனுவாகும்
மெஞ்ஞானத் தோர்க்குச் சிவதனு மேவுமே.

—உடலிற் பஞ்ச பேதம் 15.

எல்லா மறியு மறிவுதனை விட்டு
எல்லா மறிந்து மிலாபமங் கில்லை
எல்லா மறிந்த வறிவினை நானென்னில்
எல்லா மறிந்த விறையென லாமே.

—வாய்மை 2.

எவ்வாறு காண்பா னறிவு தனக்கெல்லை
அவ்வா றருட்செய்வா னாதியான் றானும்
ஒவ்வாத மன்று ளுமைகாண வாடுஞ்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம்.

—உபதேசம் 18.

தானவ னாகித் தானைந்தா மலஞ்செற்று
மோனம தாமொழி யான்முத்த ராவதும்
ஈனமில் ஞானநு பூதியி லின்பமுந்
தானவ னுயற்ற லானசன் மார்க்கமே.

—சன்மார்க்கம் 5.

கருட னுருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற்
குருவி னுருவங் குறித்தவப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே.

—ஞானகுரு தரிசனம் 4.

அவனு மவனு மவனை யறியார்
அவனை யறியி லறிவானு மில்லை
அவனு மவனு மவனை யறியில்
அவனு மவனு மவனிவ னாமே.

—சம்பிரதாயம் 12.

நானென்றுந் தானென்றும் நாடினே னாடலும்
நானென்றுந் தானென்றி ரண்டில்லை யென்பது
நானென்ற ஞான முதல்வனே நல்கினான்
நானென்று நானும் நினைப்பொழிந் தேனே.

—ஞானோதயம் 8.

பெருநெறி யான பிரணவ மோர்ந்து
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறி யான கிரியை யிருந்து
சொருபம தானோர் துகளில்பார்ப் பாரே.

—அந்தண ரொழுக்கம் 4.

அண்ண லருளா லருளுஞ் சிவாகமம்
எண்ணிலி கோடி தொகுத்திடு மாயினும்
அண்ண லறைந்த வறிவறி யாவிடின்
எண்ணிலி கோடியும் நீர்மே லெழுத்தே.

—ஆகமச் சிறப்பு 8.

என்னை யறிந்திலே னித்தனை காலமும்
என்னை யறிந்தபின் ஏதும் அறிகிலேன்
என்னை யறிந்திட் டிருத்தலுங் கைவிடா
தென்னையிட் டென்னை யுசாவுகின் றேனே. —அறிவுதயம் 12.

முன்னை முதல்வினை யாட்டத்து முன்வந்தோர்
பின்னைப் பெருமலம் வந்தவர் பேர்த்திட்டுத்
தன்னைத் தெரிந்து தன்பண்டைத் தலைவன்றாள்
மன்னிச் சிவமாக வாரா பிறப்பே. —அறிவுதயம் 15.

அறிவிக்க வேண்டா மறிவற்றயர் வோர்க்கும்
அறிவிக்க வேண்டா மறிவிற் செறிவோர்க்கும்
அறிவுற் றறியாமை யெய்திநிற் போர்க்கே
அறிவிக்கத் தம்மறி வாலறி வோரே. —நிர்மலாவத்தை 24.

தத்துவ ஞானந் தலைப்பட் டவர்கட்கே
தத்துவ ஞானந் தலைப்பட லாய்நிற்குந்
தத்துவ ஞானத்துத் தானவ னாகவே
தத்துவ ஞானனந் தந்தான் தொடங்குமே. —நிர்மலாவத்தை 27.

தன்னை யறிந்து சிவனுடன் தானாக
மன்னு பதங்குண மாளும் பிறப்பறும்
பின்னது சன்முத்தி சன்மார்க்கப் பேரொளி
நன்னது ஞானத்து முத்திரை நண்ணுமே. —நிர்மலாவத்தை 28.

'இம்மையில் உடலை விடுவதற்கு முன்னதாகவே முத்தி கிடைக்கும்' என்று ஒப்புக் கொள்ளப்படுகிறது. இதுதான் ஜீவன்முத்தி. இது சிறந்த அத்வைதக் கொள்கை.

மலமில்லை மாசில்லை மானபி மானக்
குலமில்லை கொள்ளுங் குணங்களு மில்லை
நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே
பலமன்னி யன்பிற் பதித்துவைப் போர்க்கே.

—அணைந்தோர் தன்மை 1.

(பரம்பொருள் நிர்க்குணமானது என்பது அத்வைதக் கொள்கை: சீவனும் பரம்பொருளும் ஒன்றாய் விடுகிறபடியால், பரம்பொருளின் நிர்க்குணத்தன்மை ஜீவன்முத்தனிடமும் படிந்து விளங்குகிறது என்பதை இந்தப் பாட்டிலுள்ள 'குணங்களுமில்லை' என்ற தொடர் தெரிவிக்கிறது.)

ஒழிந்தேன் பிறவியுற வென்னும் பாசங்
கழிந்தேன் கடவுளு மானுமொன் றானேன்

அழிந்தாங் கினிவரு மாக்கமும் வேண்டேன்
செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே.
—அணைந்தோர் தன்மை 2.

சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்
சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தங்
கத்துஞ் சிலுகுங் கலகமுங் கைகாணார்
சத்தம் பரவிந்து தானுமென் றெண்ணியே.
—அணைந்தோர் தன்மை 13.

வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற்று
ஒத்துப் புலனுயி ரொன்று யுடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யர்களே. —உபதேசம் 9.

செயலற் றிருக்கச் சிவானந்த மாகும்
செயலற் றிருப்பார் சிவயோகந் தேடார்
செயலற் றிருப்பார் செகத்தொடுங் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்தியுண் டாமே.
—நிர்மலாவத்தை 16.

நினைப்பு மறப்பு மிலாதவர் நெஞ்சம்
வினைப்பற் றறுக்கும் விமல னிருக்கும்
வினைப்பற் றறுக்கும் விமலனைத் தேடி
நினைக்கப் பெறிலவன் நீளிய னாமே. —அணைந்தோர் தன்மை 14.

பெத்தமு முத்தியும் பேணுந் துரியமுஞ்
சுத்தவ தீதமுந் தோன்றாமற் றானும்
அத்த னருளென் றருளா லறிந்தபின்
சித்தமு மில்லை செயலில்லை தானே. —கேவல சகல சுத்தம் 29.

உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே. —வரையுரை மாட்சி 2.

மாடத்து ளானலன் மண்டபத் தானலன்
கூடத்து ளானலன் கோயிலுள் ளானலன்
வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சின்
மூடத்து ளேநின்று முத்திதந் தானே. —அவாவறுத்தல் 2.

ஆசை யறுமின்க ளாசை யறுமின்கள்
ஈசனோ டாயினு மாசை யறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே. —அவாவறுத்தல் 3.

சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்

சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலாற்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே. —ஆறந்தம் 25.

(இங்கு 'சீவன்முத்தி' என்ற தொடரே எடுத்தாளப்பட்டிருக்கிறது.)

"வியவஹார நிலையிலுங்கூட ஸகுண ப்ரும்மத்தை யுபாஸிக்கும்போது, சிவனுக்கும் திருமாலுக்கும் வேறுபாடில்லை" என்பது அத்வைதக் கொள்கை.

இந்த கருத்தமைந்த திருமந்திரச் செய்யுட்கள் வருமாறு:—

ஆதிப் பிரானு மணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யானுஞ்
சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியி லொன்றெனார்
பேதித் துலகம் பிணங்குகின் றார்களே.
— திரிமூர்த்திகளின் சேட்டகனிட்ட முறைமை 2.

சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
ஆதிக்கு ளாவ தறிகிலா தாதர்கள்
நீதிக்க ணீசன் நெடுமா லயனென்று
பேதித் தவரை யிகழ்ந்துகின் றாரே.
—திரிமூர்த்திகளின் சேட்டகனிட்ட முறைமை 8.

மலர்ந்த வயன்மா லுருத்திரன் மகேசன்
பலந்தரு மைம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே. —சிவலிங்கம் 4.

மாயனு மாகி மலரோ னிறையுமாய்க்
காயகன் றூட்டுக் கருமுத லானவன்
சேய னணியன் றித்திக்குந் தீங்கரும்
பாயமு தாகிநின் றண்ணிக்கின் றானே. —அறிவுதயம் 11.

தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்கும்
தானே அயன்மா லெனநின்று தாயிக்கும்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே. —சிவாதித்தன் 3.

நின்றனன் மாலொடு நான்முகன் றானாகி
நின்றனன் றானிலங் கீழொடு மேலென
நின்றனன் றானெடு மால்வரை யேழ்கடல்
நின்றனன் றானே வளங்கனி யாயே. —சர்வ வியாபி 13.

## 11

### வே. நாராயணன், சென்னை

சைவ சித்தாந்த நூல்களிலே முக்கியமானதாகத் திருமந்திரம் கொண்டாடப் பெற்றாலும், ஏனைய அநுபவ நூல்களிலே போல இதனுள்ளும் வேதாந்த மதமும் வேதாந்திகளின் பெருமையும் அத்வைத வுண்மைகளும் ஆங்காங்கு கூறப்பட்டுள்ளன. தொடக்கத்தில், தாம் திருவவதாரஞ் செய்ததின் கருத்தைக் கூறுவர்.

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யு மாறே. (81)

பிரும்ம சொரூபத்தையும் ஈசுவர சொரூபத்தையும் தமிழிலே விளக்க வந்த இவர், முதலிலே, பேதங் கூறுவோரை விளக்குகிறார்.

ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யானுஞ்
சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியில் ஒன்றெனார்
பேதித் துலகம் பிணங்குகின் றார்களே. (104)

உலகங்களை யெல்லாம் ஆக்கிக் காத்து அழிப்பான் ஒருவனே என்று வற்புறுத்துகிறார்.

ஒருவனு மேஉல கேழும் படைத்தான்
ஒருவனு மேஉல கேழும் அளித்தான்
ஒருவனு மேஉல கேழும் துடைத்தான்
ஒருவனு மேஉல கோடுயிர் தானே. (404)

'இப்படிப் படைத்தவனே அப் படைக்கப்பட்ட உலகமும் உயிரும்' என்பதை, 'அவ்வொரு வஸ்துவே உள்ளது; அதுவே இதெல்லா மாயிற்று' என்னும் அத்வைத வுண்மையை, இப் பாடலின் சிகரத்தில் வைத்துக் கூறுகிறார். இவ் வுண்மையை அதாவது, பிரும்மம் தானே எல்லாமாய் விரிந்தது என்பதைப் பல பாடல்களில் விரித்துரை செய்கிறார்.

தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே உடலுயிர் தத்துவ மாய்நிற்கும்

தானே கடல்மலை யாதியு மாய்நிற்குந்
தானே உலகில் தலைவனு மாமே. (412)

திக்குகள், தேவர்கள் முதலிய உயிர்கள், அவர்களுடைய உடல்கள், கடல் மலை முதலிய உயிரற்ற பொருள் ஆகிய எல்லாமும் அந்த ஈசுவரனே ஆயினும் அவர்களுக்கும் அவற்றிற்கும் அவனே தலைவனாய்த் தனித்து நிற்கிறான் என்கிறார். மீண்டும் அவர்,

மண்ணொன்று தான்பல நற்கல மாயிடும்
உண்ணின்ற யோனிகட் கெல்லாம் ஒருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணா
அண்ணலும் இவ்வண்ண மாகிநின் றானே: (440)

என்று, 'மண் ஒன்றே உண்மைப் பொருள்; பல பாண்டங்களாய் உருவும் பேரும் பெற்றுத் தோன்றுவது அம் மண்ணே' என்ற உவமானத்தால், அத்வைத உண்மையாகிய முதற் காரணத் தன்மையை விளக்குகிறார்; ஆனால் அந்த ஒன்றேயான பொருளை நாம் ஏன் காண்பதில்லை என்பதை விளக்குகிறார்; நாம் யார்? பலவாகக் காணும் தோற்றங்களே; கண் வெளித் தோற்றங்களைக் காணும்; ஆயினும், அது தன்னையே கண்டுகொள்ள முடியாது; அதுபோல, ஈசுவரனாகிய உலகமும் ஈசுவரனைக் காணமுடியாது; தன்னைக் காட்டிலும் வேறான வஸ்துவைத் தானே தான் காணமுடியும்? கண் கண்ணையே காணமுடியுமா? அதுபோலவே, அண்ணலும் தானேயாகிய உலகோரால் காண இயலாத தன்மை யுடையவன். இதை மீண்டும் வற்புறுத்துகிறார் கீழ்வரும் பாட்டிலே:

அவனும் அவனும் அவனை யறியார்
அவனை யறியில் அறிவானும் இல்லை
அவனும் அவனும் அவனை யறியில்
அவனும் அவனும் அவனிவ னாமே. (1789)

எவ்வளவு உயர்ந்த சீவனாயினும், பிரும்மத்தை அறிந்து கொள்ளமாட்டார்கள். அவனை அறிவதற்கு யத்தனித்தால், அவனே அறிவானும் அறிபொருளும் அறிவுமானபடியால் அறிவான் அறிபொருள், அறிவு என்ற முப்பொருளும் இல்லையாய் விடும்; அப்பொழுது அறிவும் இல்லை, அறிவானும் இல்லையன்றோ? அறிவு மயமான பிரும்மமே எஞ்சி நிற்பதாகும்.

ஆகவே, பிரும்மத்தை விசாரித்து அறியப் புகுந்தால், அவனும் அவளும் என்று பிரித்துக் கூறப்படுகின்ற உலகோர் அனைவரும் அவனேயான இவன் அதாவது சீவனேயான ஈசுவரனேயாம் என்று தெளிவாகக் கூறி அத்வைதத்தை நிலை நாட்டுகிறார்.

இந்த ஞான நிலையை எய்தி சீவன்முத்தனாயிருக்கும் சிவ ஞானியே அத்வைத வுண்மைக்கு நிதர்சனம் என்கிறார்.

எங்குஞ் சிவமா யருளா மிதயத்துத்
தங்குஞ் சிவஞானிக் கெங்குமாந் தற்பரம். (1909)

அந்தந்தப் பொருளுள் நின்று அவற்றை யெல்லாம் தன் மயமாகும்படி அவற்றுள் தோய்ந்துள்ள ஈசனே இங்கே இந்த ஞானியின் உடலுள் சீவனாயிராமல் எங்குமாய் நிற்கும் ஈசனே யாகின்றான்.

அங்காங் கெனநின்று சக்முண்ட வான்தோய்தல்
இங்கே யிறந்தெங்கு மாய்நிற்கும் ஈசனே. (1909)

'தனித்து நிற்பதால் தான் என்னப்படும் பிரும்மமே உலக மாக விரிந்ததை வெளிப்படுத்திக் காட்டும் முச்சுடராகி, உலகத் தைத் தோற்றுவித்த அயனாகவும் தாபிக்கும் மாலாகவும் தனித்து நின்று, உடல் வேறு பொருள் உயிர் வேறு பொருள் என்னுதபடி எல்லாமுமாகி நிற்கிறான்; ஞானமாகிய ஒளியும் அஞ்ஞானமாகி இருளும் அவனேயாம்' என்கிறார் கீழ்ப் பாட் டிலே :

தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்குந்
தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே. (2003)

இவ்வாறு தோன்றுகின்ற உயிர்கள் உண்மையோ தோற் றமோ என்றால், தோற்றமே என்கிறார்.

கடங்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்
தடங்கிட நின்றதும் அப்பரி சாமே. (2002)

கதிரவனது ஒளி ஒவ்வொரு கடத்தினுள்ளும் காணப் படுகின்றது. அதற்குள் காணப்படும் ஒளியை வேறு பிரித்து

அதனுள்ளே அடங்கி யிருக்கவேண்டும் என்று அந்தக் கடத்திற்கு மூடியிட்டு விட்டால், அவ்வாறு அதனுள் மட்டுமே அடங்கி விடுமோ அக் கதிரவனது ஒளி? அதுபோலவே, ஈசனை ஒருடலிலே மட்டும் அடங்கும்படி செய்ய இயலாது. அவனை ஓரிடத்திலே மட்டும் உள்ளவனாக மூடியிட்டுக் கொள்வதால் அவ்விடத்திலே அவன் காணப்படாது போவான்; எங்கும் வியாபித்துள்ளவனாக மூடி யிடாமற் கொண்டால் எவ்விடத்திலும் காணப்படுவான் என்று உவமையை விரித்துக் கூறி உண்மையை விளக்குகிறார். ஆதலின், சீவனும் சிவனும் ஒன்றே என்கிறார்.

சீவ னெனச்சிவ னென்னவே றில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே (2017)

என்ற பாடலில் சீவனைச் சிவனென்றும்,

அறிவாய் அறியாமை நீங்கி யவனே
பொறிவாய் ஒழிந்தெங்குந் தானான போதன்
அறிவாய் வற்றினுட் டானா யறிவன்
செறிவாகி நின்ற அச்சீவனு மாகுமே (2019)

என்ற பாடலில் சிவனையே சீவனென்றும் கூறுவதால், சீவேசுர அபேதத்தை நிலை நாட்டுகிறார். அறிவாகி, அறியாமை நீங்கிய சிவபெருமானே, பொறிவாய் ஐந்தும் இல்லாதவனே எங்கும் தானாக விரிந்தும் அறிவு மாயமே யாகிய சீவகோடிகளில் அறிவனான தன் தன்மை மாறாதவனாய் அவ்வவ் வுடல்களிலெல்லாம் செறிந்து நிற்கும் சீவர்களாகத் தோன்றுகிறான். சீவர்கள் ஆதியில் சிவனினும் வேறுபட்டவர்களாயிருந்து சிவனருளால் சிவனோடு ஒன்றுபவர் அல்லர்; சிவனே அச் சீவர்கள் அனைத்துமாகி அவற்றுள் அறிவாய் விளங்கிச் சிவனாகவே இருக்கிறான் என்னும் அத்வைத வுண்மை இப்பாடலிலும் நன்கு விளக்கப் பெற்றுள்ளது.

"முப்பத்தாறு தத்துவங்களாக வகுக்கப்பட்டவை அனைத்தும் அறிவில்லாத சடப்பொருளே. அவற்றின் வேறான பிரும்ம தத்துவமே சீவன்; இவ்வுண்மையை நந்தியாகிய குருவின் உபதேசத்தாலே உணர்ந்தேன்" என்கிறார் வேறொரு பாடலிலே;

அறிவொன் றிலாதன ஐயேழு மொன்றும்
அறிகின்ற என்னை அறியா திருந்தேன்
அறிகின்றாய் நீயென் றருள்செய்தார் நந்தி
அறிகின்ற நானென் றறிந்து கொண்டேனே. (2181)

குரு வருளாலே என்ன விளங்கிற்று என்று விளக்குகிறார் மற்றொரு பாடலிலே.

மாயா வுபாதி வசத்தாகுஞ் சேதனத்
தாய குருவருளாலே யதில் தூண்ட
ஓயும் உபாதியோ டொன்றினொன் றுதுயிர்
ஆய துரியம் புகுந்தறி வாகவே. (2014)

'சேதனத்தாய உயிர்கள் மாயா வுபாதியின் வசத்தவை யாம்; சேதனம் குருவருளாலே தூண்டப்பெற்றால் உபாதி ஓய்ந்துவிடும்; உபாதியோடு ஒன்றி யிருக்கும்வரை உயிர்கள் சிவனோடு ஒன்ற மாட்டா; உபாதி ஓய்ந்தபின் பலவாகத் தோன்றிய உயிர் துரிய நிலையுற்று அறிவாகவே விளங்கும்' என்பது இப்பாடலின் பொருள்.

"சற்குரு பிரும்மமாகவே விளங்குவான்; அவனுடைய முன்னிலையில் எல்லாம் பிரும்மமே என்னும் உண்மை வெளிப் படும்; தானே தன்னைப் பெறுதலே வேண்டுமென்ற உணர்ச்சி ஏற்படும்; தன் உடலை ஊனே என்று நினைந்து தன்னை அதி னின்றும் வேறுபட்டதாக ஓர்ந்து தன் தன்மை என்ன என்று உன்னித்து நோக்கினால், சற்குருவைப் போலவே தானும் பிரும் மமே என்னும் உண்மை விளங்கும்" என்கிறார் இப்பாடலிலே:

தானே யெனநின்ற சற்குரு சந்நிதி
தானே யெனநின்ற தன்மை வெளிப்படில்
தானே தனைப்பெற வேண்டுஞ் சதுர்பெற
ஊனே யெனநினைந் தோர்ந்துகொள் உன்னிலே. (2055)

மீண்டும் திருமூலர், 'சிவன் தன்னைச் சிவன் என்று அறி யாத வரையில் செத்துச் செத்துப் பிறப்பான்; தன்னைச் சிவன் என்று அறிந்தபோதே பிறப்பிலியாகிச் சிவனே யாவான்' என்று ஆத்ம ஞானத்தால் மோக்ஷ மென்னும் அத்வைத வுண் மையை விளக்குகிறார், பின்வரும் பாடல்களிலே:

தன்னை யறியா துடலைமுன் தானென்றான்
தன்னைமுன் கண்டான் துரியந் தனைக்கண்டான்

உன்னுந் துரியமும் ஈசனோ டொன்றாக்கால்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானே. (2264)

தானென் றவனென் றிரண்டென்பர் தத்துவம்
தானென் றவனென் றிரண்டற்ற தன்மையைத்
தானென் றிரண்டுன்னார் கேவலத் தானவர்
தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே. (2348)

அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றருள்செய்தான் நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே. (2357)

அறிவுக் கழிவில்லை யாக்கமும் இல்லை
அறிவுக் கறிவல்ல தாதாரம் இல்லை
அறிவே யறிவை யறிகின்ற தென்றிட்
டறைகின் றனமறை யீறுகள் தாமே. (2358)

பாசம் பயிலுயிர் தானே பரமுதல்
பாசம் பயிலுயிர் தானே பசுவென்ப
பாசம் பயிலப் பதிபர மாதலாற்
பாசம் பயிலப் பதிபசு வாகுமே. (2423)

சிவமாகி மும்மல முக்குணஞ் செற்றுத்
தவமான மும்முத்தி தத்துவத் தயிக்கியத்
துவமாகிய நெறி ஸோஹம் என்போர்க்குச்
சிவமாம் அமலன் சிறந்தனன் தானே. (2476)

பரம்பொருளே உபாதி பேதத்தால் சிவனும் சீவனுமாகின்றது என்னும் உண்மையை, பரம் என்னும் சொல்லை இடையில் வைத்து சிவனை முன்னும் சீவனைப் பின்னும் வைத்து இவை மூன்றும் ஒன்றே என்கிறார்.

இடனொரு மூன்றி லியைந்த வொருவன்
கடனுரு மவ்வுரு வேறெனக் காணுந்
திடமது போலச் சிவபர சீவர்
உடனுறை பேதமும் ஒன்றென லாமே. (2485)

"அப் பரம்பொருளே இல்லதும் உள்ளதுமாய் இவை யாவுமாய், இவையெல்லாம் அன்று என்றும் சூனியம் அன்று என்றும் சொல்லப்படுவதாய், ஒன்றே யன்றி வேறு அன்றாம் என்னும்படி உள்ளது; ஆனால் சொல்லால் விளக்கிச் சொல்ல வொண்ணாத தன்மையது என்று விரைவிலே உணர்ந்துகொண்

டால் எல்லா உயிருக்கும் ஒரே உயிராக அமைந்தது" என்றும், "சிவசீவர் மாயையை மேற்கொள்வதாலும் வசப்படுவதாலும் தோன்றுவர்; காரண காரியம் நீங்கப்பெற்று அழிவற்ற சாந்தா தீத நிலையிலே சீவன் சிவன் என்பது விளங்கும்" என்றும், இரண்டு பாடல்களால் விளக்குகிறார்.

இல்லதும் உள்ளதும் இயாவையுந் தானாகி
இல்லதும் உள்ளது மாய்அன்றும் அண்ணலைச்
சொல்லது சொல்லிடில் தூராதி தூரமென்
றொல்லை யுணர்ந்தால் உயிர்க்குயி ராகுமே. (2335)

தொழி விச்சை ஞானங்கள் தொல்சிவ சீவர்
கழிவற்ற மாமாயை மாயையி னாகும்
பழியற்ற காரண காரியம் பாழ்விட்
டழிவற்ற சாந்தாதீ தன்சிவ னாமே. (2334)

முடிவுரையாக, ஞானமே முத்தி யளிக்கும் அறநெறியும் சமயமுமாம் என்று கூறியுள்ளதைக் காட்டுவது பொருந்தும்.

ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே. (1467)

---

இக் கட்டுரையிலுள்ள பாடல்களின் எண்கள் சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பி லுள்ளவை.

ஸ்ரீ:

# ஒன்பதாந் திருமுறை பதினோராந் திருமுறைகளும் அத்வைத சித்தாந்தமும்

(வே. நாராயணன், சென்னை)

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்பதாந் திருமுறையும் பதினொராந் திருமுறையும் பல அடியார்களின் பாடல்களைக் கொண்டு தொகுக்கப்பட்டவை; இவர்களுட் சிலர் தேவாரம் பாடிய மூவருக்கும் முந்தியவர்; சிலர் பிற்காலத்தவர். இவர்கள் பாடிய பாடல்களிலே சிவபெருமானை யன்றி சிவ குமாரர்களாகிய விநாயகரும் ஷண்முகரும் ஆளுடை யரசாகிய அப்பரும் ஆளுடைப் பிள்ளையாராகிய சம்பந்தரும் துதிக்கப் பெற்றுள்ளனர். இவை பெரும்பாலனவும் துதி ரூபமாய் அமைந்து தத்துவத்தைப் போதிக்கவேண்டுமென்ற எண்ணமின்றி எழுந்தன வாதலால், இவற்றுள் தத்துவ விளக்கத்தைக் காண்பது அரிது. ஆயினும், அனுபவம் நிறைந்த இவர்களது சொற்கள் ஆங்காங்கு அத்வைத சித்தாந்தத்தை மெய்ப்பிக்கின்றவையாய் இருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

திருமாளிகைத் தேவர், 'இணங்கிலா ஈசன்' என்று தொடங்கும் திருவிசைப்பாவிலே "பேதவாதப் பிசுக்கரைக் காணுகண்; வாய் பேசாதப் பேய்களோடே" என்று சமணரைப் பழிக்கும் போது, அபேத வாதமே தம் மதம் என்பதை விளக்குகிறார். கருவூர்த் தேவரும் கங்கைகொண்ட சோளேச்சுரத்தானைப் பாடும்போது,

> சுருதிவா னவனும் திருநெடு மாலாம் சுந்தர விசும்பின் இந்திரனும்
> பருதிவா னவனும் படர்சடை முக்கட் பகவனும் அகவுயிர்க் கமுதாம்
> எருதுவா கனனும் எயில்கள் மூன்றெரித்த ஏறுசே வகனுமாம் பின்னும்
> கருதுவார் கருதும் உருவமாம் கங்கை கொண்ட சோளேச் சுரத்தானே

என்று அத்வைத சித்தாந்தத்திலுள்ள ஒன்றெனும் உண்மைக்குச் சான்று பகர்கிறார்.

நக்கீரதேவ நாயனாரும் அத்வைதத்தையே அனுபவ வாயிலாக உணர்ந்தவராய் 'கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி" யிலே (55.)

யானென்றுத் தானென் றிரண்டில்லை யென்பதனை
யானென்றுங் கொண்டிருப்ப னானாலும்—தேனுண்
டளிகடாம் பாடு மகன்கயிலை மேயான்
றெளி கொடான் மாயங்கள் செய்து

என்று அவனுடைய மாயத்தால் தனக்கு அத்வைத நிலை தெளியாதிருப்பதைக் குறிப்பிடுகிறார்.

சிவனே முதற் காரணம் என்னும் அத்வைத வுண்மையை அறிந்தவர் சிவலோகம் பெறுவர் என்பதை சேரமான்பெருமாணாயனார் தமது 'பொன்வண்ணத் தந்தாதி' யிலே பின்வருமாறு விளக்குகிறார் :

தவனே யுலகுக்குத் தானே முதறான் படைத்த வெல்லாஞ்
சிவனே முழுது மென்பார் சிவலோகம் பெறுவர் (5)

என்று. பட்டணத்துப் பிள்ளையார் பாடிய 'கோயினான் மணிமாலை' யிலே யுள்ள பகுதிகள் சிலவும் அத்வைதத்தோடு பொருத்த முடையவையாகக் காணப்படுகின்றன.

1. கண்ணிற் காண்பதெவ் வுலகினுங் காண்பன வெல்லா
நீயே யாகிநின்ற தோர் நிலையே. (24)

2. நுரையுந் திரையு நொப்புறு கொட்பும்
வரையில் சீகர வாரியுங் குரைகடற்
பெருத்துஞ் சிறுத்தும் பிறங்குவ தோன்றி
யெண்ணில வாகி யிருங்கட லடங்குந்
தன்மை போலச் சராசர மனைத்து
நின்னிடைத் தோன்றி நின்னிடை யடங்கு நீ
யொன்றினுந் தோன்றா யொன்றினு மடங்காய். (24)

3. ..........................................மாயப்
பேய்த்தேர் போன்று நீப்பரு முறக்கத்துக்
கனவே போன்று நனவு பெயர்பெற்ற
மாய வாழ்க்கையை.................. (28)

4. அரியை சால எம்பெரும தெரிவுறில்
உண்டாய்த் தோன்றுவ யாவையு நீயே. (32)

என்றுள்ள பகுதிகள் பேய்த்தேர் போலவும் கனவு போலவும் தோன்றுகின்ற இவ்வனைத்தும் ஒன்றேயாகிய பரம்பொருளே என்னும் அத்வைத வுண்மையைக் கூறுகின்றன. இவ்வுண்மையைப் பட்டணத்துப் பிள்ளையாரே 'திருக்கழுமல மும்மணிக் கோவை' யிலும்,

> யாவையு மெனக்குப் பொய்யெனத் தோன்றி
> மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை (10)

என்னும் அடிகளிலே வியக்தமாகக் கூறுகின்றார். மீண்டும், இவர் 'திருவிடை மருதூர் மும்மணிக் கோவை' யிலே மாயப் படலம் நீங்கவே ஞானத்தால் எல்லாம் அவனே என்று கண்டேன் என்று கூறி 'நின்னைக் காணாத மாந்தர் தன்னையும் காணாதார்' என்று ஜீவேசுவர ஐக்கியத்தை விளக்குகிறார்.

> மாயப் படலங் கீறித் தூய
> ஞான நாட்டம் பெற்றபின் யானு
> நின்பெருந் தன்மையுங் கண்டேன், காண்டலு
> மென்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டே
> னின்னிலை யனைத்தையுங் கண்டே னென்னே
> நின்னைக் காணா மாந்தர்
> தன்னையுங் காணாத் தன்மை யோரே. (13)

மேலும் இவ்வாறே இவர்,

> ......................................எவற்றையுந்
> தானே யாகிநின்ற தற்பர!
> தோற்றுவ தெல்லாந் தன்னிடைத் தோற்றித்
> தோற்றம் பிறிதிற் றோற்றாச் சுடர்முளை! (22)

என்று கூறுகிறார்.

அத்வைத சித்தாந்தத்திற்கே சிறப்பா யமைந்த மூர்த்தி ஐக்கியத்தை இவர் 'திருவொற்றியூர் ஒருபா வொருபது' என்னும் பிரபந்தத்திலே எடுத்துக் காட்டுகிறார்.

> அருவமு முருவமு மானா யென்றும்
> திருவமர் மாலொடு திசைமுக னென்றும்
> உளனே யென்றும் இலனே யென்றும்......
> இன்னவை முதலாத் தாமறி யளவையின்
> மன்னிய நூலின் பன்மையுண் மயக்கிப்
> பிணங்கு மாந்தர் பெற்றிமை நோக்கி

அணங்கிய அவ்வவர்க் கவ்வவை யாகி யடையப்
பற்றிய பளிங்கு போலும்
ஒற்றி மாநக ருடையோ யுருவே. (2)

'வேதத்திலே பன்மையாகக் கூறப்பட்டதால் மாந்தர் ஒருவரோடு ஒருவர் பிணங்கியும் மயங்கியும் இருப்பதைக் கண்டு ஒன்றேயாக பிரம்மமே அவ்வவர்க்கு அவ்வவர் அறிந்த அளவைப்படி அவ்வவையாகித் தோன்றும் பளிங்கு போன்றது ஈசனது உருவம்' என்று கூறுவது அத்வைத சித்தாந்தத்தையே விளக்குவதாகின்றது.

மூவிலையும் ஒரு தண்டுமுடைய திரிசூலத்தை ஈசன் ஏந்தியிருப்பது மும்மூர்த்திகளும் தானே என்று விளக்குவதற்கே என்பர் வேறொரு பாடலிலே,

மூவிலை யொருதாட் சூல மேந்துதல்
மூவரும் யானென மொழிந்த வாறே. (6)

காரைக்கால் அம்மையாரும் ஞேய ஞாதிரு ஞானங்களின் ஐக்கியத்தைக் கூறி எல்லாம் சித் ஸ்வரூபமே என்னும் அத்வைத சித்தாந்த வுண்மையை விளக்குகின்றார்.

அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே—அறிகின்ற
மெய்ப் பொருளுந் தானே விரிசுடர் பாராகாசம்
அப் பொருளுந் தானே அவன்.

— அற்புதத் திருவந்தாதி 20.

ஸ்ரீ

# பெரிய புராணமும் அத்வைதமும்

(வே. நாராயணன், சென்னை.)

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் கடைசியாக அமைந்துள்ளது சேக்கிழார் பாடியருளியதாய்ப் பெரிய புராணம் என்று வழங்கும் திருத்தொண்டர் புராணம். சுந்தரமூர்த்தி நாயனார் 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று தொடங்கும் தேவாரத்திலே அறுபத்துமூன்று நாயன்மார்களையும் ஒன்பது தொகை யடியார்களையும் சிறப்பித்துள்ளார். சுந்தரமூர்த்திகள் பிறந்த நாட்டின் சிறப்பையும் நகரச் சிறப்பையும் கூறி, சிவபிரான் அவரைத் தடுத்தாட் கொண்ட வரலாற்றையும் கூறியபின், சிவனடியார்களின் வாழ்க்கை நலங்களை விரித்துக் கூறுவது பெரிய புராணத்தின் கருத்து. இவ்வாறு வாழ்க்கை வரலாற்றினைக் கூறும் நூலிலே, சரியை கிரியை முதலிய மார்க்கங்களைத் தெளிவாகக் கூறுவதற்குச் சந்தர்ப்பம் வாய்ப்பதுபோல, தத்துவத்தைப் போதிப்பதற்கு அதிக இடம் இல்லை. ஆயினும் சேக்கிழாரும் சிறந்த அனுபவியாதலால் அவருடைய திருவாக்கிலும் ஆங்காங்கு அத்வைதவுண்மைகள் மிளர்கின்றன. அவற்றை இங்கு எடுத்துக் காட்டுவது பொருந்தும்.

கடவுளின் தன்மையைக் கூறுவதாக அமைந்துள்ளன 'தில்லைவாழ் அந்தணர் சருக்க'த்துள்ள தெய்வ வணக்கப் பாடல்கள் இரண்டும்,

> ஆதியாய் நடுவும் ஆகி அளவிலா அளவும் ஆகிச்
> சோதியாய் உணர்வும் ஆகித் தோன்றிய பொருளும் ஆகிப்
> பேதியா ஏகம் ஆகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
> போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி.
>
> கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி
> அற்புதக் கோலநீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
> சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்துள் நின்று
> பொற்புடன் நடம் செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி.

இப் பாடல்களிலே, வேதாந்தத்தின் கற்பனைக்கும் எட்டாத நிர்க்குணப் பொருளே கருணாமூர்த்தியான சகுணப்

பிரும்மமாகித் தில்லையுள் நடஞ் செய்கின்றது என்றும், அதுவே ஜகத் காரணவஸ்து என்றும், அது தோன்றிய பொருள் அனைத்தும் ஆகியபோதும் பேதப்படாத ஒன்றாக இருக்கின்றது என்றும் இவ்வுண்மையை விளக்குவது தில்லைப் பொது நடம் என்றும் கூறப்பட்டுள்ளதைக் கண்டால், சேக்கிழார் வேதாந்தக் கருத்தாகிய அத்வைத வுண்மையைத் தான் விளக்குகிறார் என்பது தெளிவாகும்.

பரம்பொருளே மூவகைக் காரணமும் ஆகும் என்பது அத்வைதக் கொள்கை. இதனையே, சேக்கிழார் சுவாமிகள்,

அகில காரணமும் ஆனார்
தங்குநற் பதிகளும் பிற பணிந்தருளி வண்தமிழ் புனைந்தே.
—திருஞான சம்பந்தர் 520.

என்பதிலுள்ள அகில காரணமுமானார் என்னும் பெயராற் குறிப்பிடுகிறார். இதனாலேதான், கடவுள் 'எப்பொருளுமாய் நின்றார்' (திருஞான சம். 399) என்றும், 'முழுது மானவர்' (திருஞான சம். 375) என்றும்,

வானாகி நிலனாகி அனலுமாகி
மாருதமாய் இருசுடராய் நீருமாகி
ஊனாகி உயிராகி உணர்வுமாகி
உலகங்கள் அனைத்துமாய் உலகுக்கப்பால்
ஆனாத வடிவாகி நின்றார் —திருஞான சம். 563.

என்றும் அறிவுறுத்தப்படுகிறார்.

இவ்வுண்மையே திருஞான சம்பந்த நாயனார் வைகையின் எதிர் செல்ல விடுத்த திருவேட்டிலே பொறிக்கப்பட்டிருந்தது என்பர் சேக்கிழார் சுவாமிகள். "எம்பிரான் சிவனே எல்லாப் பொருளும் என்றெழுதும் ஏட்டில்" (திருஞான சம். 847) என்னும் அடியிலே.

'முழுநீறு பூசிய முனிவர் புராண'த்தின் முதற் பாடலிலே, 'ஆதாரமாய் அனைத்தும் ஆகின்ற அங்கணன் எம்பெருமான்' என்றுள்ளது. நிர்க்குணப் பிரும்மமும் சகுணப் பிரும்மமும் ஆகிய பரம்பொருளே இந்த எல்லாப் பொருளாய்த் தோற்று கின்றது என்பதையே, மீண்டும், இவர் 'திருவாரூர்ப் பிறந்தார் புராண'த்து முதற் செய்யுளில் 'அருவாகி உருவாகி அனைத்துமாய் நின்ற பிரான்'. என்று குறிப்பிடுகின்றார். பரம்பொருளே முதற் காரணம் என்னும் உண்மையே

'ஆயினும் பெரியா ரவர்' என்பது
மேய இவ்வியல் பேயன்றி விண்முதற்
பாய பூதங்கள் பல்லுயிர் அண்டங்கள்
ஏயும் யாவும் இவர்வடி வென்றதாம். —திருஞான சம். 826

என்னும் பாடலாலும் விளக்கப்பட்டுள்ளது. அப் பரம் பொருளே மும்மூர்த்தியுமாகி 'தொல்லுலகம் முழுதும் அளித் தழித்தாக்கும் முதல்வ'ராய் (ஏயர்கோன் 285) விளங்குகின்றது என்று திரிமூர்த்திகளின் அபேதத்தையும் விளக்கிக் காட்டுகிறார். 'இந்த அபேதத்திற்கு ஒருவமையாய் அமைந்துள்ளது காஞ்சிமா நகரத்திலுள்ள தூள தொன்றினில் மூன்று பூமலருந் தமனியச் செழுந் தாமரைத் தடமும்' என்பதைக் குறிப்பிடுகின்றது திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்திலுள்ள 79-ம் பாடலின் முதலடி.

"எரியின்கண் இம்மாயப் பொய்தகையும் உருவொழித்து" (திருநாளைப் போவார் 32) என்றும் "இம்மாயப் பவத் தொடக்காம் இருவினைகள்" (திருநாவுக்கரசு 423) என்றும் கூறி, உருவம் உலகம் இருவினை ஆகிய எல்லாம் பொய்யும் மாயமும் என்று விளக்கியபின், இந்த "இருவினைப் பொய்ம்மை வல்லிருள்" ஞான வெளியாலே தான் நீங்கும் என்று சேக்கிழார் சுவாமிகள்,

'தம்மை யேசிந்தியா' எனுந் தன்மைதான்
மெய்ம்மை யாகி விளங்கொளி தாமென
இம்மை யே நினைவார்தம் இருவினைப்
பொய்ம்மை வல்லிருள் போக்குவர் என்றதாம்.
—திருஞான. 830.

என்னும் பாடலால் விளக்குகின்றார்.

இப் பாடலாலும் "எதிரில் இன்பம் இம்மையே தருவார்" (ஏயர்கோன் 52) என்னும் அடிப் பகுதியாலும் ஜீவன்முக்தியையும்,

நண்ணரிய சிவானந்த ஞானவடிவே யாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட அர சமர்ந்திருந்தார்.
—திருநாவுக்கரசு 427.

என்னும் இரண்டு அடிகளால் கிரம முக்தியையும் கூறி, இந்நாயனார் மோக்ஷத்தைப்பற்றிக் கொண்ட அத்வைதக் கருத்தை நன்கு விளக்குகிறார்.

'சிவனடிக்கீழ் உயர்பரம முத்தி பெற்றார்,
எவரும்-அறியச் சீவன் முத்தராய் இங்(கு)
இருப்பவர்கள்; —திருத்தொண்டர் புராண வரலாறு 26.

என்னும் பாகுபாட்டினை விளக்குவதாயுள்ளது, "இருக்குமுதல் மறை நான்கில் இன்று முதலாக இதுவும் ஒரு தமிழ்வேதம் ஐந்தாவதென்று கருத்திருத்திக் கொள்ளப் பெற்றதாய், 'பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய' பெரியபுராணம்.

---

ஸ்ரீ:

# முனிமொழியாகிய திருவாய்மொழியும் அத்வைதமும்

(வே. நாராயணன், சென்னை)

ஆழ்வார்களும் ஆண்டாளும் பாடிய பக்தி நிறைந்த பாடல்களுக்கு 'நாலாயிர திவ்ய ப்ரபந்தம்' என்று பெயர். இவர்கள் பன்னிருவர்; இவர்கள் பாடிய ப்ரபந்தங்கள் இருபத்து நான்கு. இவற்றுள் நம்மாழ்வார் என்பவர் பாடியவை நான்கு; அவை யாவன திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி; நாலாயிர ப்ரபந்தங்களுள் திருவாய்மொழியே முக்கியமானதாகையால், நாலாயிரத்தையுமே திருவாய்மொழி என்பதுண்டு.

திருவாய்மொழி முழுவதும் அந்தாதியாக அமைந்துள்ளது. ஒவ்வொரு திருவாய்மொழியும் பத்துப் பாடல்களையும் ஒரு முத்திரைப் பாடலையும் கொண்டது. பத்து திருவாய்மொழி சேர்ந்தது ஒரு பத்து. இப்படிப் பத்துப் பத்துகள் இருக்கின்றன. கேசவன் முதலிய பன்னிரண்டு நாமங்களையும் வைத்து பன்னிரு நாமப் பாட்டாக ஒரு திருவாய்மொழி அமைந்துள்ளது. ஆகையால் திருவாய்மொழியில் மொத்தப் பாடல்கள் 1102.

திருவாய்மொழிப் பாடல்களிலே பெரும்பான்மையும் பகவானைத் தோத்திரிப்பதாக அமைந்துள்ளது. சில பாடல்கள்

பகவானைப் பிரிந்து தரிக்கமாட்டாத அவஸ்தையிலே பாடியவை; வேறு சில தூது விடுவதாகக் கூறுவன; ஒரு சில தன் மனதிற்கும் மனதைப் போல அந்தரங்கமான சிஷ்யர்களுக்கும் உபதேசமாக அமைந்துள்ளன. அத்வைதத்திற்கு அனுகுணமான வாக்கியங்களை இந்த உபதேசப் பாடல்களிலே எதிர்பார்க்கலாம்; தோத்திரப் பாடல்களிலும் அத்வைதத்திற்கு அனுகூலமான வாக்கியங்கள் இருப்பது ஒரு விசேஷம்.

அத்வைதத்திற்கு மிகவும் அனுகூலமான வாக்கியங்கள் ஜீவன்முக்தியைக் குறிப்பவைகளே. இவற்றுள் முதலாவதாக,

ஒடுங்க அவன்கண்
ஒடுங்கலும் எல்லாம்
விடும்; பின்னும், ஆக்கை
விடும்பொழு தெண்ணே. (1, 2, 9)

"பரமனோடு ஒன்றாகப் பாவித்து அவனுள் ஒடுங்கியதாக விடாது தியானஞ் செய்தால் அவனோடு ஒன்றாகி விடலாம்; ஸம்ஸாரமாகிய எல்லாம் விட்டுப்போம்; அதுவே மோக்ஷம். பின்னும் உடல் விழும்போதும், அவனைத் தியானித்து விதேஹ மோக்ஷத்தைப் பெறலாம்" என்பது இப்பாடலின் கருத்து.

நன்றாய் ஞானம் கடந்துபோய் நல்லிந்திரிய மெல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும் பாழ் உலப்பிலதனை உணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே அப்போதே வீடு; அதுவே வீடு வீடாமே.

அதுவே வீடுவீடு பேற்றின்பந் தானும்; அதுதேறி
எதுவே தானும் பற்றின்றி யாதுமிலிக ளாகிற்கில்
அதுவே வீடுவீடு பேற்றின்பந் தானும்; அது தேறாது
எதுவே விடே இன்பம் என்றெய்த்தார் எய்த்தா ரெய்த்தாரே. (8, 8, 6—7)

அதாவது, ஞான மார்க்கத்திலே நன்றாகப் பிரவேசித்து எல்லையை அடைந்து, இந்திரியங்களை ஒடுக்கி, அனாதி காலமாகத் தன்னைப்பற்றியுள்ள பிரகிருதியின் ஸம்பந்தத்தை அறிந்து, அந்த ஸம்பந்தத்தையும் அதனால் உண்டாகும் சுக துக்கங்களையும் இல்லையாக்கினால் அந்த க்ஷணத்திலே மோக்ஷம் ஸித்திக்கும்; அதுவே மோக்ஷம்; மோக்ஷம் என்று வேறொன்று இல்லை.

"பிரகிருதியின் ஸம்பந்தமற்று இருப்பதே மோக்ஷம்; அந்நிலையே மோக்ஷ ஸாதகம்" என்ற உண்மையை அறிந்து

சிறிதும் பிரகிருதி ஸம்பந்தமின்றி தான் தனது என்பது மாய்ந் தால் அந்த நிலையே மோக்ஷமும் மோக்ஷ ஸாதகமும் ஆகும்; இவ் வுண்மையை அறியாமல், "மோக்ஷம் என்பது என்ன? ஸாதகம் என்பது என்ன?" என்று ஆராய்வதிலே யாதொரு பயனுமில்லை; அவர்கள் ஏமாந்தே போவார்கள்.

அடுத்தபடியாக, "ஞானத்தாலேயே மோக்ஷம்" என்று விளக்கும் வாக்கியங்களைக் கவனிப்போம்.

*யாவையும் யவரும் தானு யவரவர் சமயந் தோறும்*
*தோய்விலன்; புலனைந்துக்கும் சொலப்படான்; உணர்வின் மூர்த்தி;*
*ஆவிசே ருயிரின் உள்ளால் ஆதுமோர் பற்றிலாத*
*பாவனை யதனைக் கூடில் அவனையும் கூடலாமே.* (3, 4, 10)

முதலிரண்டு அடிகளால், பரமாத்மாவுக்கும் ஜீவர்களுக்கும் பேதமில்லை என்றும் ஆத்மா ஞானமயன், அதீந்திரியன் ஸமயா தீதன் என்றும் கூறி, ஜீவ ப்ரஹ்ம ஐக்யத்தை பாவனு ப்ரகர்ஷத் தாலே அறிந்தால் ஜீவ ப்ரஹ்ம ஐக்யம் ஸித்திக்கும் என்று பின்னிரண்டு அடிகளால் விளக்குகிறார்.

*அமரர் தொழப் படுவானை அனைத்துலகுக்கும் பிரானை*
*அமர மனத்தினுள் யோகு புணர்ந்தவன் தன்னோ டொன்றாக*
*அமரத் துணிய வல்லார்க ளொழிய, அல்லாதவ ரெல்லாம்*
*அமர நினைந் தெழுந்தாடி அலற்றுவதே கருமமே.* (3, 5, 9)

'யோகு' என்றால் ஞானம்.

பரமாத்மாவோடு பாவனு ப்ரகர்ஷத்தாலே ஒன்றாகத் தியானித்து, பரம ஞானிகளாய் அவனோடு ஒன்றாக வல்லார் களைத் தவிர, மற்றைப் பாமரர்கள் எல்லோரும் அவனைத் தேவர் களும் எல்லா உலகங்களும் தொழப்படுகின்றவனாகக் கொண்டு புக்தி செய்வதே பொருத்தம் என்பது இப் பாசுரத்தின் பொருள்.

*மிக்க ஞானமூர்த்தியாய வேத விளக்கினை என்*
*தக்க ஞானக் கண்களாலே கண்டு தழுவுவனே.* (4, 7, 10)

என்பதும்,

*ஏழுலகமும்*
*துன்னிமுற்று மாகிநின்ற சோதி ஞான மூர்த்தியாய்* (4, 3, 8)

என்பதும்,

ஞானக் கை தா காலக்கழிவு செய்யேலே (2, 9, 2)
என்பதும் ஞானத்தின் பெருமையை உணர்த்துகின்றன.

மூன்றுவதாக, உபாஸனு ப்ரகரணத்திலே ஹரிஹராதி மூர்த்திகளுக்குள் யாதொரு பேதமுமில்லை என்று காட்டும் வாக்கியங்கள். இவை திருவாய்மொழியிலே ஆதி முதல் அந்தம் வரை ஊடுருவியுள்ளன.

1. சுரரறி வருநிலை விண்முதல் முழுவதும்
வரன்முத லாயவை முழுதுண்ட பரபரன்
புரமொரு மூன்றெரித் தமரர்க்கும் அறிவியந்து
அரனயன் எனவுல கழித்தமைத் துளனே. (1, 1, 8)

2. உணர்ந்துணர்ந் துரைத்துரைத் தரியய
னரன் என்னும் இவரை
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின்
மனப்பட்ட தொன்றே. (1, 3, 6)

3. ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற
நன்றெழில் நாரணன் நான்முகன் அரன் என்னும் இவரை
ஒன்றநும் மனத்து வைத்துள்ளி நும்இருபசை அறுத்து
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடை நாளே. (1, 3, 7)

4. ஒற்றைப்பிறை யணிந்தானும் நான்முகனும் இந்திரனும்
மற்றை யமரரும் எல்லாம்வந் தெனதுச்சி யுளானே. (1, 9, 10)

5. ஏறனைப் பூவனைப் பூமகள் தன்னை
வேறின்றி விண்தொழத் தன்னுள் வைத்து
மேல் தன்னை மீதிட நிமிர்ந்து மண்கொண்ட
மால்தனில் மிக்குமோர் தேவு முளதே. (2, 2, 3)

6. தாமோதர னுருவாகிய சிவற்கும் திசைமுகற்கும் (2, 7, 12)

7. ஒளி மணிவண்ண னென்கோ? ஒருவனென் றேத்த நின்ற
நளிர்மதிச் சடைய னென்கோ? நான்முகக் கடவு ளென்கோ?
அளிமகிழ்ந் துலகமெல்லாம் படைத்தவை யேத்த நின்ற
களிமலர்த் துளவ னெம்மான் கண்ணனை மாயனையே. (3, 4, 8)

8. அஞ்சி, நீருலகத் துள்ளீர்! அவன் இவன்
என்று கூழேன்மின்!
நெஞ்சினுல் நினைப்பான் யவன் அவனாகும்
நீள்கடல் வண்ணனே, (3, 6, 9)

9. நும்இன் கவிகொண்டு நும்நும் இட்டா தெய்வ மேத்தினுல்
செம்மின் சுடர்முடி என் திருமாலுக்குச் சேருமே. (3, 9, 6)

10. இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும்
வலிந்து வாது செய்வீர்களும் மற்றுநும் தெய்வமுமாகி நின்றான்
மலிந்து செந்நெல் கவரிவீசும் திருக்குருகூ ரதனுள்
பொலிந்து நின்றபிரான் கண்டீர்; ஒன்றும் பொய்யில்லை
போற்றுமினே. (4, 10, 5)

11. ஐந்து பூதமாய் இரண்டு சுடரா யருவாகி
நாகமேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே. (4, 3, 3)

12. முடிவிவள் தனக்கொன் றறிகிலே னென்னும்
மூவுல காளியே என்னும்
கடிகமழ் கொன்றைச் சடையனே என்னும்
நான்முகக் கடவுளே என்னும்
வடிவுடை வானோர் தலைவனே என்னும்
வண்திரு வரங்கனே என்னும்
அடியடையா தாள்போல் இவள் அணுகி
அடைந்தனள் முகில்வண்ண னடியே. (7, 2, 10)

13. என் திருமார்பன் தன்னை என் மலைமகள் கூறன் தன்னை
என்றும் என் நாமகளை அகம்பால் கொண்ட நான்முகனை
நின்ற சசிபதியை நிலங்கீண் டெயில் மூன்றெரித்த
வென்று புலம் துரந்த விசும்பாளியைக் காணேனோ. (7, 6, 7)

14. படைப்பொடு கெடுப்புக் காப்பவன் பிரம பரம்பரன்
சிவப்பிரா னவனே. (8, 4, 9)

15. அவனே அகல்ஞாலம் படைத் திடந்தான்
அவனே அஃதுண் டுமிழ்ந்தா னளந்தான்
அவனே அவனும் அவனும் அவனும்
அவனே மற்றெல்லாமும், அறிந்தனமே. (9 ,3, 2)

16. முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா! என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கட் கருமாணிக்கமே! என்கள்வா!
(10, 10, 1)

17. அவாவறச்சூழ் அரியை அயனை அரனை அலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவாவில் அந்தாதிகளால் இவை ஆயிரமும். (10, 10, 10)

"வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன" என்பதினின்றும், இக் கிரந்த கர்த்தா ஒரு ஜீவன்முக்தர் என்பது புலப்படுகின்றது.

அத்வைதப்படி, உண்மையாகவுள்ள பாரமார்த்திக தத்துவம் ஒன்றுதான்; இதனைக் குறிக்கும் அடிகள் இவை :—

1. ஆயே இவ்வுலகத்து நிற்பனவும் திரிவனவும்
நீயே, மற்றெரு பொருளுமின்றிநீ நின்றமையால். (4, 9, 7)

2. அவனே அவனும் அவனும் அவனும்;
அவனே மற்றெல்லாமும். (9, 3, 2)

3. கடல்ஞாலம் செய்தேனும் யானே என்னும்
கடல்ஞாலம் ஆவேனும் யானே என்னும்
கடல்ஞாலம் கொண்டேனும் யானே என்னும்
கடல்ஞாலம் கீண்டேனும் யானே என்னும்
கடல்ஞால முண்டேனும் யானே என்னும். (5, 6, 1)

4. காண்கின்ற நிலமெல்லாம் யானே என்னும்
காண்கின்ற விசும்பெல்லாம் யானே என்னும்
காண்கின்ற வெந்தீயெல்லாம் யானே என்னும்
காண்கின்ற இக்காற்றெல்லாம் யானே என்னும்
காண்கின்ற கடலெல்லாம் யானே என்னும். (5, 6, 3)

5. உற்றார்கள் எனக்கில்லை யாரும் என்னும்
உற்றார்கள் எனக்கிங் கெல்லாரும் என்னும்
உற்றார்களைச் செய்வேனும் யானே என்னும்
உற்றார்களை அழிப்பேனும் யானே என்னும்
உற்றார்களுக் குற்றேனும் யானே என்னும். (5, 6, 7)

6. கொடியவினை யாது மிலனே என்னும்
கொடியவினை ஆவேனும் யானே என்னும்
கொடியவினை செய்வேனும் யானே என்னும்
கொடியவினை தீர்ப்பேனும் யானே என்னும். (5, 6, 9)

7. கோலங்கொள் சுவர்க்கமும் யானே என்னும்
கோலமில் நரகமும் யானே என்னும்
கோலந்திகழ் மோக்கமும் யானே என்னும்
கோலங்கொள் உயிர்களும் யானே என்னும்
கோலங்கொள் தனிமுதல் யானே என்னும். (5, 6, 10)

8. கற்கும் கல்விக்கு எல்லையிலேனே என்னும்
கற்குங் கல்வி ஆவேனும் யானே என்னும்
கற்குங் கல்வி செய்வேனும் யானே என்னும்
கற்குங் கல்வி தீர்ப்பேனும் யானே என்னும்
கற்குங் கல்விச் சாரமும் யானே என்னும். (5, 6, 2)

9. செய்கின்ற கிதியெல்லாம் யானே என்னும்
செய்வானின்ற னகளும் யானே என்னும்
செய்துமுன் இறந்ததுவும் யானே என்னும்

செய்கைப் பயனுண்பேனும் யானே என்னும்
செய்வார்களைச் செய்வேனும் நானே என்னும். (5, 6, 4)

இனி, ஜீவ ப்ரஹ்மைக்யத்தைக் கூறும் வாக்கியங்களைத் தொகுத்துக் கூறலாம்.

1. காயமும் சீவனும் தானே காலும் எரியும் அவனே. (1, 9, 6)

2. தானும் யானும் எல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந் தோம். (2, 3, 1)

3. களிப்பும் கவர்வுமற்றுப் பிறப்புப் பிணிமூப் பிறப்பற்று
ஒளிக்கொண்ட சோதியுமாய் உடன்கூடுவதென்று கொலோ?
துளிக்கின்ற வான் இந்நிலம் சுடராழி சங்கேந்தி
அளிக்கின்ற மாயப்பிரா னடியார்கள் குழாங்களையே. (2, 3, 10)

4. யானே நீ; என் உடைமையும் நீயே. (2, 9, 9)

5. மன் பல்லுயிர்களுமாகிப் பலபல மாய மயக்குகளால்
இன்புறும் இவ்விளையாட் டுடையானைப் பெற்றேதும் அல்லல்
இலனே. (3, 10, 7)

6. உன்னதென்ன தாவியும் என்னதுன்ன தாவியும். (4, 3, 8)

7. இடைப்புக் கோருருவும் ஒழிவில்லை அவனே. (8, 4, 9)

8. தானேயாகி நிறைந்ததெல்லா வுலகுமுயிரும் தானேயாய்
தானேயா னென்பானுகித் தன்னைத் தானே துதித்து. (10, 7, 2)

9. பண்ணார் பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடி. (10, 7, 5)

10. திறம்பாமல் மண் காக்கின்றேன் யானே என்னும்
திறம்பாமல் மலை யெடுத்தேனே என்னும்
திறம்பாமல் அசுரரைக் கொன்றேனே என்னும்
திறங்காட்டி அன்றைவரைக் காத்தேனே என்னும்
திறம்பாமல் கடல் கடைந்தேனே என்னும். (5, 6, 5)

11. இனவேய் மலை ஏந்தினேன் யானே என்னும்
இனவேறுகள் செற்றேனும் யானே என்னும்
இனவான்கன்று மேய்த்தேனும் யானே என்னும்
இனவாநிரை காத்தேனும் யானே என்னும்
இனவாயர் தலைவனும் யானே என்னும். (5, 6, 6)

12. உரைக்கின்ற முக்கட்பிரான் யானே என்னும்
உரைக்கின்ற திசைமுகன் யானே என்னும்
உரைக்கின்ற அமரரும் யானே என்னும்
உரைக்கின்ற அமரர்கோன் யானே என்னும்
உரைக்கின்ற முனிவரும் யானே என்னும். (5, 6, 7)

13. ஆயே! இவ்வுலகத்து நிற்பனவும் திரிவனவும்
நீயே மற்றொரு பொருளுமின்றி நீ நின்றமையால். (4, 9, 7)

14. யானும் தானா யொழிந்தானை. (8, 8, 3)

15. மேவுந் தன்மைய மாக்கினான் வல்ல னெம்பிரான் விட்டுவே.
(2, 7, 4)

16. மதுசூதனை யன்றி மற்றிலேனென்று எத்தாலும் கருமமின்றி.
(2, 7, 6)

ஸர்வாத்ம போதக வாக்கியங்களும் மிகுதியாகக் காணப் படுகின்றன; அவை வருமாறு:

1. கரந்தசில் இடந்தொறும் இடந்திகழ் பொருடொறும்
கரந்தெங்கும் பரந்துளன். (1, 1, 10)

2. நாம் அவன் இவன் உவன், அவள் இவள் உவள் எவள்,
தாம் அவர் இவர் உவர், அது இது உது எது,
வீமவை, இவை, உவை, அவை, நலந் தீங்கிவை
யாமவை ஆயவையாய் நின்ற அவரே. (1, 1, 4)

3 திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை
படர்பொருள் முழுவதுமாய். (1, 1, 7)

4. மண்ணும் நீரும் எரியும் நல்வாயுவும்
விண்ணுமாய் விரியும் எம்பிரானையே. (1, 10, 2)

5. புகழுநல் லொருவ னென்கோ? பொருவில் சீர்ப்பூமி என்கோ?
திகழுந் தண்பரவை என்கோ? தீ என்கோ? வாயு என்கோ?
நிகழும் ஆகாசம் என்கோ? நீள்சுடர் இரண்டும் என்கோ?
இகழ்வில் இவ்வனைத்தும் என்கோ? கண்ணனைக் கூவுமாறே.
(3, 4, 1)

6. கூவுமா றறியமாட்டேன்; குன்றங்கள் அனைத்தும் என்கோ?
மேவுசீர் மாரி என்கோ? விளங்கு தாரகைகள் என்கோ?
நாவியல் கலைகள் என்கோ? ஞான நல்லாவி என்கோ?
பாவுசீர்க் கண்ணன் எம்மான் பங்கயக் கண்ணனையே. (3, 4, 2)

7. ஏகமூர்த்தி இருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தி
யாகி, ஐந்து பூதமாய் இரண்டு சுடராய் அருவாகி
நாகமேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே. (4, 3, 3)

8. வானோர் பலரும் முனிவரும் மற்றும் மற்றும் முற்றுமாய். (1,5,4)

9. தன்னுள் கலவாத தெப்பொருளும் தானிலையே. (2, 5, 3)

10. திரியும் காற்றோ டகல் விசும்பு திணிந்த மண் கிடந்தகடல்
எரியும் தீயோ டிருசுடர் தெய்வம் மற்றும் மற்றும் முற்றுமாய். (3, 6, 5)

11. நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்
வெல் பகையும் நட்பும் விடமு மமுதமுமாய். (6, 3, 1)

12. கண்ட இன்பம் துன்பம் கலக்கங்களும் தேற்றமுமாய்
தண்டமும் தண்மையும் தழலும் நிழலுமாய். (6, 3, 2)

13. நகரமும் நாடுகளும் ஞானமும் மூடமுமாய்
நிகரில் சூழ்சுடராய் இருளாய் நிலனாய் விசும்பாய். (6, 3, 3)

14. புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவென் றிவையாய்
எண்ணமாய் மறப்பாய் உண்மையாய் இன்மையாய் அல்லனாய். (6, 3, 4)

15. கைதவம், செம்மை கருமை வெளிர்மையுமாய்
மெய் பொய், இளமை முதுமை, புதுமை பழமையுமாய். (6, 3, 5)

16. மூவுலகங் களுமாய் அல்லனாய், உகப்பாய் முனிவாய்,
பூவில்வாழ் மகளாய், தவ்வையாய்ப், புகழாய்ப் பழியாய். (6, 3, 6)

17. பரஞ்சுட ருடம்பாய் அழுக்குப் பதித்த உடம்பாய். (6, 3, 7)

18. நிழல் வெயில், சிறுமை பெருமை, குறுமை நெடுமையுமாய்
சுழல்வன நிற்பன மற்றுமாய் அவை யல்லனுமாய். (6, 3, 10)

'மாயா வாமனனே' என்னும் திருவாய்மொழி முழுவதும் இதனை விளக்குவதாகும்.

மாயா! வாமனனே! மதுசூதா! அருளாய்!
தீயாய் நீராய் நிலனாய் விசும்பாய்க் காலாய்
தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்
நீயாய் நீநின்ற வாறிவை என்ன நியாயங்களே!

அங்கண் மலர்த்தண் டுழாய்முடி அச்சுதனே! அருளாய்,
திங்களும் ஞாயிறுமாய்ச் செழும் பல்சுடராய் இருளாய்
பொங்குபொழி மழையாய்ப் புகழாய்ப் பழியாய்ப் பின்னும்நீ
வெங்கண் வெங்கூற்றமாய் இவை என்ன விசித்திரமே!

சித்திரத் தேர்வலவா! திருச் சக்கரத்தாய்! அருளாய்,
எத்தனையோ ருகமும் அவையாய் அவற்றுள் இயலும்
ஒத்தவண் பல்பொருள்கள் உலப்பி லனவாய் வியவாய்
வித்தகத்தாய் நிற்றிநீ, இவை என்ன விடமங்களே!

கள்ளவிழ் தாமரைகட் கண்ணனே! எனக்கொன் றருளாய்
உள்ளது மில்லதுமாய் உலப்பில்லனவாய் வியவாய்
வெள்ளத் தடங்கடலுள் விடநாகணைமேல் மருவி
உள்ளப்ப ல்யோகு செய்தி, இவை என்ன உபாயங்களே!

பாசங்கள் நீக்கி என்னை உனக்கே அறக்கொண்டிட்டு, நீ
வாசமலர்த் தண்டுழாய்முடி மாயவனே! அருளாய்,
காயமும் சீவனுமாய்க் கழிவாய்ப் பிறப்பாய், பின்னும்நீ
மாயங்கள் செய்து வைத்தி, இவை என்ன மயக்குகளே!

மயக்கா! வாமனனே! மதியாம் வண்ணம் ஒன்றருளாய்,
அயர்ப்பாய்த் தேற்றமுமாய் அழலாய்க் குளிராய் வியவாய்
வியப்பாய் வென்றிகளாய் வினையாய்ப் பயனாய் பின்னும்நீ
துயக்கா! நீநின்ற வாறிவை என்ன துயரங்களே!

துயரங்கள் செய்யுங் கண்ணா! சுடர்நீண் முடியாய்! அருளாய்
துயரம்செய் மானங்களாய் மதனாகி உகவைகளாய்
துயரஞ்செய் காமங்களாய்த் துலையாய் நிலையாய் நடையாய்
துயரங்கள் செய்து வைத்தி, இவை என்ன சுண்டாயங்களே!

என்ன சுண்டாயங்களால் நின்றிட்டாய்? என்னை யாளுங்கண்ணா!
இன்னதோர் தன்மையை என்றுன்னை யாவர்க்கும் தேற்றரியை,
முன்னிய உலகும் அவையாய் அவற்றைப் படைத்துப்
பின்னு முள்ளாய் புறத்தாய், இவை என்ன இயற்கைகளே.

என்ன இயற்கைகளால் எங்ஙனே நின்றிட்டாய்? என் கண்ணா!
துன்னுகர சரணம் முதலாக எல்லா உறுப்பும்
உன்னுசுவை ஒளி ஊறொலி நாற்றமுற்றும் நீயே
உன்னை உணர வுறில் உலப்பில்லை நுணுக்கங்களே.

இல்லை நுணுக்கங்களே இதனில் பிறிதென்னும் வண்ணம்
தொல்லை நன்னூலிற் சொன்ன உருவும் அருவும்நீயே
அல்லித் துழாய் அலங்கல் அணிமார்ப! என் அச்சுதனே!
வல்லதோர் வண்ணஞ் சொன்னால், அது உனக்காம் வண்ணமே!

(7, 8, 1-10)

முடிவாக, குலசேகர மன்னன், "முகுந்த மாலா" என்னும் தோத்திர நூலிலே,

**नाहं वन्दे तव चरणयोर्द्वन्द्वमद्वन्द्वहेतोः ।**

என்று 'அத்வைதானுபவம் பெறினும் வேண்டேன்' என்பதாலேயே தாம் அத்வைதி என்று விளங்கியதைப் போலவே, இவரும்,

வியன் மூவுலகு பெறினும் போய்த் தானே தானே யானாலும்
புயல் மேகம்போல் திருமேனி யம்மான் புனைபூங் கழலடிக்கீழ்
சயமே யடிமை தலைநின்றார் திருத்தாள் வணங்கி இம்மையே
பயனே யின்பம் யான்பெற்ற துறுமோ பாவியே னுக்கே. (8, 10, 2.)

என்று கூறி அத்வைத ஸித்தாந்தமே தம்முடைய ஸித்தாந்தம் என்பதை நிரூபிக்கிறார்.

---

ஸ்ரீ

# திருவாய் மொழியும் அத்வைதமும்

## அனுபந்தம்

---

(ஸ்ரீ R. நரஸிம்ஹாச்சாரி அவர்கள் எழுதியனுப்பிய குறிப்பின் ஸாரம்)

திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி—இவை முறையே ரிக், யஜுஸ், அதர்வ, ஸாம வேதங்களின் ஸாரமாகக் கொள்ளப்படுகின்றன. "இயற்பா மூன்றும் வேதத்ரயம்போலே, 'பண்ணார் பாடல்' பண்புரை இசைகொள் வேதம் போலே" என்றும் "ரிக்கு ஸாமத்தாலே ஸரஸமாய் ஸ்தோபத்தாலே பரம்புமாபோலே 'சொல்லார் தொடையல்' இசைகூட்ட அமர் சுவையாயிரமாயிற்று" என்றுமுள்ள ஆசார்ய ஹ்ருதய ஸூத்ரங்களால் (50, 51) இவ்வேத ஸாம்யம் விளங்கும். வடமொழி வேதம்போல் இதுவும் 'அநாதி' 'அபௌருஷேயம்' என்பதற்குக் கீழ்வருபவை பிரமாணமாகக் காட்டப்படுகின்றன.

தன் சொல்லால் தான்தன்னைக் கீர்த்தித்த மாயன்என்
முன் சொல்லும் மூவுருவாம் முதல்வனே. —திருவாய். 7, 9, 2.

"சொல்லப்பட்ட' என்ற இதில் கர்த்ருத்வம் ஸ்மிருதி, 'அதை ஸ்வயம்பூ படைத்தான்' என்பதுபோல (ஆசார்ய ஹ்ரு. 46).

இவ்வாறு வேததுல்யமாய்ச் சகலரும் ஆண்டு அனுபவிக்கும்படித் தமிழ்மொழியில் வேத லக்ஷணங்கள் யாவும் அமைந்த நம்மாழ்வார் பிரபந்தங்களுக்கு அத்வைதப் பொருள் இல்லையாயெனின், ஜீவன் அஜ்ஞானத்தால் பிரும்மத்தை உணராது தன்னை வேருகக் கருதினும், பிரும்மம் அகண்டமாய் அகோசரமாய் அறிவொளியாய்ப் பரிபூர்ணமாய் எங்கும் நிறைந்திருப்பது போல, நம்மாழ்வார் பிரபந்தங்களிலும் அத்வைதப் பொருள் மலிந்து கிடக்கின்றது. வடமொழி வேதத்திற்கு மஹாவாக்யங்களை லக்ஷ்யார்த்தமாக்கி, அதற்குச்சேர, முழுமைக்கும் அர்த்தஞ் செய்த ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள், அப்பைய தீக்ஷிதர் போல்வாரின் அறிவிற்கு இப்பிரபந்தங்கள் விஷயமாயிருப்பின், உலகம் வியக்கும்படியான அத்வைத பாஷ்யம் ஒன்று வந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

'தத்த்வமஸி', 'அஹம் ப்ருஹ்மாஸ்மி' முதலிய மஹாவாக்யங்களுக்கு லக்ஷ்யார்த்தங்கொண்டு கர்மம், பக்தி என்னும் இரண்டு காண்டத்திலுமுள்ள வாச்யார்த்தம் அனைத்தும் பொருள்படும்படிச் செய்திருப்பது போலவே, ஆழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழியிலும், கீழே வரும் வாக்கியங்களை மஹாவாக்யங்களின் தமிழ் ரூபமாகக்கொண்டு நூல் முழுமையும் இணங்கப் பொருள் செய்வதே அறிவுடையார் கடனாகும்.

யானே என்னை அறிய கில்லாதே
யானே என்றனதே என்றிருந்தேன்
யானேநீ என்னுடைமையும் நீயே
வானே ஏத்தும் அவ்வானவர் ஏறே. —திருவாய்மொழி 2, 9, 9.

யானும் தானாய் ஒழிந்தானை யாதும் யவர்க்கும் முன்னோனை
தானும் சிவனும் பிரமனு மாகிப் பணைத்த தனிமுதலை.

—திருவாய்மொழி 8, 8, 4.

ஸ்ரீ:

# திவ்வியப் பிரபந்தமும் அத்வைதமும்

(வே. நாராயணன், சென்னை)

நம்மாழ்வார் பாடிய திருவாய்மொழியைத் தவிர மற்றைப் பிரபந்தங்கள் இருபத்துமூன்றும் பெரும்பான்மை தோத்திரங்களாக அமைந்திருப்பனவாதலால், அவற்றுள் தத்துவ விளக்கப் பாடல்களைக் காண்பது அரிது. திருமழிசைப்பிரான் வைஷ்ணவத்திலே ஊற்றம் பெற்றவர். ஆயினும் அவர் 'நான்முகன் திருவந்தாதி'யில் 'தேருங்கால் தேவனொருவனே யென்றுரைப்பார்' (2) என்றும் 'வேறொருவர் இல்லாமை நின்றானை எம்மானை எப்பொருட்கும் சொல்லானைச் சொன்னேன் தொகுத்து' என்றும் கூறி,

> ஊனின்மேய ஆவிநீ உறக்கமோ டுணர்ச்சிநீ
> ஆனின்மேய வைந்தும்நீ அவற்றுள் நின்ற தூய்மைநீ
> வானிறோடு மண்ணும்நீ வளங்கடற் பயனும்நீ
> யானும்நீ யதன்றியெம் பிரானும்நீ யிராமனே. (94)

என்னும் திருச்சந்த விருத்தப் பாசுரத்திலே, நீயே எப்பொருளும் ஆதலால் ஜீவனாகிய நானும் நீ ஈசுவரனாகிய இராமனும் நீயே என்று சித்தாந்தம் செய்கிறார்.

திருமங்கை மன்னனும் தமது பெரிய திருமொழியிலே இவ்வாறே,

> யானாய் என்றனக்காய் அடியேன் மனம் புகுந்த
> தேனே. (7, 2, 9)

என்பர். பல இடங்களிலேயும் இவ்வாழ்வார் விஷ்ணு மூர்த்தத்தின் சிறப்பையே பாடினாலும், சில இடங்களிலே மும்மூர்த்திகளும் ஒன்றே என்பர். உதாரணமாக,

1. உடம்புருவில் மூன்றொன்றாய் மூர்த்தி வேறாய்
   உலகுய்ய நின்றானை. (2, 5, 3)
2. மூவருமாய் முதலாய மூர்த்தி யமர்ந்துறையு மிடம். (4, 1, 2)
3. தன்னாலே தன்னுருவில் மூர்த்தி மூன்றாய். (6, 6, 6)

என்று கூறி 'யாவரும் யவையும் தானே' என்பதை இவ் வாழ்வார் விளக்கி யிருக்கிறார். அப் பாசுரப் பகுதிகள் வருமாறு:

1. யாவருமாய் யாவையுமாய். (4—1—2)

2. வானும் மண்ணும் மற்றுள்ள பல்லுயிரும்
தானுய வெம்பெருமான். (4—1—3)

3. திடவிசும் பெரிநீர் திங்களும் சுடரும் செழுநிலத்
துயிர்களும் மற்றும்
படர் பொருள்களுமாய் நின்றவன் தன்னை. (4—3—3)

4. தீயெம் பெருமான் நீரெம் பெருமான் திரையு மிருநிலனு
மாய் எம்பெருமானுகி நின்ருல் அடியோம் காணுமால். (4-9-5)

5. தன்னாலே தன்னுருவம் பயந்த தானாய்த்
தயங்கொளி சேர் மூவுலகும் தானாய் வானாய். (6—6—6)

போய்கையாழ்வார் சிவ விஷ்ணு வடிவங்களின் அபேதத்தைப் பாடிய வெண்பா பிரசித்தி பெற்றது.

அரன் நாரணன் நாமம் ஆன்விடை புள்ளூர்தி
உரைநூல் மறையுறையும் கோயில்—வரைநீர்
கருமமழிப் பளிப்புக் கையது வேல்நேமி
உருவமெரி கார்மேனி யொன்று. —முதற் றிருவந்தாதி 5.

பின்னும், இவ் வாழ்வார் 'செங்கண்மாலே பஞ்ச பூதங்களானுன் என்பதைத் தெளிந்துகொள்' என்று உபதேசிக்கிறார்.

'இறையும் நிலனும் இருவிசும்பும் காற்றும்
அறைபுனலும் செந்தீயும் ஆவான். (29)

என்று. இக் கருத்தையே பேயாழ்வாரும் மூன்றுந் திருவந்தாதி (38) யிலே,

தானே தனக்குவமன் தன்னுருவே யெவ்வுருவும்
தானே தவவுருவும் தாரகையும்—தானே
எரிசுடரும் மால்வரையு மெண்டிசையும் அண்டத்
திரு சுடருமாய இறை.

என்று கூறி, "அஷ்டமூர்த்தியாகிய ஈசனே எவ்வுருவுமாய்த் தோன்றி, தான் அன்றி ஒரு பொருள் இல்லாதலால் தானே தனக்குவமனாய் விளங்குகிறான்" என்ற அத்வைத வுண்மையை விளக்கி யிருக்கிறார்.

ஸ்ரீ
குருப்யோ நம:

# தாயுமான சுவாமிகளும், அத்வைத நிலையும்

(கஜாரணியத் திராவிட கவிமணி
வே. முத்துஸ்வாமி ஐயர், M.A., L.T.)

## சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்

தமிழ் நாட்டில் எல்லா ஜனங்களும் அறிந்த மிகப் பிரசித்தி யுற்ற மகான்களில் தாயுமானவர் ஒருவர். இவர் சுமார் 300 வருஷங்களுக்குமுன் திரிச்சிராப்பள்ளியில் நாயக்கர் வம்சத்தார் ஆட்சியில், திருமலை நாயக்கர் பௌத்திரர் சொக்கநாத நாயக்கர் காலத்தில் பிறந்து வளர்ந்தவர். இவர் தந்தையார் வேதாரணியத்திலிருந்தவர்; திரிச்சிராப்பள்ளி சமஸ்தானத்தில் ஒரு பெரிய கணக்கு உத்யோகம் பெற்று, அங்கே குடியேறினர். தமது தமையனுர்க்குப் புத்திரப் பேறு இல்லாமையால், தமக்கு அப் போதிருந்த ஒரே குழந்தையை அவருக்குக் கொடுத்துவிட்டுத் திரிசிரபுரம் வந்தனர்.

திரிசிரபுரத்தில் தாயுமானுர் திருவருளாற் பிறந்த குழந்தைக்கு, அந்தப் பெயரே இட்டு வளர்க்க, இளந் தாயுமானுர், வளர்பிறைபோல், அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்து வளர்ந்தனர். இவரது இளம் பிராயத்திலே தந்தையார் காலமாக, அரண்மனையில் தந்தையார் பார்த்த உயர்ந்த வேலையை, இவர் வயதிற் சிறியராயினும் அறிவு குணம் இவற்ருல் பெரியராதலால் இவரே பார்க்க நேர்ந்தது. கண்ணுங் கருத்துமாக இவர் அந்தக் கணக்கு வேலையைக் கவனித்து வந்தாரெனினும், முன்செய்த நல்வினையின் பயனுக இவருக்கு மனம் ஞான மார்க்கத்திலே சென்றது. இச் சமயம், அங்குத் திருமூலர் மரபில் வந்த மௌன சுவாமிகள் என்ற ஒரு பெரியவர் ஸ்தல யாத்திரையாக எழுந்தருள, அவரை நம் தாயுமானுர் அண்டித் தமக்குள்ள ஐயங்களை நீக்கிக்கொண்டு வந்தார்.

இப்படியிருக்கையில், சமஸ்தானுதிபதி காலமாக, அரசு அவன் தேவி வசப்பட்டது. இந்த அரசியார் தாயுமானுரது

திருமேனி யழகில் ஈடுபட்டுத் தகாத வார்த்தைகள் கூற, சுவாமிகள் அப்போதே அரசாங்க உத்யோகத்தைத் துறந்து, உலகையும் துறக்க விரும்பிப் பல இடங்களிற் சஞ்சரிக்கையில், வேதாரணியத்தில், இவர் தமையனார் இதைத் தெரிந்து, இவரைத் தேடிப் பிடித்துக் குலம் விளங்க ஒரு பெண்ணை மணஞ் செய்வித்தனர். இப் பெண் ஒரு குழந்தையைப் பெற்று உயிர் துறக்க, நம் சுவாமிகள், அதுமுதல் தாம் பற்றற்ற பெருந் துறவியாகி, மௌன சுவாமிகள் உபதேசத்தைப் பெற்று, 1644-லிருந்து திருச்சியில் அம் மௌன குரு மடத்திற்குத் தலைமைபூண்டு, அங்கிருந்து பல இடங்களுக்கும் சென்று, கடவுளின் தன்மையையும், உலகியற் றன்மையையும், ஞானத்தின் பெருமையையும் தமிழில் மிக்க உருக்கமான பாட்டுக்களாக அமைத்து, அன்பர்கள் வாயாரப் பாடி நற்கதி யடையும்படி செய்தனர். சில காலம் சென்ற பிறகு, இவர் 1662-ஆம் வருஷம் தைமீ 28உ விசாகத்தன்று, இராமநாதபுரத்துக் கருகே விதேகமுத்தி யுற்றனர்.

இந்தத் தாயுமானவர் சிறந்த அநுபவாத்துவைதி.

> பொய்கண்டார் காணப் புனிதமா மத்துவித
> மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ

என்று இவர் பாடியிருக்கிறார். இதை யாதாரமாகக் கொண்டு, தாயுமானவர், மெய்கண்டார் கூறும் பேத வாதத்தை யநுஸரித்தவர் என்று சிலர் சந்தேகிக்கின்றனர்.

துவைதம் அத்துவைதத்துக்குச் சாதனமா யிருப்பதாலும், மெய்கண்டாரும் அத்துவைதி என்பதாலுமே தாயுமானவர் மெய்கண்டாருக்கு வணக்கம் கூறுகிறார் என்று கொள்ள வேண்டும்.

அத்வைத நூலாகிய திருமந்திரத்தைத் திருவாய்மலர்ந்தருளிய திருமூலரது அத்வைத மரபே தாயுமானவரது குருமரபா யிருப்பதாலும், ஸனகாதிகட்கு அத்வைதோபதேசஞ் செய்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியையும், ஸனகாதிகள், சுகர், வாமதேவர், ஜனகர் முதலிய அத்வைதிகளை வணங்கிப் புகழ்ந்திருப்பதாலும், தாயுமானவர் பேதவாதியல்லர் என்பது தெளிவாகிறது.

மேலும், தாயுமானவர் 'உலகம் பொய்; துவைதம் பொய்; சிவமொன்றே உண்மை' என்ற அத்வைத உண்மைகளை நாட்டியிருக்கிறார்.

தாயுமானவரது பாடல்கள் மிக எளிய நடையில், மிக உயர்ந்த அநுபவக் கருத்துக்களை உள்ளமுருக எடுத்தோதி, ஞானத்தைத் தந்து முத்திபெறச் செய்யும் ஆற்றல் உடையவை. இவரது திருவாக்கில் அமைந்துள்ள அரிய அத்வைதக் கருத்துக்களிற் சில உதாரணங்களாகத் தரப்படுகின்றன.

## கடவுள் எங்கும் நிறைந்தவர்

தாயுமானவர் தமது நூலில் முதற்கவியில் பரசிவ வணக்கம் கூறும்போது

> அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய்
> ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்ததெது.
> —திருவருள் விலாசப் பரசிவ வணக்கம் 1.

என்று கூறுகிறார். இவ்வாறே,

> பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற
> நிறைகின்ற பரிபூரண னந்தமே. —பரிபூரணானந்தம் 10.

> சர்வபரி பூரண அகண்டதத் துவமான
> சச்சிதானந்த சிவமே. —சச்சிதானந்த சிவம் 11.

> இகபர மிரண்டினும் உயிரினுக் குயிராகி
> எங்கும் நிறைகின்ற பொருளே.—எங்கு நிறைகின்ற பொருள் 11.

என்ற பாடற் பகுதிகள் இறைவனது சர்வ வியாபகத் தன்மையை விளக்குகின்றன.

## இறைவனையன்றி வேறொன்றுமில்லை

ஒன்றான பரம்பொருளே எல்லாமாய்த் தோன்றுகிறது. பரம்பொருள் காரணம்; உலகம் காரியம்; காரணமே காரியமாகிறது; மண்ணே குடமாகிறது; அதுபோல இறைவனே எல்லாமாகிறான் என்பது அத்வைதக் கொள்கை. இது, அடியிற் கண்ட தாயுமானவர் பாடல்களில் விளங்குகிறது.

> அத்தனையும் நீயலது எள்அத்தனையும் இல்லையெனில்
> யாங்கள் உனையன்றி யுண்டோ. —ஆனந்தமான பரம் 5

தேகாதி உலகெங்கும் கலந்து தானே திகழ்
அனந்தா நந்தமயத் தெய்வக் குன்றே.

—ஆகாரபுவனம், சிதம்பர ரகசியம் 1.

காணுங் கண்ணிற் கலந்தகண் ணேயுனைச்
சேணும் பாருந் திரிபவர் காண்பரோ
ஆணும் பெண்ணும் அதுவெனும் பான்மையும்
பூணுங் கோலம் பொருந்தியுள் நிற்கவே.—பொன்னை மாதரை 5.

அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறாய்
அமர்ந்ததென அகிலாண்டம் அனைத்து மாகிப்
பகர்வனஎல் லாமாகி அல்ல தாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத அறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
கெட்டுயிர்த்துப் பேரன்பால் நினைதல் செய்வாம்.

—பொருள் வணக்கம் 12.

வானாதி பூதமாய் அகிலாண்ட கோடியாய் மலையாகி வளைகடலுமாய்
மதியாகி இரவியாய் மற்றுள எலாமாகி வான்கருணை வெள்ள மாகி
நானாகி நின்றவனும் நீயாகி நின்றிடவும் நானென்ப தற்றிடாதே
நான்நான் எனக்குளறி நானுவிகாரியாய் நானறிந் தறியாமையாய்.

—ஆனந்தமான பரம் 7.

அவனே பரமும் அவனே குருவும்
அவனே யகில மனைத்தும்—அவனேதாம்
ஆனவரே சொன்னால் அவரே குருவெனக்கு
நானவனாய் நிற்பதெந்த நாள். —உடல் பொய்யுறவு 63.

ஒளியு மாய்நிறை வெளியுமாய் யாவுமாம் உரவோய்.

—எனக்கெனச் செயல் 22.

எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கங் கிருப்பதுநீ அன்றோ பராபரமே. —பராபரக்கண்ணி 84.

## உலகத் தோற்றம் மாயை

'உலகத் தோற்றம் உண்மையன்று' என்பது அத்வைதத்தில் சிறந்ததொரு கொள்கை. இதைத் தெரிவிக்கும் தாயுமானார் திருவாக்குகள் வருமாறு :

இந்திரசா லங்கனவு கானல்நீ ரென் வுலகம்

—பொருள் வணக்கம் 6.

வந்ததோர் வாழ்வுமோர் இந்த்ரசா லக்கோலம்.

—தேசோ மயானந்தம் 3.

..............................அகிலமாயை
கான்முயற் கொம்பே என்கோ கானலம் புனலே என்கோ
வான்முக *முளரி *யென்கோ மற்றென்கோ விளம்பவேண்டும்.

—தேன்முகம் 1.

(என்கோ - என்பேனோ ; முளரி - தாமரை)

கும்பிட்டுச் சகம் பொய்யெனத் தம்பட்ட மடியே.

—நினைவொன்று 6,

இந்தக் காயமோ பொய்யெனக் கண்ட திருவுரு வாளர்
அநுபவ நிலையும் சேருமோ. —ஆரணம் 9.

பொய்யா ருலகம் நிலையல்ல கானற் புனலெனவே
மெய்யா அறிந்தென்ன என்று விதனை விடப்படுமோ.

—பாயப் புலி 19.

பொய்யெலாம் ஒன்றுப் பொருத்தி வைத்த பொய்யுடலை.

—பராபரக் கண்ணி 78.

மின்னனைய பொய்யுடலை மெய்யென்று நம்பி ஐயோ

—பராபரக் கண்ணி 79.

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
ஆருந் துறக்கை அரிதரிது. —உடல் பொய்யுறவு 57.

ஆக்குவை மாயை யாவும் நொடியினில் அவற்றை மாள
நீக்குவை நீக்க மில்லா நினைப்பொடு மறப்பு மாற்றிப்
போக்கொடு வரவு மின்றிப் புனிதநல் லருளா னந்தத்
தாக்கவுஞ் செய்வா யன்றோ சச்சிதா னந்த வாழ்வே.

—ஆக்குவை 1.

பாராதி யண்டமெலாம் படற்கானற் சலம்போல்
பார்த்தனையே முடிவில்நின்று பாரெதுதான் நின்ற
தாராலும் அறியாத சத்தன்றோ அதுவாய்
அங்கிருநீ யெங்கிருந்தும் அதுவாவை கண்டாய்.

—நினைவொன்று 5.

எனதென்பதும் பொய் யானெனல் பொய்
எல்லா மிறந்த இடங்காட்டும்
நினதென்பதும் பொய் நீயெனல்பொய் நிற்கும்
நிலைக்கே நேசித்தேன். —தன்னையொருவர் 5.

விதிக்கும் பிரபஞ்ச மெல்லாம்—சுத்த
வெயில்மஞ்ச ளென்னவே வேதாகமங்கள்
மதிக்கும் அதனை மதியார்—அவர்
மார்க்கந்துன் மார்க்கஞ்சன் மார்க்கமோ மானே.

—ஆனந்தக் களிப்பு 28.

அண்டபகி ரண்டமு மாயா விகாரமே
அம்மாயை யில்லா மையே. —பரிபூரணானந்தம் 3.

ஐந்து பூதமுமொரு கான னீரென. —சிற்சுகோதய விலாசம் 3.

கடத்தை மண்ணெனல் உடைந்த போதோ விந்தக் கருமச்
சடத்தைப் பொய்யெனல் இறந்தபோ தோசொலத் தருமம்.
—ஆசையெனும் 31.

பொய்யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும் பொய்யெனவே.
—காண்பேனோ என் கண்ணி 6.

பொய்யெல்லாம் ஒன்றாய்ப் பொருத்தி வைத்த பொய்யுடலை
மெய்யென்றால் மெய்யாய் விடுமோ பராபரமே.
—பராபரக் கண்ணி 178.

உண்டுபோல் இன்றாம் உலகைத் திரமெனவுள்
கொண்டுநான் பெற்றபலன் கூறாய் பராபரமே.
—பராபரக் கண்ணி 274.

கானற் சலம்போன்ற கட்டுழலைப் பொய்தீர.
—எந்நாட் கண்ணி, ஆநந்த இயல்பு 12

இமையளவு போதையொரு கற்ப காலம் பண்ணும்
இவ்வுலகம் எவ்வுலகமோ
என்றெண்ணம் வருவிக்கும் மாதர்சிற் றின்பமோ
என்னில்மக மேருவாகிச்
சுமையெடுமி னென்றுதான் சும்மாடு மாயெமைச்
சுமையாளு மாக்கினாளுந்
துர்ப்புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையுஞ்
சூறையிட் டிந்த்ரசாலம்
அமையவொரு கூத்துஞ் சமைந்தாடு மனமாயை
அம்மம்ம வெல்ல எளிதோ. —சச்சிதானந்த சிவம் 4.

உற்றுணர்ந் தெலாம் நீயல தில்லையென் றுனையே
பற்றுகின்றனர் எந்தைநின் னடியார் யான்பாவி
முற்று மாயமாஞ் சகத்தையே மெய்யென முதல்தான்
அற்றி ருந்திடத் தொழில் செய்வான் தனைநிகரானேன்.
—எனக்கெனச் செயல் 28.

மெய்கண்ட தேவரை யுள்ளிட்டார் உலகத்தை மாயற்கொம் பென்றும் வான்மலரென்றும் ஓரிடத்திலும் கூறவில்லை; ஸ்ரீமத் சங்கர பகவத்பாத ஸ்வாமிகளை யுள்ளிட்டோர் உலகத்தை முயற் கொம்பென்றும் வான்மலரென்றும் கூறுகின்றனர். தாயுமான

வர், ஸ்ரீமத் பகவத் பாத ஸ்வாமிகளைப் பின்பற்றியே உலகத்தை மூயற்கொம்பென்றும் வான்மலரென்றும் கூறியிருக்கிறார்.

## சீவனும் பரம்பொருளும் வேறல்ல

'சீவனும் பரம்பொருளும் வேறல்ல' என்பது அத்வைதக் கொள்கை. அதை விளக்கும் சுவாமிகள் வாக்குகள் வருமாறு:

யானெனல் காணேன் பூரண நிறைவில் யாதினும் இருந்தபே ரொளிநீ
தானென்ன நிற்குஞ் சமத்துற என்னைத் தன்னவ னாக்கவுந் தருங்காண்
வானென வயங்கி யொன்றிரண் டென்னு மார்க்கமா நெறிதந்து மாறாத்
தேனென ருசித்துள் அன்பரைக் கலந்த செல்வமே சிற்பர சிவமே.

—சிவன் செயல் 10.

தானன் தன்மயமே யல்லால் ஒன்றைத்
தனியெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலும் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம் வேறின்றாம்
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவும் நழுவாமல் நழுவி நிற்கும்
ஆனாலும் இதன்பெருமை எவர்க்கார் சொல்வார்
அதுவானால் அதுவிவர் அதுவே சேர்விலும்.

—ஆகாரபுவனம் சிதம்பர ரகசியம் 22.

ஒன்றிரண்டாய் விவரிக்கும் விவகாரம் கடந்தேழாம்
யோகபூமி நின்று தெளிந்தவர். —மண்டலத்தின் 2.

தன்னை யறிந்தவர் தம்மைத் தானாகச் செய்தருளுஞ்
சமத்தை. —மண்டலத்தின் 5.

நீயென நானென வேறில்லை. —பாயப் புலி 58.

சித்தந் தெளிந்து சிவமானோ ரெல்லோர்க்கும்.
—பராபரக் கண்ணி 148.

அத்துவிதமான அயிக்ய அனுபவமே. —பராபரக் கண்ணி 293.

தன்மயமாய் நின்றநிலை தானே தானாகி நின்றால்
நின்மயமாய் எல்லாம் நிகழும் பராபரமே.
—பராபரக் கண்ணி 318

நீயேநான் என்று நினைப்பும் மறப்புமறத்
தாயே அனைய அருள் தந்தாய் பராபரமே.
—பராபரக் கண்ணி 377.

தானவனாந் தன்மை எய்தி. —எந்நாட் கண்ணி, நிற்குநிலை 14.

சச்சிதா னந்தசிவம் தானென்ப தென்னுளோ.

—எந்நாட் கண்ணி, நிலைபிரிந்தோர் கூடுதற் குபாயம் 8.

என்னையுந் தன்னையும் வேறு—உள்ளத்தெண்ணாத
வண்ணம் இரண்டற நிற்க. —ஆனந்தக் களிப்பு 14.

எங்குஞ் சிவமே இரண்டற்று நிற்கில் நெஞ்சே
தங்குஞ் சுகநீ சலியாதே—அங்கிங்கென்
றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே யானுன் பரம். —உடல் பொய்யுறவு 66.

கூடுதலுடன் பிரிதலற்று நிர்த்தொந்தமாய்.

—சின்மயானந்த குரு 8.

பேதமான
முன்னிலை யொழிந்திட அகண்டிதா காரமாய்
மூதறிவு மேலுதிப்ப
முன்பின்றெடு கீழ்மேல் நடுப்பக்கம் என்னுமல்
முற்றுமா னந்த நிறைவே
என்னிலைமை யாய்நிற்க இயல்பு கூடருள் வடிவம்
எந்நாளும் வாழி வாழி. —எங்கு நிறைகின்ற பொருள் 11.

முன்னிலைச் சுட்டொழி நெஞ்சே. —பாயப் புலி 23.

## அத்வைதச் சொற்பிரயோகத்தாலேயே இறைவனை அளத்தல்

நங் தாயுமான சுவாமிகள் "அத்துவிதம்" என்னும் சொல்லையே வெளிப்படையாகப் பல இடங்களிற் காட்டியிருப்பதும் இந்தச் சிவப்ரம்மாபேதத்தை வலியுறுத்துகிறது.

யாதொன்று பாவிக்க நான்
அதுவாதலா லுன்னை நானென்று பாவிக்கின்
அத்துவித மார்க்க முறலாம்.

—எங்கு நிறைகின்ற பொருள் 3.

அடிமுடியும் நடுவுமற்ற பரவெளி மேற்கொண்டால்
அத்துவித ஆனந்த சித்தமுண்டாம் நமது
குடிமுழுதும் பிழைக்குமொரு குறைவு மில்லை.

—நினைவொன்று 7.

அத்துவிதம் பெறும் பேறென் றறியாமல்
யானெனும் பேயகந்தையோடு
மத்தமதி யினர்போல மனங்கிடப்ப
இன்னமின்னம் வருந்து வேனோ. —ஆசையெனும் 9.

தாழ்வறவென் னுள்ளத்திருந்த தத்துவத்தை அத்துவித
சாரந்தன்னை. —மண்டலத்தின் 4.

அத்துவித அனுபவத்தை அநந்தமறை
யின்னமின்னம் அறியேம் என்னும்
நித்தியத்தை. —மண்டலத்தின் 7.

விட்டுப் பிரியாத மேலான அத்துவிதக்
கட்டுக்குள் ஆவதென்றே காண். —உடல் பொய்யுறவு 6.

## இறைவன் நிர்க்குணன் எனல்

'பரம்பொருள் நிர்க்குணமானது' என்னும் அத்வைத சித்தாந்தத்தை அடியிற் காணும் பகுதிகள் கூறுகின்றன.

சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே. —சுகவாரி 12.

நிர்க்குண விலாசமாய் வாக்குமனம் அணுகாத
நிர்மலா னந்த மயமாய். —சச்சிதாநந்த சிவம் 1.

நித்தியத்தை நிர்க்குணத்தை நிராமயத்தை. —மண்டலத்தின் 7.

## ஞானமும் முத்தியும்

ஞானத்தாலேதான் முத்தி பெற முடியும் என்பது அத்வைத சித்தாந்தம். அதை விளக்கும் தாயுமானவரின் திருவாக்குப் பகுதிகள் வருமாறு :

பத்திநெறி நிலைநின்று நவகண்டபூமிப்
பரப்பை வலமாக வந்தும்
பரவையிடை மூழ்கியும் நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றி யெழுநா
மத்தியிடை நின்றும்உதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்க டைத்தும்
மௌனத் திருந்தும் உயர் மலைநுழைவு புக்கியும்
மன்னுதச நாடி முற்றுஞ்
சுத்திசெய் தும்மூல ப்ராணனோ டங்கியைச்
சோம வட்டத் தடைத்துஞ்
சொல்லரிய அமுதுண்டும் அற்பவுடல் கற்பங்கள்
தோறும் நிலை நிற்க வீறு
சித்திசெய் துஞ்ஞான மலதுகதி கூடுமோ.
—சின்மயானந்த குரு 11.

போதம் என்பதே விளக்கொவ்வும் அவித்தைபொய் இருளாந்
தீதிலாவிளக் கெடுத்திருள் தேடவுஞ் சிக்கா
தாதலால் அறி வாய்நின்ற விடத்தறி யாமை
ஏது மில்லையென் றெம்பிரான் சுருதியே இயம்பும்.

—ஆசையெனும் 17.

யோகியர்க்கே ஞானம் ஒழுங்காம் பேரன்பான
தாகியரும் யோகம் முன்னே சார்ந்தோர் பராபரமே.

—பராபரக் கண்ணி 90.

விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே.

—பராபரக் கண்ணி 17.

பாசசா லங்கள்எலாம் பற்றுவிட ஞானவைவாள்
வீசுநாள் எந்நாள் விளம்பாய் பராபரமே.

—பராபரக் கண்ணி 176.

பராதி பூதநீ யல்லை—உன்னிப் பாரிந் திரியங் கரணநீ யல்லை
ஆராய் உணர்வுநீ என்றான். —ஆனந்தக் களிப்பு 9.

கருமருவு குகையனைய காயத்தின் நடுவுள்
களிம்புதோய் செம்பனைய யான்
காண்டக இருக்கநீ ஞானஅனல் மூட்டியே
கனிவு பெற உள்ளுருக்கி. —சின்மயானந்த குரு 7.

விண்ணவரிந் திரன்முதலோர் நார தாதி
விளங்குசப்த ரிஷிகள்கன வீணை வல்லோர்
எண்ணரிய சித்தர்மனு வாதி வேந்தர்
இருக்காதி மறைமுனிவர் எல்லா மிந்தக்
கண்ண கல்ஞா லம்மதிக்கத் தானே உள்ளங்
கையில் நெல்லிக் கனிபோலக் காட்சியாகத்
திண்ணியநல் லறிவாலிச் சமயத் தன்றோ
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தா ரென்றும்.

—ஆகார புவனம், சிதம்பர ரகசியம் 8.

தெருளத் தெருள அன்பர் நெஞ்சந்
தித்தித் துருகத் தெவிட்டாத
அருளைப் பொழியுங் குண முகிலே
அறிவா னந்தத் தாரமுதே. —தன்னை யொருவர் 8.

## ஜீவன்முத்தர் நிலை

இப் பிறவியில் இவ்வுடலை விடுவதற்கு முன்னமேயே முத்தி யடைய முடியும் என்பது அத்வைதக் கொள்கை. இவ்வாறு

முத்தி பெற்றவர்களே ஜீவன்முத்த ராகின்றனர். ஜீவன்முத்தி பெற்ற பெரியோர்கள் 'பித்தர்' போலவும் 'பேதையர்' போலவும் காணப்படுவர் என்றும், அவர்களுக்கு வேண்டுதல் வேண்டாமை யில்லை என்றும், தாயுமானர் கூறுகின்றார்.

மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
மருவி யேதுரிய வடிவமாய்
மன்னு தேசமொடு கால மாதியை
மறந்து நின்னடிய ரடியிலே —சிற்சுகோதய விலாசம் 9

பாலரொடு பேயர் பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே.
—பராபரக் கண்ணி 143.

படிமுழுதும் விண்முழுதுந் தந்தாலுங் களியாப்
பாலருடன் உன்மத்தர் பிசாசர் குணம் வருமே.
—நினைவொன்று 7.

பொற்பினொடு கைகாலில் வள்ளுகிர் படைத்தலால்
போக்கிடை யொடுக்க முறலால்
பொலிவான வெண்ணீறு பூசியே அருள்கொண்டு
பூரித்த வெண்ணீர் மையால்
*எற்பட விளங்கு கக னத்திலிமை யாவிழி
இசைந்துமேல் நோக்கம் உறலால்
இரவுபக லிருளான கனதந்தி படநூறி
இதயங் களித்திடுத லால்
பற்பல விதங்கொண்ட புலைகலையி னுரியது
படைத்துப் ப்ரதாப முறலால்
பனிவெயில்கள் புகுதாமல் நெடியவான் தொடர்நெடிய
பருமர வனங்க ளாரும்
வெற்பினிடை யுறைதலால் தவராச சிங்கமென
மிக்கொ ருமைப் புகழ்வர் காண். —சித்தர் கணம் 9.

என்று ஜீவன்முத்தர்களுக்கும் சிங்கத்திற்கும் மிக அழகாகச் சிலேடை நயம் விளங்கக் கூறுகிறார்.

மத்தமத கரிமுகிற் குலமென்ன நின்றிலகு
வாயிலுடன் மதி அகடு தோய்
மாடகூ டச்சிகர மொய்த்தசந் திரகாந்த
மணிமேடை யுச்சி மீது

* எற்பட - ஒளி பொருந்த. ககனம் - ஆகாயம்.

முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகை யார்களொடு
முத்துமுத் தாய்க்கு லாவி
மோகத் திருந்துமென யோகத்தின் நிலைநின்று
மூச்சைப் பிடித்த டைத்துக்
கைத்தல நகப்படை விரித்தபுலி சிங்கமொடு
கரடிநுழை நூழை கொண்ட
கானமலை யுச்சியிற் குகையூ டிருந்துமென்
கரதலா மலக மென்னச்
சத்தமற மோனநிலை பெற்றவர்க ளுய்வர்காண்
சனகாதி துணிவி தன்றோ. —சச்சிதானந்த சிவம் 6.

நினைவொன்று நினையாமல் நிற்கின் அகம் என்பார்
நிற்குமிட மேயருளாம் நிஷ்டையரு ளொட்டுந்
தனையென்று மறந்திருப்ப அருள்வடிவா னதுமேல்
தட்டியெழுந் திருக்குமின்பந் தன்மயமே யதுவாம்
வினையொன்று மிலையந்த இன்பமெனும் நிலயம்
பெற்றாரே பிறவாமை பெற்றார்மற் றுந்தான்
மனையென்றும் மகவென்றுஞ் சுற்றமென்றும் அசுத்த
வாதனையாம் ஆசையொழி மன்னொரு சொற்கொண்டே.
—நினைவொன்று 1.

காந்தமதை எதிர்காணிற் கருந்தாது
செல்லுமந்தக் காந்தத் தொன்று
தேய்ந்தவிடம் எங்கேதான் அங்கேதான்
சலிப்பறவும் இருக்கு மாபோல்
சாந்தபதப் பரம்பொருளே பற்றுபொரு
ளிருக்கு மத்தாற் சலிக்குஞ் சித்தம்
வாய்ந்த பொருள் இல்லையெனிற் பேசாமை
நின்றநிலை வாய்க்கு மன்றே. —ஆசையெனும் 21.

ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங் கடந்தேழாம் யோக பூமி
நின்றுதெளிந் தவர்பேசா மௌனநியா யத்தை நிறைநிறை வைத் தன்னை.
—மண்டலத்தின் 2.

## சமரசத்தன்மை சாற்றல்

சகுணப் பிரம்மோபாசனையில், அரி அரன் முதலிய மூர்த்தி களுக்குள் வேற்றுமை இல்லை என்பது அத்வைத சித்தாந்தம். இந்த சமரசக் கொள்கையை நம் அடிகள் மிக அழகாகக் காட்டுகிறார்.

"சின்மயானந்த குரு" நான்காம் பாசுரத்தில்

சைவமுத லாம் அளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்த மோன
சமரசம் வகுத்தநீ யுன்னையான் அணுகவுந்
தண்ணருள் வகுக்க இலையோ

என்று சிரகிரி விளங்கவரு தக்ஷிணாமூர்த்தியையும், "கருணாகரக் கடவுள்" ஐந்தாம் கவியில்,

மைவிடா தெழுநீல கண்டகுரு வேவிஷ்ணு
வடிவான ஞானகுருவே
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே
மதங்கள் தொறும் நின்ற குருவே

என்று சிற்சபையி லானந்த நிர்த்தமிடும் தெய்வத்தையும் வருணிக்கிறார். பின்னும், "பன்மாலை" எட்டாம் பாட்டில்

குன்றாத மூவுருவாய் அருவாய் ஞானக்
கொழுந்தாகி அறுசமயக் கூத்துமாடி

என்கின்றார். மேலும், நம் சுவாமிகள், சமய பேதங்கள் யாவும் ஆறுகள் எனவும் அவ் வாறுகள் சேரும் கடலே பெருஞ் சமயம் எனவும்,

ஆறணைத்தும் புகுங்கடல் போற் சமயகோடி
அத்தனையும் தொடர்ந்து புகும் ஆதிநட்பே

என்று ஆகாரபுவனம் சிதம்பர ரகசியம் மூன்றாம் பாடலிலும்,

நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞான ஆநந்த ஒளியே

என்று "மலைவளர் காதலி" முதற் பாடலிலும்,

ஆறெனத் திலங்கு சமயங்கள் ஆறுக்கும் ஆழ்கடலாய்
வீறிப் பரந்த பரமான ஆனந்த வெள்ளமொன்று
தேறித் தெளிந்து நிலைபெற்ற மாதவர் சித்தத்திலே
ஊறிப் பரந்தண்ட கோடியெல் லாம்நின் றுலாவி யதே.

—பாயப்புலி 11.

என்னும் பாடலிலும் இறைவனது சமரச நிலையை இந்த உவமை மூலமாக அழகுபட விளக்கியுள்ளார்.

"சித்தர்கணம்" பாடுகையில் பத்து கவிகளிலும் மகுடமாக,

வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே

என்றமைத்துள்ளார்.

## முடிவுரை

இவ்வாறு அத்வைத சித்தாந்தக் கருத்துக்களைப் பலவாறாக விதந்து கூறிய நம் தாயுமான சுவாமிகள், உலகில் தோற்றம் யாவும் மாயை எனக் கூறி, அம்மாயை ஒழிதற்கு மனம் பரிபாகப்பட்டு ஞானமுற வேண்டுமென்றும், அவ்வாறு ஞானநிலை கைவந்தவர், இறைவனை எங்கும் நிறைகின்ற சத்து-சித்து-ஆனந்த மயமாகக் காண்பார் என்றும், இத்தகைய இறைவனோடு ஒன்றுவர் என்றும் முடிவுகட்டுகிறார்.

> அத்துவித மான அயிக்ய அனுபவமே
> சுத்தநிலை அந்நிலையார் சொல்வார் பராபரமே.
>
> —பராபரக் கண்ணி 293.

என்பது மேலே எடுத்துக் காட்டப்பட்டது.

சுவாமிகள் முற்றத் துறந்த முழு ஞானி யாயினும் உலகினர் அனைவரும் சிவயோகத்தைக் 'காக முறவு கலந்துண்பது' போல ஒரு சேர அனுபவிக்கவேண்டும் என்னும் பரந்த பெரு நோக்கங் கொண்டு ஜனக்கூட்டத்திடை வாழ்ந்த சிவாநுபூதிச் செல்வராவர். இதனை,

> " எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
> அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே.
>
> —பராபரக் கண்ணி 221.

> எவ்வுயிருந் தன்னுயிர்போல் எண்ணுந் தபோதனர்கள்
> செவ்வறிவை நாடி மிகச் சிந்தை வைப்ப தெந்நாளோ?
>
> —அன்பர் நெறி 12.

> காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர் அகண்டா காரசிவ
> போக மெனும்பே ரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய்
> ஏக வுருவாய்க் கிடக்குதையோ இன்புற்றிட நாம் இனி எடுத்த
> தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாருஞ் சகத்தீரே.
>
> —காடுங் கரையும் 3.

என்று கட்டளையிட்டருள்கிறார். என்ன பரிவு! என்ன கருணை!

சிவம்

---

ஸ்ரீ:

ஸ்ரீ குருப்யோ நம:

# தமிழ் இலக்கியங்களில் அத்வைதம்

(ஸ்ரீ தேவ சங்கர டாக்கர்)

ஒன்றான பரம்பொருளே எல்லாமாய்த் தோற்றுகிறது என்பது அத்வைத சித்தாந்தம். இதற்கு உதாரணமாகிற தமிழ் பாடல்கள் வருமாறு :

ஞானனந் தச்சுடராய் நன்றாகி யொன்றான
தானா கியபடத்திற் றன்றன்னை—யானவா
யார்த்த கடலுலக மாமோ வியமெழுதிப்
பார்த்து மகிழ்ந்தான் பரன். —அமுதசாரம்.

ஆன கடங்க ளளவிலவற் றுட்புகுந்து
வானகந் தானின்ற வாறொக்கும்—யோனிகளெண்
பத்துநான் காயிரநா றாகப் படைத்தவற்று
ணித்தனார் நின்ற நிலை. —அமுதசாரம்.

அணுவென்பர் மாமாயை யென்ப ரணுவின்
புணர்வென்பர் பூதமே யென்பர் – குணமென்பர்
எவ்வேது வும்மோது கவிதற்கோ ரேதுவென்று
வவ்வேது வேயேது வாம். —அமுதசாரம்.

மன்னு முதற்பொருளின் மன்னாத விவ்வுலகம்
பின்ன மெனுமாறு பேசற்க—பொன்னே
யணியாவ தன்முன்னு மப்பொன்னே காய்ச்சி
மணியான போது மறித்து. —அமுதசாரம்.

உண்டு தேக்கிட் டெங்கு மொன்றானே னம்மானை
உண்மைக்கோ ருத்தரந்தா னில்லைகா ணம்மானை.
—திருவம்மானை.

பதியாகி யுறைபவனே மாயையெனும் பாசத்தாற் பசுக்களாகி
வதியா நிற்பன வெவையுங் கட்டிடுவன் முகைவிரிநாண் மலர்கடுவித்
துதியா மெய்ஞ்ஞானத்தால் தொழுதிடிலத் தொடர்ச்சியினை யகற்றித்தூய
கதிமேவி யமர்ந்துறையக் கண்ணிரங்கிக் கருணைபொழிந் திடுவன்றானே.
— இலிங்க புராணம்

நினைப்புமாய் மறப்புமாகி நினைவினுக் கெட்டா தொன்றாய்
அனைத்துமாய் நின்றாய் போற்றி யருமறைக் கொழுந்தே போற்றி
கனைத்துவண் டிமிரவிள்ளுங் கடுக்கையங் கண்ணியோடு
புனிற்றுவெண் டிங்கட்கண்ணி புனைந்த செஞ்சடையாய் போற்றி.

—இலிங்க புராணம்.

சிவன் முதலே யன்றி முதலில்லை. —திருக்களிற்றுப்படியார் 64.

அவனே யவனி முதலாயி னானு
மவனே யறிவாகி னானு—மவனேகா
ணாகிப் பெண்ணா யலியாகி நின்றானுங்
காணாமை நின்றானுங் கண்டு. —திருக்களிற்றுப்படியார் 88.

பொன்னிறங் கட்டியினும் பூணினு நின்றாற்போ
லந்நிற மண்ணலு மம்பிகையுஞ்—செந்நிறத்த
ளெந்நிறத்த னாயிருப்ப ளெங்கள் சிவபதியு
மந்நிறந்த னாயிருப்ப னங்கு. —திருக்களிற்றுப்படியார் 79.

மாய னயனை மறையவ னாய் மன்னுயிர்த் தொகை யனைத்தையு
மொடுக்கும்
பாயு மால்விடை யுருத்திர னாய் பன்னு மூவர்க்கு மூலமாய் நின்றாய்
ஞேய மாயினை ஞாதிரு வானாய் நிகழு ஞானமு மாயினை யெந்தாய்
வேய தோளுமை பங்குறை நீல மிடற்று னேதிருக் கயிலையுத் தமனே.

—கயிலைப் பதிற்றுப் பத்தந்தாதி 31.

மண்ணீர் விசும்பு கனல்கா லருக்கன் மதியாவி யென்னுமுறையா
லெண்ணீர் மைகொண்ட விவையெட்டு மன்றியுல கென்பதில்லை யிவையே
யண்ணா வுனக்கு வடிவாகு மென்னி லவைதோ றுயிர்க் குயிரதாங்
கண்ணான தெய்வமெவர் வேறுளார்கள் கயிலைப்பதிக் கிறைவனே.

—கயிலைப் பதிற்றுப் பத்தந்தாதி 69.

என்னை யுடையானும் ஏகமாய் நின்றானும்
தன்னை யறியாத தன்மையனும்.

—காரைக்கால் அம்மையார், அற்புதத் திருவந்தாதி 92.

இலகொளிய கதிரொன்று யிரம்புனல்பெய்
குடங்கடொறு மியைந்து நாளும்
அலகில்பல வுருவாகித் தோன்றுதல்போற்
சராசரங்க ளனைத்து மாகி
உலகமுழு வதற்குமொரு தனிக்கடவு
ளாகி யுலகளந்த மாலும்
மலரயனு மறியாதுநின்ற நின்றன் சேவடிகள்
வணங்கு வாமே.

—காசி காண்டம், சிவசன்மா தெய்வலோகங் கண்டது 46.

அணுவா மெவைக்கு மணுவா யிருத்தி யகிலங் கண்மூடி யொளிருந்
தணியாத வண்டவுருவா யிருத்திதரு பஞ்சபூத மதிவான்
மணியா மருக்க னுயர்சோம யாசிவடிவா யிருத்தி மறையுங்
கணியா திருத்தி நினையார் கணிப்பர் கலைகண்ணதாய பெரியோய்.

—கூர்ம புராணம் விச்சுவரூப. 22.

நித்திய மாகு மான்மா வேகமாய் நிகழ்த்து மாயா
சத்திய யளப்பில் பேத மாமுறு பேதஞ் சாற்றில்
வைத்தநீர்க் குடங்கடோறுந் தோன்றிடு மதியம்போல
வுய்த்திடு முபாதி தன்னாற் பற்பல வுருவந் தோன்றும்.

—கூர்ம புராணம் சாங்கிய யோக முரைத்த. 17.

விச்சு வாதிகனும் விசுவ சேவியனும் விமலனீயே யெனமறைக
ணிச்சய மாக முழக்கவு மறியா நீசர்தாம் பிணங்குவ ரந்தோ
மச்சரத் தனக்கே தீங்கிழைத் தவர்தம் வாழ்க்கையும் பயன்படாதாலத்
துச்சர்சொற் கேட்டோர்க் கிறுதலே தண்டஞ் சொற்றிடு நூலெலா மன்றே.

—சிவ தத்துவ விவேகம்.

முளரியோன் முதலாஞ் சுரரெலாம் பூத முதலவற் றேடுதித் துள்ளோர்
ரளவிடுந் தலைமை யாளரென் றவரை யகற்றிமால் விடையவ நினையே
வளமுறு மெல்லாத் தலைமையு முடையோன் வருமுதற் காரண னல்லோ
ருளமுறு தியானப் பொருளெனச் சிகைதேர்ந் துரைப்பவு மயங்குவர்
சிலரே. —சிவ தத்துவ விவேகம்.

குணங்களைக் கடந்தோ யெனினு மாயையினைத்
தோய்தலாற் குணமுடையவன்
அணங்கொரு பாலுங்கறை மிடற்றழகு
மம்பகமூன்று மாமுருக்கொண்
டிணங்குறு நாமஞ் சிவன்பவன் முதலா
வியைந்தயனரி யரன்மூன்
முணங்கிடா வுலகை நடத்துவோனகி
யோங்கினை நீங்கரும் பொருளே. —சிவ தத்துவ விவேகம்.

அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே
யறிவுதனை யருளினா னறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்களோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற்
பிறியாத சிவன்றனே பிறிந்துதோன்றிப்
பிரபஞ்சபேத மெல்லாந் தானாய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லா மல்லவாகி
நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னாயே.

—சிவஞான சித்தியார், சுபக்கம் 282.

சிவஞ்சத்தி நாதம்விந்து சதாசிவன் றிகழுமீசன்
உவந்தரு ளுருத்தி ரன்றான் மாலயனென்றி னொன்றாய்ப்
பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபயமொன்றாய்
நவந்தரு பேதமேக நாதனே நடிப்ப னென்பர்.

—சிவஞான சித்தியார், சுபக்கம் 164.

தோற்பாவைக் கூத்துந் தொல்லை மரப்பாவை யியக்க முஞ்சீர்த்
தேர்ப்பாரிற் செலவும் வேறாய்ச் செலுத்துவோர் செய்தி தானும்
பார்ப்பாய வேடங்கட்டி யாடுவோர் பரிசு போலும்
ஆர்ப்பாய காயந்தன்னை யான்மாநின் றாட்டு மாறே.

—சிவஞான சித்தியார், சுபக்கம் 214.

அவையே தானே யாய். —சிவஞான போதம் 2.

வானே வளியே யொளியே யறலே மண்ணேமற்
றானே யுயிரே கதிரே மதியென் றேரெண்மெய்
நானே யுடைய னென்பாய் மறையு நவில்கிற்கு
மானே றுடையா யடியேன் வேறே வருளாயே.

—சூத சங்கிதை, முத்திகா. 7, 34.

பிரமன் முதற்று பரமீறப் பேசாநின்ற வுலகமெலாம்
பரவு மந்தப் பரசிவனே பண்பாரந்தப் பரசிவன்றன்
சொருப ஞான முள்ளோனே துலங்குசீவன் முத்தனுங்
கருமமாதி களாற்சீவன் முத்தனுகான் கடைப்பிடிமின்.

—சூதசங்கிதை, எக்கிய வைபவ. 3, 8.

அத்தகு சத்தாவாகிய பிரமம் மண்கடாதியா றற்போல்
சுத்தமா முனிவீர் பற்பலவான சொரூபங்களாய்ப் பரிணமிக்கும்
உத்தமப் பிரமம் முலகமாய்த் தோன்ற லொளிதரு சுத்திவெள் பொன்னாய்
வித்தகமுறத் தோன்றிடுதலே போலும் வேதமு மிங்ஙன முரைக்கும்.

—சூத சங்கிதை, எக்கிய. 15, 6.

நிருமல சிவன்றன் மாயையாற் கறைப்போ னிருமிக்கப் பட்டனவெல்லாம்
மருவுகா ரியங்கா ரணத்திற்கு வேறு காமையின் மாயை ரூபந்தான்
பெருகுமா யையுமற் றதிட்டான மாகும் பிரமத்தின் வேறன தன்று
குருபர னருள்கைக் கொண்டுமுக் குறும்புங் கொன்றுயர்ந் தோங்கிய
முனிவீர். —சூத சங்கிதை, எக்கிய. 4, 12.

மிக்ககடா திப்பிரத்தி யேயத்தந் தக்கரண விருத்தியாலே
தக்க நித்திய வத்துவுந்தான் றேன்றுகின்ற தேதவிரத் தனியாய்நின்ற
முக்கணுடை யெம்பெருமாற் காளாய பெருந்தவத்து முனிவீர் மேலாம்
எக்கலைஞரும் புகல்வார் பரமார்த்த மாகவிலை யென்று மாந்தோ.

—சூத சங்கிதை, எக்கிய. 19, 3.

ஒன்றுமாய்ப் பலவுமாகி யுருவுமா யருவு மாகித்
தொன்றுமாய்ப் புதிது மாகித் தூரமாய்ச் சமீப மாகி
யின்றுமா யென்று மாகி யிருளுமா யொளியுமாகி
நன்றுமாய்த் தீதுமாகி நயந்தரும் பொருளே போற்றி.

—சூத சங்கிதை, சிவமான்மிய. 2, 30

ஊட்டுவிப்பானு முறங்குவிப் பானுமிங் கொன்றொ டொன்றை
மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்றவினை
காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே.

—பட்டினத்துப் பிள்ளையார், திருத்தில்லை 11

கடத்துறை வானுமக் கடமுடைக் கில்வா
னிடத்தொடு மொன்றுபட் டிருக்கு மாறுபோற்
சடத்துறை யுணர்வுமச் சடந்த ணக்கினீங்
கடக்கரும் பரத்திலொன் றாகி வைகுமே.

—பாகவதம், பரிட்சித்து வீடுபெற்ற. 5.

அருவ மாமறி வானவ னுக்கைகள் பலவும்
ஒருவ னாகியே யுறைகுவ னென்பதை யுணர்ந்தேன்
பருதி வானவ னொருவனே யாய்ப்பல கடத்தின்
மருவு நீர்தொறு நிழல்பல வாயுற மதித்தே.

—பாகவதம், ஆசிரியரை யுரைத்த. 10.

அன்பு செய்வதிக் கரிதிலை யன்புசெய் வதுதான்
பொன் பிறங்கிய வணியெலாம் பொலிந்திருப் பதுபோன்
மன் புகழ்ச்சரா சரங்களாய் மாயனென் றுரைக்கு
நன் பெரும்பொரு ளிருக்குமென் றுளத்து ணுடுவதே.

—பாகவதம்.

எங்கு மாய்நிறைந் திலங்கிய ஞானவா ரிதியிற்
பொங்கு தெண்டிரை நுரைவரும் புற்புத மெனவே
யங்கண் மாநில முதலிய வுலகங்க ளனைத்துந்
தங்கி நின்றெழும் வேறுவே றறிவிலர் சாற்ற.

—பாகவதம், நைமிசமடைந்த. 3.

மறிந்து தோன்றிய திரைநுரை குமிழிமற் றனைத்துஞ்
சிறந்து தோன்றுமந் நீரலாற் றெரிக்கில்வே றிலைபோற்
குறைந்து தோன்றிய வுலகங்க ளனைத்தையுங் குறிக்கி
னிறைந்து தோன்றுநல் லறிவலா னிகழ்த்தவொன் றிலையால்.

—பாகவதம், நைமிசமடைந்த. 4.

சேலமாய்ச் சேலத்துற்ற சித்திரம் பலவா மாபோல்
ஞாலமே முதலவாகி நவையறு முயிர்களாகிக்
காலமாய்க் கருவியாகிக் காரண மாகியொன்ருய்
மூலமாயழி வொன்றின்றி முதன்மையாம் பிரமம் வைகும்.

—பாகவதம், பிரளய முரைத்த. 11

கண்ணகன்றிடு மிடத்துளவான் கடத்துளவான்
எண்ணநின்றன போகவொன்ரு யியைந்ததனல்
பண்ணுகின்றதன் மாயையிற் பற்பல படைப்பாய்
நண்ணுகின்றவும் பிரமமொன் றுருவென வறிந்தேன்.

—பாகவதம், ஆசிரியரை யுரைத்த. 8.

உறைவிருவிட னின்றெ[illegible] [illegible]றையும் வாஞென்ருல்
குறைவுருவகை க[illegible] [illegible]கூறுமொன் ருலும்
மறைவுருதொரு [illegible] மன்னுது மற்றெங்கும்
நிறைவுரு துவைகாதென நினைந்தனன் பிரமம்.

—பாகவதம், ஆசிரியரை யுரைத்த. 9.

மண்ணினுயை விகாரமுமம் மண்ணே யந்த மண்ணெழித்துப்
பண்ணினுரும் பிறரில்லை பண்ணப்பட்ட பலபொருள்க
ளெண்ணினுகு வதன்முன்பு மிறந்தபொழுது நிகழ்விடத்துங்
கண்ணினுடி மண்ணெழியக் கண்டா ருாரோ கட்டுரைப்பாய்.

—பகவற் கீதை.

குடந்தொறுந் தோன்று கின்ற வாகாயமும் குலைதற் கேற்பத்
தடம்புன ரேறுந் தோன்றுஞ் சந்திரன் ருனு மென்ன
வுடம்புக டோறும் வேரு யுயிரென நின்றே யந்த
விடம்படு புலன்க ளாறு மியல்பினி லியற்று வேனன். —பகவற் கீதை.

மேவரு ஞானனந்த வெள்ளமாய் விதித்தோ ஞகி
மூவரு மாகியந்த மூவர்க்கு முதல்வனுகி
யாவரும் யாவுமாகி யிறைஞ்சுவ ரிறைஞ்சப் பற்பல்
தேவரு மாகிநின்ற செங்கண்மா லெங்கள் கோவே.

—பாரதம், முதற் போர்ச். 1.

உம்பரு முனிவர்தாமும் யாவரு முணரா வொன்றை
யிம்பரின் றுனக்கு நானே யிசைவுற வுணர்த்தாநின்றேன்
ஐம்பெரும் பூதத்தானு மமைத்தன வுடலம் யார்க்கு
நம்பனு மொருவ னுள்ளே ஞானியாய் நடத்துகின்றுன்.

—பாரதம், முதற் போர்ச். 5.

நிற்பன நடப்பன யாவு நேர்ந்திடிற்
பொற்புறு சடையவ னுருவம் போலுமால்

அற்புதப் படிவிவ்வா றமர்வ னென்றதைச்
சொற்படு பசுக்கடாந் தோன்ற வோர்ந்திடா. —வாயு சங்கிதை.

மண்ணாய்ப் புனலாய்க் கனலாய் வளியாகி
விண்ணா யிருசுடரா யித்தனையும் வேறாகிப்
பண்ணா யிசையாய்ப் பனுவலா யெங்கண்ணுங்
கண் ணாை யென்னுறுகண் காணுவா றென்கொல்லோ.
—திருவிளையாடற் புராணம், நரியைப் பரியாக்கிய படலம், 21.

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலா
யெல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்துக் காட்டிச் [வாம்.
சொல்லாமற் சொன்னவரை நினையாம னினைந்துபவத் தொடக்கை வெல்
—திருவிளையாடற் புராணம், பாயிரம் 13.

கேள்விமுதற் பாவனையாற் கிளருமனு பூதியுறக் கிடைத்த வின்பத்
தாள்வினையான் மரங்கரியா ளாயுறுமா மதுபோல வகில முற்றுங்
கோள்விலக்கும் பிரமமதாங் குறிமருவிச் சித்தானந்த குணத்தி னாகி
நாள்விழியா தின்பமுற நலமலியுஞ் சீவன்முத்தி நயத்தி னாலும்.
—வேதாரணிய புராணம்.

ஆனந்த வுருவமாகி யமலமா யறிவுமாகி
வானந்த மாயவெல்லா வுலகுமாய் மதித்தலோடுந்
தானந்த மின்றிச் சத்தாய்த் தற்பரந் தானாயின்ப
மோனந்த நிலைமையாகு முதல்வனே போற்றி போற்றி.
—வேதாரணிய புராணம்.

அலகி றந்தபல் விகற்பமு மீசனு மாவியு மயன்மாலு
மிலகு மந்தரி யாமியு முலகுரு விறைவனும் பதமூன்றிற்
குலவு மப்பயன் கொண்டிடு முபாதியிற் குறித்த மூர்த்தி கண்மற்றும்
பலவு மாயுளம் பற்றறும் பிரமமாம் பரமனிற் பணிவாமே.
—வேதாரணிய புராணம்.

கனவி னுற்றிடும் பொருளெலா மோர்ந்திடிற் காண்பவன் றனேயா
மனவி கற்பமா மிவையெலா நீயலான் மற்றிலை மறைதேடு
மனக மாயுள தாய்ச்சிதா னந்தமா யகண்டமா யருண்மேவித்
தனது தாளுறு மன்பருக் கின்பமாந் தலைவனிற் பணிவாமே.
—வேதாரணிய புராணம்.

கால தேசமும் பொருள்களும் வரையறை காண்பதற் கரிதாகி
மூல மாகியவ் வியத்தமாய்ப் புருடனாய் முழுமுத றனேயா
யேல வித்திற மிதுவென வுணர்வுறா தெல்லையற் றனையாள்வான்
ஞால மார்மறை வனத்தமர்ந் தருள்செயு நாதனிற் பணிவாமே.
—வேதாரணிய புராணம்.

"உபாதிக்கே பிறவி அறிவினுக்கு அன்று" என்பதை தெரிவிக்கும் பாடல்கள்.

பிறத்தலு மிறத்தலும் பேசி லாக்கைக
ளுறத்தகு முண்மையா யுற்ற நல்லுயிர்க்கு
அறத்துறை யரசவக் குணங்க ளின்மையா
லிறத்தமற் றுனக்கிலை யென்றும் வைகுவாய்.

—பாகவதம், பரிட்சித்து வீடு பெற்ற. 7.

விளங்கு மெய்ப்பொரு ளாக்கைமே வினுமதன் குணங்க
ளுளங்கொ டெண்ணிலப் பொருட்கிலை யென்பது மோர்ந்தேன்
களங்க மென்பது மதிக்கிலை கருதுமக் களங்கம்
வளங்கொள் பூமியின் சாயையென் பாரதை மதித்தே.

—பாகவதம், ஆசிரியரை யுரைத்த. 12.

"உலகத் தோற்றம் உண்மை யன்று" என்பது அத்வைத சித்தாந்தம். அதை விளக்கும் உதாரணங்கள் வருமாறு :

மெய்யான தொன்றுமே மெய்யான தம்மானை
மெய்யன்றி மற்றெல்லா மித்தைகா ணம்மானை. —திருவம்மானை.

கானலை நீரென்று கண்டு பருகிடக் காதலித்தே
போனவர் தாமய லென்றது கொண்டு பொருந்துவபோல்
ஆன சகத்தி லடைந்த பொருளிவை யானதெல்லாம்.

—அறிவானந்த சித்தியார்.

விரிந்ததுபூ தங்களி னோடு விளம்பிந் தியங்கள் தத்துவங்கள்
திருந்தா கங்கா ரத்தினொடு செறிமுக் குணங்கள் மாத்திரைகள்
பொருந்து மாயை சீவனிவை பொய்யாம் யாமே பொய்யின்றி
யிருந்தெவ் விடத்து நிலைபெறுவோ மதனாற் றுணு வெனவிசைப்பர்.

—இலிங்க புராணம்.

காட்டினை னுலகெலாங் கனவு போன்மென.

—இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி 90.

இல்லையெனு மாயையி லிட்டனை நீ. —கந்தரனுபூதி 29.

மனைமக்கள் கடும்பு மடந்தையர் பொன்
னெனவிப்படி யெய்தி மயக்கி யிடுந்
தனை யெய்ப்புறு மாயை விலாசமெலாங்
கனவிற் கழியாய் கலசைக் கிறையே.

—கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதி 6.

கானலிடைத் தெண்ணீருங் கயிற்றினில்வா ளரவுமலை கடலிற்பட்ட
கூன்முதுகிப் பியிற்சொற் [illegible] வெள்ளியு மம்முதலுண்மை குறிக்கிற் றீரும்

அற்புதப் படவிவ்வா றமர்வ னென்றதைச்
சொற்படு பசுக்கடாந் தோன்ற வோர்ந்திடா. —வாயு சங்கிதை.

மண்ணாய்ப் புனலாய்க் கனலாய் வளியாகி
விண்ணா யிருசுடரா யித்தனையும் வேறாகிப்
பண்ணா யிசையாய்ப் பனுவலா யெங்கண்ணுங்
கண்ணா யென்னுறுகண் காணுவா றென்கொல்லோ.

—திருவிளையாடற் புராணம், நரியைப் பரியாக்கிய படலம், 21.

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலா
யெல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்துக் காட்டிச் [வாம்.
சொல்லாமற் சொன்னவரை நினையாம னினைந்துபவத் தொடக்கை வெல்

—திருவிளையாடற் புராணம், பாயிரம் 13.

ணக்கு
கேள்விமுதற் பாவனையாற் கிளருமனு பூதியுறக் கிடைத்த வின்பத்
தாள்வினையான் மரங்கரியா ளாயுறுமா மதுபோல வகில முற்றுங்
கோள்விலங்கும் பிரமமதாங் குறிமருவிச் சித்தானந்த குணத்தி னாகி
நாள்விழியா தின்பமுற நலமலியுஞ் சீவன்முத்தி நயத்தி னாலும்.

—வேதாரணிய புராணம்.

ஆனந்த வுருவமாகி யமலமா யறிவுமாகி
வானந்த மாயவெல்லா வுலகுமாய் மதித்தலோடுந்
தானந்த மின்றிச் சத்தாய்த் தற்பரந் தானாயின்ப
மோனந்த நிலைமையாகு முதல்வனே போற்றி போற்றி.

—வேதாரணிய புராணம்.

அலகி றந்தபல் விகற்பமு மீசனு மாவியு மயன்மாலு
மிலகு மந்தரி யாமியு முலகுரு விறைவனும் பதமூன்றிற்
குலவு மப்பயன் கொண்டிடு முபாதிபிற் குறித்தமூர்த்தி கண்மற்றும்
பலவு மாயுளம் பற்றறும் பிரமமாம் பரமனிற் பணிவாமே.

—வேதாரணிய புராணம்.

கனவி னுற்றிடும் பொருளெலா மோர்ந்திடிற் காண்பவன் றானேயா
மனவி கற்பமா மிவையெலா நீயலான் மற்றிலை மறைதேடு
மனக மாயுள தாய்ச்சிதா னந்தமா யகண்டமா யருண்மேவித்
தனது தாளுறு மன்பருக் கின்பமாந் தலைவனிற் பணிவாமே.

—வேதாரணிய புராணம்.

கால தேசமும் பொருள்களும் வரையறை காண்பதற் கரிதாகி
மூல மாகியவ் வியத்தமாய்ப் புருடனாய் முழுமுத றானேயா
மேல் வித்திற மிதுவென வுணர்வுறு தெல்லையற் றெனையாள்வான்
ஞால மார்மறை வனத்தமர்ந் தருள்செயு நாதனிற் பணிவாமே.

—வேதாரணிய புராணம்.

"உபாதிக்கே பிறவி அறிவினுக்கு அன்று" என்பதை தெரிவிக்கும் பாடல்கள்.

பிறத்தலு மிறத்தலும் பேசி லாக்கைக
ளுறத்தகு முண்மையா யுற்ற நல்லுயிர்க்கு
அறத்துறை யரசவக் குணங்க ளின்மையா
லிறத்தமற் றுனக்கிலை யென்றும் வைகுவாய்.

—பாகவதம், பரிட்சித்து வீடு பெற்ற. 1.

விளங்கு மெய்ப்பொரு ளாக்கைமே லினுமதன் குணங்க
ளுளங்கொ டெண்ணிலப் பொருட்கிலை யென்பது மோர்ந்தேன்
களங்க மென்பது மதிக்கிலை கருதுமக் களங்கம்
வளங்கொள் பூமியின் சாயையென் பாரதை மதித்தே.

—பாகவதம், ஆசிரியரை யுரைத்த. 12.

"உலகத் தோற்றம் உண்மை யன்று" என்பது அத்வைத சித்தாந்தம். அதை விளக்கும் உதாரணங்கள் வருமாறு:

மெய்யான தொன்றுமே மெய்யான தம்மானை
மெய்யன்றி மற்றெல்லா மித்தைகா ணம்மானை. —திருவம்மானை.

கானலை நீரென்று கண்டு பருகிடக் காதலித்தே
போனவர் தாமய லென்றது கொண்டு பொருந்துவபோல்
ஆன சகத்தி லடைந்த பொருளிவை யானதெல்லாம்.

—அறிவானந்த சித்தியார்.

விரிந்ததுபூ தங்களி னோடு விளம்பிந் தியங்கள் தத்துவங்கள்
திருந்தா கங்கா ரத்தினொடு செறிமுக் குணங்கள் மாத்திரைகள்
பொருந்து மாயை சீவனிவை பொய்யாம் யாமே பொய்யின்றி
யிருந்தெவ் விடத்து நிலைபெறுவோ மதனாற் றுனு வெனவிசைப்பர்.

—இலிங்க புராணம்.

காட்டினா னுலகெலாங் கனவு போன்மென.

—இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி 90.

இல்லையெனு மாயையி லிட்டனை நீ. —கந்தரனுபூதி 29.

மனைமக்கள் கடும்பு மடந்தையர் பொன்
னெனவிப்படி யெய்தி மயக்கி யிடுந்
தனை யெய்ப்புறு மாயை விலாசமெலாங்
கனவிற் கழியாய் கலசைக் கிறையே.

—கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதி 6.

கானலிடைத் தெண்ணீருங் கயிற்றினில்வா ளரவுமலை கடலிற்பட்ட
கூன்முதுகிப் பியிற்றோற்றும் வெள்ளியு மம்முதலுண்மை குறிக்கிற் றீரும்

ஆணவைபோ னினையறியிற் றேற்றுசக மனைத்து நில்லாதழியு மாற்று றேனவிழ்பூங் கடுக்கையணி செல்வநின தறைகழற்றுட் சென்னி சேர்ப் பாம். —காசிக் காண்டம், சிவசன்மா தெய்வலோகங் கண்டது 47.

ஆதலால் பிரமமொன்றே நித்தியம் அலகைத் தேரிற்
பேதுறத் தோன்று நீரிற் பிரபஞ்சம் மருண்டு தோன்றும்.
—கூர்ம புராணம், சாங்கிய யோக முரைத்த. 25.

மாயையைக் கடிந்த வான்மா (பிரமம்) மாயையாஞ் சகத்தைநாளு
மோய்வற நடத்தே னென்னை யின்றிமற் றதுவு மொல்லா
தாயவை யென்சொ லென்னிற் காந்தமுன் னூசி
யேயுற வென்மு னிந்த விருஞ்சக நடக்கு மன்றே. —ஷை. ஷை. 33.

துயிற்றா வீப்பி வெள்ளி குற்றியிற் கள்வன் மிக்க
வெயிற்படு கானற் றெண்ணீர் விண்ணிற்கந் தருவவூர்போல்
இயற்படு நித்தசச்சி தானந்த சிவத்தின் கண்ணே
செயப்படு பொருளாய்த் தோன்றுஞ் செப்பிய வுலக மன்றே.
—சித்தாந்த சிகாமணி.

சட்டெனத் தெளிந்தான் சர்ப்ப மிரச்சுவிற் காணுதாற் போற்
கட்டின பாசம் விட்டாற் கண்டிலன் பெத்தம் பின்பு
சிட்டநற் சுபாவமேயாஞ் சீவன்முத் தன்றே கத்தை
விட்டபின் பரமமுத்தன் வியோமம் போற்கடா காசத்தில்.
—சிவாகமார்த்த தரிசனம்.

உலகமெலாம் அலகைத் தேராம். —சிவஞான சித்தியார்.

மலமாயை கன்மமாயே யந்தீரோ தாயிமன்னிச்
சலமாரும் பிறப்பிறப் பிற்றங்கி யித்தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டங் கறங்கென நிமிடத்தின்க
ணலமாரு மிறைவனுணை யாலுயிர் நடக்கு மன்றே.
—சிவஞான சித்தியார், சுபக்கம் 178.

மண்டனில் வாழ்வும் வானத்தரசயன் மாலார் வாழ்வு
மெண்டரு பூதபேத யோனிகளி யாவு மெல்லாம்
கண்ட விந்திரமா சாலங்களுகழு திரதங் காட்டி
உண்டு போலின்றும் பண்மி னுலகினை யசத்துமென்பர்.
—சிவஞான சித்தியார், சுபக்கம் 242.

மோக மிகவுயிர்க டொறு முடனாய் நிற்கு
மூலவாணவமொன்று முயங்கிநின்று
பாகமிக வுதவு திரோதாயி யொன்று
புகர்மாயை யொன்று படர்கன்ம மொன்று

தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரு மாமாயைத் திரட்சி யொன்றென்
றுகமல மைந்தென்பர் ஐந்துமாரு
தருளென்ப தரிதென்ப ரறிந்து ளோரே.

—சிவப்பிரகாசம் 32.

எங்குஞ் சிவமொழிய வில்லையவன் றன்னுணை
யங்கந் திரள்கருவி யானவமாம்—பொங்குமிருண்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
பொய்பொய்பொய் பொய்பொய் பொய்பொய்.

—சிவானந்த மாலை.

பார்த்தேன் உலகப் பரப்பெல்லாம் பார்த்தளவில்
பேய்த்தேர் போலில்லையாய் பேரறிவே கண்டனமே.

—சிவானுபூதி விளக்கம்.

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலின்
சத்தே யறியாது அசத்தி லதறியாது
இருதிற னறிவுள திரண்டலா ஆன்மா. —சிவஞான போதம் 7.

உணருரு அசத்து —சிவஞான போதம் 6.

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

—சிவஞான போதம் 9.

இப்பியற் பிராந்தியாலே யிரசிதந் தோன்றுமாபோல்
மெய்ப்படு மென்னிலிந்த வியன்சக முதித்த தென்றே.

—சிவஞான வள்ளலார்.

சாற்றுமா யாநிவர்த்தி தானதிட் டானமாய
தோற்றுசை தன்னி யத்தின் சொருபமா னதுமற் றின்ப
மாற்றுமந் நிவிர்த்தி தானு மபாவமா மனைய மாயை
யாற்றருஞ் சதசத் திற்குப் பின்னமாய் வயங்கு மாலோ.

—சூத சங்கிதை, எக்கிய. 2, 6.

நீடிய தலைகா லெங்கு நிரைமயிர்த் தோலினூலே
மூடிய வுடலுங் காணுங் கனவெனு முளத்த ஞெ

—தேவிகாலோத்தரம்.

சத்தி பாதலந் தான் முதலீறதா
வைத்த வைய மெல்லாம் அசத் தாதலால் —தேவிகாலோத்தரம்.

தொன்மை யுலகுயி ரில்லை
தோன்றுவ தெல்லாம் அசத்து —தேவிகாலோத்தரம்.

வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்
பொருந்துத லுனே புதுமை—திருந்திழாய்
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு. —நன்னெறி 12.

மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வும் மனையுஞ் செந்தீ
யையா நின்மாயை யுருவெளித் தோற்றம் அகிலத்துள்ளே
மெய்யாயிருந்து நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனதுவே.
—பட்டினத்துப் பிள்ளையார், திருத்தில்லை முதலியன 93.

மாயப்
பேய்த்தேர் போன்று நீப்பரு முறக்கத்துக்
கனவே போன்று நனவு பெயர்பெற்ற
மாய வாழ்க்கையை மதித்து.
—பட்டினத்துப் பிள்ளையார், கோயி னான்மணிமாலை 28.

எந்தைநின்
திருவருள் நாட்டங் கருணையிற் பெறலும்
யாவையு மெனக்கும் பொய்யெனத் தோன்றி
மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை
ஓவியப் புலவன் சாயல்பெற வெழுதிய
சிற்ப விகற்ப மெல்லா மொன்றித்
தவிராது தடவினர் தமக்குச்
சுவராய்த் தோன்றுந் துணிவுபோன் றனவே.
—பட்டினத்துப் பிள்ளையார், திருக்கழுமல மும்மணிக்கோவை 10.

மாய நட்போரையு மாயா மலமெனு மாதரையு
வீய விட்டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் றாதையைக் கூடிப்பின் றாயைமறந்
தேயுமதே நிட்டையென்று னெழிற் கச்சியே கம்பனே.
—பட்டினத்துப்பிள்ளையார், திருவேகம்பமாலை 10.

அஞ்சக் கரமெனுங் கோடாலி கொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரற வெட்டி வளங்கள் செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவ மென்கின்ற வித்தையிட்டுப்
புஞ்சக் களைபறித் தேன்வளர்த்தேன் சிவ போகத்தையே.
—பட்டினத்துப் பிள்ளையார், திருத்தில்லை முதலியன 87.

பொய்வகை யாகுமாயைப் புணர்ப்பினுற் பட்டதன்றி

—பாகவதம், கபிலர் தத்துவ முரைத்த. 14.

உரைத்திடு கனவுபோல வுபாதி
பொய்யாகு மென்றும்.—பாகவதம், கபிலர் தத்துவ முரைத்த. 16.

பொய்ம்மையா மூடற் பொருளினுல்.

—பாகவதம், இரணியனைக் கொன்ற. 13.

கானனீர்போல் வையக மாதிய
வழங்கிய வுலக மெல்லாம். —பாகவதம்.

பொருதுகுலத் துரியவரைப் போக்கி யிந்நிலம் புரக்கும் புகழிற்காணில்
சருகுநுகர்ந் துயிர்வாழ்த லறமாகு மிக்கதிது தானே யென்னிற்
கருதுடல மிளமை செல்வ நிலையாவென் பவைபடிறே கண்டுபேய்த்தேர்
பருகுபுன லெனவிழியும் பரிசேயிங் கியாமுயன்ற பான்மையெல்லாம்.

—பாகவதம்.

ஐவகைப் பொருளும் நான்கு கரணமும் குணங்கள் மூன்றும்
செய்வினை யிரண்டு மொன்றி யாவருந் திகைப்பநின்ற
பொய்யிரு ளகல ஞானப் பொருட்கதிர் விரித்த புத்தேள்.

—பாரதம்.

கனவுந் திகழ் கழுதாழியுமிகு கந்தர்வ நகரும்
எனவந் தழிதலினு லுருவது வின்றியது யாது. —பாரதம்.

மந்திர மாய விந்த மரத்தினைத் துற வென்கின்ற
தந்திர வாளால் வெட்டித் தற்பர மாகிநின்றே
இந்திர சாலமென்ன யாவுமென் னிடையே காட்டும். —பாரதம்.

தாயரொடு தந்தையர்க டாரமொடு தனையோர்
தூயதுணை வோர்களொடு சுற்றமென நின்றோர்
மாயையெனும் வல்லப மயக்குற மயக்கர்
லாயவுற வல்லதவ ரார்முடிவில் யார்யார்.

—பாரதம், பதின்மூன்றும் போர்ச. 176.

வந்துபிற வாதமனை யில்லைமுலை மாறித்
தந்துபரி யாமலொழி தாயர்களு மில்லை
புந்தியுணர் வற்றவர் புலம்புறுவ தல்லா
லிந்தவுல கத்தறிஞர் யாதினு மயங்கார்.

—பாரதம், பதின்மூன்றும் போர்ச. 171.

உம்மையினும் யாருற வுணர்ந்தில மினிப்போ
மம்மையினும் யாவருற வாவரென வறியே

மிம்மையி னிகழ்ந்தவுற வித்தனை யிரங்கன்
மும்மையு முணர்ந்துவரு மூதறிவி னீரே.

—பாரதம், பதின்மூன்றும் போர்ச். 172.

மாயையென் றொருத்திதன்பால் மனமெனு மைந்தன் றோன்றித்
தூயநல் லறிவான் றன்னைத் தோற்றமின் றாக்கி வைத்தான்
றாயொடு தந்தைமக்க டாரமென் றிவர்பால் வைத்த
நேயமு மவன்றனாலே நிகழ்ந்ததோர் நினைவு கண்டாய்.

—பாரதம், முதற் போர்ச் சருக்கம் 2.

மெய்ம்மை சிவமே யல்லாமல் விரியு முலகம் பொய்யென்பார்
இம்மை மறுமை நிலையல்ல வென்ன நிகழ்ந்த கருத்தினர்.

—பிரபுலிங்க லீலை, விமலை கதி 19.

கானலைநீ ரன்றென்று காட்டக் கண்டா னொருவன்
மானலநீ ரென்று மயங்கல்போல் — நீ நலமாய்ப்
பொய்யுலகம் பொய்யாகக் காட்டியும் போரூரனே
மெய்யென வுண் ணேனந்தேன் மிக.

—திருப்போரூர் சந்நிதி முறை, மாலை 63.

இந்த்ர ஜாலம் பொய் யென்றதன் மூலத்தை
இயம்பிக் காட்டக் கண்டோன் மயக்கெய்தல்போல்
பந்தஜாலம் பொய்யென்றிதன் மூலம் நீபகரக்
கண்டிடும் படிறேன் மயங்கினேன்.

—திருப்போரூர்ச் சந்நிதி முறை, சித்தொளி 6.

பழுதையென் றுணரினதின் முனர்த்தோன்றும்
 பாம்புப் பழுதை யானதுபோல்
முழுதுணர்ந் தறிவாந் தன்னையே காணின்
 முரணுறு சராசர மெவையும்
எழுதரு மறிவாய் விளங்குமென் றிசைத்தென்
 எழுபவந் துடைத்தெனை யளித்தாள்
கெழுமணி முத்தா நதிசெறி விருத்த
 கிரியமர் பெரிய நாயகியே. —விருத்தாம்பிகை துதி.

பொய்யுலகை மெய்யாகப் பேதிக்குஞ் சித்தவோ.

—திருவிளையாடற் புராணம், பரிநரியாக்கி வைகை யழைத்த பட. 50.

வந்தவிப் பத்தி யாலே மாயையின் விருத்தி யான
பந்த மாம் பவஞ்ச வாழ்க்கை விளைவினுட் பட்டதுன்பம்
வெந்தது கருணையாகி மெய்யுணர் வின்பந் தன்னைத்
தந்தது பரதஞ் சூட்டித் தன்மய மாக்கிற் றன்றே.

—திருவிளையாடற் புராணம், மண்சுமந்த படலம் 72.

மயக்க முற்றவ னிந்திர சாலமா வாரியுற் றிடைமாய்ந்தே.
துயக்க முற்றிடு மூல்குயிர் மெய்யெனத் துணிந்தவ னவன்போலாம்.
வியக்கு மிந்திர சாலமென் றுணர்ந்தவன் வேலைவீ ழினுமின்பாய்
நயக்கு மிச்சகம் பொய்யென வுணர்ந்தவ னனுகு மின்மின நாளும்.

—வேதாரணிய புராணம்.

இல்ல தாயினு முண்மையிற் றோற்றிடு மிதுவிறும் பூதென்றுங்
கொல்லை யோர்ந்திடு பூலகுமற் றவத்தையி னெழிதலால் வியப்புற்றே
யல்லை மேவிய கனவுறும் பொருளென வடைந்த சாக்கிரத்தானு
மெல்லை போகிய பல்பொருள் கண்டுளத் திகழ்ந்திடு நகையேய்ந்தே.

—வேதாரணிய புராணம்.

தனது சத்தையும் புரணமு மின்பமுஞ் சகத்துறு மெனவேட்கை
மனம மூத்திடு மாயையாற் பரித்திடு மற்றவற் றிலையென்றே
தினமு ளத்துற வைத்தொளிர் சிற்பரத் தேசுகால் பேய்த்தேர் சூழ்
கனவெ னச்சகங் கண்டிடி னுலகமோர் கரிபர வுருவாமே.

—வேதாரணிய புராணம்.

"ஞானத்தால்தான் முத்தி பெற முடியும்" என்பது அத்வைத சித்தாந்தம். இதற்கு உதாரணங்கள் :

காரிய காரணங்கள் யாவையுங் காசொன் றில்லாத்
தாருமான் மாவின் கண்ணே யமருமென் றறிந்துகொண்டோன்
ஓர்தரு பொருள்க டன்னையன்றி வேறுளதென் றெண்ணி
யோர்தரு வுள்ளஞ் செல்லா தின்பமுற் றிருப்ப னன்றே.

—இலிங்க புராணம்.

அருத்தியின் ஞான மின்றி முத்தவீ டடைதல் கூடா
விரிப்பரு ஞானந் தானுந் தியானத்தா லன்றி மேவா
துரைத்திடு தியானந் தானும் ஓங்கிய ஞானம் வல்ல
குருத்தனி யருளி னல்லாற் கூடுத லரிய தாமால்.

—இலிங்க புராணம்.

தன்னை யறிவார்க் கெதிருந்தானும் பயனுமில்லை.

—ஒழிவிலொடுக்கம், பொதுவில். 29.

உன்னை யறிவென் றுள்ளே யுணர்.

—ஒழிவிலொடுக்கம், பொதுவில். 32.

பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்து மலமாயை
கருமத்தை யெல்லாங் கழற்றிச்—சரியாதி
வாதனையாம் போத மயக்கத்தை வாக்காலே
போதை செய்து போக்கி விடப் போம்.

—ஒழிவிலொடுக்கம், சத்திநிபாத. 10.

அறிவிக் கறிவா யகண்டமாய் நின்ற
நிறைவைக் குறைய நினைந்து—மறவையுமாய்த்
தாமே சிவத்தைப் படைத் தழிப்பார் தற்போடம்
போமாறிலைப் பிறப்பேன் போம்.

—ஒழிவிலொடுக்கம், யோகக்கழற்றி 29.

அருமாமறைகள் முழுவதுமென் சத்தியாகு மாங்கவைகள்
திருமாலுந்தித் தடம்பூத்த செல்வன் முன்னைப் படைப்பதனில்
ஒருநான் மறையாம் பெயரோடு நடக்குமன் னூல்வழி யொழுகார்
மருவார் முத்திவீ டதனின் மம்மருறு நால்வலைப் பட்டே.

—கூர்ம புராணம்.

சொச்சமாய்ச் சாந்தமாகிச் சூக்கமாய் ஒன்றாய் நாளும்
நிச்சமாய் ஞானமாகி யெங்கணு நிறைந்ததாகி
அச்சமில் தமத்துக் கப்பா லாயகே வலமாயென்றும்
எச்சமி லான்மாவென் றொன்றினி துளதென்பர் மேலோர்.

—கூர்ம புராணம், சாங்கிய யோக முரைத்த. 3.

சாத்திரம் புத்தகம் பூசை சமயம் மதந்தருக்கந்
தந்திர மந்திர யோகந்தவ விரதஞ்சீலம்
ஏத்தரிய பாவனையெண் சித்திகளே முதலா
மெய்ப்பயனு முத்திவிலக் கெனவொரு சொல்லதனாற்
தீர்த்தவன் மெய்த் தேசிகன். —சிவஞான தீபம்.

நித்தலு மணிதுலக்கி நீடுமூலை புக்கிருந்து
கத்தியே கதறியே கண்கள்மூடி யென்பயன்
எத்தனை பேரெண்ணினு மெட்டிரண்டு பத்தலோ
அத்தனுக்கி தேற்குமோ வறிவிலாத மாந்தரே.

—சிவவாக்கியார்.

குண்டலங்கள் பூண்டு நீர்குளங்க டோறுமூழ்கினீர்
மண்டுகங்கள் போலநீர் மனத்தின்மா சறுக்கிலீர்.

—சிவவாக்கியார்.

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்ல வாகமஞ் சொல்ல அல்லவாமென்னும்
ஊனத்தார் என் கடவர் ? —சிவஞான சித்தியார், சுபக்கம் 279.

சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற்
சிவ னடியைச் சேர்வர். —சிவஞான சித்தியார், சுபக்கம் 263.

சிந்தையினிற் பூசித்துச் சிவனை ஞானத்தாற்
[illegible] சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க

வந்திடுமவ் வொளிபோல மருவி யரனுளத்தே
வரவர வந்திடுவன் பின்மல மானதறுமே.

—சிவஞான சித்தியார், சுபக்கம் 301.

பதிபசு பாசந் தெரித்துப் பரசிவனைக் காட்டு
நன்மார்க்க ஞானத்தை நாடி.

—சிவஞான சித்தியார், சுபக்கம் 274.

கேட்டலுடன் சிந்தித்த றெளித னிட்டை
கிளத்தலெனவீ ரிரண்டாங் கிளக்கின் ஞானம்
வீட்டை யடைந்திடுவர் நிட்டை மேவினோர்கண்
மேவாது தப்பினவர் மேலாய பதங்கட்
கிட்டிய புண்ணிய நாதராகி யின்ப
மினிதுநுகர்ந் தரனருளா லிந்தப் பார்மே
ஞூட்டிய நற்குலத்தினில் வந்தவதரித்துக் குருவாள்
ஞானநிட்டை யடைந்தடைவர் நாதன் றளே.

—சிவஞான சித்தியார், சுபக்கம் 276.

பாம்பிதென் றுணர்ந்தபோது பழுதையே யில்லைவெய்ய
பாம்பிதென்றென வுணர்ந்தால் பழுதையே யாறற் போலச்
சோம்புறு குறும்பி யென்னிற் றுகளுறு சிவனுகும்
சோம்புருக் குறும்பியென்னிற் றுகளறு பிரமமாவான்.

—சிவஞான வள்ளலார்.

அறிவை யன்றி யறியப்படும் பொருள்
சிறிது மில்லை.

—சிவஞான வள்ளலார்.

பாவுதா னென்னுநிறை யான்மாவி னின்றும்பல் லுலகமுஞ்சேர்
மேவுசி வனுமீச்சு ரனுமாயா சத்தியும்வே றல்லரம்மா
வோவில்சுயம் பூரணநற் சிவஞான முள்ளவனு முயர்வு பூண்டோன்
தாவில் சாருவ பௌமன்போன் றுசுதந் தரனுகித் தழைவா னென்றும்.

—சூத சங்கிதை, எக்கிய. 13, 11.

ஆனநிலை யாவுடைய பூதங்க ளனைத்துநான்
ஏனையவை யாவையுள் வெவையுநான் றூலநுண்மை
ஆனவியா வையுமல்லே னெனையறிபி னறிவோர்க்கு
ஞானமொன்று மென்னுருவ நானேயெவ் வுயிர்க்குறவும்.

—தேவிகாலோத்தரம்.

மந்திரஞ் செபந் தியானம் பூசனை வணக்கம் வேண்டா
அந்தமிலாத முத்திக் குபாயமே யறியவேண்டும்.

—தேவிகாலோத்தரம்.

வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்
கெட்டாத புட்ப மிறையாத தீர்த்தமினி முடிந்து
கட்டாத லிங்கங் கருகாத நெஞ்சங் கருத்தினுள்ளே
முட்டாத பூசை யன்றோ குருநாதன் மொழிந்ததுவே.
—பட்டினத்துப் பிள்ளையார், தில்லை முதலியன 91.

உளியிட்ட கல்லையும் ஒப்பிட்ட சாந்தையும் ஊத்தையறப்
புளியிட்ட செம்பையும் போற்றுகிலேன்.
—பட்டினத்துப் பிள்ளையார், தில்லை முதலியன 102.

ஐயமில் லறிவினாலே யழிவின்றி யகண்டமாகி
மெய்யெனும் பொருளை நாடி மேவருங் கானனீர்போல்
வையக மாதியாக வழங்கிய வுலகமெல்லாம்
பொய்யெனு மாயையாலே பொருந்துமென் றெண்ணல் வேண்டும்.
—பாகவதம், உத்தவர் தத்துவம் வினா. 7.

நடையுறுந் தொடைய லொன்றே நாகமாய் விளைந்தவாபோற்
றடையுறு மாயை நீக்கித் தற்பர மாவாராய்ந்தோர்
விடலரு ஞானயோக வித்தக விவேகத் திவ்வா
றடைதரும் பிரள யப்பே ராத்தியந் திகமென் றுமே.
—பாகவதம், பிரளயமுரைத்த. 15.

அந்தநல் லறிவன்றன்னை யறிந்தவ ரறிஞராவார்
தந்தையால் வகுக்கப்பட்ட சராசரப் பொருள்க டோறும்
வந்தவான் நீம்பா னெய்போ லுயிர்க்குயி ராகிவாழும்
பந்தம துணர்ந்து நேரே பார்க்குங்காற் பகையார் நண்பார்.
—பாரதம், முதற் போர்ச் சருக்கம் 4.

உரைசெயிற் பரமஞான மொன்றுமே முத்திக்கேது
சரியை நற்கிரியை யோகந்தா மொருமூன்று ஞான
மருவுதற் கேதுவென்று மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவரன்றே.
—பிரபுலிங்க லீலை, சித்தராமையர் கதி 69.

ஒருமொழி யாலே சரியை நற்கிரியா
யோக பாவனை யெலாம் ஒழியும்.
—வாதுளாகமம்.

அருணான் மறைக ளுரைத்திடு தரும மாசையின் றுயறிந் தியற்றில்
தெரியுமற் றதனாற் பாவபுண்ணியங்க ளொத்திடு மொத்திடிற் சிறந்த
பொருவறு சிவமா யோகம்வந் தெய்து மெய்திடிற் புகலுதற் கரிதாய்
மருவொணா தாகி யுயர்வற வுயர்ந்த மாசிலா முத்தி யெய்திடுமால்.
—வாயு சங்கிதை.

யாக்கள் முற்காலை ஞானமோன் றின்றியன்ன வாகனன் றனையெய்தித்
தேக்கற ஞான முதவென வுரைப்பத் திங்கள்வே ணியனடி முன்னி
நிக்கற வேள்வி புரிமினக் காலை யுலவைவேந் தும்முழை யடைந்து
பாங்கினில் ஞான முமதுளங் கொள்ளப் பாற்படப் பகர்வென் றுரைத்
தான். —வாயு சங்கிதை.

மந்தரங் கைலை மேருப் பாப்பதம் வார ணாசி
இந்தநல் லிடங்கடோறு மிகபர போகம் யார்க்குந்
தந்தருள் செய்தெம் போல்வார் தம்மனம் புறம்போ காமற்
சிந்தனை திருத்தி ஞானத் திருவுரு வாகி மன்னும்.

—திருவிளையாடற் புராணம், மண் சுமந்த படலம் 74.

நிலைநிலையாப் பொருளுணர்ந்து பற்றிகந்து கரணமொரு நெறியே செல்லப்
புலனெறிநீத் தருள்வழி போய்ப் போதமாந் தன்வலியைப் பொத்திநின்ற
மலவலிவிட் டகலவரா வுமிழ்ந்த மதிபோல் விளங்கி மாறியாடுந்
தலைவனடி நிழல்பிறியாப் பேரின்பக் கதியடைந்தான் றமிழர் கோமான்.

—திருவிளையாடற் புராணம், அங்கம் வெட்டின படலம் 28.

சுருதி யுண்மையைக் கேள்வியே முதலிய துணிவாற்
கருதி வேறறக் காண்பது ஞானமஞ் ஞானம்
பருதி முன்னிருட் பாற்படும் பகைநய நட்பு
மிருதி வாழ்வுதுன் பின்பொடு மமதைபோய் விடுமே.

—வேதாரணிய புராணம்.

பாச வல்லிவே ரறவகழ்ந் தமலமாம் பிரத்தினிற் பரிவாற்றி
யூச லாகிய பிறப்பெனுந் தளையறுத் தோங்கொளி யுருவாக்கு
நேச மார்தரு ஞானமே முத்திசை நிகழ்த்திடு நிலைவாயா
வாச யார்தரு கருமமற் றெவற்றினு மரியதா முயர்வீடே.

—வேதாரணிய புராணம்.

சுத்தி வெள்ளியிற் கயிற்றினி லரவெனத் தோற்றுத ரெழிலாக
வெத்தி றத்தினு மகன்றிடா விடயமா மிவற்றினுக் கிடமாகு
மொத்த வப்பொரு ளுணர்ந்திட மயலறு முலகுயிர்க் கிடமாகுந்
தத்து வத்தினைச் சார்பற வுணர்ந்திடிற் றழைத்த முத்தியு மாமே.

—வேதாரணிய புராணம்.

மூலவிருண்மல மடியமுகிழ்த் தொளிருஞ் சிவஞான முடிவை மோனஞ்
சாலவருளினை யுளத்துத் தங்காதங்கு சலனந் தழைத்து மேன்மேற்
கோலுமதிகார நிலைகூடுதலான் மறந்தது கூடுமாறு
பால விழியமுன் மதனைப் பிதக்க முறக்கதங் கடிந்தோய் பணித்தியென்ன.

—வேதாரணிய புராணம்.

என்புருகி னிந்தின் புருவாயிரு விழியு மருவியினீ ரிறைப்பவீறி
லன்புருவாய்ப் பரவசனு யாநந்த வேலேபடிந் தழுந்தித் தானும்
தன்பெருமை யறியாத தன்மயனைச் சராசரங்க டானேயாய
பொன்புரியுஞ் சடையானை விடையானை யுடையானைப் போற்றல்
செய்வாம். —வேதாரணிய புராணம்.

உணரு மனுபூதியினற் றிருவுருவ முணர்ந்தார்க ளுடல மூன்றிற்
புணருமுயிர்ப் பாவகமற் றழியாத சிதானந்த போகமாகி
யிணரளிபோற் களியுறு வரித்தகைய நினையடைந்தே னெல்லை போகிக்
குணமகலுங் குறியாய மறையிறையே யினியேதுங் குறையிலேனே.
—வேதாரணிய புராணம்.

அறிவரிய நினதருளா லவத்தையு யிரமிமா னியைந்து கோசம்
பொறியகலு முலகனைத்தும் பொய்யாகுங் கனவெனவே போதமாகிச்
செறிவரிய பரப்பிரமத் தெளிவாகிச் சுடும்படத்திற் றிகழ நோக்கிக்
குறியகலு மறையிறையே யுனையடைந்தே னினியேதுங் குறையிலேனே.
—வேதாரணிய புராணம்.

சத்தை யிலங்கிட வின்பத் தன்மையுனதே வேறுசகத்த தின்றும்
பித்திபிற் சித்திரம்போலப் பிறங்குமுன் கண்விச்சையினிற் பிரியாநோக்கம்
வைத்த கிலம்பல வாக்கி மாயமென மதிப்பவர்க்கு மாற்றும் வான்பூங்
கொத்திலகு மறைவனத்தா யுனையடைந்தே னினியேதுங் குறையிலேனே.
—வேதாரணிய புராணம்.

கண்டேனுன சேவடி காணலுமே
விண்டேன் மனமாய விகற்பமெலா
முண்டேனுல குள்ளனவோ ருருவாய்ப்
பண்டே மறைதேடிய பண்டவனே.
—வேதாரணிய புராணம்.

அளியேனுன தாளளவே யுணரத்
தெளிவா யுலகஞ் சிவமா யதுவே
யொளியே வெளியே யுணர்வே புணருங்
களியே கதியாகிய கண்ணுதலே.
—வேதாரணிய புராணம்.

" ஜீவனும் பரம்பொருளும் வேறல்ல " என்பது அத்வைத சித்தாந்தம். அதற்கு உதாரணங்கள் :

உருக்கலந்து நின்றபோது நீயுநானு மொன்றலோ.
—சிவவாக்கியர்.

தீர்த்தலிங்க முத்தியென்று தேடியோடுந் தீதரே
தீர்த்தலிங்க முள்ளில்நின்ற சிவனைத் தெளியுமோ

தீர்த்தலிங்க மும்முளே தெளிந்துகாண வல்லிரேல்
தீர்த்தலிங்கந் தானமாய்ச் சிறந்ததே சிவாயமே.

—சிவவாக்கியர்.

என்னகத்து ளென்னையன்றி யாதுமொன்று மில்லையே.

—சிவவாக்கியர்.

அவனும் நானும் மெய்மீ முயங்கி அனுபவிக்கு மளவிலே
அவனு மில்லை நானு மில்லை யாருமில்லை யானதே.

—சிவவாக்கியர்.

தன்னைப் பெறுவதின்மேற் பேறில்லை தானென்றுந்
தன்னைத்தான் பெற்றவன்தான் ஆரென்னில்—தன்னாலே
எல்லாந்தன் னுட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே
எல்லாமாய் நிற்கு மிவன்றான். —திருக்களிற்றுப்படியார் 45.

கங்கையை முதலவாய் பற்பல நதியுங் கல்லென்
பொங்குதெண் டிரையவாரி புகுதிலொன் றுருமாபோற்
றங்கிய ஞானபாதஞ் சார்ந்திடி லான்மா யாவுஞ்
சிங்கலில் பிரமந் தன்னிற் பிறிதின்றி யொன்றாய்ச் சேரும்.

—கூர்ம புராணம், சாங்கிய முரைத்த. 14.

நித்தியா நந்தமாகி நிமலமாம் பிரமந் தன்னை
தத்துவ வித்தா யுள்ளோர் பிரணவந் தன்னாலொன்று
முத்தம தியானஞ் செய்பர் வுளமுவந் தெனதுதாளிற்
பத்திசெய் தென்பால் பாலிற் பால்கலந் தென்னச் சேர்வார்.

—கூர்ம புராணம், தத்துவ தரிசன முரைத்த. 7.

பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போ லுள்ளம்
பலபுலன்க ணிறங்காட்டும் பரிசுபார்த் திட்(டு)
இந்நிறங்க ளென்னிறமன் றென்று தன்றன்
எழினிறங்கண் டருளின் விந்நிறத்தின் வேறாய்ப்
பொய்ந்நிறவைம் புலன்நிறங்கள் பொய்யென மெய்கண்டான்
பொருந்திடுவன் சிவத்தினொடும் போதான் பின்னை
முன்னிறைநீர் சிறைமுறிய முடுகி யோடி
முந்நீர்சேர் தந்நீராய்ப் பின்னீங்கா முறைபோல்.

—சிவஞான சித்தியார், சுபக்கம் 289.

நீடு வேதமளவாக வேகமெனு நீதி தானிகழ்வ தாகுமேல்
நாடி ஞாதுருவு ஞான ஞேயமுட னாகு நான்மறையு மோதலால்
ஓடு மாகுமுன தேக மோதுமிவை யூன மாகியுரை மாறுகோள்
கூடு மாகுமனு பூதி தானுமது கூடிடாதறிவி லாமையால்.

—சிவஞான சித்தியார், பரபக்கம் 236.

அவனே தானேயாகிய அந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

—சிவஞான போதம் 10.

அவையே தானே யாயிரு வினையின். — சிவஞான போதம் 2.

மித்தையுடற் கட்டறுத்து மெய்யருளாய் மெய்யொழிக்குந்
தத்துவமுங் கேவலமுஞ் சார்வகற்றிச் — சுத்தத்
தனியாகித் தானும்போய்த் தற்பரமாய் விட்டாற்
சனியாவி துசத்தியம். — சிவானந்த மாலை.

சிவனத்தாற் சிவனெனல் சிவனிறந்தா லிந்தச்
சிவனே யந்தச் சிவம். — சிவஞான வள்ளலார்.

ஊனை யொதுக்கி யுணர்வாக்கி விட்டபினர்
நானே பிரமமென நாடு. — சிவஞான வள்ளலார்.

உள்ள மசையா துயர்தருவன் போனிற்கில்
வள்ளலுரு வானாய் மதி. — சிவஞான வள்ளலார்.

நானே சிவன் சிவனே நானென்று நாடிவெறுந்
தானாகி நின்றநிலை தானன்றே. — சிவஞான வள்ளலார்.

சுத்தசிவம் நீயென்று சொல்லினான். — சிவஞான வள்ளலார்.

ஈசன் வேறியான் வேறென் றெண்ணுகின்ற பாதகரை
நீசரெனக் கண்டு நினையென்றான். — சிவஞான வள்ளலார்.

சைவசித்தாந்த மெல்லாம், தானவனாகி நிற்றல்
மையறு வேத சித்தமற்றது நானேயென்னல்
உய்வகைக் கிரண்டு மொன்றென் றோதி யென்னுயிர்க் கிலாபஞ்
செய்த சற்குரவநீயே திருப்புலி வனத்துளானே.

— சிவஞான வள்ளலார்.

அதுவே நீயாமென் றருமறைகள் சொல்லும்
எதிர்சிவனே நீயாநா யென்னும் — முதுசைவம்
வேறேவே றன்றேசொல் வேதியனே விண்விசும்பும்
வேறே வேறன்றே விளம்பு. — சிவஞான வள்ளலார்.

மெய்யைப் பொய்யென்றான் வெளியை நல்வீ டென்றான்
சைவத் துறைசொழிச் சம்பந்தன் — ஐயமற
ஞானபோதம் போயிடத்தே நீயே சிவமென்றான்
ஞானபோதத் துள்ளே யிருந்து. — சிவஞான வள்ளலார்.

உற்றுணரி னீயே யுயர்பிரம மென்பதும்
மற்ற சிவன்றானாய் வகுப்பதுவும்—முற்றும்
இறந்தவிடத் திரண்டு மேகமே யென்றுண்
சிறந்த சீகாழி வருதே.
—சிவஞான வள்ளலார்.

என்றுமிருந்த படியிருக்கு மியல்பே யென்னு மொருவேதம்
ஒன்றை யொழிய விரண்டாம் வத்தில்லை யென்னுமொரு வேதம்
வென்றிப் பரமும் நீயும் வேறில்லை யென்னும் ஒருவேதம்
நன்று மதுவே நீயானு யென்றே சொல்லுமொரு வேதம்.
—சிவஞான வள்ளலார்.

சத்தியஞ் சீவன் சங்கர னென்றே
குற்றமி லுன்மறை கூறும் வருத்தே.
—சிவஞான வள்ளலார்.

பொன்னையன்றிப் பூணில்லை பூணையன்றிப் பொன்னில்லை
யென்னையன்றிச் சிவனில்லை சிவனையன்றி யானில்லை
யின்னவண்ண மறிந்தோனே யீசன்றனையும் மறிந்தோனு
மின்னவண்ண மறியாதா னீசன்றனையு மறியானே.
—சிவஞான வள்ளலார்.

மன்னையு மறந்து மிக்கவனசர வடிவமாகித்
தன்னையு மறந்தி ருந்த தனையனைப் போன்றுநீயு
மென்னையு மறந்தைம் போத வெயினர்தம் வடிவமாகி
யுன்னையு மறந்தாய் நீயென் னுருவென வுணர்ந்துகொள்ளே.
—சிவஞான வள்ளலார்.

ஆதி திருநான் மறைமுடியி லறையுந் தத்வ மசியென்றே
யோதி லதுநீ யானுயென் றுரைக்கு மும்மைப் பதமாகப்
போத முடையோ யிதன்பொருளை யெவ்வா றெடுத்துப் போதிப்பேன்
பேத மகன்ற வுள்ளத்தாற் காணும் பெரிய வாக்கியமே.
—சிவஞான வள்ளலார்.

கன்னனுன் புனிஞனன்றே கவலையுற் றழுக்குங் காலைக்
கன்னனீ யிராத னன்று கௌந்தி புத்திர னென்றுற்போ
லன்னிய வுடனு னென்றே யயர்ந்துள மழியேன் மைந்த
வன்னிய மென்று கண்ட வறிவுநீ யுணர்ந்து கொள்ளே.
—சிவஞான வள்ளலார்.

கல்லெலா மெறிந்து மீதிக்கையினை யெறிவா ருண்டோ
சொல்லிய கருவியெல்லாந் தொலைத்தவன் மீதியன்றோ
வல்லநீ ரவனே சோதி யாகிய பிரம மாவா
னெல்லையின் மறைகளெல்லா மிவ்வண முரைக்கு மன்றே.
—சிவஞான வள்ளலார்.

ஒருவனொரு தேயத்திற் பிரமசரி யாயுற்றான்
மருவி மற்றோர் நாட்டகத்தின் மகிழ்கிரகி யாயினான்
பரவிப் பின்னோர் மண்டலத்திற் பகர்துறவியாய் நடித்தான்
விரவியகோ லம்போக்கின் வேறில்லை யவனிவனே.

—சிவஞான வள்ளலார்.

ஒன்று யுலகனைத்து மானுரென் றப்பமுனி
பொன்று மொழியாற் புகன்றிருக்க—குன்றாத
முத்தியிலு மும்முதலு முண்டென் றுரைத்தவெலவன்
பித்தமுறுஞ் சைவா நீபேசு. —சிவஞான வள்ளலார்.

ஓசை யொலியெல்லா மானாய் நீயென்றபினர்ப்
பேச விரண்டுண்டோ பேய்ச் சைவா—ஆசையெலாம்
அற்றவிட முத்தியிலையோ அஃதெல்லாம்
உற்றவிட முத்தி யிலையோ. —சிவஞான வள்ளலார்.

மல்லவான் மாபலவாய்த் தோன்றுவதுஞ் சிவான் மாபரான்
மாவெனும்பே தந்தோன்று மதுவும்
சொல்லலுறி னுபாதியா லன்றிமா முனிவீசர் சுபாவத்தி
னின்றஃதெப் படியென்னிற் கேண்மின்
வல்லகட முதலாய வுபாதிசம்பந் தத்தால் வான்பேத
மாய்த்தோன்று மதுபோலு முணர்வீர்
செல்லலில்லே தாந்தவாக் கியங்களெலாம் பரம சிவனொருவ
னேயென்னத் தெரிவிக்கு நாளும்.

—சூத சங்கிதை, எக்கிய. 10, 24.

முன்னுரைத்த சேதனவ சேதன வாகாரங் கண் முதன்மையாகப்
பின்னுரைத்த விருப்பதிலை யெனுமளவும் பிறங்க நிருபணஞ் செய்காலை
மன்னுமொளிப் பரசிவனோடை பேதமேயாஞ் சுருக்கி வகுத்தாம் யாவும்
பன்னு சிவமேயன்றி வேறில்லை நன்குணர்வீர் பண்புளீரே.

—சூதசங்கிதை, எக்கிய. 12, 9.

மருவிய பொருண்மே லன்பாய் வானரம் போற்ச ரித்துத்
திரியுமச் சித்தந் தன்னைத் திருத்திச் சூனி பத்தே நின்றால்
மருவினோர் பிரிதலின்றி வானவ ரறிவுக் கெட்டாய்
பொருவிலா நித்த சுத்தப் பொருளினை யடைவ ரன்றே.

—தேவிகாலோத்தரம்.

இப்படியே பாவித்துச் சலியாதான் யாவனவன்
அப்பிரம மாதலா லமுதமா மழகியாய். —தேவிகாலோத்தரம்.

அறிவார்தா மிலராகிச் சோகாதி யடையாஞய்ப்
பிறியாத பரப்பிரமமென நிற்பன் பெண்ணணங்கே.

—தேவிகாலோத்தரம்.

தானவ ஞகிய தன்மைபெற்ருனடி தாழப்பெற்ருற்
ருனவ ஞகிய தன்மைபெற் றுய்வனத் தன்மையின்றித்
தானவ ஞகிய தன்மைபெற் றேற்கரு டாழ்சடிலத்
தானவ ஞகம் பெறுமா சிலாமணிச் சம்பந்தனே.

—பண்டார மும்மணிக்கோவை 12.

எற்கமலஞ் செய்யு மெழின்மா சிலாமணிதன்
பொற்கமலஞ் சென்னி பொலிவித்தே—னற்கமலை
யூரிற் குறுகினே ஞேர்மாத் திரையளவென்
பேரிற் குறுகினேன் பின். —பண்டார மும்மணிக்கோவை 23.

பிரமத்தொடு மொன்றுவர் பின்னமறுர். —பாகவதம்.

ஆவிவேறெனப் பேத மடைந்திடும்
தேவர் மாதவர் தேர்சன காதியர்
பூவிஞ ஞெடும் போயடைந் தன்னவன்
மேவு ஞான்றிவண் மீட்டு முதிப்பரால்.

—பாகவதம், கபிலர் தத்துவ முரைத்த. 56.

காதல் விட்டுக் கருதிய பேதமாம்
ஏத நீங்கினர் எய்துவர் முத்தியின்
பேத மாகுமு பாசனை பெற்றிடின்
வேத ஞயினும் மீளவும் தோன்றுமால். —பாகவதம், ஷை. 55.

மோக நீங்கி முயல்வுறின் மாதவம்
ஆக மொன்றுத லின்றிய பேதமாய்
மாக நாடர் வழுத்தவரு சித்தோ
டேக மாகி யியைகுதி நீயென்ருன். —பாகவதம், ஷை. 59.

ஈசனும் வேறியங் குயிரும் வேறெனு
நேச முற்றெனை நினைப்பவற்கு மீசற்கும்
பேசு பல்லுயிர்க்கு மோர்பேத மில்லெனும்
மாசிலாத வற்கும் வந்தொன்று முத்தியே.

—பாகவதம், கபிலர்ப் பெற்ற. 53.

என்னைநீ புகலக் கேண்மோ வெங்குமா யாவுமாகி
மன்னிய பொருளும் யானே மறைக்கெலா முடிவும் யானே

யுன்னையான் பிரிவதில்லை யொருமுறை பிறிந்துமேனு
னைன்னிலா வொழிக்கும் பூணுய் நாஞநா ரணுமானேம்.

—பாரதம், முதற் போர்ச். 6.

பின்னொரு பிறப்பின் யாமே பிரமலக் குமப்பேர் பெற்றே
மிந்நெடும் பிறப்பினியும் யானுமா யீண்டு நின்றே
நின்னிடை மயக்குமிந்த நேயமு மொழிக வென்று
தன்னிலை யவர்க்குக் காட்டித் தத்துவந் தெளிவித்தானே.

—பாரதம், முதற் போர்ச். 7.

தூய்தாகிய நெஞ்சுடை யார்க்குத் தாமே சிவமாத் தோன்றுமால்
தீதாகிய நெஞ்சுடை யார்க்குத் தெளியவ பேத மிகலின்றி
வேதா கமங்கள் விளம்பிடினும் விளங்கா தென்றும் வேறென்னும்
ஏர்தா லழிவர் அவர்மாயை மயக்க மயங்கு மதியினர்.

—பிரபுலிங்க லீலை, மனைலய கதி 18.

அறையுமகேச் சுரன்சத்தி மாயையார் மலத்தால்
நிறையமுன மேமறைந்து நின்றுறையு மான்மாவை
முறை யிலந்த மாயைதான் மூடுமல மாயைகெட
வுறைவதுவே சிவமென்ன வுரைப்பரா லெனவுரைத்தான்.

—வாயு சங்கிதை.

பார்வகத்தா லழியாத சிவன்றனருள் பயக்குமான்
மேவியவவ் வருளினன் மலமாயும் வீந்ததற்பின்
ஓவலிலப் புருடனே சிவனென்ன வுறைவனெனத்
தாவில்தவத் தோர்பின்னு மிவையெடுத்துச் சாற்றினரால்.

—வாயு சங்கிதை.

விரிவுறுமுருவ நாமம தகற்றின் விடயங்கள் விளங்குரு வதனுள்
மருவுறு பொறிபோம் பொறியறக்கரண மாய்ந்திடுங் கரண மாய்தலினால்
புருடன்முன் னேழுஞ்சுத்த மோரைந்துஞ் போமிதாற் சச்சிதா னந்தம்
இரியையற் றிலங்குமென் றனள்விருத்த கிரியமர் பெரிய நாயகியே.

—விருத்தாம்பிகை துதி.

சித்தமாசு கழீஇச் சிவமாயினர். —திருவிளையாடற் புராணம்.

ஒப்பவர் மிக்கோர் வேறற் றொருவனு யெங்குந் தங்கு
மப்பரஞ் சுடரேயிந்த வர்லவா யுறையுஞ் சோதி
கைப்படு கனிபோன் மேன்ட் கண்ணுவ னுதியோர்க்கு
மெய்ப்பொருள் விளங்கித் தோன்று வேதத்தை விருத்தி செய்தான்.

—திருவிளையாடற் புராணம், மண் சுமந்த. 75.

வேறு வேறுபல் வியற்கையிற் கனவிடை மேலும் விழைந்தோரிற்
கூறுமொன்றுதா னலகிலே சாக்கிரக் குறியிலும் ஞானேயாந்
தேறுமேயெனி னுதலிற் பரம்பரஞ் சின்மய மகந்தான
மீறிலாப் பரப்பிரமமா மசங்கமா மின்பமாத் திரையாமே.

—வேதாரணிய புராணம்.

"பரம்பொருள் நிர்க்குணமானது" என்பது அத்வைத சித்தாந்தம். "இறைவன் அளவைக்கு எட்டப் படாதவன்" என்ற குறிப்புக்களும், பரம்பொருளின் நிர்க்குணத் தன்மையையே தெரிவிக்கின்றன. உதாரணங்கள் வருமாறு:

மனவாக்குக் காயம் வருத்தலின்றி. —அறிவானந்த சித்தியார்.
வாக்கு மனத்துக்கு மெட்டாத வின்பவடிவு விளங்கி.

—அறிவானந்த சித்தியார்.

போக்கற்றது [illegible] புரையற்றது [illegible] பிரயற்றது
வாக்கற் [illegible] றது வடிவற்றது படியற்றது
நோக் [illegible] நுணுக்கப் [illegible] ருள் மற்றொரு பொருளின்
ருக்கற்றது தனையற்ற [illegible] ப்பொருளது தற்பரம்.

— அறிவானந்த சித்தியார்.

ஆனவமுதே யயில்வே லரசே
ஞானகரனே நவிலத் தகுமோ
யானகிய என்னை விழுங்கிவெறுந்
தானய் நிலைநின்றது தற்பரமே. —கந்தரனுபூதி 28.

வானே புனல்பார் கனன்மா ருதமோ
ஞானே தயமோ நவினுன் மறையோ
யானே மனமோ எனையாண்ட விடந்
தானே பொருளா வதுசண் முகனே. —கந்தரனுபூதி 3.

வரையற்றவுணர் சிரமற்று வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித்தவா பஞ்சபூதமுமற்
றுரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்கும் காட்சியதே.

—கந்தரலங்காரம் 61.

மறைகளுந் தேட அரியரோ.

—கருவூர்த் தேவர், திருக்களந்தை யாதித்தேச்சரம் 8.

பன்னுமெய் நூல்களாலும் பகருமெய் வாவையாலு
மன்னுமிப் பொருளைத் தன்னை வாசக ஞானமாகு

முன்னுமவ் வுணர்வி றந்த வுலப்பில் பேரின்ப வெள்ளந்
தன்னனு போகத் தான்றனிற் காண்ப தொன்றே.

—சிவாகமார்த்த தரிசனம்.

ஒன்றுடந் தோய்வில்லா னொத்தார் மிக்காரில்லா
னுலக மில்லான்
நின்ற நினைவுக்கெட்டா நிதிதன் காணப்படா
னெஞ்சி லிற்பான்
பொன்று பிறப்பிலி முதலா மறிவினை னிட்களன் பழையோன்
பொருள்க ளில்லோன்
என்று நினைந்த டிக்கடியும் பிரமமென நோக்குதலே
யியல்ப தாகும். —தேவிகாலோத்தரம்.

இல்லாத விடமிலையா னெமக்குமல மியாதுமிலை
எல்லாருந் தொழுமீச னெனக்கவத்தை யெவையுமிலை
வில்லாரும் புரு ... வேலாரும் விழியாய்கேள்
நில்லாத வுலகத்தை மிகநீங்கி நிற்பேனன். —தேவிகாலோத்தரம்.

வாக்கு மனமு மிறந்த மறையனை ......
இனையதன் மையனெ ... றிய வரியவன்.

—நக்கீரர், கோபப் பிரசாதம் 73.

ஆரண நான்கிற்கும் அப்பாலவன்.

—பட்டினத்துப் பிள்ளையார், திருக்கழுமல மும்மணிக்கோவை 3.

ஆரணந் தொடராப் பூரண புராண.

—பட்டினத்துப் பிள்ளையார், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை 4.

சுருதியுந் தொடராச் சுருதி நாயக.

—பட்டினத்துப் பிள்ளையார், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை 7.

புனிதமற் றுன்னையல்லாப் பொருள்பரப் பிரமமன்று
லெனவெடுத் துரைப்பதல்லா லீறொடு தோற்றமின்றித்
தனிமுதலாகி நின்ற சச்சிதானந்த மூர்த்தி
நினைவரும் சுடரேநின்ற நிகழ்த்துமா றறிகிலேமால்.

—பாகவதம், சுருதி கீதை. 11.

பூதநீயலை பொறிகளு மலையலை புந்தி
யேதுநீயலை யிவற்றினை மயங்கியா னென்னும்
போதநீயலை யென்றிவை யனைத்தையும் போக்கிச்
சோதியாகிய பிரமமே நீயெனச் சொல்லி.

—பிரபுலிங்க லீலை, கதலிவன கதி 13.

பரசிவம் பிரமமென்னப் பட்டோரு திரிவுமின்றி
உரைமன மிறந்துநின்ற வொருசிவ லிங்கம்

—பிரபுலிங்க லீலை, துதிகதி 18.

அருமறை முறையிட்டு இன்னும்
அறிவதற் கரியான்.

—பெரிய புராணம், தடுத்தாட்கொண்ட. 46.

மறைகளு மமரர் கூட்டமு மாட்டா
தயன்திரு மாலொடு மயங்கி
முறைமுறை முறையிட்டோர் வரியானை.

—திருமாளிகைத் தேவர், கோயில் 11.

மறைகளா லளவை தன்னல் தேவரால் மனத்தால் வாக்கால்
அறிவருஞ் சோதி யெங்கோன். —திருவிளையாடற் புராணம்.

"இம்மையில் உயிருடன் இருக்கும்போழுதே முத்தியைப் பெறமுடியும்" என்பது அத்வைத சித்தாந்தம். இதுதான் 'ஜீவன் முத்தி' என்று கூறப்படுகிறது. உதாரணங்கள் வருமாறு :

தம்மாலறிந்த தெல்லாந் தாமல்லவென் றுரைத்தால்
சும்மா விருப்பதுவாய்த் தோன்றுதோ.

—ஒழிவிலொ. போதுவிலு. 37.

மோனம் வேதாந்த முடிவு. —ஒழிவிலொ. பொதுவிலு. 41.

தத்துவத்தின் போர்வை சரிந்ததிகம் பரிபேர்
அத்துவிதி யேகாந் தியாநந்தி—சுத்தன்
துரியனவ தூதன் றுறவி சிவயோகி
நிருவாணி யென் விரத்தனென். —ஒழிவிலொ. அவத்தைத். 40.

பூசி முடிப்பனவும் பூண்பனவும் பொற்றுகிலும்
ஆசை மிகுத்த வாசியற்காங்—காசிற்ற
முண்டையர்க்கா காசிவன் முத்தனுக்கே போகமல்லாற்
குண்டை யொப்பார்ச் கேனிதுவா கும்.

ஒழிவிலொடுக்கம், பொதுவிலு. 58.

நன்றென்றுந் தீதென்று நானென்றுந் தானென்று
மன்றென்று மாமென்று மாகாதே—நின்றநிலை
தானதாந் தத்துவமாஞ் சம்பறுத்தா ராக்கைக்குப்
போனவர் தேடும் பொருள். —ஔவையார்.

ஞாலமதின் ஞானநிட்டை யுடையோருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லை
சீலமிலை தவமில்லை விரதமோடாச் சிரமச்
செயலில்லை தியானமிலை சித்தமல மில்லை
கோலமிலை புலனில்லை கரண மில்லை
குணமில்லை குறியில்லை குலமு மில்லை
பாலருட னுன்மத்தர் பிசாசர் குணமருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்.

—சிவஞான சித்தியார், சுபக்கம் 284.

அறிவரியான் றனையறிய யாக்கை யாக்கி
யங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத் தருளாற்
செறிதலினாற் றிருவேடஞ் சிவனுருவே யாகுஞ்
சிவோகம்பா விக்குமத்தாற் சிவனு மாவர்
குறியதனா லிதயத்தே யரனைக் கூடுங்
கொள்கையினா லரனவர் குறியொடுதா மழியு
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்றால்
நேசத்தாற் றொழுதிடுநீ பாசத்தார் விடவே.

—சிவஞான சித்தியார், சுபக்கம் 324.

நடந்தாலு மிருந்தாலும் நவின்றாலுந் துயில்கொண்டு
கிடந்தாலும் விழித்தாலும் கிளர்முடிமன் னவர்முதலோர்
தொடர்ந்தாலுந் தொழுதாலுந் துதித்தாலு மவமதித்துக்
கடந்தாலும் மெய்ஞ்ஞானி கமலவிலைப் புனல்போல்வான்.

— சூதசங்கிதை, ஞானயோக. 20, 25.

இனையஞானி தனைப்பரனென் றெண்ணாதேவ னவமதித்தான்
அனையபாவி நெடுங்கால மள்ளலினைத் தழுந்திடுவான்
வனையுஞானி யெவன்மனைச் செல்வானச் செல்கை மாத்திரத்தான்
நினையும் போகம் பற்பலவு நிரம்ப வுறுமம் மனையாளி.

— சூதசங்கிதை, ஞானயோக. 20, 26.

இன்னுமவன்றன் பிதிரர்குழு வேற்றமாகி முத்தியிடை
மன்னுஞானி யிருட்பார்வை வயங்கவெவன் மேற்படினுமவன்
றுன்னுபாவ மெலாமொழிந் தோன்றூய ஞானிதா னுதித்த
மின்னு குலமும் புனிதமுறு மேவுவாளன் னையுமுத்தி.

— சூதசங்கிதை, ஞானயோக. 20, 27.

செய்யஞானி தரிசனமே தேவதேவன் றரிசனமாம்
ஐயவ வன்றங் கிடுபூமி யமைந்த சிவபுண்ணியபூமி

தெய்வ வவனை வணங்கிடுதல் சிவபிரானை வணங்கிடுதல்
பொய்யிலவனுக் கியற்றுபணி பூதநாதற் கியற்றுபணி.

— சூதசங்கிதை. ஞானயோக. 20, 28.

மருவுகுதலை மழவுமணி வள்ளத்தருமை யறியாது
பெருகவிகழு மதுபோலப் பித்தின் முழுகும் பேருலகம்
பொருவன் ஞானி யருமைதனைப் போற்று திகழ்ந்து புகரடையும்
கருவன் மலத்தை யிருங்கயிலைக் கடவுளருளா லறுத்துள்ளீர்.

— சூதசங்கிதை, ஞானயோக. 20, 28.

ஐயந் திரிபின் றளந்துத் தியிற்றெளிந்து
மெய்யுணர்ச்சி கண்விழிப்பத் தூங்குவார் — தம்முளே
காண்பதுவே காட்சி கனவு நனவாகப்
பூண்பதுவே தீர்ந்த பொருள்.

— நீதிநெறி விளக்கம் 102.

பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம்
வாச்சியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கம்
தருஞானம் போகஞா திருஞான ஞேயந்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகுந்
திருஞான மிவையெல்லாங் கடந்தசிவ ஞானம்
ஆதலாற் சீவன்முத்தர் சிவமே கண்டிருப்பர்.

— சிவஞான சித்தியார், சுபக்கம் 311.

சிவம்

ஸ்ரீ:
ஸ்ரீ குருப்யோ நம:

# அத்வைதமும் பக்தி ஸித்தாந்தமும்

(ஸ்ரீ. S. மஹாலிங்க அய்யர், கும்பகோணம்)

ஸ்ரீமத் பாகவதம் பக்தி ஸித்தாந்தத்தில் பரம தாத்பரியம் உள்ளதென்பது பிரசித்தம். ஸ்ரீமத் பாகவதத்திலுள்ள தாத்பரியங்களை அனுசரித்து, அத்வைதத்திற்கும் பக்தி ஸித்தாந்தத்திற்குமுள்ள ஒற்றுமைகள் ஒருவாறு அடியில் எடுத்து கூறப்படுகின்றன.

ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீமந் நாராயணன் ஸர்வ ஜீவர்களுடைய ஹ்ருதயத்திலும் ஆத்மாவாக நித்யமாய் இருக்கிறார். அவருடைய அவதார சரித்திரங்களை, முக்கியமாய் ஸ்ரீ கிருஷ்ணாவதார லீலைகளை, சிரத்தையுடன் சிரவணம் செய்தால், சித்த சுத்தியும் வைராக்கியமும் உண்டாகும். பகவந் நாமாக்களை கீர்த்தனை செய்து, மூர்த்தியைப் பக்தியுடன் அர்ச்சித்து, ஸர்வ பூதங்களையும் பகவத் ஸ்வரூபமாய் தியானிப்பதால், பகவானிடத்தில் அத்யந்த ப்ரேம ரூபமான ஆனந்தநிலை ஏற்படும். பக்தியால் மாயையின் பந்தம் விலகி, ஜீவன் மோக்ஷம் அடைகிறான். பாகவதத்தில் உள்ள பக்தி மார்க்கத்தின் ஸாரமான இது அடியிற் கண்ட சுலோகங்களால் நன்கு விளங்குகிறது.

एवं स्वचित्ते स्वत एव सिद्ध
आत्मा प्रियोऽर्थो भगवाननन्तः ।
तं निर्वृतो नियतार्थो भजेत
संसारहेतूपरमश्च यत्र ॥ (II 2, 6)

भगवान् सर्वभूतेषु लक्षितः स्वात्मना हरिः ।
दृश्यैर्बुद्ध्यादिभिर्द्रष्टा लक्षणैरनुमापकैः ॥

तस्मात् सर्वात्मना राजन् हरिः सर्वत्र सर्वदा ।
श्रोतव्यः कीर्तितव्यश्च स्मर्तव्यो भगवान्नृणाम् ॥

पिबन्ति ये भगवत आत्मनः सतां
 कथामृतं श्रवणपुटेषु सम्भृतम् ।
पुनन्ति ते विषयविदूषिताशयं
 व्रजन्ति तच्चरणसरोरुहान्तिकम् ॥ (II 2 : 35-37)

यावानयं वै पुरुष इयत्तावयवैः पृथक् ।
तावानसाविति प्रोक्तः संस्थावयववानिव ॥ (II 8, 8)

## அத்வைதமும் பக்தியும்

அத்வைத தத்துவங்களே பக்தி மார்க்கத்தில் பெரும்பாலும் ஒப்புக் கொள்ளப்படுகின்றன. அத்துவைதிகள் பிரும்மம் என்று சொல்வதை பக்தி மார்க்கத்தில் ஹரி என்று சொல்லுகிறார்கள். 'பகவானுடைய மாயையால் பிரபஞ்சம் தோன்றுகிறதே யல்லாமல் பிரபஞ்சம் உண்மையன்று' வென்பது இரண்டிலும் ஸமம்.

तस्मै नमो भगवते वासुदेवाय धीमहि ।
यन्मायया दुर्जयया मां ब्रुवन्ति जगद्गुरुम् ॥ (II 5, 12)

द्रव्यं कर्म च कालश्च स्वभावो जीव एव च ।
वासुदेवात्परो ब्रह्मन्न चान्योऽर्थोऽस्ति तत्त्वतः ॥ (II 5, 14)

नास्य कर्मणि जन्मादौ परस्यानुविधीयते ।
कर्तृत्वप्रतिषेधार्थं माययाऽऽरोपितं हि तत् ॥ (II 10, 45)

यथा जले चन्द्रमसः कम्पादिस्तत्कृतो गुणः ।
दृश्यतेऽसन्नपि द्रष्टुरात्मनो नात्मनो गुणः ॥ (III 7, 11)

आत्ममायामृते राजन् परस्यानुभवात्मनः ।
न घटेतार्थसम्बन्धः स्वप्नद्रष्टुरिवाञ्जसा ॥

बहुरूप इवाभाति मायया बहुरूपया ॥ (II 9, 1-2)

ऋतेऽर्थं यत्प्रतीयेत न प्रतीयेत चात्मनि ।
तद्विद्यादात्मनो मायां यथाऽऽभासो यथा तमः ॥ (II 9, 33)

अमुनी भगवद्रूपे मया ते ह्यनुवर्णिते ।
उभे अपि न गृह्णन्ति मायासृष्टे विपश्चितः ॥ (II 10, 35)

विशुद्धं केवलं ज्ञानं प्रत्यक् सम्यगवस्थितम् ।
सत्यं पूर्णमनाद्यन्तं निर्गुणं नित्यमद्वयम् ॥ (II 6, 39)

नान्यद्भगवतः किंचिद्भाव्यं सदसदात्मकम् ॥ (II 6, 32)

सत्त्वं रजस्तम इति निर्गुणस्य गुणास्त्रयः ।
स्थितिसर्गनिरोधेषु गृहीता मायया विभोः ॥ (II 5, 18)

வைதிக கர்மானுஷ்டானத்தால் மாத்திரம் மோக்ஷம் பெறமுடியாது என்று அத்வைதிகள் சொல்வதுபோல பக்தி மார்க்கத்திலும் சொல்லுகிறார்கள். "यमेवैष वृणुते तेन लभ्यः" என்று ஞானம் வருவதற்கு பகவத் கிருபை வேண்டுமென்று அத்வைதிகள் சொல்வதைப்போல், கர்ம மார்க்கத்தை விட்டு பக்தியில் ஜீவன் ஈடுபடுவதற்கு பகவதனுக்ரஹம் வேண்டுமென்று பக்தி ஸித்தாந்தத்திலும் சொல்லுகிறார்கள்.

यदा यमनुगृह्णाति भगवानात्मभावितः ।
स जहाति मतिं लोके वेदे च परिनिष्ठिताम् ॥

तस्मात्कर्मसु बर्हिष्मन्नज्ञानादर्थकाशिषु ।
मार्थदृष्टिं कृथाः श्रोत्रस्पर्शिष्वस्पृष्टवस्तुषु ॥

"ஆத்ம விசாரத்தாலும் ஸத் ஸங்கத்தாலும் வைராக்கியமும் ஞானமும் உண்டாகும்" என்று அத்வைதிகள் சொல்லுகிறார்கள். வாஸுதேவனிடத்தில் பக்தி பண்ணினால் வைராக்கியமும் ஞானமும் உண்டாகிறதாக பக்தி மார்க்கம் சொல்லுகிறது.

वासुदेवे भगवति भक्तियोगः प्रयोजितः ।
जनयत्याशु वैराग्यं ज्ञानं यद्ब्रह्मदर्शनम् ॥ (III 32, 23)

एतावानेव यजतामिह निःश्रेयसोदयः ।
भगवत्यचलो भावो यद्भागवतसङ्गतः ॥ (II 3, 11)

பிரும்மம் ஏகமாயும் அத்விதீயமாயும் ஞான ஸ்வரூபமாயும் இருக்கிறதாக அத்வைத ஸித்தாந்தம்; வாஸுதேவ ஸ்வரூபம் அப்படி இருப்பதாக பக்தி ஸித்தாந்தம்.

ज्ञानमात्रं परं ब्रह्म परमात्मेश्वरः पुमान् ।
दृश्यादिभिः पृथग्भावैर्भगवानेक ईयते ॥ (III 32, 26)

ज्ञानमेकं पराचीनैरिन्द्रियैः ब्रह्म निर्गुणम् ।
अवभात्यर्थरूपेण भ्रान्त्या शब्दादिधर्मिणा ॥ (III 32, 28)

ஸர்வாத்மபாவனை வருகிற வரையில் ஸ்வகர்மானுஷ்டானம் பண்ணவேண்டுமென்றும், த்வைத த்ருஷ்டி உள்ளவரையில் மிருத்யு உண்டென்று அத்வைதமும் பக்தி மார்க்கமும் ஒப்புக் கொள்ளுகின்றன.

अर्चादावर्चयेत्तावदीश्वरं मां स्वकर्मकृत् ।
यावन्न वेद स्वहृदि सर्वभूतेष्ववस्थितम् ॥

आत्मनश्च परस्यापि यः करोत्यन्तरोदरम् ।
तस्य भिन्नदृशो मृत्युर्विदधे भयमुल्बणम् ॥ (III 29, 25-26)

நிர்க்குணத்தில் நிஷ்டையாகிய ஞான யோகத்தாலும் பகவந் நிஷ்டையாகிற பக்தி யோகத்தாலும் அடையும் நிச்ரேயஸ பலம் ஒன்றுதான்.

ज्ञानं निःश्रेयसार्थाय पुरुषस्यात्मदर्शनम् ।
यदाहुर्वर्णये तत्ते हृदयग्रन्थिभेदनम् ॥ (III 26, 2)

ज्ञानयोगश्च मन्निष्ठो नैर्गुण्यो भक्तिलक्षणः ।
द्वयोरप्येक एवार्थो भगवच्छब्दलक्षणः ॥ (III 32, 32)

जित्वा सुदुर्जयं मृत्युं अमृतत्वाय मां भज ।
मामात्मानं स्वयंज्योतिस्सर्वभूतगुहाशयम् ॥ (III 24, 38-39)

ஞானியான ஸ்திதப் பிரஜ்ஞனுக்கு உள்ள லக்ஷணங்களே வாஸுதேவனிடத்தில் ஐக்கியப்பட்ட கபிலருக்கும் சொல்லி யிருக்கிறது.

व्रतं स आस्थितो मौनमात्मैकशरणो मुनिः ।
निःसङ्गो व्यचरत्क्षोणीमनग्निरनिकेतनः ॥

मनो ब्रह्मणि युञ्जानो यत्तत्सदसतः परम् ।
निरहङ्कृति निर्ममश्च निर्द्वन्द्वः समदृक् स्वदृक् ॥

प्रत्यक्प्रशान्तधीर्धीरः प्रशान्तोर्मिरिवोदधिः ।
वासुदेवे भगवति सर्वज्ञे प्रत्यगात्मनि ॥

परेण भक्तिभावेन लब्धात्मा मुक्तबन्धनः ।
आत्मानं सर्वभूतेषु भगवन्तमवस्थितम् ॥

अपश्यत्सर्वभूतानि भगवत्यपि चात्मनि ।
इच्छाद्वेषविहीनेन सर्वत्र समचेतसा ॥
भगवद्भक्तियुक्तेन प्राप्ता भागवती गतिः । (III 24, 42-47)

அத்வைத ஞானம் வருவதற்கு சித்த சுத்தி வேண்டும். சித்தம் சுத்தி அடைவதற்கு பலவித உபாயங்களை அனுஷ்டிக்கலாம் என்று அத்வைதிகள் ஏற்றுக்கொள்ளுகிறார்கள். அதாவது, ஸ்வதர்மானுஷ்டானம், வைதிக கர்மாக்களை செய்வது, ஆத்ம குணங்களை சம்பாதிப்பது, மகான்களின் ஸேவை, யோகாப்பியாஸம், நித்யாநித்ய வஸ்து விவேக பூர்வமாய் ஆத்ம விசாரம் பண்ணுதல் முதலியன. பக்தி மார்க்கத்தில் பகவத் பஜனம் பண்ணுதலும், பகவச் சரித்திரங்களை கேட்பதும் சொல்லுவதும், பாகவத ஸேவை செய்வதும், சித்தத்தில் சுத்தியை உண்டாக்கி, காம குரோத லோபங்களின் வேகத்தைத் தணித்து, இந்திரியங்களும் மனஸும் விஷயங்களை விரும்பாமல் பகவானிடத்தில் லயிக்கும்படி பண்ணும்.

यमादिभिर्योगपथैः कामलोभहतो मुहुः ।
मुकुन्दसेवया यद्वत्तथात्माद्धा न शाम्यति ॥ (I 6, 36)

यत्कीर्तनं यत्स्मरणं यदीक्षणं
यद्वन्दनम् यच्छ्रवणं यदर्हणम् ।
लोकस्य सद्यो विधुनोति कल्मषं
तस्मै सुभद्रश्रवसे नमो नमः ॥ (II 4, 15)

यदङ्घ्र्यभिध्यानसमाधिधौतया
धियानुपश्यन्ति हि तत्त्वमात्मनः । (II 4, 21)

तावद्भयं द्रविणगेहसुहृन्निमित्तं
शोकस्पृहापरिभवो विपुलश्च लोभः ।
तावन्ममेत्यसदवग्रह आर्तिमूलं
यावन्न तेऽङ्घ्रिमभयं प्रवृणीत लोकः ॥ (III 9, 6)

केचित्केवलया भक्त्या वासुदेवपरायणाः ।
अघं धुन्वन्ति कार्त्स्न्येन नीहारमिव भास्करः ॥ (VI 1, 15)

सङ्गो यत्संसृतेर्हेतुरसत्सु विहितोऽधिया ।
स एव साधुषु कृतः निःसङ्गत्वाय कल्पते ॥ (III 23, 55)

ஆத்ம ஞானம் வந்தவனுக்கு ஸஞ்சித ஆகாமி கர்மாக்கள் நசிக்கின்றனவென்றும் த்வைத பாவமின்மையால் கர்மவாசனை இல்லாமற் போய்விடுகிறதென்றும் அத்வைதிகள் சொல்லுகிறார்கள். பக்தி ஸித்தாந்தத்தில், ஹரி பக்தியால் கர்மாக்களும் கர்ம வாசனைகளும் நசிக்குமென்று சொல்லுகிறார்கள்.

तैस्तान्यघानि पूयन्ते तपोदानजपादिभिः ।
नाधर्मजं तद्धृदयं तदपीशाङ्घ्रिसेवया ॥ (VI 2, 17)

नैकान्तिकं तद्धि कृतेऽपि निष्कृते
मनः पुनर्धावति चेदसत्पथे ।
तत्कर्मनिर्हारमभीप्सतां हरे-
र्गुणानुवादः खलु सत्त्वभावनः ॥ (VI 2, 12)

'ஞானியானவன் கர்மாக்களைச் செய்தாலும் அவைகளில் ஆஸக்தி இல்லாததால் அவனுக்குக் கர்மபந்தம் உண்டாவதில்லை' என்பது அத்வைதிகளின் கொள்கை; பக்தி ஸித்தாந்தத்தின் படி, ஹரியே தனது ஆத்மாவென்ற அனுபவம் வந்த பக்தனுக்கு, கர்மாக்கள் செய்தாலும், பந்தம் உண்டாவதில்லை. அவன் ஸத்ய வாக்கும் ஸத்யமான செய்கையும் உடையவனாகவும் சம்சார மார்க்கத்தில் இந்திரியங்களும் மனதும் செல்லாதவனாகவும் ஆகிறான். மஹா விஷ்ணுவின் நாபியில் உண்டான பிரும்மா பிரபஞ்ச ஸ்ருஷ்டியாகிற காரியத்தில் ஈடுபட்டபோதிலும், அவருக்கு அதனாலே பந்தமில்லையென்று பகவான் பிரும்மாவிடம் சொல்லுகிறார்.

ऋषिमाद्यं न बध्नाति पापीयांस्त्वां रजोगुणः ।
यन्मनो मयि निर्बद्धं प्रजाः संसृजतोऽपि ते ॥ (III 9, 35)

பிரும்மா சொல்லுவதாவது :—

न भारती मेऽङ्ग मृषोपलक्ष्यते
न वै क्वचिन्मे मनसो मृषा गतिः ।
न मे हृषीकाणि पतन्त्यसत्पथे
यन्मे हृदौत्कण्ठ्यवता धृतो हरिः ॥ (II 6, 33)

பக்தி மார்க்கமே எளிதும் நிர்விக்னமுமான உத்தமோபாயமென்றும் தூரூஹமான பிரும்மதத்துவத்தை விசாரத்தாலே கண்டுபிடித்தல் மிகக் கிலேசமானதோடு பலவித இடையூறு

களுக்கு உட்பட்டதென்றும், ஹரி பக்தியும் ஹரியின் பிரசாதமும் இல்லாவிட்டால் கர்மவாசனை ஆத்யந்திகமாக நிவிருத்தி ஆகாதென்றும் பக்தி ஸித்தாந்திகள் கூறுகிறார்கள்.

न ह्यतोऽन्यः शिवः पन्था विशतः संसृताविह ।
वासुदेवे भगवति भक्तियोगो यतो भवेत् ॥ (II 2, 33)

तथाऽपरे चात्मसमाधियोगबलेन जित्वा प्रकृतिं बलिष्ठाम् ।
त्वामेव धीराः पुरुषं विशन्ति तेषां श्रमः स्यान्न तु सेवया ते ॥
(III, 5, 46)

न युज्यमानया भक्त्या भगवत्यखिलात्मनि ।
सदृशोऽस्ति शिवः पन्था योगिनां ब्रह्मसिद्धये ॥ (III 25, 19)

पानेन ते देवकथासुधायाः प्रवृद्धभक्त्या विशदाशया ये ।
वैराग्यसारं प्रतिलभ्य बोधं यथाञ्जसान्वीयुरकुण्ठधिष्ण्यम् ॥
(III 5, 45)

अकामः सर्वकामो वा मोक्षकाम उदारधीः ।
तीव्रेण भक्तियोगेन यजेत पुरुषं परम् ॥ (II 3, 10)

அத்வைதிகளுக்குங் கூட பக்தியென்பது சித்த சுத்தி அடைந்து ஞானம் உண்டாவதற்கு இன்றியமையாத சாதனமாகும்.

ஸ்ரீமத் பகவத் பாதர்கள் 'பிரபோத சுதாகர' த்தில்,

शुद्ध्यति हि नान्तरात्मा कृष्णपदाम्भोजभक्तिमृते ॥
वसनमिव क्षारोदैः भक्त्या प्रक्षाल्यते चेतः ॥ (67)

என்று சொல்லியிருக்கிறார்.

"அகில லோகங்களும் ஜீவர்களும் மாயைக்கு உட்பட்டவர்கள். மாயைக்கு மேலாக இருந்துகொண்டு, மாயையைத் தன் வசமாய் வைத்துக்கொண்டு, சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார காரியங்களை நடத்துபவர் பரமாத்மா. பரமாத்மாவான ஹரியினிடம் பக்தி பண்ணினால் மட்டுமே ஜீவனுக்கு மாயை நீங்கும்" என்று பக்தி ஸித்தாந்தம் கூறுகிறது.

सत्त्वं रजस्तम इति निर्गुणस्य गुणास्त्रयः ।
स्थितिसर्गनिरोधेषु गृहीता मायया विभोः ॥ (II 5, 18)

स ईशो यद्वशे माया स जीवो यस्तयार्दितः । (I 7, 5 व्याख्याने)

यया संमोहितो जीव आत्मानं त्रिगुणात्मकम् ।
परोऽपि मनुतेऽनर्थं तत्कृतं चाभिपद्यते ॥ (I 7, 5)

सेयं भगवतो माया यन्नयेन विरुध्यते ॥ (III 7, 9)
यदर्थेन विनाऽमुष्य पुंस आत्मविपर्ययः ॥ (III 7, 10)

स वै निवृत्तिधर्मेण वासुदेवानुकम्पया ।
भगवद्भक्तियोगेन तिरोधत्ते शनैरिह ॥ (III 7, 12)

मायां वर्णयतोऽमुष्य ईश्वरस्यानुमोदतः ।
शृण्वतः श्रद्धया नित्यं माययाऽऽत्मा न मुह्यति ॥ (II 7, 53)

सतां प्रसङ्गान्मम वीर्यसंविदो
भवन्ति हृत्कर्णरसायनाः कथाः ।
तज्जोषणादाश्वपवर्गवर्त्मनि
श्रद्धा रतिः भक्तिरनुक्रमिष्यति ॥ (III 25, 25)

ஹரிநாம் சிரவணமும் கீர்த்தனமும் ஸமஸ்த தோஷங்களை யும் போக்கடிக்கும்படியான சர்வ பிராயச்சித்த மென்பதும், ஹரி பக்தியால் ஹ்ருதயம் திரவித்து, தன்னுடைய அசுபநிலை யைக் குறித்து ஜீவனுக்குப் பச்சாத்தாபம் உண்டாகி, மோக்ஷ மார்க்கத்தில் தீவிரப் பிரவிருத்தி ஏற்படுகிறது என்பதும் பக்தி மார்க்கத்தின் பிரதானக் கொள்கைகள்.

सर्वेषामप्यघवतामिदमेव सुनिष्कृतम् ।
नामव्याहरणं विष्णोर्यतस्तद्विषया मतिः ॥ (VI 2, 10)

அஜாமிளோபாக்கியானத்தில் சொல்லுகிறபடி,

भक्तिमान्भगवत्याशु माहात्म्यश्रवणाद्धरेः ।
अनुतापो महानासीत् स्मरतोऽशुभमात्मनः ॥ (VI 2, 25)

பக்தி ஸித்தாந்தமும் அத்வைத ஸித்தாந்தமும் மூலத்தில் ஒரே தத்துவத்தை ஆதாரமாய் கொண்டிருக்கின்றன வென்பது சோதித்துப்பார்த்தால் வெளியாகிறது. முதலாவது, ஜீவனுக்குள் ப்ரத்யகாத்மாவும் அகில பிரபஞ்சத்திலும் ஸர்வாத்மாவாகவும் இருக்கும் வஸ்து ஒன்றே என்பது அத்வைதிகளின் கொள்கை. இரண்டாவது, அத்வைத வஸ்துவாயிருக்கிற ஒரே ஆத்மாவிடத் தில் ஸர்வ பிரபஞ்சமும் கல்பிதம் என்பது அத்வைதிகளின் ஸித்தாந்தம். மூன்றாவது, ஆத்மா ஸ்வஸ்வரூபமாக இருப்ப

தால் உண்மையில் அந்த ஆத்மாவினிடத்தில் எல்லா ஜீவர்களுக்கும் பரமப் பிரியம் உண்டு என்றும், மற்ற பதார்த்தங்களில் ஜீவனுக்கு இருக்கும் காமனைகளெல்லாம் தன் ஆத்மாவிடத்தில் இருக்கும் பிரியத்தின் ஆஸ்பதத்தாலேதான் உண்டாகிறதென்றும், ஆத்மாவைத் தவிர உண்மையில் வேறு பதார்த்தங்கள் இல்லை என்ற ஞானமும் அனுபவமும் வந்தவுடன் தன்னுடைய நித்யமான ஸ்வரூபத்திலுள்ள ஆத்மானந்த நிலை அடைவதே மோக்ஷமென்பதும் அத்வைதிகளின் பரம தாத்பரியம். இந்த மூன்று அம்சங்களும் பக்தி மார்க்கத்திலும் ரஹஸ்ய தத்துவங்களாக நிற்கின்றன. அத்வைதிகள் பிரும்மம் என்று சொல்வதை பக்தி மார்க்கத்தில் ஸ்ரீமந் நாராயணன் என்று சொல்லுகிறார்கள். இதைத் தவிர, வேறு வித்தியாசமில்லை.

हरिर्देहभृतामात्मा स्वयंप्रकृतिरीश्वरः ।
स वै प्रियतमश्चात्मा यतो न भयमण्वपि ॥

इति वेद स वै विद्वान् यो विद्वान्स गुरुर्हरिः ॥ (IV 29, 50-51)

ஹரியை சர்வ பிரியதமனை ஆத்மா என்று அறிந்தவன் தான் வித்வான். 'அவனே குரு, அவனே ஹரி' என்று சொல்லுகிற இவ்விடத்தில், பக்தி மார்க்கத்திற்கும் ஞான மார்க்கத்திற்கும் பேதமிருப்பதாகச் சொல்லமுடியாது.

एवं स्वचित्ते स्वत एव सिद्ध
आत्मा प्रियार्थो भगवाननन्तः ।
तं निर्वृतो नियतार्थो भजेत
संसारहेतूपरमश्च यत्र ॥ (II 2, 6)

இந்த இடத்தில் संसारहेतू परमश्च यत्र என்று சொல்லியிருப்பதிலிருந்து, ஹரி பக்தியானது ஞானத்தைக் கொடுப்பதன் மூலமாக மோக்ஷத்திற்கு சாதனம் என்று அத்வைதிகள் சொல்வது பொருந்தும். आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति என்ற சுருதி வாக்யத்திலுள்ள அத்வைதிகளின் கொள்கைக்கு,

नातः परतरो लोके पुंसः स्वार्थव्यतिक्रमः ।
यदध्यन्यस्य प्रेयस्त्वमात्मनः स्वव्यतिक्रमात् ॥ (IV 22, 32)

என்று பாகவதத்தில் அனுவாத மிருக்கிறது. இதையே பக்தி மார்க்கத்தில்,

किं वा श्रेयोभिरन्यैश्च न यत्रात्मप्रदो हरिः ।
श्रेयसामपि सर्वेषाम् आत्मा ह्यवधिरर्थतः ॥

सर्वेषामपि भूतानां हरिरात्माऽऽत्मदः प्रियः । (IV 31, 12-13)

கபிலோபாக்யானத்தில்,

मामात्मानं स्वयंज्योतिः सर्वभूतगुहाशयम् ।
आत्मन्येवात्मना वीक्ष्य विशोकोऽभयमृच्छसि ॥ (III 24, 39)

என்ற பகவத் வாக்யம் அத்வைத கொள்கைக்குப் பொருந்தினது.

भगवान्सर्वभूतेषु लक्षितः स्वात्मना हरिः ।
दृश्यैर्बुद्ध्यादिभिर्द्रष्टा लक्षणैरनुमापकैः ॥
तस्मात्सर्वात्मना राजन् हरिः सर्वत्र सर्वदा ।
श्रोतव्यः कीर्तितव्यश्च स्मर्तव्यो भगवान्नृणाम् ॥ (II 2, 35-36)

பக்திக்கும் ஞானத்திற்கும் ஐககண்டியம்

கபிலோபாக்யானத்தில்,

तीव्रया मयि भक्त्या च श्रुतसंभृतया चिरम् ।
ज्ञानेन दृष्टतत्त्वेन वैराग्येण बलीयसा ॥

मद्भक्तः प्रतिबुद्धार्थः मत्प्रसादेन भूयसा ।
निःश्रेयसं स्वसंस्थानं कैवल्याख्यं मदाश्रयम् ॥

प्राप्नोतीहाञ्जसा धीरः स्वदृशा छिन्नसंशयः ।
यद्गत्वा न निवर्तेत योगी लिङ्गाद्विनिर्गमे ॥

(III 27, 21-22, 28, 29)

மற்றும்,

लक्षणं भक्तियोगस्य निर्गुणस्य ह्युदाहृतम् ।
अहैतुक्यव्यवहिता या भक्तिः पुरुषोत्तमे ॥
सालोक्यसार्ष्टिसामीप्यसारूप्यैकत्वमप्युत ।
दीयमानं न गृह्णन्ति विना मत्सेवनं जनाः ॥ (III 29, 12-13)

आत्मारामाश्च मुनयो निर्ग्रन्था अप्युरुक्रमे ।
कुर्वन्त्यहैतुकीं भक्तिं इत्थंभूतगुणो हरिः ॥ (I 7-10)

प्रायेण मुनयो राजन्निवृत्ता विधिषेधतः ।
नैर्गुण्यस्था रमन्ते स्म गुणानुकथने हरेः ॥

नात्यन्तिकं विगणयन्त्यपि ते प्रसादं
किंत्वन्यदर्पितभयं भ्रुव उन्नयैस्ते ।
येऽङ्ग त्वदङ्घ्रिशरणाः भवतः कथाया
कीर्तन्यतीर्थयशसः कुशला रसज्ञाः ॥ (III 15, 48)

तुलयाम लवेनाऽपि न स्वर्गं नापुनर्भवम् ।
भगवत्सङ्गिसङ्गस्य मर्त्यानां किमुताशिषः ॥ (IV 30, 34)

பக்தி ஸித்தாந்தத்தின் ரீதியை நோக்கினால், "பாப நிவிருத்தி, வைராக்யம் முதலிய நிவிருத்தி மார்க்கத்திற்குப் படிகளான ஸாதனங்களெல்லாம் ஹரி பக்தியால் உண்டாகின்றன. பிறகு பகவத் ஸ்வரூபானு ஸந்தானத்தாலே பகவானிடத்தில் ஜீவனுடைய ஹ்ருதயம் ஐக்கியப்பட்டு பரமானந்த நிலை உண்டாகிறது. இப்போது இது ஸாத்ய பக்தி ஆகிவிடுகிறது. இந்த நிலைதான் ஞானிகளுக்கு பிராப்யமாய்ச் சொல்லப்படுகிற மோக்ஷம். ஆகையால், பக்தியின் பராகாஷ்டையை அடைந்தவனும் ஞானத்தின் பூர்ண நிலையை அடைந்தவனும் இருவரும் ஆத்மானந்தத்தை அடைந்தவர்கள் தாம். பக்தியில் மூழ்கிய ஸாதுக்கள் மோக்ஷத்தைக் கூட லக்ஷ்யம் செய்வதில்லையென்று சொல்லுகிற இடங்களில் எல்லாம் இவ்விதம் ஸாத்ய பக்தியாகிற பராகாஷ்டையை அடைந்தவர்கள் ஞான பிராப்யத்தையும் பக்தி பிராப்யத்தையும் ஒன்றாக எண்ணுகிறார்கள் என்று தாத்பரியம் கொள்ளவேண்டும். ஆகையால், அத்வைத ஞானத்தின் கடைசி நிலையும், பக்தி ஸித்தாந்தத்தில் ஸாத்ய பக்தியாக ஏற்றுக்கொள்ளுகிற நிலையும் ஸ்வரூபத்தில் ஒன்று தான் என்று ஏற்றுக்கொண்டால், அத்வைத ஸித்தாந்தமும் பக்தி ஸித்தாந்தமும் ஒன்றாய் விடுகிறது.



ஸ்ரீ:
ஸ்ரீ குருப்யோ நம:

# கம்ப ராமாயணத்தில் அத்வைதம்

(வே. சா. ஸ்ரீநிவாசன்)

பிரபல வான்மொழிக் காவியங்களுள் மிகச் சிறந்த ஒன்று வால்மீகி ராமாயணம். அதன் வழி நூலாகக் கம்ப ராமாயணம் தமிழ்ப் பாக்களால் எழுதப்பட்டது. இதனை இயற்றியவர் கவி ச்ரேஷ்டராகிய கம்பர். கம்ப ராமாயணமும் வான்மீகத்தைப் போன்று பல தத்துவங்களைத் தன்னுள் ளடக்கிக் கொண்ட மாபெருங் காவியமாகும். படிக்கப் படிக்கத் தெவிட்டாத இனிமை பொருந்திய ரசமான கவிகள் நிறைந்துள்ள கம்ப ராமாயணத்தின்கண் விளங்கும் அத்வைத பரமான பாடல் களில் ஒரு சிலவற்றை இக் கட்டுரையில் ஆராய்வோம்.

பிரும்மம் ஒன்றே ஸத்தியமாய் என்றைக்கும் உள்ளது. இரண்டாவது, வாஸ்தவத்தில் இல்லை. ஜகஜ் ஜீவர்கள் தோற் றமேயன்றி வேறில்லை. அவை யாவும் பிரும்மத்தினிடத்து விவர்த்தத்தால் தோன்றுபவை. இந்தத் தோற்றம் அநாதி மாயையால் உண்டானது. மாயை விளையாட்டினால் பிரபஞ் சத்தைத் தோன்றும்படி செய்யும் நிலையில், பரமான்மா தலைவ ரெனப்படுகிறார். இத் தலைவர் சகுணப் பிரும்மம். இச் சகுணப் பிரும்மம் ராமாயணக் கடவுள் வாழ்த்துக் கவியில் விளக்கப் பட்டிருக்கிறது.

> உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
> நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
> அலகிலா விளை யாட்டுடை யாரவர்
> தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே.

—பாலகாண்டம் 1, 1.

பிரபஞ்சத்தைத் தோன்றச் செய்து தோன்றியவைகளை நிலைக்கச்செய்து, நிலைத்தவற்றை நீங்கச் செய்தலுமான உயர்ந்த விளையாட்டையுடையவரே தலைவர் அவருக்கே நாம் அடைக் கலம்,

பிரும்மமானது திரைபோன்ற மாயையால் மறைக்கப்பட்டுள்ளது. இராமனது பாத ஸ்பர்சத்தினால் சாப விமோசன மடைந்து, தத்வ ஞானம் அடையப்பெற்ற விராதன் ஸ்ரீ ராகவனை ஸ்தோத்தரிக்கிறான். "நீயே பரம்பொருள்; எல்லா உலகங்களும் நீதான்; நீயே சமயாதீதன்; அப்படியிருக்க, வஞ்சகர்களைப்போல் ஏன் ஒளிகின்றாய்? வெளிப்பட்டு நின்றால், தீமை ஏதேனும் உண்டா? இந்த மாய விளையாட்டு எதற்காக?" என்று சொல்லுகிறான்.

நீயாதி பரம்பரமு நின்னவே யுலகங்கள்
ஆயாத சமயமு நின்னடியவே யயலில்லை
தீயாரின் ஒளித்தியால் வெளிநின்றால் தீங்குண்டோ
வீயாத பெருமாயை விளையாட்டும் வேண்டுமோ.

—ஆரண்ய காண்டம், விராதன் வதைப் படலம் 54.

ஹிரண்ய வதம்செய்த உக்ர நரஸிம்ஹமூர்த்தியை பிரும்ம தேவர் துதித்ததாக விவரிக்கும் கம்பர் கவி அத்வைத ஸித்தாந்தத்தை வெகு அழகாகத் தெளிவு படுத்துகிறது.

பேரை ஒருபொருட்கே பல்வகையில் பேர்த்தெண்ணும்
தாரை நிலையை தமியை பிறரில்லை;
ஆரைப் படைக்கின்றது? ஆரை அளிக்கின்றது?
ஆரைத் துடைக்கின்றது? ஐயா அறியேமால்.

—உயுத்த காண்டம், இரணியன் வதைப் படலம் 159.

இறைவன் என்ற ஒரே பரம்பொருளே பிரபஞ்சத்தில், பல பொருள்களாகத் தோற்றமளிக்கிறது. மழைத் தாரையைப் பார்த்தோமானால், மேக மண்டலத்தில் மேகமெனவும், கீழே இறங்கும்போது, மழையெனவும், பூமியில் விழுந்தவுடன் மழை ஜலம், நீரோடை, ஆறு, கடல் எனவும் பெயர் பெறுகிறது. மறுபடியும் அதுவே மேகமாகிறது. அதேபோல, தன்னந்தனியான ஒரே கடவுள் தானே பிரபஞ்சமாகிறான். அப்படியிருக்க, "சிருஷ்டிக்கிறது தன்னைத் தவிர வேறு யாரை? காப்பாற்றுகிறது யாரை? அழிக்கிறது யாரை? இப்போது ஹிரண்யனை அழித்தாயே, அவனும் நீதானே. உண்மையில் யார் யாரை அழித்தது? இதை விளக்கவேண்டும்" என்ற கேள்விகளைப் பிரும்மதேவர் கேட்கிறார். இந்தக் கேள்விகளில்

அத்வைத மதத்தின் விஸ்தாரந்தம் வெகு லகுவாக வெளிப்படு கிறது.

கம்ப ராமாயணம் அரங்கேற்றுங் காலத்தில் 'சிரித்தது செங்கட் சீயம்' என்னும் பழமொழிக் கிணங்க, தமக்கு மிக்க பிரியமான உபாஸனா மூர்த்தியாம் நரசிம்மத்தைத் துதிக்குங் கால், கம்பர், பிரும்மாவின் வாயிலாக அத்வைத பரமார்த்தத்தை விளக்குகிறார். இதனால் காப்புச் செய்யுளில் ஆரோபிக்கப்பட்ட ஆக்கல் நிலைபெறுத்தல் நீக்கல் இவைகளை நிஷேதம் செய்து, "அவ்வுலகங்க ளெல்லாமே உன்னைத் தவிர வேறானவை யல்ல; நீயே அவை" என்னும் உண்மை அத்வைதப் பொருளைத் தெள்ளென விளக்குகிறார்.

வேதாந்தமானது ஜகஜ் ஜீவர்களை ஆரோப யுக்தியால் பிரும்மத்தினிடத்துக் கற்பிதம் என்று கூறி, அபவாத யுக்தியால், ஜகஜ் ஜீவர்களைப் பிரும்மமாக்குகிறது. கயிற்றைப் பாம்பாகக் காணல் ஆரோபம். பாம்பாகத் தோன்றிய கயிற்றைக் கயிறாகவே காணல் அபவாதம். அதுபோலவே, நிஜம்போலத் தோன்றும் பஞ்சபூதமும், அவற்றின் விகாரமாகிய அண்ட கோடி சராசரங்களும் பிரும்மத்தினிடத்துக் கற்பிதத்தால் உண்டானவை. கயிறு பாம்பாகத் தோன்றியபோது கயிற்றில் பாம்பென்னும் நாமமும் பாம்பின் உருவமும் எப்படி இல்லையோ, அப்படியே பிரும்மம் ஜகஜ் ஜீவர்களாகத் தோன்றிய போதும், அதனிடத்து நாம விகாரங்கள் இல்லை. கயிறு பாம்பாகத் தோன்றியபோதும், பாம்பென்னும் பிராந்தி நீங்கிய போதும், எப்படிக் கயிறு வாஸ்தவத்திலே பாம்பாகவில்லையோ, அப்படியே விசாரணைக்கு முன் ஜகஜ் ஜீவர்களாய்த் தோன்றிய போதும், விசாரணைக்குப்பின் அவைகள் இல்லாமல் தோன்றிய போதும், பிரும்மம் மாறுதலை யடையாமல் விகாரமற்றதாய் இருக்கிறது. பிராந்தியினால் உண்டான பாம்பால் கயிறு காரணமாகவும், பாம்பு காரியமாகவும் ஆயின. வாஸ்தவத்தில் பாம்பு காரியமாகில், கயிறும் காரணமாகலாம். அப்படி யில்லாமல் காரியமாகிய பாம்பு பிராந்தி நீங்கியவுடனே பொய்யாகின்றமையால், கயிறு காரணமானதும் பொய். ஆதலால் காரண காரியம் கயிற்றுக்கு இல்லை. அதுபோலவே, பிரும்மம் காரணமும்

ஜகஜ் ஜீவர்கள் காரியமும் ஆகிறார்கள். உண்மையாகவே, ஜகஜ் ஜீவர்கள் காரியமாயின் பிரும்மம் காரணமாகலாம். ஞான ராய்ச்சியினால், ஜகஜ் ஜீவர்கள் பொய்யாகிறபடியால், பிரும்மம் காரணமாகாது. ஆகவே, பிரும்மம் காரணமுமன்று, காரியமு மன்று. காரண காரிய பிராந்தி வந்த இருகாலத்தும் பிரும்மம் இருந்தபடியே இருக்கிறது. ஞான மயமாய் ஏகமாய் இருக்கும் பிரும்மத்தைக் கண்டால், தோற்றப் பொருளாகிய பிரபஞ்சம் காணப்படாது ஒழியும்.

இதன் விளக்கத்தைச் 'சுந்தர காண்டம்' காப்புச் செய்யு ளில் காணலாம்.

> அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவெனப் பூதமைந்தும்
> விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்
> கலங்குவ தெவரைக் கண்டால் அவரென்பர் கைவிலேந்தி
> இலங்கையில் பொருதா ரன்றே மறைகளுக் கிறுதி யாவார்.

—சுந்தர காண்டம், கடவுள் படலம் 1.

(மறைகளுக் கிறுதி - வேதாந்தம்; அலங்கல் - மாலை; அரவு - பாம்பு; பொருதார் - யுத்தம் செய்தார்.)

அஃதாவது, உண்மைப் பொருளாகிய மாலையை உள்ளபடி கண்டால் முன் அம்மாலையிலே தோன்றிய தோற்றப் பொருளா கிய பாம்பு காணப்படாது நீங்குதல்போல, உண்மைப் பொரு ளாகிய எவரைக் கண்ட மாத்திரத்தில், நிஜம்போலே தோன்றும் பஞ்ச பூதங்களும், அவற்றின் விகாரமாகிய அண்டகோடி சரா சரங்களும் காணப்படாது நீங்குமோ, வேதாந்தப் பொருளாகிய அவரே இலங்கையில் ராக்ஷஸர்களோடு யுத்தம் செய்தார் என்பர் தத்வ ஞானிகள்.

மாலையில் தோன்றும் பாம்பு, தோற்றத்தில் உள்ளதாயி னும், உண்மையில் இல்லாததைப்பற்றிப் பொய்ம்மை யரவு எனக் கூறியுள்ளார்.

மெய்ப் பொருளல்லாத பிரபஞ்சத்தை மெய்ப் பொருள் என்று மயங்குதலால் பிறப்பு உண்டாதலும், மெய்ப் பொருளை அறிதலால் அம் மயக்கமும் பிறவியும் ஒழிதலும் என்று இப் பாட்டு,

பொரு ளல்லவற் றைப்பொரு ளென்றுணரும்
மருளான்ஆம் மாணுப் பிறப்பு

என்ற குறளின் கருத்தை "அலங்கலில் தோன்றும் அரவு" என்றும் திருஷ்டாந்த முகத்தால் தெளிவிக்கிறது.

இராம பாணத்தால் அடிபட்டுக் கிடந்த வாலி தத்வஞானம் பெற்றவனாய் ஸ்ரீ ராகவனை துதிக்கிறான்.

ஏவுகூர் வாளியால் எய்துநா யடியனேன்
ஆவிபோம் வேலைவாய் அறிவு தந்தருளினாய்
மூவர்நீ முதல்வனீ முற்றுநீ மற்றுநீ
பாவநீ தருமநீ பகையுநீ யுறவுநீ.

—கிட்கிந்தா காண்டம், வாலி வதைப் படலம் 121.

"அம்பினால் என்னை எய்து, என் உயிர் நீங்கும் தருணத்தில் எனக்குத் தத்துவ ஞானத்தைத் தந்தருளினாய். அதனாலே பிரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்னும் மும்மூர்த்திகள் நீ என்றும், 'குடத்திற்கு மண்போல' எல்லாவற்றிற்கும் உபாதான காரணமாகிய முதற் பொருள் நீயே என்றும், அறியப்படுவதும் அறியப்படாததுமான எல்லாப் பொருள்களும் நீயே என்றும், தருமம் அதர்மம் இரண்டும் நீயே என்றும், சிநேகம் பகை இரண்டும் நீயே என்றும் பிரத்யக்ஷமாக அறியலானேன்" என்கிறான்.

எல்லாமாய் நின்ற பூர்ண நிர்க்குணப் பரம்பொருள், துவைதமான சகுண நிலையில், ஈசனாய் பாவமே இல்லாதவனும், தருமத்தை யுடையவனுமாக நிற்கிறான். எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாய், அவைகளை யாட்டுகின்றவனாய், அவைகளின்று வேறுபட்டு நிற்கிறான். தத்துவ ஞானத்தால் ஏற்பட்ட அத்வைத நிலையிலோ, தருமம், பாவம், பகைமை, உறவு, பஞ்சபூதங்கள் இவைகளெல்லாம் தானேயாகி, வேற்றுமையற்று, அத்வைதப் பொருளாய் அநுபவானந்தமாய்ப் பிரகாசிக்கிறான்.

தத்துவ ஞான மடைந்த ஜீவன்முக்தர்களுக்குத், தான் பரம்பொருளை வெகு லகுவாக அறியமுடியும், அந்த ஞானத்தை இறக்குஞ் சமயத்தில் அடைந்த வாலி, தன் மகன் அங்கதனுக்கு ஸ்ரீ ராகவனைச் சுட்டிக்காட்டிச் சொல்லுகிறான் :—



பாலமைதவிர் நீஎன்சொல் பற்றுதியாயின் தன்னின்
மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள் வில்லுந்தாங்கி
கால்தரை தோயநின்று கண்ணுக்கு மெளியனுனன்
மால்தரும் பிறவிநோய்க்கு மருந்தென வணங்குமைந்த.

—கிட்கிந்தா காண்டம், வாலி வதைப் படலம் 148.

"மைந்தனே! சிறு பிள்ளைத் தனத்தை விட்டுவிடு. என் சொல்லை உறுதியாய்ப் பின்பற்றுவாயேயானல், இதோ நான் சொல்வதைக் கேள். தனக்கு மேலாக ஒரு பொருளும் இல்லாத உண்மைப் பொருளான பரம்பொருள், வில்லைக் கையில் ஏந்திக்கொண்டு, பாதங்கள் பூமியிலே படிய நின்று, நம் கண்ணுக்குப் புலப்படும்படி, எளியனுக நிற்கிருன். மயக்கத்தைத் தரும் பிறவி நோய்க்கு மருந்தாக நினைத்துப் பரவஸ்துவான ஸ்ரீ ராகவனை வணங்கு" என்று சொல்லுகிருன்.

அங்கதனுக்கு ஜனக பிதாவான வாலி, இந்தச் சந்தர்ப்பத்தில், ஞான பிதாவாகித் தான் அடைந்த ஞானச் செல்வத்தை அளிக்கக் கருதி, "யான் சொல்லப் போகும் விஷயம் முக்கியமானது. விளையாட்டுத் தனத்தை விட்டுவிடவேண்டும். அப்போதுதான், நான் சொல்வதை யறியமுடியும்" என்பதற்காக, "பாலமை தவிர்" என்றுன். "பரம்பொருளுக்கு மேலான பொருளில்லை. மற்றெல்லாம் தோற்றப் பொருள்களே யன்றி வேறில்லை. பரம்பொருள் ஒன்றே உண்மைப் பொருள்" என்பதுபற்றி, ஸ்ரீ ராமனையே 'மெய்ப் பொருள்' என்றுன். அத்வைத சித்தாந்தப்படி, 'பரம்பொருளொன்றே மெய்ப்பொருள்' என்ற கருத்து இங்குக் காணப்படுகிறது.

இராமன் சரபங்க முனிவரின் ஆச்ரமத்தைச் சமீபித்த போது, இந்திரன் ராமபிரானைக் கண்டு தனக்குத் தத்துவ ஞானத்தை யளித்த பரம்பொருளென உணர்ந்து, பின்வருமாறு துதிக்கிருன்.

தோய்ந்தும் பொருளனைத்தும் தோயாதுநின்ற
சுடரேதொடக் கறுத்தோர் சுற்றமேபற்றி
நீந்தவரிய நெடுங்கருணைக் கெல்லா
நிலயமே வேதநெறி முறையினோடி

ஆய்ந்த வுணர்வின் உணர்வே பகையா
லலைப்புண்(டு) அடியேமடி போற்றவந் நாள்
ஈந்தவரம் உதவ எய்தினையே எந்தாய்
இருநிலத்தவோ நின்னிணை யடித்தா மரைதாம்.

—ஆரணிய காண்டம், சரபங்கர் பிறப்பு நீங்கு. 27.

"எல்லாப் பொருள்களிலும் தோற்ற மாத்திரத்திலே கலந்திருந்தும், அவற்றின் குண தோஷங்களில் சம்பந்தப்படாமலே, சாக்ஷி மாத்திரமாய் நிற்கும் சோதிப் பொருளே! முற்றும் துறந்தோரது சுற்றமே! அருளுக்கு உறைவிடமே! அறிவுக்கு அறிவே! ஆதியில் எங்களுக்கு அருளியபடியே அவனியில் அவதரித்தாயே அல்லாமல், உன் திருவடிகள் இப்பூமியில் பொருந்தத் தக்க புண்ணியமுடையவையோ?" என்றும், "உனது பரநிலையை நோக்கினால், உனக்குப் பகையும் இல்லை, உறவும் இல்லை, ஒளியும் இல்லை; இருளும் இல்லை, இளமை இல்லை, முதுமை இல்லை, முதல் இடை கடை யில்லை, முன் பின் இல்லை. இவ்வாறாக, நீ வில்லேந்தி திருவடி வருந்தத் தரையில் நடந்து, எங்களைக் காக்கின்றாய். காவாது போனால், பழி யுண்டோ? யாங்கள் செய்யக்கூடிய கைம்மாறு யாதுமில்லையே" என்றும் சொல்லுகிறான்.

மேவாதவ ரில்லை மேவினரு மில்லை
வெளியோடிருளு மில்லை மேல்கீழு மில்லை
மூவாமை யில்லை மூத்தமையும் இல்லை
முதலிடை யோடீறில்லை முன்னொடு பின்னில்லை
தேவா இங்குஇவ்வோ நீசென்ற நிலைஎன்றால்
சிலையேந்தி வந்தெம்மைச் சேவடிகள் நோவக்
காவா தொழியிற் பழிபெரிதோ அன்றேல்
கருங்கடலில் கண்வளராய் கைம்மாறு முண்டோ.

—ஆரணிய காண்டம், சரபங்கர் பிறப்பு நீங்கு. 28.

மேற்கூறிய கவி, அரூபமாய், அகண்டமாய், அபேதமாய், எங்கும் பிரும்மமே யுள்ளது. பேதமாய் வேறே ஒருபொருளும் இல்லை" என்பதை விளக்குகிறது.

இவ்விரு பாக்களும், உருவமுடைய சகுண சொரூபத்தைப் போற்றிக் கொண்டே, உண்மையான அத்வைத நிர்க்குண ஸ்வரூப அனுபவத்தைத் தருகின்றன.

கவந்தன் சாபம் நீங்கி ஆகாயத்தில் நின்று ஸ்ரீராம பிரானைத் துதிக்கும்போது,

> நிற்கு நெடுநீத்த நீரின்முளைத் தெழுந்த
> மொக்குளே போல முரணிற்ற வண்டங்கள்
> ஒக்கவுயிர்ந் துன்னுளே தோன்றி யொளிக்கின்ற
> பக்க மறிதற் கெளிதோ பரம்பரனே

—ஆரணிய காண்டம், கவந்தப் படலம் 48.

என்று கூறுகிறான்.

"பரம்பொருளே! பெரிய சமுத்திரத்தில் தோன்றிய நீர்க் குமிழிகள் போல, உலகங்கள் உன்னிடத்திலே தோன்றி மறைகின்ற தன்மையானது ஒருவரால் அறிதற்குச் சுலபமானதன்று" என்பது இதன் பொருள்.

இது, "பரம்பொருள் உண்மை; அப் பரம்பொருளில், உலகம் கற்பிதமாய்த் தோன்றி, அங்கேயே மறைகிறது" என்ற அத்வைத உண்மையை விளக்குகிறது.

சுக்கிரீவன் தென் திசையிற் செல்லும் வானரர்களை நோக்கிச் சீதையைத் தேடவேண்டிய இடங்களைக் குறிப்பிடும்போது அருந்ததி மலையையும் குறிப்பிடுகிறான்.

அதில் "சிவ பிரானே சிறந்தவன்; உலகங்களைத் தன் பாதங்களினால் அளந்த திருமாலே சிறந்தவன் என்று பேத புத்தியோ டுரைக்கும் தத்துவ ஞானம் இல்லாத மூடர்க்கு, மோக்ஷத்தை யடைதல் முடியாததால் போல............" என்ற பொருளுள்ள,

> அரனதிக னுலகளந்த வரியதிக னென்றுரைக்கு
> மறிவி லோர்க்குப்
> பரகதி சென்றடை வரிய பரிசேபோற் புகலரிய
> பண்பிற்று மால்.

—கிட்கிந்தா காண்டம், நாடவிட்ட. 24.

என்னும் செய்யுட் பகுதியில் "ஹரிக்கும், ஹரனுக்கும் வேற்றுமை யில்லை" என்னும் அத்வைதக் கொள்கை கூறப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ :

# திருப்புகழும் அத்வைதமும்

திருப்புகழ் மணி T. M. கிருஷ்ணசாமி ஐயர்

சிருஷ்டி என்னும் விந்தாடவியிலே, பேதத்தால் ரூப விஸ்தாரங்களும், ப்ரபஞ்ச அனுபவ விஸ்தாரங்களும் கணக்குக்கு எட்டாத வகையில் ஏற்பட்டிருக்கின்றன. இந்தப் பேதங்களோ எதைச் சுட்டிக் காண்பிக்கின்றன என்றால், அபேதம் ஒன்றையே தான் காட்டும். மேடும் பள்ளமும் சமதளத்தைக் காட்டுவது போலத் தான். மானிட மனோ விருத்தியிலும் அளவிட முடியாத பேத உணர்ச்சி தான். இந்த பேதங்களெல்லாம், ஒன்றிலே உற்பத்தியாகி, அதிலேயே நிலைத்துச் சிலகாலம் நின்று, பிறகு அந்த ஒன்றிலேயே லயமாய் விடுகின்றன. உத்பத்தி, ஸ்திதி, லயம் ஆகிய மூன்றிற்கும் மூலகாரணமாய் நிற்கும் பொருள் தான் அத்வைதம் என்று சொல்லப்படுவது.

சித்தர் பாடுகின்றார் :

> ஒன்றும் ஒன்றும் ஒன்றுமே உலகனைத்து மொன்றுமே
> அன்றும் இன்றும் ஒன்றுமே அனாதியான தொன்றுமே
> கன்னல்நின்ற செம்பொனைக் களிம்பறுத்து நாட்டினால்
> அன்று தெய்வம் உம்முளே அறிந்ததே சிவாயமே.

இந்த 'ஒன்று' தான் அத்வைதம். அது ஒன்றாய் இருப்பதுமன்றி, பேதித்துநின்ற பல பொருள்களையும் ஒன்றாக்கி விடுகிறது. வெவ்வேறாய்த் தோன்றும் அவயவங்களை உயிர் எப்படி ஒன்றாக்கி விடுகின்றதோ, பாளம் பாளமாய்ச் சூரிய உஷ்ணத்தால் வெடித்துத் தனித்தனிப் பகுதிகளாய் நிற்கும் வயலின் கண்டங்கள் எல்லாம், காவேரியின் சீதளப் பிரவாகம் வாய்க்கால் வழியே சென்று பாய்ந்தவுடன், வெடிப்பு பேதங்கள் எவ்விதம் மறைந்து சமதளம் ஆகின்றதோ, அதுவே போல், ஆசாபாசக் காமக் குரோதங்களால் வெடிபட்ட மானிட மனது திருப்புகழ் வெள்ளத்தால் நனையப் பெற்றவுடன் அபேத உணர்ச்சியோடு ஆனந்த அத்வைதக் குளிர்ச்சியையும் அடைகின்றது. ஆகவே, திருப்புகழ் என்பதே அத்வைதம். அங்கே, இரண்டு வஸ்துக்கள் இல்லையாம்! பாடும் புகழ் ஒன்று தான். புகழின் ருசியும் பொருளும் ஒன்றுதான். அனுபூதியும் ஒன்று.

கேட்பவர்களோ அநேகம். ஆனால் ஏகபோகம் தான். ஸம ஆராதனை தான்.

ஸ்ரீ அருணகிரியார் முருகனை அத்வைத மூர்த்தியாகக் கருதிப் போற்றிய திருப்புகழ்கள் பல. பழனிமலைமேல் நின்ற சுப்ரமணியனை பாடுங்கால், சொல்வார் :

சுருதிமுடி மோனஞ்சொல் சிற்பரம ஞானசிவ
சமயவடி வாய்வந்த அத்வைதமான பர
சுடர் ஒளியதாய்நின்ற நிட்கள சொருபமுதல்
ஒருவாழ்வே. (700)

மற்றொரு பாட்டில் (பழமுதிர் சோலை) முருகன் யார் என்று தீர்மானம் செய்கிறார் :

அகரமுமாகி அதிபனுமாகி அதிகமுமாகி அகமாகி
அயனெனவாகி அரியெனவாகி அரனெனவாகி அவர்மேலாய். (3)

மேலும் மற்றொரு பாட்டில், தேவனார் விசேஷமாய்க் கூறுகின்றார் :

காணொ ணாதது உருவோ டருவது
பேசொ ணாதது உரையே தருவது
காணு நான்மறை முடிவாய் நிறைவது பஞ்சபூதக்
காய பாசம தனிலே உறைவது
மாய மாயுடல் அறியா வகையது
காய மானவ ரெதிரே யவரென வந்துபேசிப்
பேணொ ணாதது வெளியேய் ஒளியது
மாயனார் அயன் அறியா வகையது
பேத (அ)பேதமொ டுலகாய் வளர்வது விந்துநாதப்
பேறு மாகலை அறிவாய் துரியவ-
தீத மானது வினையேன் முடிதவப்
பேறு மாய்அருள் நிறைவாய் வளர்வது ஒன்று நீயே. (478)

நேரான வாழ்வு வேண்டுமென்று வேண்டுகின்றார். அந்த வாழ்வு, அத்வைத வாழ்வு தானும்.

நீவே றெனாதிருக்க நான்வே றெனாதிருக்க
நேராக வாழ்வதற்கு அருள்கூர.
—சுவாமிமலை, நாவேறு பாமணத்த. (879)

என்று வேண்டுகிறார்.

பேதத்தை வாக்கினாலும் பொருள்களினாலும் சுட்டிக் காட்டி அறிமுகப்படுத்தலாம்; பஞ்சேந்திரியங்களால் நிலை

சிறத்தக்கூடும். ஆனால் "மன வாக்குச் செயலாலே அடைதற்கரியதாய் அருவுருவாய் எங்கும் ஒன்று போலே விளங்கும் பொருளை எவ்வாறு புகல்வதுவே?" என்று கந்தரலங்காரத்தில் (28) பாடியுள்ளார். மானிட புத்தியில் அத்வைத வுணர்ச்சி அன்பும் பக்தியும் ஞானமும் ஒன்றினாலன்றிச் சித்திக்காது. முருகன் வேலைக்காரன். அன்பர்களுக்குக் கெட்ட வேலையைக் கூட நல்ல வேலையாய் ஆக்க ஆற்றல் பெற்றவனானதால் வேலைக்காரன் என்று பெயர் பெற்றான் போலும். "ஆணவம் அழுக்கு அடையும் ஆவியை விளக்கி அனுபூதி அடைவித்தருளும் நியாயக்காரனும்" என்று திருவகுப்பில் (திருவேளைக்காரன் வகுப்பு 1) பாடியுள்ளார். சீர்பாத வகுப்பில் (1) தத்துவத்தை உணருமவர் சீலத்தைப் போற்றுகின்றார் :

உருவெனவும் அருவெனவும் உளதெனவும் இலதெனவும்
உழலுவன பரசமய கலையார வாரமற
உரையவிழ உளமவிழ உணர்வவிழ உயிரவிழ
உளபடியை உணருமவர் அனுபூதி ஆவதுவும்

முருகன் சீர்பாதம் என்று பாடியுள்ளார். இந்த அனுபூதியே சுத்த அத்வைதமாம். இப்பொருளை என்னவென்று கூறுவது! என்ன லக்ஷணங்களை விவரிப்பது! இந்த அத்வைதமே முருகன் தத்வமாதலால் அதை அது என்றுதான் சொல்ல முடியுமென்றார். கந்தர் அனுபூதியில், பொருள் (பாரமார்த்திகப் பிரும்மம்) என்பதை உபதேசிக்குங்கால், சொல்வதாவது :

முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள்கொண் டறியார் அறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதென்
றிருளன் றொளியன் றெனநின்ற (அ)துவே.

செவ்வா னுருவில் திகழ்வேல்வ னன்(று)
ஒவ்வாத தெனஉணர் வித்தது தான்
அவ்வா றறிவார் அறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே. —கந்தரனுபூதி 13, 30.

அதுதான் ஒவ்வாதது—ஒப்பு இலி ; ஆமாம், ஒப்பிலியப்பன் ஓங்கார அப்பன் அல்லவா? முருகன் உணர்வித்ததை நமக்கு உபதேசிப்பவராய்

"அது என உணர்வித்தது அதுதான்" என்று

"ஓம் தத் ஸத்" என்ற வாக்கியத்தை உபதேசித்து விட்டார்.

---

ஸ்ரீ :
குருப்யோ நம :

# அத்வைதத்தின் சில சிறப்புத் தன்மைகள்

(போலகம் ராமா சாஸ்திரிகள், சென்னை)

உலகத்திலுள்ள எல்லா மதங்களிலும், அவைகளில் ஜனங்களை இதர மதங்களிலிருந்து சேர்த்துக் கொள்வதற்கு ஒவ்வொரு விதமான சடங்கு ஏற்படுத்திக்கொண்டு இருக்கிறார்கள்.

கிறிஸ்தவர்களுக்கு ஞான ஸ்நானம், துலுக்கர்களுக்கு கலிமா, புத்தர்களுக்கு பஞ்சசீலம், ஆகம சைவர்களுக்கு சிவ தீக்ஷை, ராமாநுஜ வைஷ்ணவர்களுக்கு காய்ச்சியிட்ட இரண்டு முத்திரை, மாத்வ வைஷ்ணவர்களுக்கு காய்ச்சியிட்ட பஞ்ச முத்திரை, வல்லபாசார்ய வைஷ்ணவர்களுக்கு பிரம்ம ஸம்பந்தம், வீரசைவர்களுக்கு லிங்கதாரணம், சீக்கியர்களுக்கு இரும்பு வளை முதலியன ஏற்படுத்தப்பட்டுள்ளன. வேறு மதஸ்தன் ஒருவன் மேற்கண்ட மதங்களிலே சேரவேண்டுமானால், மேற்கண்ட மதத்தின் மேற்கண்ட ஒரு சடங்கை அவனுக்குச் செய்வித்து அம் மதத்தில் அவனைச் சேர்த்துக் கொள்ளுகிறார்கள்.

1. அத்வைத மதம் என்னும் ஸ்மார்த்த மதத்தில் மாத்திரமே பிறரைச் சேர்த்துக் கொள்வதற்கு ஒரு சடங்கும் ஏற்படவில்லை.

2. புத்தம், கிறிஸ்தவம், மகம்மதியம், மாத்வம் முதலிய மதங்கள், மதத்தை ஸ்தாபித்த மனிதர் பெயராலும், சைவம், வைஷ்ணவம் முதலிய மதங்கள், வழிபடு கடவுள் பெயராலும் ஏற்பட்டிருக்க, இவ் வத்வைத மதம் ஒன்றே தெலுங்கு நாட்டில், "வைதிகி" என்றும், தமிழ் முதலிய நாடுகளில் "ஸ்மார்த்த மதம்" என்றும், ஆதாரமான நூல்களின் பெயராலே அமைந்திருக்கிறது.

3. ஹிந்து மதத்தின் உட்பிரிவுகளான ஆகம சைவம், வீர சைவம், ராமானுஜம், மாத்வம், சைதன்யம், வல்லபம்

முதலிய மதங்களின் சாஸ்திரங்கள் சில சில மாகாணங்களி லேயே பிரசாரத்தை அடைந்திருக்கின்றன, வேறு சில மாகா ணங்களில் ஜனங்களுக்கு அவைகளின் பெயர்கூடத் தெரியாது. நேபாளத்திலும், மலையாளத்திலும், ராமானுஜ சாஸ்திரங்களை ஒருவரும் அறியார். சிந்துவிலும், பஞ்சாபிலும், காஷ்மீரத் திலும், மத்வ சாஸ்திரங்களை ஒருவரும் அறியார். தமிழ் தெலுங்கு கன்னட நாடுகளில் வல்லப சாஸ்திரங்களை ஒருவரும் அறியார். அஸ்ஸாமிலும் வங்காளத்திலும் வீர சைவத்தை ஒருவரும் அறியார். அத்வைத சாஸ்திரம் ஒன்று மாத்திரம் வேதம் வழங்கும் எல்லா மாகாணங்களிலும் சமமாக நிலைபெற் றிருக்கிறது.

4. இதர மதஸ்தர்களுடைய சாஸ்திரங்களிலெல்லாம் தம் மைத் தவிர பிற மதங்களைக் கண்டிக்கும்போது, அத்வைத மதத்தையே முதலில் கண்டிக்கிறார்கள்; மத்வ ராமானுஜ மதங் களைக் கண்டிப்பதில்லை; அத்வைத மதத்தையே ப்ரதானமாகக் கண்டிக்கிறார்கள். ராமானுஜரும் தனக்கு முன்னிருந்த வேறு இதர மதங்களை அவ்வளவாகக் கண்டிப்பதில்லை. அத்வைதத் தையே முக்கியமாகத் தாக்குகிறார். வல்லபரோ, மத்வ ராமா னுஜர்களைவிட அத்வைதத்தையே எதிர்க்கிறார். பேத வாத சைவ மதஸ்தர்களும் அங்ஙனமே. புத்தமும் சமணமும் அங் ஙனமே. எந்த சாஸ்திர நூலைப் பார்த்தாலும் பிற மதங்களிலே முதல் ஸ்தானம் அத்வைதத்திற்கே.

5. ஆஸ்திக மதம் எம்மதமாயினும் தனக்கு அது சம் மதமே என்று சொல்லும் மதமும் அத்வைதமே. ஆஸ்திக மதங்கள் அநேகமாய் கர்ம மார்க்கத்தையோ, பக்தி மார்க்கத் தையோ ஆதாரமாகக் கொண்டன. அத்வைத ஸாக்ஷாத்காரத் திற்கு முக்கிய ஆதாரமான சித்த சுத்தி கர்ம மார்க்கத்தினாலும் சித்தத்தின் ஏகாக்ர நிலை பக்தி மார்க்கத்தினாலும் ஏற்படுவதால், அத்வைதம் தன்னைத் தாக்கும் மதங்களையும் தான் அரவணைக் கின்றது.

6. வேறு எல்லா மதங்களும் அம் மதத்தினர்களை எல் லாம் ஒரே கட்டுப்பாடாக நெற்றியில் தரிக்கும் குறி, செய்யும் பூஜை, செல்லும் கோயில் முதலிய விஷயங்களில் நிர்ப்பந்தம்

ஏற்படுத்தி யிருக்கிறது. அத்வைதிகள் என்னும் ஸ்மார்த்தர்கள் மாத்திரம், நெற்றியில் விபூதியோ, நாமமோ, கோபியையோ சந்தனத்தையோ எதையும் தங்கள் குலாசார முறைப்படி தரிப்பார்கள். பூஜையிலும் அவரவர்கள் பக்திப்படி வெவ்வேறு மூர்த்திகளையும் வழிபடுவார்கள். கோயில் வழிபாட்டிலும் அங்ஙனமே. அத்வைத பீடாதிபதிகள் கூட சிவாலயம், விஷ்ணு ஆலயம், சக்தி ஆலயம் முதல் எல்லா வேதோக்த தெய்வங்களின் ஆலயங்களிலும் வழிபாடு செய்கிறார்கள். எவ் விஷயங்களிலும் ஒரு நிர்ப்பந்தமும் ஏற்படுத்தப்படவில்லை. ஒருவரால் ஒரு சமயத்தில் ஏற்படுத்தப்பட்ட மதமாய் இருந்தால், அதில் புதியதாக ஜனங்களைச் சேர்க்கும்போது, சேருபவர்களை ஒரே சட்ட திட்டத்துடன் சேர்த்திருக்க முடியும். ஆதி ஆசார்ய ஸ்வாமிகள் மறைமுடியான உபநிஷத்திலுள்ள தத்துவத்தை விளக்கினார்களே ஒழிய, தர்மம், உபாஸனை இவைகளில் அநாதியான தர்ம சாஸ்திரங்களும் அவர்வர்களுடைய குலோபாஸனைக்குரிய ஸகுண மூர்த்திகளுமே, அவரவர்களுக்குப் பிரமாணமாக இருக்கட்டும் என்று ஆக்ஞை செய்துவிட்டார்கள். புதிதாக ஒரு மதக் கட்டுப்பாட்டையும் செய்யவில்லை.

7. வேத வேதாங்கங்களை மட்டுமே பிரமாணமாகக் கொண்டது அத்வைத மதம் ஒன்றுதான். அநேகமாய் நம் நாட்டிலுள்ள இதர மதங்கள் ஒவ்வொன்றும் ஏதோ ஒரு ஆகமத்தையோ, தேச பாஷைப் பிரபந்தத்தையோ கூட சேர்த்துக் கொண்டிருக்கிறது. வேதத்தைவிட அவைகளை சில சமயம் தூக்கியும் பேசுகிறது. இந்த முறையிலும் அத்வைத மதம் ஒன்றே வைதிகமாகிறது. வேத வேதாங்கங்களை ஆதாரமாகக் கொண்டதால், அவரவர்களுடைய அநாதியான குலாசாரங்களையும் தர்ம சாஸ்திராசாரங்களையும் மாற்றுவது அத்வைதிகளுக்கு பாபமாகி விடுகிறது. வேத வேதாங்கங்களை ஆதாரமாகக் கொண்டதால், பிறப்பை ஒட்டி ஏற்படும் கடமைகளைக் கொண்ட வர்ணாசிரம முறையின்படி மத மாற்றத்துக்கே இடமில்லை. மத மாற்றம் மனமாற்றமே யொழிய, வேஷமாற்றம் அன்று. அத்வைத மதத்தில் பிறரைச் சேர்த்துக் கொள்வதற்கு சடங்குகள் ஏற்படவில்லையே யொழிய, எம்மதத்திலும் பக்குவிகளானவர்கள் தாமாகவே அத்வைதிகளாகி விடுகிறார்கள். நாம் புறக்கணித்

தாலும் அவர்கள் வருந்துவதில்லை. சமீப காலத்தில் தஞ்சாவூர் மாத்வ ஸ்வாமிகள், ஜெர்மனி தேசத்து 'பால் டாய்ஸன்' அமெரிக்க நாட்டு 'சகோதரி நிவேதிதா' மஸ்தான் சாயபு, வைஷ்ணவ அம்மூர் ஸ்வாமிகள், ரகுநாதாசாரியார், முதலிய பன்னூற்றுவர், வேஷம், கட்டுப்பாடு, தன் பழய மத த்வேஷம், முதலிய மதமாற்று அடையாளங்கள் ஒன்றும் இல்லாமலேயே அத்வைத தத்துவத்தில் ஆற்றல் கொள்வாராயினர். வேஷம் மாற்றினாலல்லவோ, தம்முடைய பழய மதத்தில் த்வேஷம் உண்டாகும். தம்முடைய பழய மதத்தில் த்வேஷமில்லாமல் பக்குவமாவது அத்வைத உண்மை ஒன்றுதான்.

8. புத்தர், ராமானுஜர், மஹாவீரர் முதலிய இதர மதஸ்தர்களுக்கெல்லாம், கல்லிலும் செம்பிலும் பல்லாயிரக்கணக்கான உருவங்களின் மூலம் பிரசாரம் ஏற்பட்டிருக்க, அத்வைத ஆசார்யர்களுக்கு ஞான நூல் ஒன்றிலேயே முக்கியப் பிராதான்யம் ஏற்பட்டிருக்கிறது. நம் நாட்டிலுள்ள தத்துவ நூல்களைக் கணக்கிட்டால் அத்வைத ஞான நூல்களே எண்ணிறந்தவை. இதர மத நூல்களிலும் அத்வைதமே அதிகமாகக் கூறப்படுகிறது. அவைகளில், பிற மதங்களைக் கூறுமிடத்து, கண்டிப்பதற்காயினும் அத்வைதமே முதல் ஸ்தானம் கொடுக்கப்படுகிறது. கல்லிலும் செம்பிலும் உருவங்களைப் பார்க்கப் போனால், அத்வைதாசார்யர்களுக்குக் கடைசி ஸ்தானம் தான். அதிலும் நூற்றுண்டு கணக்காக ஏற்பட்டு பூஜிக்கப்பட்டு வரும் ஆசார்ய மூர்த்திகள் காஞ்சியிலும் சென்னைக்கடுத்த திருவொற்றியூரிலுமே. மற்றவை எல்லாம் அநேகமாய் ஒன்றிரண்டு நூற்றுண்டுகளுக்குள்ளேயே ஏற்பட்டதாக இருக்கும்.

9. மதாசார மாற்றமோ, சிவ த்வேஷமோ, விஷ்ணு த்வேஷமோ, கட்டுப்பாடோ, கோயில் 'சுதந்திரமோ, இவை போன்றவை அத்வைத மதத்தில் இல்லாததற்குக் காரணம் என்ன? அத்வைத மதப்படி, வேதத்திலும் தர்ம சாஸ்திரத்திலும் அதிகாரமில்லாதவர்களே ஆகமங்களைப் பின்பற்றவேண்டுமாதலால், வைதிகர்களான ஸ்மார்த்தர்கள், தம்மை ரக்ஷிக்க நான் மறைகளும் அறங்களும் மறைமுடிகளாம் வேதாந்த தத்துவமும் இருக்க, ஏகதேசமான பஞ்சராத்ரம், பாசுபதம்

முதலிய தீக்ஷைகளைத் தேடிச் செல்வதில்லை. அதனாலேதான் எக்காரணத்திலாவது வேத சாஸ்திரங்களை மீண்டும் தழுவ வொண்ணாது மறைநெறியினின்றும் சறுகினவர்களைக் கடைத்தேறச் செய்யவே, அவ் வாகம தீக்ஷைகள் ஏற்பட்டிருக்கின்றன. 'வைதிகானுஷ்டானத்திற்கு உரிய ஜீவன்கள் காய்ச்சிய முத்திரை முதலிய ஆகம தீக்ஷைகளை ஏற்றுக்கொள்ளல், அவர்களுடைய இயற்கையான வர்ணாசிரம சுத்திக்கு ஒரு குறைவை உண்டு பண்ணுகிறது' என்பது ஸ்மார்த்த சாஸ்திரங்களின் கருத்து. ஆகம முறைப்படி பரார்த்த பூஜைக்காக ஏற்பட்டிருக்கும் ஆலயங்களில் மாத்திரம் வைதிக சைவர் வழிபடலாம் என்பது தர்ம சாஸ்திரங்களின் முடிவு.

10. அத்வைத மதத்திலே புதிதாக மனிதர்களைச் சேர்க்க இன்று சடங்குகள் இல்லாமலிருப்பதால் என்றும் அதற்குச் சடங்கு இருந்ததில்லை. இதர மதங்களைப்போல கட்டுப்பாடு செய்து சேர்க்கப்பட்ட மதமும் இல்லை. அதனாலேதான் ஒரு மனிதருடைய பெயரால் இம் மதத்திற்குப் பெயர் ஏற்படவில்லை. வேதங்களையும், ஸ்மிருதிகளையும், வேதாந்த தத்துவத்தையும், ஒட்டியே, வைதிகம் என்றும், ஸ்மார்த்தம் என்றும், அத்வைதம் என்றும் அதற்குப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. கட்டுப்பாட்டுடன் ஒரே ரீதியாய் வரையறுக்கப்பட்ட மதங்களெல்லாம் புதிதாக உண்டானவை. ஸ்ரீ ஆதி சங்கராசார்ய ஸ்வாமிகளுக்கு முந்தி இருந்த 72 மதங்களும், அவர்களுடைய அத்வைத விளக்கத்தால், தாமே மறைந்தன. பிரஜைகள் சித்தத்தைச் சுத்தி செய்துகொண்டார்கள்; தத்துவத்தையே சரணடைந்தார்கள். அவரவர்களுக்குப் பிறப்புரிமையாம் வர்ணாசிரம தர்மங்களின்படி குலாசாரங்களின்படியும் செவ்வனே ஒழுகி வரலாயினர். மீண்டும் வர்ணாசிரமத்தில் வர அதிகாரமில்லாது போனவர்கள் ஆகமங்களைத் தழுவி அவ்வழியே அத்வைத தத்துவத்தை அணுகுவாராயினர். ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளுக்கு முன்னர் நம் நாட்டில் இருந்த மதங்கள் எல்லாம் அவர்களுக்குப் பிறகு அநேகமாய் இந்நாட்டில் இல்லை என்றே சொல்லலாம். அநாதியான வேத வேதாங்கங்களிலுள்ள வேதாந்த தத்துவமே நிலைநாட்டப்பட்டது. பண்டை ஆழ்வார்களும் நாயன்மார்களும், கம்பரும், காளிதாஸரும், திருமூலரும், திருவள்ளுவரும், ஸ்ரீ ஆசார்ய

ஸ்வாமிகளின் திருவுள்ளத்தையே ஒலித்திருக்கிறார்கள். நம் நாட்டில் இப்போது காணப்படும் பிற மதங்களெல்லாம் ஸ்வாமிகளுக்குப் பின்பு முளைத்தனவே. இப் புது மதங்களை ஸ்தாபித்தவர் எவரும் தமக்கு முன்னிருந்த மதங்களை எல்லாம் அகற்றவில்லை. அதனாலேதான் இன்றும் எம் மதத்தினர் புதிதாக சாஸ்திரங்கள் இயற்றினும், அவைகளிலெல்லாம் முதலாக அத்வைதத்தையே தாக்கவேண்டி இருக்கிறது. தம் காலத்துக்கு முந்தி இருந்த எல்லா மதங்களையும் தாம் விளக்கிய தத்துவத்திலேயே ஐக்கியமாகும்படி செய்தவர், ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளுக்கு முந்தியும் ஒருவரும் இல்லை, பிந்தியும் ஒருவரும் இல்லை.

## கட்டுப்பாடுள்ள மதங்கள் புதிதாக ஏற்படுவானேன்?

ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் விசாலமான நோக்கமுடைய சைவம், வைஷ்ணவம், சாக்தம், காணாபத்யம், ஸௌரம், கௌமாரம்,* என்னும் ஆறு மதங்களுக்கும் ஸமரஸமான கருத்தாகும் மஹா வாக்கியப் பொருளாம் அத்வைத ஸித்தாந்தம் நிலை நிற்பதற்காக அவதாரம் செய்தருளினார்கள். பிற்காலத்தில் நம் நாட்டில் ஹிந்து மதத்தின் கிளை மதங்களாகிய அதிக கட்டுப்பாடுடைய புதிய மதங்கள் ஏன் உண்டாயின என்பது ஒரு கேள்வி. தத்துவ வேறுபாட்டால் உண்டாயினவென்பது ஒருபுற மிருக்கட்டும். ஒரு பண்டிதருக்கு தத்துவ வேறுபாடு தோன்றினாலும், அதற்கு காலநிலை முதலிய ஸஹாயமில்லாமற் போனால், அது கட்டுப்பாட்டுடன் கூடிய ஒரு மதம் என்ற உருவத்தை எடுக்காது. இப் புது மதங்களுக்கு உருவம் கொடுத்த கால நிலை எது? நமது தற்கால தேசீய காங்கரஸ் ஸ்தாபனத்தில், தாஸ் கக்ஷி, போஸ் கக்ஷி முதலியன உருவாவதற்கு எது காரணமோ அதுவே இம் மதங்களுக்கும் காரணம் என்று சொல்லலாம். இப் புது மதங்களுக்கெல்லாம் முன்னே வைதிக ஸ்மார்த்த அத்வைத மதத்தில், சிவ உபாஸகர்களும் விஷ்ணு உபாஸகர்களும் இருந்தார்கள். சிவ உபாஸகர்கள் எண்ணிக்கை அதிகம். ஆலயங்களிலும் சிவாலயங்கள் அதிகம். புராணங்களிலும் சிவபுராணங்கள் அதிகம். மஹா கவிகளிலும் சிவ பக்தர்கள் அதிகம். யோகிகளிலும் சிவயோகிகள் அதிகம்.

* காபாலிகமென்று சிலர்.

விஷ்ணு பக்தியில் தீவிரமாய் இருந்தவர் சிலர், நாம் இப்போது அத்வைத மதத்தில் இருந்தால் சிவ பக்தர்கள் கூட்டத்தின் மத்தியில் நமது விஷ்ணு பக்திக் கொள்கை வரவரத் தேய்ந்து சிவ மயமாகி விடுமோவென்று பயந்தனர். இப்பேர்ப்பட்டவர்களின் எண்ணங்களுக்கெல்லாம் ராமானுஜர் முதலியோர் கிளம்பியது உருவம் கொடுப்பதாயிற்று. தென்னாட்டில் உள்ள விஷ்ணு பக்தர்களில் பலருக்குப்பின் அவர்களுடைய பாஞ்சராத்ர தீக்ஷையில் சேர்ந்து கொண்டார்கள். அதிலும் எல்லா விஷ்ணு பக்தர்களும் சேரவில்லை. சேர்ந்தோர் திரும்பி கலையாதிருப்பதற்காக விசேஷ கட்டுப்பாடுகள் (Party discipline) வெகு அதிகமாக ஏற்பட்டன. சாஸ்திரங்களிலே சொல்லப்பட்ட நியமங்களைவிட அதிகமாகவும் ஏற்படுத்திக் கொள்ளப்பட்டன. அதனாலேதான் ஸ்மார்த்தமுறை சாஸ்த்ரமென்றும், இதரமுறை ஸம்ப்ரதாயம் என்றும் வழங்கத் தலைப்பட்டது. இவ்விதக் கட்டுப்பாட்டினால் தோற்றமுறும் உயர்வு, பிறர் இப் புதுமதத்தில் வந்து சேர இடங் கொடுப்பதோடு, சேர்ந்தவர்கள் கரையாமல் இருப்பதற்கும் காரணமாயிற்று. எந்த ஸ்மார்த்த குலங்களிலே பிறந்து, *புது மதங்களில் புக்கார்களோ, அந்த தம் மூதாதைக் குலங்களையே இழிவு படுத்திக் கொள்ளவேண்டியதும் ஆயிற்று. இவ்விதமே மேற்குக் கடற்கரை யோரத்தில் துளுவ நாட்டில் மத்வ மதம் தோன்றியது. கூர்ஜர நாட்டில் ஒரு தெலுங்கு பிராம்மணனால் வல்லப மதம் என்ற ஒரு மதம் ஸ்தாபிக்கப்பட்டது. வங்காளத்தில் சைதன்ய மதம் கிளம்பியது. புதியதாகக் கிளம்பிய இம் மதங்களெல்லாமே அநேகமாக வைஷ்ணவக் கிளர்ச்சிகளாக இருப்பதைக் கொண்டே, சைவத்திலே கரைந்துபோகும் அச்சத்தாலேயே இவை உருவாயின என்னும் தத்துவம் உறுதியாகிறது. அநேகமாய் இப் புது மதங்களிலெல்லாம், ஸம்பிரதாயக் கட்டுப்பாடுகள், சற்றேறக்குறைய இடங் கொண்டிருக்கின்றன. † (உதயனாசார்யார் என்னும் பண்டையதர்க்கப்

---

* சேட்லூர், கடாம்பி, கந்தாடை, உருப்பட்டூர், குமாண்டூர், தூப்பில், சோழியர் முதலியன.

† பழைய எந்த ஸ்மார்த்த குலத்திலிருந்து இந்த புது மதத்தில் ஜனங்கள் சேர்ந்தார்களோ சேர்ந்த பிறகும் சிறிது காலம் அந்தப் பழைய குலத்தாரோடு மாத்திரம் சம்பந்தம் வைத்திருப்பார்கள். ஊறிப்போன பின் தம்முடைய பழைய குல ஞாபகத்தையே விட்டு புது மதத்தில்

பேராசிரியரும் புத்தமதம் இவ்விதமான மனிதர்கள் சேர்ந்தே
வளர்ந்தது என்று நிரூபித்திருக்கிறார்.)

அத்வைத மதத்திலோ வேத வேதாங்கங்களிலே சொல்லப்
பட்ட அநாதி நியமங்களைத் தவிர புதுக் கட்டுப்பாடுகள் எவைக்
கும் இடமில்லை. பரம்பரையான அந்தந்த குலங்களுக்குள்ளேயே
விவாஹம் முதலிய விவஹாரங்களும் நடந்துவரும். அந்தந்த
குலாசாரங்கள் அவ்வப்படியே ரக்ஷிக்கப்படும். உபாஸனை
மூர்த்தி, நெற்றியில் வழிபாட்டுக் குறி, இவைகள் மாற்றப்படா.
ஈசனை மனதில் தியானித்து அவனுக்கு அர்ப்பணமாக, தத் தம்
வர்ணாசிரம தர்மங்களை அனுஷ்டிப்பதே அவனை அணுகும்
பெருநெறி என்றே கொள்ளப்படும். வர்ணாசிரம நெறி சரி
யாக அனுஷ்டிக்கப்பட்டு, அதன் மூலம் உலக ஸேவை ஏற்
பட்டு, ஈசுவர பக்தி முதிரும்போது, அத்வைத பக்குவநிலை
தானாக ஏற்படுகிறது. அத்வைத சித்தாந்தத்தை நிலைநாட்டிய
மஹான்களிலும் எவ்வளவோ பேர் எல்லை கடந்த விஷ்ணு
பக்தர்களாக இருக்கிறார்கள். அத்வைத ஸித்தி, ப்ரம்மா
நந்தீயம் என்ற இரு நூல்களுக்கும் ஈடான தத்துவ நூல்கள்
உலகில் எங்கும் இல்லை. அவ்விரு நூல்களையும் முறையே ஆக்கி

---

சேர்ந்த எக் குலத்தினோடும் (வடமர், தெலுங்கர்) ஸஹஜமாய் சம்பந்தம்
செய்துவிடுவார்கள். ஸ்மார்த்த மதத்தில் இவ்வித சம்பந்தங்களுக்கு இடம்
இல்லை. கிறிஸ்தவர்கள் அதிகமாக மகம்மதியர்கள் ஆவதில்லை. மகம்மதி
யர்கள் அதிகமாக கிறிஸ்தவர்கள் ஆவதில்லை. அதுபோல நமக்குள் மத்வர்
அதிகமாக ராமானுஜர்கள் ஆவதில்லை; ராமானுஜ மதஸ்தர்கள்
அதிகமாக மத்வ மதஸ்தர்கள் ஆவதில்லை. ஸ்மார்த்தர்களே இவ்விரு
மதஸ்தர்களாகவும் ஆகிறார்கள். இது கட்டுப்பாடு இல்லாத குறை தான்.
அதற்காக புதுக் கட்டுப்பாடு ஏற்படுத்திக் கொள்ளவேண்டுமோ என்று
தோன்றுகிறது. ஆனால் புதுக் கட்டுப்பாடுகளிலோ, எண்ணிறந்த பாபங்
களுக்கு இடமுண்டாகிறது. ஆதலால் சாஸ்திர முறையே இயற்கைக்
கட்டுப்பாடு. அந்த சாஸ்திர முறையை ஸ்மார்த்தர்கள் தளர விடுவதா
லேயே மேற்கண்ட இடைஞ்சல்களுக்கெல்லாம் இடமேற்படுகிறது. புதுக்
கட்டுப்பாடு வேண்டாம். தத்துவத்தையும் அதற்கு ஆதாரமான சாஸ்திர
முறைகளையும் உறுதியுடன் தவறாது கைக்கொள்வதாலேயே, தானாக
மெள்ள மெள்ள இப் புது இடைஞ்சல்களெல்லாம் மறைந்தே ஆகவேண்
டும். சில ஸமயம், புத்தர் சமணர் முதலிய பிற ஸமயிகளும் இப் புது
மதங்களிலே கலந்து விடுவதும் உண்டு.

யோர்களாகிய மதுஸூதன ஸரஸ்வதி ஸ்வாமிகளும், கௌட ப்ரம்மாநந்த ஸ்வாமிகளும், பரம விஷ்ணு பக்தர்கள். அதில் முதல்வர் சொல்வதாவது, "நாமே வைஷ்ணவர்கள். விஷ்ணு வென்றால் எங்கும் வியாபகமான பரமாத்மா அல்லவோ? பேத வாதிகளான வைஷ்ணவர்கள், அவரைத் தவிர வேறு பொருள் களும் சத்தியமாக உண்டென்று சொல்வதால், அவரது பூரணத் தன்மையைக் குறைத்து விடுகிறார்கள், அவரைச் சிறுமைப் படுத்திவிடுகிறார்கள். பெயரால் மாத்திரம் அவர்கள் வைஷ்ண வர்கள். அத்வைதிகளான நாமே உண்மை வைஷ்ணவர்கள்" என்ற கருத்தை வெளியிட்டும் இருக்கிறார்கள். விஷ்ணு பக்திக் காக மாத்திரம் பிற மதங்களிலே புக வேண்டியதில்லை.

11. நம் நாட்டில் அநாதி காலமாக ஒவ்வொரு கிராமத் திலும், சிவாலயம் விஷ்ணு ஆலயம் இரண்டுமே முறையே ஈசான்யத்திலும் மேற்கு திக்கிலும் ஏற்பட்டு, வழிபடப்பட்டு வருகின்றன. பிற்காலத்தில் ஏதாவது சில கிராமங்களில் வீர வைஷ்ணவமோ வீர சைவமோ உற்பத்தியாகும்பொழுது, வீர வைஷ்ணவத்தால் சிவாலயத்திற்கு ஹானியும் வீர சைவத்தால் விஷ்ணு ஆலயத்திற்கு ஹானியும் ஏற்படுவதையும் பார்க்கிறோம். நம் நாட்டில் பொது மக்களுடைய அநாதியான மதம் வைதிக மான அத்வைத சித்தாந்தமாக இருப்பதனாலே தான், ஒவ் வொரு கிராமத்திலும், இவ்விரு ஆலயங்களும் ஒரே பக்தியுடன் ஸ்தாபிக்கப்பட்டும், வழிபடப்பட்டும், வந்து கொண்டிருக்கின் றன. இவ்விரு ஆலயங்களில் எதற்கு ஹானி ஏற்பட்டாலும், வேதத்தையே ஆதாரமாகக் கொண்ட அத்வைதிகளுக்கு தம் இரு கண்களில் ஒரு கண்ணுக்கு ஆபத்து ஏற்படுவதுபோல் வேதனை ஏற்படுகிறது. சரித்திர முறையில் ஆராயுங்கால், வீர வைஷ்ணவர்களும், வீர சைவர்களுங் கூட இரு தெய்வங்களையும் ஒன்றென வழிபட்டு வந்த பெரியோர்களின் ஸந்ததிகளே என்று அநேகமாய் சொல்லவேண்டி இருக்கிறது. அப்படி இல்லாமல், இப்பொழுதிருக்கும் பேத புத்தியுள்ள வீர வைஷ்ண வர்களும் வீர சைவர்களும் இருக்குமளவு பண்டை காலத் திலும் இருந்திருப்பார்களேயானால், ஒவ்வொரு ஊரிலும் (இப் பொழுது ஒரு சாராரே வசிக்கும் ஊரில்கூட) வடகிழக்கிலும் மேற்கிலும் சமமாக இரு ஆலயங்களும் ஏற்பட இடமில்லை.

சைவ சித்தாந்த சாஸ்திரங்களும், வைஷ்ணவ சாஸ்திரங்களும் ஆரம்பித்த காலத்தில் அவைகளின் நூலாசிரியர்களாய் இருந்த நான்காம் வருணத்தைச் சேர்ந்த அநேக ஸந்தானாசாரியர்கள் முதலியோரும் தம்முடைய முக்கியமான சிவஞான போதம், சிவஞான சித்தியார், திவ்வியப் பிரபந்தங்கள் முதலிய பெரிய சாஸ்திர வாதங்களிலே கூட வேதத்தைப் பிரமாணமாக் தழுவிக் கொண்டிருந்தும் தம் வர்ணாசிரம முறைப்படி வேதவாக்யத்தையுங்கூட உச்சாரணம் செய்யவில்லை. ஆழ்வாராதிகள்கூட சிவனையும் விஷ்ணுவையும் ஒன்று என்றே தியானித்திருப்பது அவர்கள் பிரபந்தங்களிலிருந்து வெளிப்படை. வேதத்தையே கதியாகவும், பேதமற்ற ஒரு பரம்பொருளே தத்துவமாகவும், தர்ம சாஸ்திரத்திலே போதிக்கப்படும் வர்ணாச்ரம தர்மமே வழியாகவும் கொண்ட பெரியோர்களது ஸந்ததிகளே, அநேகமாய் இன்று நம் நாட்டில் வசிக்கும் மார்தவர், வைஷ்ணவர், சைவசித்தாந்திகள், வல்லபர், சீக்கியர், கிறிஸ்தவர், மகம்மதியர் முதலிய மதஸ்தர்கள் ஆவர். அவர்கள் நம்முடைய அநாதியான வேதத்தின் முடிவில் உணர்த்தப்படும் அத்வைத தத்துவத்தின் உண்மையையும் அதற்கான பேதமற்ற தெய்வ பக்தியையும் கொடுத்து ஜீவனைக் கடைத்தேறச் செய்வதே அத்வைத ஸித்தாந்தம் என்னும் விஷயத்தை தெளிவாகத் தெரிந்து கொண்டுவிடின், மனதிலாவது அவர்கள் பெரியோர்களுடைய த்வேஷமற்ற அன்பைக் கடைப்பிடிப்பார்கள். இவ்வுண்மையை எடுத்துக் காட்டி உதவுவதே வேதத்தையே நம்பும் அத்வைதிகளின் கடமை.

12. நம் நாட்டிலிருப்பவர்கள் மாத்திரமின்றி, உலக முழுதும் வசிப்பவர்கள்கூட வேதத்தையும் வர்ணாச்ரமத்தையும் அத்வைத தத்வத்தையும் கடைபிடித்த மூதாதைகளின் ஸந்ததியென்றே சரித்திர ஆராய்ச்சிக்காரர்களில் ஒருசாரார் கொண்ட அபிப்பிராயம்.

13. பாலஸ்தீன் பக்கத்தில் இரண்டு அரசர்களின் உடன்படிக்கை ஒன்று சுமார் 3,500 வருஷங்களுக்கு முன்னர் கல்லில் வெட்டப்பட்டிருப்பதில், வேதத்திலே சொல்லப்பட்ட தெய்வங்களான மித்திரனும் வருணனும் பிரமாணமாகக் குறிப்பிடப்பட்

டிருக்கிறார்கள். மெக்ஸிகோ என்னும் அமெரிக்கா நாட்டில் அநாதிகாலம் தொட்டு இன்றுவரையில் நவராத்திரி காலத்தில் நடந்து வரும் 'ராமலீலா' என்னும் உத்ஸவமும் * தென் அமெரிக்காவில் பெரு என்னும் நாட்டில் சூரிய உபாஸனையும் சூரிய ஆலயங்களும், ஆப்பிரிக்காவில் ஸஹாரா பாலைவனத்தைச் சுற்றியிருக்கும் ஊர்களின்பேர்களிலெல்லாம் கலந்து நிற்கும் ராம நாமமும், மெஸபடோமியா என்னும் நாட்டிலே கிடைத்திருக்கும் கங்கையைத் தாங்கும் வ்ருஷபாரூடரான பரம சிவனுடைய சிலாமூர்த்தியும், ஆஸ்திரேலியாவில் சுதேச நாட்டவர் இன்றும் ஆடும் சிவலீலைக் கூத்தும், மங்கோலியாவுக்கடுத்த கோபிபாலைவனத்தில் ஸ்டெயின் என்னும் வெள்ளையரால் மணலிலிருந்து எடுக்கப்பட்ட தங்கப்பெட்டியிலுள்ள ஸம்ஸ்க்ருத நூல்களும், கிரேக்க தேசத்தில் சுமார் 4,000 வருஷங்களுக்குமுன்னர் வ்ருஷபம் ஸிம்ஹம் இவைகளோடுகூடிய சிவசக்தி ஆலயங்களின் வரலாற்றைக் கூறுவதாய் சுமார் 2,000 வருஷத்துக்கு முன் எழுந்த நூல்களும், சுமார் 5,000 வருஷங்களுக்கு முற்பட்டதாகச் சொல்லப்பட்டதும் ஸிந்து நாட்டிலே பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்பட்டதுமான 'ஹரப்பா' 'மோஹன்ஜிதாரோ' என்னும் ஊர்களிலே காணப்படும் சிவலிங்கம், சக்தியந்திரம், ஸாளக்கிராமம் முதலிய அத்வைதிகளின் ஸமரஸ உபாஸனை மூர்த்திகளும், 'ஸையாம்' (தாய்நாடு), ஸுமத்ரா, ஜாவா, போர்னியோ முதலிய நாடுகளிலே காணப்படும் நமது தர்மசாஸ்திரங்களும் யாக சின்னங்களும் எண்ணிறந்த சிவாலய விஷ்ணு ஆலயங்களும், அயர்லாந்தில் பூமியிலிருந்து கிடைத்த விநாயக மூர்த்தியும், ஆராய்ச்சியாளர்களுக்கு உலக முழுவதுமே வேதமும் அபேதமான இவ்விஷ்ணு உபாஸனமும், வர்ணாச்ரம தர்மமும் குடிகொண்டிருந்தன என்னும் முடிவிற்குக் காரணங்களாயின.* (உலக முழுவதும், எல்லா நாடுகளிலும், வாரத்தின் கிழமைகளின் பெயர்கள் ஒரேமாதிரி வரிசையாக வழங்கப்பட்டு வருவதால், உலகத்திலுள்ள மானிடவர்க்கம் முழுவதும் ஒரே மூலநாகரிகத்தினின்று விரிந்தது என்று ஊஹிக்க இடந்தருகிறது. ஞாயிறு, திங்கள், செவ்வாய் முதலிய கிழமை வரிசைக்குக் கார

* வட இந்தியாவில் இன்றும் ராமலீலா உத்ஸவம் நவராத்ரி காலத்தில் ஒவ்வொரு ஊரிலும் நடந்துவருகிறது.

ணமோ நமது ஜோதிஷ சாஸ்திரத்தைத் தவிர வேறு எங்கும் காணப்படவில்லை.

கிறிஸ்தவர்களுடைய பைபிள் நூலில் முதல் ஆத்மாக்களுக்கு 'ஆத்ம' 'ஜீவ்' (Adam Eve) என்று கூறப்படும் பெயர்களும், ஈவ் (Eve) பழத்தைத் தின்ற விபரமும், நமது சாஸ்திரங்களில் ஆத்மா, ஜீவன் என்னுமிருவர்களில் ஜீவன் கர்மவிருக்ஷத்தின் பலத்தையனுபவிக்கிறான் என்று சொல்லப்படும் தத்வத்தை ஆதாரமாகக் கொண்டதாகக் காணப்படுகிறது.

14 மனுவும் * தமது தர்மநூலில் பாரஸீகர்கள், சீனர்கள், தர்த்துரர்கள், (Tartars) திராவிடர்கள் முதலிய சில தேசத்தவர்களைக் கூறி, இவர்கள் ஆதியில் க்ஷத்திரியர்களே என்றும், கொஞ்சம் கொஞ்சமாக கர்மானுஷ்டான லோபத்தால், அந்த வர்ணத்திலிருந்து நழுவிவிட்டவர்கள் என்றும் கூறி இருக்கிறார்.

15. ஆதலால் வேதத்தின் உண்மைப் பொருளான அத்வைத தத்துவத்தையும், அதை அடையும் லக்ஷியமான வர்ணாசிரம தர்மத்தின் உபயோகத்தையும், உலக மாந்தர்கள் அனைவருமே அறிந்துகொள்ளுமாறு செய்வதை அத்வைதிகள் தம் முதற்கடமையாக ஏற்றுக்கொள்ளவேண்டும்.

16. உலக மாந்தர்கள் எல்லோரும் தம் மூதாதைகளின் தெய்வ வழிபாட்டைப்பற்றியும் ஒழுக்கத்தைப்பற்றியும் தத்வத்தைப்பற்றியும் உள்ளபடி உணர்ந்துவிட்டால், உலகத்திலேயே மதத் துவேஷத்தின் விதை அற்றுப்போய்விடும். அன்பே நிறையும்; மங்களம் ஓங்கும்; பிரும்மமே மங்களம்.

சிவம்

---

* இந்த மனு வாக்கியத்தின்படி, திராவிட ஆரிய வேதம், மங்கோலிய ஆரிய வேதம் என்ற பேதங்களுக்கு வர்ணாசிரம முறைப்படி இடமில்லை என்று தெளிவாகின்றது.

யோர்களாகிய மதுஸூதன ஸரஸ்வதி ஸ்வாமிகளும், கௌட ப்ரம்மாநந்த ஸ்வாமிகளும், பரம விஷ்ணு பக்தர்கள். அதில் முதல்வர் சொல்வதாவது, "நாமே வைஷ்ணவர்கள். விஷ்ணு வென்றால் எங்கும் வியாபகமான பரமாத்மா அல்லவோ? பேத வாதிகளான வைஷ்ணவர்கள், அவரைத் தவிர வேறு பொருள் களும் சத்தியமாக உண்டென்று சொல்வதால், அவரது பூரணத் தன்மையைக் குறைத்து விடுகிறார்கள், அவரைச் சிறுமைப் படுத்திவிடுகிறார்கள். பெயரால் மாத்திரம் அவர்கள் வைஷ்ண வர்கள். அத்வைதிகளான நாமே உண்மை வைஷ்ணவர்கள்" என்ற கருத்தை வெளியிட்டும் இருக்கிறார்கள். விஷ்ணு பக்திக் காக மாத்திரம் பிற மதங்களிலே புக வேண்டியதில்லை.

**11.** நம் நாட்டில் அநாதி காலமாக ஒவ்வொரு கிராமத் திலும், சிவாலயம் விஷ்ணு ஆலயம் இரண்டுமே முறையே ஈசான்யத்திலும் மேற்கு திக்கிலும் ஏற்பட்டு, வழிபடப்பட்டு வருகின்றன. பிற்காலத்தில் ஏதாவது சில கிராமங்களில் வீர வைஷ்ணவமோ வீர சைவமோ உற்பத்தியாகும்பொழுது, வீர வைஷ்ணவத்தால் சிவாலயத்திற்கு ஹானியும் வீர சைவத்தால் விஷ்ணு ஆலயத்திற்கு ஹானியும் ஏற்படுவதையும் பார்க்கிறோம். நம் நாட்டில் பொது மக்களுடைய அநாதியான மதம் வைதிக மான அத்வைத சித்தாந்தமாக இருப்பதனாலே தான், ஒவ் வொரு கிராமத்திலும், இவ்விரு ஆலயங்களும் ஒரே பக்தியுடன் ஸ்தாபிக்கப்பட்டும், வழிபடப்பட்டும், வந்து கொண்டிருக்கின் றன. இவ்விரு ஆலயங்களில் எதற்கு ஹானி ஏற்பட்டாலும், வேதத்தையே ஆதாரமாகக் கொண்ட அத்வைதிகளுக்கு தம் இரு கண்களில் ஒரு கண்ணுக்கு ஆபத்து ஏற்படுவதுபோல் வேதனை ஏற்படுகிறது. சரித்திர முறையில் ஆராயுங்கால், வீர வைஷ்ணவர்களும், வீர சைவர்களுங் கூட இரு தெய்வங்களையும் ஒன்றென வழிபட்டு வந்த பெரியோர்களின் ஸந்ததிகளே என்று அநேகமாய் சொல்லவேண்டி இருக்கிறது. அப்படி இல்லாமல், இப்பொழுதிருக்கும் பேத புத்தியுள்ள வீர வைஷ்ண வர்களும் வீர சைவர்களும் இருக்குமளவு பண்டை காலத் திலும் இருந்திருப்பார்களேயானால், ஒவ்வொரு ஊரிலும் (இப் பொழுது ஒரு சாராரே வசிக்கும் ஊரில்கூட) வடகிழக்கிலும் மேற்கிலும் சமமாக இரு ஆலயங்களும் ஏற்பட இடமில்லை.

சைவ சித்தாந்த சாஸ்திரங்களும், வைஷ்ணவ சாஸ்திரங்களும் ஆரம்பித்த காலத்தில் அவைகளின் நூலாசிரியர்களாய் இருந்த நான்காம் வருணத்தைச் சேர்ந்த அநேக ஸந்தானசாரியர்கள் முதலியோரும் தம்முடைய முக்கியமான சிவஞான போதம், சிவஞான சித்தியார், திவ்வியப் பிரபந்தங்கள் முதலிய பெரிய சாஸ்திர வாதங்களிலே கூட வேதத்தைப் பிரமாணமாக தழுவிக் கொண்டிருந்தும் தம் வர்ணாசிரம முறைப்படி வேதவாக்யத்தையுங்கூட உச்சாரணம் செய்யவில்லை. ஆழ்வாராதிகள்கூட சிவனையும் விஷ்ணுவையும் ஒன்று என்றே தியானித்திருப்பது அவர்கள் பிரபந்தங்களிலிருந்து வெளிப்படை. வேதத்தையே கதியாகவும், பேதமற்ற ஒரு பரம்பொருளே தத்துவமாகவும், தர்ம சாஸ்திரத்திலே போதிக்கப்படும் வர்ணாச்ரம தர்மமே வழியாகவும் கொண்ட பெரியோர்களது ஸந்ததிகளே, அநேகமாய் இன்று நம் நாட்டில் வசிக்கும் மாதவர், வைஷ்ணவர், சைவசித்தாந்திகள், வல்லபர், சீக்கியர், கிறிஸ்தவர், மகம்மதியர் முதலிய மதஸ்தர்கள் ஆவர். அவர்கள் நம்முடைய அநாதியான வேதத்தின் முடிவில் உணர்த்தப்படும் அத்வைத தத்துவத்தின் உண்மையையும் அதற்கான பேதமற்ற தெய்வ பக்தியையும் கொடுத்து ஜீவனைக் கடைத்தேறச் செய்வதே அத்வைத் ஸித்தாந்தம் என்னும் விஷயத்தை தெளிவாகத் தெரிந்து கொண்டுவிடின், மனதிலாவது அவர்கள் பெரியோர்களுடைய துவேஷமற்ற அன்பைக் கடைப்பிடிப்பார்கள். இவ்வுண்மையை எடுத்துக் காட்டி உதவுவதே வேதத்தையே நம்பும் அத்வைதிகளின் கடமை.

12. நம் நாட்டிலிருப்பவர்கள் மாத்திரமின்றி, உலக முழுதும் வசிப்பவர்கள்கூட வேதத்தையும் வர்ணாச்ரமத்தையும் அத்வைத தத்வத்தையும் கடைபிடித்த மூதாதைகளின் ஸந்ததியென்றே சரித்திர ஆராய்ச்சிக்காரர்களில் ஒருசாரார் கொண்ட அபிப்பிராயம்.

13. பாலஸ்தீன் பக்கத்தில் இரண்டு அரசர்களின் உடன்படிக்கை ஒன்று சுமார் 3,500 வருஷங்களுக்கு முன்னர் கல்லில் வெட்டப்பட்டிருப்பதில், வேதத்திலே சொல்லப்பட்ட தெய்வங்களான மித்திரனும் வருணனும் பிரமாணமாகக் குறிப்பிடப்பட்

முதலிய தீக்ஷைகளைத் தேடிச் செல்வதில்லை. அதனாலேதான் எக்காரணத்திலாவது வேத சாஸ்திரங்களை மீண்டும் தழுவ வொண்ணாது மறைநெறியினின்றும் சறுகினவர்களைக் கடைத்தேறச் செய்யவே, அவ் வாகம தீக்ஷைகள் ஏற்பட்டிருக்கின்றன. 'வைதிகானுஷ்டானத்திற்கு உரிய ஜீவன்கள் காய்ச்சிய முத்திரை முதலிய ஆகம தீக்ஷைகளை ஏற்றுக்கொள்ளல், அவர்களுடைய இயற்கையான வர்ணாசிரம சுத்திக்கு ஒரு குறைவை உண்டு பண்ணுகிறது' என்பது ஸ்மார்த்த சாஸ்திரங்களின் கருத்து. ஆகம முறைப்படி பரார்த்த பூஜைக்காக ஏற்பட்டிருக்கும் ஆலயங்களில் மாத்திரம் வைதிக சைவர் வழிபடலாம் என்பது தர்ம சாஸ்திரங்களின் முடிவு.

10. அத்வைத மதத்திலே புதிதாக மனிதர்களைச் சேர்க்க இன்று சடங்குகள் இல்லாமலிருப்பதால் என்றும் அதற்குச் சடங்கு இருந்ததில்லை. இதர மதங்களைப்போல கட்டுப்பாடு செய்து சேர்க்கப்பட்ட மதமும் இல்லை. அதனாலேதான் ஒரு மனிதருடைய பெயரால் இம் மதத்திற்குப் பெயர் ஏற்படவில்லை. வேதங்களையும், ஸ்மிருதிகளையும், வேதாந்த தத்துவத்தையும், ஒட்டியே, வைதிகம் என்றும், ஸ்மார்த்தம் என்றும், அத்வைதம் என்றும் அதற்குப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. கட்டுப்பாட்டுடன் ஒரே ரீதியாய் வரையறுக்கப்பட்ட மதங்களெல்லாம் புதிதாக உண்டானவை. ஸ்ரீ ஆதி சங்கராசார்ய ஸ்வாமிகளுக்கு முந்தி இருந்த 72 மதங்களும், அவர்களுடைய அத்வைத விளக்கத்தால், தாமே மறைந்தன. பிரஜைகள் சித்தத்தைச் சுத்தி செய்துகொண்டார்கள்; தத்துவத்தையே சரணடைந்தார்கள். அவரவர்களுக்குப் பிறப்புரிமையாம் வர்ணாசிரம தர்மங்களின்படி குலாசாரங்களின்படியும் செவ்வனே ஒழுகி வரலாயினர். மீண்டும் வர்ணாசிரமத்தில் வர அதிகாரமில்லாது போனவர்கள் ஆகமங்களைத் தழுவி அவ்வழியே அத்வைத தத்துவத்தை அனுகுவாராயினர். ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளுக்கு முன்னர் நம் நாட்டில் இருந்த மதங்கள் எல்லாம் அவர்களுக்குப் பிறகு அநேகமாய் இந்நாட்டில் இல்லை என்றே சொல்லலாம். அநாதியான வேத வேதாங்கங்களிலுள்ள வேதாந்த தத்துவமே நிலைநாட்டப்பட்டது. பண்டை ஆழ்வார்களும் நாயன்மார்களும், கம்பரும், காளிதாஸரும், திருமூலரும், திருவள்ளுவரும், ஸ்ரீ ஆசார்ய

ஸ்வாமிகளின் திருவுள்ளத்தையே ஒலித்திருக்கிறார்கள். நம் நாட்டில் இப்போது காணப்படும் பிற மதங்களெல்லாம் ஸ்வாமிகளுக்குப் பின்பு முளைத்தனவே. இப் புது மதங்களை ஸ்தாபித்தவர் எவரும் தமக்கு முன்னிருந்த மதங்களை எல்லாம் அகற்றவில்லை. அதனாலேதான் இன்றும் எம் மதத்தினர் புதிதாக சாஸ்திரங்கள் இயற்றினும், அவைகளிலெல்லாம் முதலாக அத்வைதத்தையே தாக்கவேண்டி இருக்கிறது. தம் காலத்துக்கு முந்தி இருந்த எல்லா மதங்களையும் தாம் விளக்கிய தத்துவத்திலேயே ஐக்கியமாகும்படி செய்தவர், ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளுக்கு முந்தியும் ஒருவரும் இல்லை, பிந்தியும் ஒருவரும் இல்லை.

## கட்டுப்பாடுள்ள மதங்கள் புதிதாக ஏற்படுவானேன்?

ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் விசாலமான நோக்கமுடைய சைவம், வைஷ்ணவம், சாக்தம், காணபத்யம், ஸௌரம், கௌமாரம்,* என்னும் ஆறு மதங்களுக்கும் ஸமரஸமான கருத்தாகும் மஹா வாக்கியப் பொருளாம் அத்வைத ஸித்தாந்தம் நிலை நிற்பதற்காக அவதாரம் செய்தருளினார்கள். பிற்காலத்தில் நம் நாட்டில் ஹிந்து மதத்தின் கிளை மதங்களாகிய அதிக கட்டுப்பாடுடைய புதிய மதங்கள் ஏன் உண்டாயின என்பது ஒரு கேள்வி. தத்துவ வேறுபாட்டால் உண்டாயினவென்பது ஒருபுற மிருக்கட்டும். ஒரு பண்டிதருக்கு தத்துவ வேறுபாடு தோன்றினாலும், அதற்கு காலநிலை முதலிய ஸஹாயமில்லாமற் போனால், அது கட்டுப்பாட்டுடன் கூடிய ஒரு மதம் என்ற உருவத்தை எடுக்காது. இப் புது மதங்களுக்கு உருவம் கொடுத்த கால நிலை எது? நமது தற்கால தேசிய காங்கரஸ் ஸ்தாபனத்தில், தாஸ் கக்ஷி, போஸ் கக்ஷி முதலியன உருவாவதற்கு எது காரணமோ அதுவே இம் மதங்களுக்கும் காரணம் என்று சொல்லலாம். இப் புது மதங்களுக்கெல்லாம் முன்னே வைதிக ஸ்மார்த்த அத்வைத மதத்தில், சிவ உபாஸகர்களும் விஷ்ணு உபாஸகர்களும் இருந்தார்கள். சிவ உபாஸகர்கள் எண்ணிக்கை அதிகம். ஆலயங்களிலும் சிவாலயங்கள் அதிகம். புராணங்களிலும் சிவபுராணங்கள் அதிகம். மஹா கவிகளிலும் சிவ பக்தர்கள் அதிகம். யோகிகளிலும் சிவயோகிகள் அதிகம்.

* காபாலிகமென்று சிலர்.

விஷ்ணு பக்தியில் தீவிரமாய் இருந்தவர் சிலர், நாம் இப்போது அத்வைத மதத்தில் இருந்தால் சிவ பக்தர்கள் கூட்டத்தின் மத்தியில் நமது விஷ்ணு பக்திக் கொள்கை வரவரத் தேய்ந்து சிவ மயமாகி விடுமோவென்று பயந்தனர். இப்பேர்ப்பட்டவர்களின் எண்ணங்களுக்கெல்லாம் ராமானுஜர் முதலியோர் கிளம்பியது உருவம் கொடுப்பதாயிற்று. தென்னாட்டில் உள்ள விஷ்ணு பக்தர்களில் பலர் [illegible] அவர்களுடைய பாஞ்சராத்ர தீக்ஷையில் சேர்ந்து கொண்டார்கள். அதிலும் எல்லா விஷ்ணு பக்தர்களும் சேரவில்லை. சேர்ந்தவர் திரும்பி கலையாதிருப்பதற்காக விசேஷ கட்டுப்பாடுகள் (Party discipline) வெகு அதிகமாக ஏற்பட்டன. சாஸ்திரங்களிலே சொல்லப்பட்ட நியமங்களைவிட அதிகமாகவும் ஏற்படுத்திக் கொள்ளப்பட்டன. அதனாலேதான் ஸ்மார்த்தமுறை சாஸ்த்ரமென்றும், இதரமுறை ஸம்ப்ரதாயம் என்றும் வழங்கத் தலைப்பட்டது. இவ்விதக் கட்டுப்பாட்டினால் தோற்றமுறும் உயர்வு, பிறர் இப் புதுமதத்தில் வந்து சேர இடங் கொடுப்பதோடு, சேர்ந்தவர்கள் கரையாமல் இருப்பதற்கும் காரணமாயிற்று. எந்த ஸ்மார்த்த குலங்களிலே பிறந்து, *புது மதங்களில் புக்கார்களோ, அந்த தம் மூதாதைக் குலங்களையே இழிவு படுத்திக் கொள்ளவேண்டியதும் ஆயிற்று. இவ்விதமே மேற்குக் கடற்கரை யோரத்தில் துளுவ நாட்டில் மத்வ மதம் தோன்றியது. கூர்ஜர நாட்டில் ஒரு தெலுங்கு பிராம்மணனால் வல்லப மதம் என்ற ஒரு மதம் ஸ்தாபிக்கப்பட்டது. வங்காளத்தில் சைதன்ய மதம் கிளம்பியது. புதியதாகக் கிளம்பிய இம் மதங்களெல்லாமே அநேகமாக வைஷ்ணவக் கிளர்ச்சிகளாக இருப்பதைக் கொண்டே, சைவத்திலே கரைந்துபோகும் அச்சத்தாலேயே இவை உருவாயின என்னும் தத்துவம் உறுதியாகிறது. அநேகமாய் இப் புது மதங்களிலெல்லாம், ஸம்பிரதாயக் கட்டுப்பாடுகள், சற்றேறக்குறைய இடங் கொண்டிருக்கின்றன. † (உதயனாசார்யார் என்னும் பண்டையதர்க்கப்

---

* சேட்லூர், கடாம்பி, கந்தாடை, உருப்பட்டூர், குமாண்டூர், தூப்பில், சோழியர் முதலியன.

† பழைய எந்த ஸ்மார்த்த குலத்திலிருந்து இந்த புது மதத்தில் ஜனங்கள் சேர்ந்தார்களோ சேர்ந்த பிறகும் சிறிது காலம் அந்தப் பழைய குலத்தாரோடு மாத்திரம் சம்பந்தம் வைத்திருப்பார்கள். ஊறிப்போன பின் தம்முடைய பழைய குல ஞாபகத்தையே விட்டு புது மதத்தில்

பேராசிரியரும் புத்தமதம் இவ்விதமான மனிதர்கள் சேர்ந்தே வளர்ந்தது என்று நிரூபித்திருக்கிறார்.)

அத்வைத மதத்திலோ வேத வேதாங்கங்களிலே சொல்லப்பட்ட அநாதி நியமங்களைத் தவிர புதுக் கட்டுப்பாடுகள் எவைக்கும் இடமில்லை. பரம்பரையான அந்தந்த குலங்களுக்குள்ளேயே விவாஹம் முதலிய விவஹாரங்களும் நடந்துவரும். அந்தந்த குலாசாரங்கள் அவ்வப்படியே ரக்ஷிக்கப்படும். உபாஸனா மூர்த்தி, நெற்றியில் வழிபாட்டுக் குறி, இவைகள் மாற்றப்படா. ஈசனை மனதில் தியானித்து அவனுக்கு அர்ப்பணமாக, தத் தம் வர்ணாசிரம தர்மங்களை அனுஷ்டிப்பதே அவனை அணுகும் பெருநெறி என்றே கொள்ளப்படும். வர்ணாசிரம நெறி சரியாக அனுஷ்டிக்கப்பட்டு, அதன் மூலம் உலக ஸேவை ஏற்பட்டு, ஈசுவர பக்தி முதிரும்போது, அத்வைத பக்குவநிலை தானாக ஏற்படுகிறது. அத்வைத சித்தாந்தத்தை நிலைநாட்டிய மஹான்களிலும் எவ்வளவோ பேர் எல்லை கடந்த விஷ்ணு பக்தர்களாக இருக்கிறார்கள். அத்வைத ஸித்தி, ப்ரம்மாநந்தீயம் என்ற இரு நூல்களுக்கும் ஈடான தத்துவ நூல்கள் உலகில் எங்கும் இல்லை. அவ்விரு நூல்களையும் முறையே ஆக்கி

---

ர்ந்த எக் குலத்திலேனும் (வடமர், தெலுங்கர்) ஸஹஜமாய் சம்பந்தம் செய்துவிடுவார்கள். ஸ்மார்த்த மதத்தில் இவ் விசேஷக் கட்டுப்பாடுகள் இல்லாததால், எவ்வித சம்பந்தங்களுக்கும் இடங் கொடுக்கும்படி ஏற்படுகிறது. கிறிஸ்தவர்கள் அதிகமாக மகம்மதியர்கள் ஆவதில்லை; மகம்மதியர்கள் அதிகமாக கிறிஸ்தவர்கள் ஆவதில்லை. அதுபோல நமக்குள் மத்வர்கள் அதிகமாக ராமாநுஜர்கள் ஆவதில்லை; ராமானுஜ மதஸ்தர்கள் அதிகமாக மத்வ மதஸ்தர்கள் ஆவதில்லை. ஸ்மார்த்தர்களே இவ்விரு மதஸ்தர்களாகவும் ஆகிறார்கள். இது கட்டுப்பாடு இல்லாத குறை தான். அதற்காக புதுக் கட்டுப்பாடு ஏற்படுத்திக் கொள்ளவேண்டுமோ என்று தோன்றுகிறது. ஆனால் புதுக் கட்டுப்பாடுகளிலோ, எண்ணிறந்த பாபங்களுக்கு இடமுண்டாகிறது. ஆதலால் சாஸ்திர முறையே இயற்கைக் கட்டுப்பாடு. அந்த சாஸ்திர முறையை ஸ்மார்த்தர்கள் தளர விடுவதாலேயே மேற்கண்ட இடைஞ்சல்களுக்கெல்லாம் இடமேற்படுகிறது. புதுக் கட்டுப்பாடு வேண்டாம். தத்துவத்தையும் அதற்கு ஆதாரமான சாஸ்திர முறைகளையும் உறுதியுடன் தவறாது கைக்கொள்வதாலேயே, தானாக மெள்ள மெள்ள இப் புது இடைஞ்சல்களெல்லாம் மறைந்தே ஆகவேண்டும். சில ஸமயம், புத்தர் சமணர் முதலிய பிற ஸமயிகளும் இப் புது மதங்களிலே கலந்து விடுவதும் உண்டு.

விஷ்ணு பக்தியில் தீவிரமாய் இருந்தவர் சிலர், நாம் இப்போது அத்வைத மதத்தில் இருந்தால் சிவ பக்தர்கள் கூட்டத்தின் மத்தியில் நமது விஷ்ணு பக்திக் கொள்கை வரவரத் தேய்ந்து சிவ மயமாகி விடுமோவென்று பயந்தனர். இப்பேர்ப்பட்டவர்களின் எண்ணங்களுக்கெல்லாம் ராமானுஜர் முதலியோர் கிளம்பியது உருவம் கொடுப்பதாயிற்று. தென்னாட்டில் உள்ள விஷ்ணு பக்தர்களில் [illegible] அவர்களுடைய பாஞ்சராத்ர தீக்ஷையில் சேர்ந்து கொண்டார்கள். அதிலும் எல்லா விஷ்ணு பக்தர்களும் சேரவில்லை. சேர்ந்தோர் திரும்பி கலையாதிருப்பதற்காக விசேஷ கட்டுப்பாடுகள் (Party discipline) வெகு அதிகமாக ஏற்பட்டன. சாஸ்திரங்களிலே சொல்லப்பட்ட நியமங்களைவிட அதிகமாகவும் ஏற்படுத்திக் கொள்ளப்பட்டன. அதனாலேதான் ஸ்மார்த்தமுறை சாஸ்த்ரமென்றும், இதரமுறை ஸம்ப்ரதாயம் என்றும் வழங்கத் தலைப்பட்டது. இவ்விதக் கட்டுப்பாட்டினால் தோற்றமுறும் உயர்வு, பிறர் இப் புதுமதத்தில் வந்து சேர இடங் கொடுப்பதோடு, சேர்ந்தவர்கள் கரையாமல் இருப்பதற்கும் காரணமாயிற்று. எந்த ஸ்மார்த்த குலங்களிலே பிறந்து, *புது மதங்களில் புக்கார்களோ, அந்த தம் மூதாதைக் குலங்களையே இழிவு படுத்திக் கொள்ளவேண்டியதும் ஆயிற்று. இவ்விதமே மேற்குக் கடற்கரை யோரத்தில் துளுவ நாட்டில் மத்வ மதம் தோன்றியது. கூர்ஜர நாட்டில் ஒரு தெலுங்கு பிராம்மணனால் வல்லப மதம் என்ற ஒரு மதம் ஸ்தாபிக்கப்பட்டது. வங்காளத்தில் சைதன்ய மதம் கிளம்பியது. புதியதாகக் கிளம்பிய இம் மதங்களெல்லாமே அநேகமாக வைஷ்ணவக் கிளர்ச்சிகளாக இருப்பதைக் கொண்டே, சைவத்திலே கரைந்துபோகும் அச்சத்தாலேயே இவை உருவாயின என்னும் தத்துவம் உறுதியாகிறது. அநேகமாய் இப் புது மதங்களிலெல்லாம், ஸம்பிரதாயக் கட்டுப்பாடுகள், சற்றேறக்குறைய இடங் கொண்டிருக்கின்றன. † (உதயனாசார்யார் என்னும் பண்டையதர்க்கப்

* சேட்லூர், கடாம்பி, கந்தாடை, உருப்பட்டூர், குமாண்டூர், தூப்பில், சோழியர் முதலியன.

† பழைய எந்த ஸ்மார்த்த குலத்திலிருந்து இந்த புது மதத்தில் ஜனங்கள் சேர்ந்தார்களோ சேர்ந்த பிறகும் சிறிது காலம் அந்தப் பழைய குலத்தாரோடு மாத்திரம் சம்பந்தம் வைத்திருப்பார்கள். ஊறிப்போன பின் தம்முடைய பழைய குல ஞாபகத்தையே விட்டு புது மதத்தில்

பேராசிரியரும் புத்தமதம் இவ்விதமான மனிதர்கள் சேர்ந்தே வளர்ந்தது என்று நிரூபித்திருக்கிறார்.)

அத்வைத மதத்திலோ வேத வேதாங்கங்களிலே சொல்லப்பட்ட அநாதி நியமங்களைத் தவிர புதுக் கட்டுப்பாடுகள் எவைக்கும் இடமில்லை. பரம்பரையான அந்தந்த குலங்களுக்குள்ளேயே விவாஹம் முதலிய விவஹாரங்களும் நடந்துவரும். அந்தந்த குலாசாரங்கள் அவ்வப்படியே ரக்ஷிக்கப்படும். உபாஸனா மூர்த்தி, நெற்றியில் வழிபாட்டுக் குறி, இவைகள் மாற்றப்படா. ஈசனை மனதில் தியானித்து அவனுக்கு அர்ப்பணமாக, தத் தம் வர்ணாசிரம தர்மங்களை அனுஷ்டிப்பதே அவனை அணுகும் பெருநெறி என்றே கொள்ளப்படும். வர்ணாசிரம நெறி சரியாக அனுஷ்டிக்கப்பட்டு, அதன் மூலம் உலக ஸேவை ஏற்பட்டு, ஈசுவர பக்தி முதிரும்போது, அத்வைத பக்குவநிலை தானாக ஏற்படுகிறது. அத்வைத சித்தாந்தத்தை நிலைநாட்டிய மஹான்களிலும் எவ்வளவோ பேர் எல்லை கடந்த விஷ்ணு பக்தர்களாக இருக்கிறார்கள். அத்வைத ஸித்தி, ப்ரம்மாநந்தீயம் என்ற இரு நூல்களுக்கும் ஈடான தத்துவ நூல்கள் உலகில் எங்கும் இல்லை. அவ்விரு நூல்களையும் முறையே ஆக்கி

---

சேர்ந்த எக் குலத்தினோடும் (வடமர், தெலுங்கர்) ஸஹஜமாய் சம்பந்தம் செய்துவிடுவார்கள். ஸ்மார்த்த மதத்தில் இவ்வித சம்பந்தங்களுக்கு இடம் இல்லை. கிறிஸ்தவர்கள் அதிகமாக மகம்மதியர்கள் ஆவதில்லை. மகம்மதியர்கள் அதிகமாக கிறிஸ்தவர்கள் ஆவதில்லை. அதுபோல நமக்குள் மத்வர்கள் அதிகமாக ராமாநுஜர்கள் ஆவதில்லை; ராமானுஜ மதஸ்தர்கள் அதிகமாக மத்வ மதஸ்தர்கள் ஆவதில்லை. ஸ்மார்த்தர்களே இவ்விரு மதஸ்தர்களாகவும் ஆகிறார்கள். இது கட்டுப்பாடு இல்லாத குறை தான். அதற்காக புதுக் கட்டுப்பாடு ஏற்படுத்திக் கொள்ளவேண்டுமோ என்று தோன்றுகிறது. ஆனால் புதுக் கட்டுப்பாடுகளிலோ, எண்ணிறந்த பாபங்களுக்கு இடமுண்டாகிறது. ஆதலால் சாஸ்திர முறையே இயற்கைக் கட்டுப்பாடு. அந்த சாஸ்திர முறையை ஸ்மார்த்தர்கள் தளர விடுவதாலேயே மேற்கண்ட இடைஞ்சல்களுக்கெல்லாம் இடமேற்படுகிறது. புதுக் கட்டுப்பாடு வேண்டாம். தத்துவத்தையும் அதற்கு ஆதாரமான சாஸ்திர முறைகளையும் உறுதியுடன் தவறாது கைக்கொள்வதாலேயே, தானாக மெள்ள மெள்ள இப் புது இடைஞ்சல்களெல்லாம் மறைந்தே ஆகவேண்டும். சில ஸமயம், புத்தர் சமணர் முதலிய பிற ஸமயிகளும் இப் புது மதங்களிலே கலந்து விடுவதும் உண்டு.

யோர்களாகிய மதுஸூதன ஸரஸ்வதி ஸ்வாமிகளும், கௌட ப்ரம்மானந்த ஸ்வாமிகளும், பரம விஷ்ணு பக்தர்கள். அதில் முதல்வர் சொல்வதாவது, “ நாமே வைஷ்ணவர்கள். விஷ்ணு வென்றால் எங்கும் வியாபகமான பரமாத்மா அல்லவோ? பேத வாதிகளான வைஷ்ணவர்கள், அவரைத் தவிர வேறு பொருள்களும் சத்தியமாக உண்டென்று சொல்வதால், அவரது பூரணத் தன்மையைக் குறைத்து விடுகிறார்கள், அவரைச் சிறுமைப் படுத்திவிடுகிறார்கள். பெயரால் மாத்திரம் அவர்கள் வைஷ்ணவர்கள். அத்வைதிகளான நாமே உண்மை வைஷ்ணவர்கள் ” என்ற கருத்தை வெளியிட்டும் இருக்கிறார்கள். விஷ்ணு பக்திக்காக மாத்திரம் பிற மதங்களிலே புக வேண்டியதில்லை.

11. நம் நாட்டில் அநாதி காலமாக ஒவ்வொரு கிராமத்திலும், சிவாலயம் விஷ்ணு ஆலயம் இரண்டுமே முறையே ஈசான்யத்திலும் மேற்கு திக்கிலும் ஏற்பட்டு, வழிபடப்பட்டு வருகின்றன. பிற்காலத்தில் ஏதாவது சில கிராமங்களில் வீர வைஷ்ணவமோ வீர சைவமோ உற்பத்தியாகும்பொழுது, வீர வைஷ்ணவத்தால் சிவாலயத்திற்கு ஹானியும் வீர சைவத்தால் விஷ்ணு ஆலயத்திற்கு ஹானியும் ஏற்படுவதையும் பார்க்கிறோம். நம் நாட்டில் பொது மக்களுடைய அநாதியான மதம் வைதிகமான அத்வைத சித்தாந்தமாக இருப்பதனாலே தான், ஒவ்வொரு கிராமத்திலும், இவ்விரு ஆலயங்களும் ஒரே பக்தியுடன் ஸ்தாபிக்கப்பட்டும், வழிபடப்பட்டும், வந்து கொண்டிருக்கின்றன. இவ்விரு ஆலயங்களில் எதற்கு ஹானி ஏற்பட்டாலும், வேதத்தையே ஆதாரமாகக் கொண்ட அத்வைதிகளுக்கு தம் இரு கண்களில் ஒரு கண்ணுக்கு ஆபத்து ஏற்படுவதுபோல் வேதனை ஏற்படுகிறது. சரித்திர முறையில் ஆராயுங்கால், வீர வைஷ்ணவர்களும், வீர சைவர்களுங் கூட இரு தெய்வங்களையும் ஒன்றென வழிபட்டு வந்த பெரியோர்களின் ஸந்ததிகளே என்று அநேகமாய் சொல்லவேண்டி இருக்கிறது. அப்படி இல்லாமல், இப்பொழுதிருக்கும் பேத புத்தியுள்ள வீர வைஷ்ணவர்களும் வீர சைவர்களும் இருக்குமளவு பண்டை காலத்திலும் இருந்திருப்பார்களேயானால், ஒவ்வொரு ஊரிலும் (இப்பொழுது ஒரு சாராரே வசிக்கும் ஊரில்கூட) வடகிழக்கிலும் மேற்கிலும் சமமாக இரு ஆலயங்களும் ஏற்பட இடமில்லை.

சைவ சித்தாந்த சாஸ்திரங்களும், வைஷ்ணவ சாஸ்திரங்களும் ஆரம்பித்த காலத்தில் அவைகளின் நூலாசிரியர்களாய் இருந்த நான்காம் வருணத்தைச் சேர்ந்த அநேக ஸந்தானுசாரியர்கள் முதலியோரும் தம்முடைய முக்கியமான சிவஞான போதம், சிவஞான சித்தியார், திவ்வியப் பிரபந்தங்கள் முதலிய பெரிய சாஸ்திர வாதங்களிலே கூட வேதத்தைப் பிரமாணமாக தழுவிக் கொண்டிருந்தும் தம் வர்ணாசிரம முறைப்படி வேதவாக்யத்தையுங்கூட உச்சாரணம் செய்யவில்லை. ஆழ்வாராதிகள்கூட சிவனையும் விஷ்ணுவையும் ஒன்று என்றே தியானித்திருப்பது அவர்கள் பிரபந்தங்களிலிருந்து வெளிப்படை. வேதத்தையே கதியாகவும், பேதமற்ற ஒரு பரம்பொருளே தத்துவமாகவும், தர்ம சாஸ்திரத்தினலே போதிக்கப்படும் வர்ணாச்ரம தர்மமே வழியாகவும் கொண்ட பெரியோர்களது ஸந்ததிகளே, அநேகமாய் இன்று நம் நாட்டில் வசிக்கும் மாதவர், வைஷ்ணவர், சைவசித்தாந்திகள், வல்லபர், சீக்கியர், கிறிஸ்தவர், மகம்மதியர் முதலிய மதஸ்தர்கள் ஆவர். அவர்கள் நம்முடைய அநாதியான வேதத்தின் முடிவில் உணர்த்தப்படும் அத்வைத தத்துவத்தின் உண்மையையும் அதற்கான பேதமற்ற தெய்வ பக்தியையும் கொடுத்து ஜீவனைக் கடைத்தேறச் செய்வதே அத்வைத ஸித்தாந்தம் என்னும் விஷயத்தை தெளிவாகத் தெரிந்து கொண்டுவிடின், மனதிலாவது அவர்கள் பெரியோர்களுடைய துவேஷமற்ற அன்பைக் கடைப்பிடிப்பார்கள். இவ்வுண்மையை எடுத்துக் காட்டி உதவுவதே வேதத்தையே நம்பும் அத்வைதிகளின் கடமை.

12. நம் நாட்டிலிருப்பவர்கள் மாத்திரமின்றி, உலக முழுதும் வசிப்பவர்கள்கூட வேதத்தையும் வர்ணாச்ரமத்தையும் அத்வைத தத்வத்தையும் கடைபிடித்த மூதாதைகளின் ஸந்ததியென்றே சரித்திர ஆராய்ச்சிக்காரர்களில் ஒருசாரார் கொண்ட அபிப்பிராயம்.

13. பாலஸ்தீன் பக்கத்தில் இரண்டு அரசர்களின் உடன்படிக்கை ஒன்று சுமார் 3,500 வருஷங்களுக்கு முன்னர் கல்லில் வெட்டப்பட்டிருப்பதில், வேதத்திலே சொல்லப்பட்ட தெய்வங்களான மித்திரனும் வருணனும் பிரமாணமாகக் குறிப்பிடப்பட்

டிருக்கிறார்கள். மெக்ஸிகோ என்னும் அமெரிக்கா நாட்டில் அநாதிகாலம் தொட்டு இன்றுவரையில் நவராத்திரி காலத்தில் நடந்து வரும் 'ராமலீலா' என்னும் உத்ஸவமும் * தென் அமெரிக்காவில் பெரு என்னும் நாட்டில் சூரிய உபாஸனையும் சூரிய ஆலயங்களும், ஆப்பிரிக்காவில் ஸஹாரா பாலைவனத்தைச் சுற்றியிருக்கும் ஊர்களின்பேர்களிலெல்லாம் கலந்து நிற்கும் ராம நாமமும், மெஸபடோமியா என்னும் நாட்டிலே கிடைத்திருக்கும் கங்கையைத் தாங்கும் வ்ருஷபாரூடரான பரமசிவனுடைய சிலாமூர்த்தியும், ஆஸ்திரேலியாவில் சுதேச நாட்டவர் இன்றும் ஆடும் சிவலீலைக் கூத்தும், மங்கோலியாவுக்கடுத்த கோபிபாலைவனத்தில் ஸ்டெயின் என்னும் வெள்ளையரால் மணலிலிருந்து எடுக்கப்பட்ட தங்கப்பெட்டியிலுள்ள ஸம்ஸ்க்ருத நூல்களும், கிரேக்க தேசத்தில் சுமார் 4,000 வருஷங்களுக்குமுன்னர் விருஷபம் லிம்ஹம் இவைகளோடுகூடிய சிவசக்தி ஆலயங்களின் வரலாற்றைக் கூறுவதாய் சுமார் 2,000 வருஷத்துக்கு முன் எழுந்த நூல்களும், சுமார் 5,000 வருஷங்களுக்கு முற்பட்டதாகச் சொல்லப்பட்டதும் ஸிந்து நாட்டிலே பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்பட்டதுமான 'ஹரப்பா' 'மோஹன்ஜிதாரோ' என்னும் ஊர்களிலே காணப்படும் சிவலிங்கம், சக்தியந்திரம், ஸாளக்கிராமம் முதலிய அத்வைதிகளின் ஸமரஸ உபாஸனை மூர்த்திகளும், 'ஸையாம்' (தாய்நாடு), ஸுமத்ரா, ஜாவா, போர்னியோ முதலிய நாடுகளிலே காணப்படும் நமது தர்மசாஸ்திரங்களும் யாக சின்னங்களும் எண்ணிறந்த சிவாலய விஷ்ணு ஆலயங்களும், அயர்லாந்தில் பூமியிலிருந்து கிடைத்த விநாயக மூர்த்தியும், ஆராய்ச்சியாளர்களுக்கு உலக முழுவதுமே வேதமும் அபேதமான இவ்விஷ்ணு உபாஸனமும், வர்ணாச்ரம தர்மமும் குடிகொண்டிருந்தன என்னும் முடிவிற்குக் காரணங்களாயின.* (உலக முழுவதும், எல்லா நாடுகளிலும், வாரத்தின் கிழமைகளின் பெயர்கள் ஒரேமாதிரி வரிசையாக வழங்கப்பட்டு வருவதால், உலகத்திலுள்ள மானிடவர்க்கம் முழுவதும் ஒரே மூலநாகரிகத்தினின்று விரிந்தது என்று ஊஹிக்க இடந்தருகிறது. ஞாயிறு, திங்கள், செவ்வாய் முதலிய கிழமை வரிசைக்குக் கார

* வட இந்தியாவில் இன்றும் ராமலீலா உத்ஸவம் நவராத்ரி காலத்தில் ஒவ்வொரு வருஷமும் நடந்துவருகிறது.

ணமோ நமது ஜோதிஷ சாஸ்திரத்தைத் தவிர வேறு எங்கும் காணப்படவில்லை.

கிறிஸ்தவர்களுடைய பைபிள் நூலில் முதல் ஆத்மாக்களுக்கு 'ஆத்ம' 'ஜீவ்' (Adam Eve) என்று கூறப்படும் பெயர்களும், ஈவ் (Eve) பழத்தைத் தின்ற விபரமும், நமது சாஸ்திரங்களில் ஆத்மா, ஜீவன் என்னுமிருவர்களில் ஜீவன் கர்மவிருக்ஷத்தின் பலத்தையனுபவிக்கிறுன் என்று சொல்லப்படும் தத்வத்தை ஆதாரமாகக் கொண்டதாகக் காணப்படுகிறது.

14. மனுவும் * தமது தர்மநூலில் பாரஸீகர்கள், சீனர்கள், தர்த்தாரர்கள், (Tartars) திராவிடர்கள் முதலிய சில தேசத்தவர்களைக் கூறி, இவர்கள் ஆதியில் க்ஷத்திரியர்களே என்றும், கொஞ்சம் கொஞ்சமாக கர்மானுஷ்டான லோபத்தால், அந்த வர்ணத்திலிருந்து நழுவிவிட்டவர்கள் என்றும் கூறி இருக்கிறுர்.

15. ஆதலால் வேதத்தின் உண்மைப் பொருளான அத்வைத தத்துவத்தையும், அதை அடையும் லக்ஷியமான வர்ணுசிரம தர்மத்தின் உபயோகத்தையும், உலக மாந்தர்கள் அனைவருமே அறிந்துகொள்ளுமாறு செய்வதை அத்வைதிகள் தம் முதற்கடமையாக ஏற்றுக்கொள்ளவேண்டும்.

16. உலக மாந்தர்கள் எல்லோரும் தம் மூதாதைகளின் தெய்வ வழிபாட்டைப்பற்றியும் ஒழுக்கத்தைப்பற்றியும் தத்வத்தைப்பற்றியும் உள்ளபடி உணர்ந்துவிட்டால், உலகத்திலேயே மதத் துவேஷத்தின் விதை அற்றுப்போய்விடும். அன்பே நிறையும்; மங்களம் ஓங்கும் ; பிரும்மமே மங்களம்.

சிவம்

---

* இந்த மனு வாக்கியத்தின்படி, திராவிட வேதம், மங்கோலிய ஆரிய வேதம் என்ற பேதங்களுக்கு வர்ணுசிரம முறைப்படி இடமில்லை என்று தெளிவாகின்றது.

ஸ்ரீ:

ஸ்ரீ குருப்யோ நம:

# அத்வைதமே பரம ரகசியம்

(போலகம் ராமா சாஸ்திரிகள், சென்னை)

பகவத் பாதர்களுக்குப் பின்னும் பேதவாதக் கொள்கைகள் ஏற்படுவதற்குத் தத்துவ முறையிலுள்ள மூல காரணம் யாது? "பரம்பொருளே மெய்ப் பொருள். உலகம் வெறும் தோற்றம்; அத்தோற்றமும் உண்மையில் அப் பரம்பொருளின் தோற்றமே. தோற்றம் விலகி எல்லாம் பரம்பொருளாய்ப் பிரகாசிப்பதே முக்தி" என்று, மறைமுடிகளில் முரசறையப் பெற்ற பரமாத்வைத தத்துவத்தை ஸ்ரீ பகவத் பாதர்கள் ஈசாம்சமாக "சங்கரச் சங்கரஸ் ஸாக்ஷாத்" என்றபடி அவதரித்துச் சித்தாந்தம் செய்த பின்னரும், "உலகமும் மெய், வேற்றுமையும் தோற்றமன்று, மெய்யே" என்றும் பேதவாதத்தைத் தழுவிய வைணவம் சைவம் முதலிய கொள்கைகள் கிளம்புவதற்கு என்ன காரணம்?

காரணமுண்டு. "பக்குவமில்லாதவர்கள், அதாவது, அனதிகாரிகள் அனேகர் வாய்மாத்திரத்தில் அத்வைதமாம் வேதாந்தம் பேசி அனுஷ்டானத்தில் தாமும் ஏமாறி பிறரையும் ஏமாற்றி விடுவார்களே" என்ற உணர்ச்சியே காரணம். "ந புத்தி பேதம் ஜனயேத் அஜ்ஞானும் கர்மஸங்கினும்" என்கிறார் ஸ்ரீ கிருஷ்ண பகவான். "ஒரே பரம்பொருள் எல்லாமாய் நிறைந்து நிற்கின்றது என்பதே தத்வமாயினும், அதை அறியக் கூடாத நிலையிலுள்ளவர்கள் உலககர்மத்தி' லீடுபட்டுக்கொண்டிருக்கும் காலத்தில், அவர்களுக்குத் தத்வோபதேசஞ்செய்து அவர்களது புத்தியை மாற்றுதே. அபக்குவிகள் ஞானோபதேசத்தைக் கேட்டால் பிஞ்சிலே பழுத்த வெம்பலாக ஆகிவிடுவார்கள். ஆகையால், அவர்களுடைய விஷயத்திலே தத்துவத்தை எப்படியாவது மறைத்து வைப்பதே நலம். அத் தத்துவத்தை நிர்த்

தாவது மறைத்தாகவேண்டியிருக்கிறது." அதே பகவான் கீதையின் ஒன்பதாம் அத்யாயத்தில் அத்வைத தத்துவத்தை விளக்குமிடத்து "இதுவே ராஜவித்யை, இதுவே ராஜகுஹ்யம், இதுவே பவித்ரம், இதுவே உத்தமம்" என்கிறார். ராஜவித்யை என்பதினால் இவ் வித்யையே ராஜாங்கமாக எல்லாவற்றினும் உயர்வில் அமர்ந்தது என்று விளக்கப்படுகிறது. ஆயினும், இது ராஜகுஹ்யம்; பரம ரஹஸ்யமாய் வைத்து ரக்ஷிக்கவேண்டிய வித்யைகளில் இதே முதன்மையானது. இப்படி, பரம ரஹஸ்யமாய் ரக்ஷிக்க வேண்டிய உத்தம வித்யையை, ரஸவாத வித்தையைக் குழந்தைகள் கையாடாமல் ரக்ஷிக்க வேண்டியதுபோல, சிந்தித்தாவது உலகத்தில் பெரும்பாலான அபக்குவிகளாகிற குழந்தைகளிடமிருந்து ரக்ஷிக்கவேண்டியது அவசியமாயிற்று. அத் தத்துவத்திற்குச் சாதனமான மார்க்கங்களையே முடிவென கூறவேண்டியதாயிற்று: அத்தத்துவத்தை மறைத்து வைத்தாலும், சாதன மார்க்கத்தைச் சரியாய் அனுஷ்டிக்கும்பொழுது, தத்துவம் தானாகவே பிரகாசிக்கும். தெய்வபக்தியைக் கொண்டு வேத வாதமாக பிற்காலத்தில் உதித்த மதங்களுக்கு, தத்துவமுறையில் ஆதாரம் இதுதான்.

இந்த ஆதாரம் பகவத்கீதையில் மாத்திரமே யல்லாமல், ஏனைய மஹான்களினுடைய திருவாக்குகளிலும் நிலைபெற்று நிற்கிறது.

> நிர்விசேஷம் பரம் ப்ரஹ்ம சாக்ஷாத்கர்(த்)துமநீஸ்வராஃ |
> யே மந்தாஃ தேநுகம்ப்யந்தே ஸவிசேஷ நிருபணை: ||

பேதமற்ற பரம்பொருளை அறிந்துகொள்ளும் ஆற்றலில்லாதாருக்காகவே கருணையினாலே பேதத்துடன்கூடிய ஈசுவர தத்துவம் நிரூபிக்கப்படுகின்றது. பக்தியில் வேகமாக ஈடுபட்டவர்களுக்கு பக்தியால் அடையக்கூடிய பயனைக்கூட உதறித்தள்ளுங் குணம் சிலசமயம் ஏற்படும். இவ்வுலகத்திலுள்ள ஒரு கோவிலிலுள்ள மூர்த்தியினிடத்தில் விசேஷமாக ஈடுபட்ட ஒரு அடியார் "வைகுண்ட வாஸேபி நமே' பிலாஷஃ" என்கிறார். சகுணமான வைகுண்ட லோகத்தைவிட தன்னூர்க் கோவிலே அவருக்குப் பெரிதாகத் தோன்றுகிறது. "உன்னிடம் பக்தி எனக்கிருந்தாற் போதும். உன்னால் கொடுக்கப்படும் மோக்ஷம் வேண்டாட

றன. 'அசத்தான ஏகம்' 1, 2, 3 என்ற எண்ணிக்கையிலே
ளப்படுவது. சத்தான ஏகமோ இந்த எண்ணிக்கைகளைப்
யத்தால் வகுத்து வந்த ஈவான அனந்த (Infinity) மாகும்.

अष्टौ व्याकरणानि षट् च भिषजां व्याचष्ट ताः संहिताः
षट् तर्कान् गणितानि पञ्च चतुरो वेदानधीते स यः।
रत्नानां त्रितयं द्वयञ्च बुबुधे मीमांसयोरन्तरं
सद्ब्रह्मैकमगाधबोधमहिमा सोऽस्याः कविर्भास्करः॥

இதில் மற்றொரு விசேஷம் :—

இந்த அனந்தத்தால் பெருக்கப்படும் பூஜ்யமும், ஆழ்ந்து
ராயுமிடத்து, ஒன்றுமல்லாத சூன்யமன்று. "ஒன்றுமல்லாத
ன்யத்திற்குக் கணக்கில் இடமே கிடையாது" என்று நவீன
மநாட்டு கணித நிபுணர்கள் சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள்.
னந்தம் எப்படி எல்லையில்லாத நிறைவோ, அவ்விதமே இம்
ரயையும் எல்லையில்லாமற் போய்க் கொண்டிருக்கும் ஒரு
றைவு என்று பொருள் கூறவேண்டும். எல்லையில்லாத
றைவை "இல்லாமை" என்று சொல்லிவிட முடியாது. அது
ர் எல்லையில் நின்றால் மட்டுமே "இல்லாமை" என்று சொல்ல
டும். ஆகையால் எட்டை வகுத்துப் பூர்ணத்தை ஈவு கொடுத்த
ாயை என்னும் பூஜ்யம், உண்மையான அகண்டமும் இல்லை,
இல்லாமை என்னும் சொல்லின் பொருளும் இல்லை. இரண்டிற்
கும் புறம்பான தோற்றத்தின் மூலம். அகண்டமான அனந்தம்
இதைக்கொண்டு பெருக்கப்படுவதால் அன்றோ, தோற்றமான
வேற்றுமை யெண்ணிக்கைகள் வெளிப்படுகின்றன? ஆகையால்,
தோற்றத்திற்கு மூலகாரணம் இம் மாயையே அன்றோ?

இல்லாமையும் காரணமாகாது. உண்மையும் தோற்றத்
திற்குக் காரணம் ஆகாது. ஆகையால் இம்மைக்கும் உண்மைக்
கும் இடையிலுள்ளதே இம் மாயை என்னும் பூஜ்யம்.

இது இப்படி இருப்பினும், இங்கு மற்றொரு விஷயத்தைக்
கவனிக்கவேண்டும். வேறு இடங்களில் பூஜ்யம் சூன்யமாய்
இருந்தபோதிலும், ஓர் எண்ணிக்கையை வகுத்து அனந்தமன்
றும், ஈவைத் தரும் பூஜ்யம் இல்லாமையாலும்

எட்டால் பூஜ்யத்தைப் பெருக்கினால் பெருக்கல் தொகை பூஜ்யமே. '8 × 0 = 0 இவ்விதம் அனந்தத்தால் பூஜ்யத்தைப் பெருக்கினால் பூஜ்யமே வரவேண்டுமல்லவா? அப்படி பூஜ்யம் வராமல், $\frac{1}{4}$, $\frac{1}{2}$, 1, 2, 3, 4, 5, 6 முதலிய வேற்றுமை எண்ணிக்கைகள் வருகின்றன. ஆதலால் இப் பூஜ்யம் சூன்யமல்ல, 'அதற்கொரு மதிப்புண்டு. ஆனால், அது உண்மையு மல்ல,' தோற்றத்தை உண்டுபண்ணி மறைதலே மதிப்பு. (Imaginary or Illusory) சுக்ல யஜுர் வேதத்தில் சாந்தி மந்திரம் ஒன்று இருக்கிறது.

**पूर्णमिदः पूर्णमिदं पूर्णात् पूर्णमुदच्यते ।**
**पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥**

இதன் கருத்து :—'அது நிறைவு; இது நிறைவு. நிறைவினின்று நிறைவு கிளம்புகிறது. பூர்ணத்தில் பூர்ணமெடுக்கப் பூர்ணமாகவே எஞ்சுகின்றது.' அது நிறைவு என்பதில் உள்ள அது என்பது நமது புலன்களுக்கு எட்டாத நிறைவு. 'இது நிறைவு' என்பதிலுள்ள 'இது' என்பது, நமது புலன்களால் அறியக்கூடியது. அது என்பது முன் கணக்கில் ஈவாக வந்த அனந்தம் (Infinity) 'இது' என்று காணப்படுவது எப்படி எல்லையற்றதாக இருக்கும் என்ற சந்தேகம் ஏற்படுகிறது.

காலம், திக்கு அல்லது தேசம், ஆகாசம், இவைகள் மனத்தால் அறியப்படும் பொருள்கள். இவைகளை அறியும் பொருள் அது என்பது. அறியும் பொருள் அறியப்படுவதாகாது. கண்ணைக் கண் பார்க்காது. கண்ணாடியிலே பார்க்கப்படின், அது உண்மைக் கண் அன்று. ஆகையால் அறியும் பொருள் அறியப்படாத அது தான். அறியப்படும் பொருள் இது தான். அது என்பதினுடைய தோற்றமே இது. ஆதலால் தான், அதினின்று இதை எடுத்தாலும் அது நிறைந்தே நிற்கும். எடுத்தாலும், சேர்த்தாலும் அது நிறைவாகவே நிற்கின்றது. இது என்னும் தோற்றத்திலும் நிறைவும் தோன்றுகின்றது. கனவிலே கண்ட காலமும், ஆகாயமும் ஆதியந்த மில்லாமலே தோன்றின அல்லவா? ஆதியந்த மில்லாத அந்த ஆகாயத்திற்கும் விழிப்பு அந்தத்தைக் கொடுத்ததல்லவா? கனவே வேண்டாம். [illegible] ண்டு நிலைக் கண்ணாடிகளை எதிரெதிராக நிற்க வைத்த[illegible] பார் அனந்தம் (Infinity) தோன்றுகிறதல்லவா?

ஒரு கஜம் நீளத்தைப் பாதி, அதிற் பாதி, அதிற் பாதி இவ்விதம் பிரித்துக் கொண்டே போனால், எவ்வளவு தூரம் பிரித்துக் கொண்டு போகலாம்? வாய்க்கும் மனத்திற்கும் சக்தியுள்ள வரையில் பிரித்துக்கொண்டே போகலாம். ஒரு மைல் நீளத்தையும் அவ்விதமே செய்யலாம். 'ஒரு மைல் நீளத்திற்கும் எல்லையற்ற பாகங்கள், ஒரு கஜத்திற்கும் எல்லையற்ற பாகங்கள்' என்னும் பொழுது ஒரு கஜமும், ஒரு மைலும் ஒன்றாயிற்றல்லவா? ஒரு மைலுக்கும் கஜத்துக்கும் உள்ள வேற்றுமை தோற்றமாயிற்று. ஆகையால் உலகில் தோற்றப்பொருள் எல்லாவற்றிலுமே ஒரு தோற்ற அனந்தத்வம் இருக்கிறது. உண்மை யனந்தப் பொருள் மாயையின் மூலம் பிரதிபலித்தலே உலக வேற்றுமைத் தோற்றமாதலால், அவ் வொவ்வொரு வேற்றுமைத் தோற்றத்திலுங் கூட அனந்தத் தன்மையும் தோற்றமாய்த் தோன்றுகிறது. இத் தோற்ற அனந்தத் தன்மையை 'அல்ப'மெனவும், [illegible]ற் பங்கெனவும் உண்மை யனந்தத்தை (Infinity) 'பூமா' எனவும் 'த்ரிபாத்' எனவும் வேதங்கள்* கூறுகின்றன.

पादोऽस्य विश्वाभूतानि त्रिपादस्यामृतं दिवि । (புருஷஸூக்தம்)

கணக்குப்படியும் உண்மை அனந்தத்திற்கு ஒப்பாகும் $1+2+3+4+5+6$ என்னும் அனந்தத்திலிருந்து 'இதம்' (இது) என்னும் தோற்ற அனந்தமாஞ் சிறுமைக்கு ஒப்பான $1+1+1+1+1+1+1$ என்னும் அனந்தத்தைக் கழித்தாலும், $1+2+3+4+5+6$ என்ற அனந்தமே மிஞ்சுகிறது. சுக்ல யஜுர் வேதத்தின் சாந்தி மந்திரம் கணக்குப்படியும் நிரூபிக்கப் பட்டதாயிற்று. அதிற் காணும் अदः पूर्णम् என்பதே எல்லாம் அறியும் நிறைந்த அறிவு. அதுவே அத்வைதம்.

* यो वै भूमा तत्सुखं नाल्पे सुखमस्ति (சாந்தோக்யோ

ஸ்ரீ :

குருப்யோ நம:

# சங்கீதத்தின் பரம தாத்பர்யம் அத்வைதமே

உலகம் உருகுவது ஸங்கீதத்தினாலேயே. பக்தியில் ஊன்றின சங்கீதம் சாச்வதமா யிருக்கும். அப்பேர்ப்பட்ட சாச்வதமான ஸங்கீதத்தில் ஊன்றித் தன்மயமானவர்கள் நம் நாட்டில் தியாகய்யர், தீக்ஷிதர் புரந்தரதாஸ், ராமதாஸ், கோபாலகிருஷ்ண பாரதி, துகாராம், நாமதேவ் முதலிய எண்ணிறந்த மகான்கள் பூதேவிக் கணிகலமாக இன்னும் விளங்குகிறார்கள். இவர்கள் தங்களுடைய க்ருதிகளை பக்தியி லாரம்பித்தாலும், அப் பக்தியின் முடிவில் தங்களை யறியாமலேயே அத்வைதானந்தத்தில் பரவசமாகி விடுகிறார்கள். அவ[illegible]னேக கீர்த்தனங்கள் இதற்கு சாக்ஷியா யிருக்கின்றன.

ஸங்கீத வித்வான்கள் வழக்கமாய் ஸங்கீத கச்சேரி முதலியவைகள் நடக்குமிடத்தில் ஆரம்பத்தில் பாடும் கீர்த்தனங்களில் ஒன்றாகிய “கஜாநந யனுசு ஸதா பஜன ஸேய ராதா” என்னும் கீர்த்தனத்தில் “ஸஜாதீய விஜாதீய ஸ்வகத பேத மேமி லேனி சாமர கர்ணுநி கநிபத ஸரோஜ மூலவேடு கோனுசு” என்னும் அனுபல்லவியில், பிரும்மம் ஸஜாதீய விஜாதீய ஸ்வகத பேதமென்னும் மூன்று விதமான பேதங்களு மற்ற (1) ஏகம் (2) ஏவ (3) அத்விதீயம் என்றும் உபநிஷத் வாக்யத்திலே கூறப்பட்ட அத்வைத ஸித்தாந்தத்தைத் தெரிவிக்கிறார்.

பரமாத்மா ஒருவரே யொழிய இரண்டாவது பரமாத்மா கிடையாது என்பது ஸஜாதீய பேதமில்லை யென்பதின் பொருள்.

பரமாத்மாவைத் தவிர வேறான ஒரு பொருளுமில்லை என்பது விஜாதீய பேதமில்லை என்பதின் பொருள்.

வேறான பொருளில்லாவிடினும் ஒரு மரத்தில் அதற்குள்ளேயே இலை, பூ, காய், பட்டை முதலிய வேறுபாடு விளங்குவதால் [illegible]ஆத்மாவினிடமும் அதுபோல தனக்குள்ளேயே அ[illegible]மைகள் உள்ளனவோ என்னும் ஸந்தேகத்தை

நிவ்ருத்தி செய்யுமாறு பரமாத்மாவினிடம் ஸ்வகத பேதமு மில்லை என்று சொல்லப்படுகிறது. அதாவது, தனக்குள்ளும் பேதமில்லை. கற்கண்டுக் கட்டி எங்கும் ஒரே மதுர ரஸமாய் இருப்பதுபோல், பரமாத்மா நித்யானந்த கனமான ஏக ரஸம்.

அதற்கடுத்து வரும் சரணத்தில், அத்வைத ஸ்வரூபியான விநாயக ரிடத்திலேயே எல்லா வாதங்களும் ஒடுங்கிவிடுகின்றன வென்னும் பொருள் கூறப்படுகிறது. இறுதியில், ஆதியந்த மற்ற உள்ளொளியாய் ப்ரும்ம ஸ்வரூபமாக கஜானனப் பெருமானை பஜனை செய்யவேண்டும் என உபதேசிக்கிறது.

### தோடி - ரூபகம்

பல்லவி

கஜாநந யனுசு ஸதா பஜன ஸேய ராதா (கஜாநந)

அனுபல்லவி

ஸஜாதிய விஜாதிய ஸ்வகதபேத மேமிலேனி
சாமர கர்ணுநி கநிபத ஸரோஜ முலவேடு கொனுசு (கஜாநந)

சரணம்

மோதகமுன சேகொந்ந நவ மோஹனுங்குடௌ
வாதபேதமுல ஹரிம்சு வக்ர துண்டுடே
ஆதியந்த மேமிலேனி அந்தராத்முடைநவானி
அனுதினமு பஜிஞ்சி காசி அதடே ப்ரஹ்மமனி நுதிம்புமு (கஜாநந)

### ஸ்ரீ த்யாகய்யர்

ஸ்ரீ த்யாகய்யர், (1) "எதாவுனரா நிலுகட நீகு" என்ற கீர்த்தனத்தில், "சிவ, மாதவ, ப்ரம்மா துலயந்தா" என்னு மிடத்திலும், (2) "எவரனி நிர்ணயிஞ்சேதிரா" என்னும் கீர்த் தனத்தில், 'சிவுடனோ மாதவுடனோ கமலபவுடனோ பரப்ரம்ம மனோ' என்னுமிடத்திலும், (3) "பரமாத்முடு வெலிகே முச் சட" என்னும் கீர்த்தனத்தில், 'ஹரி டயஹருட' என்னு மிடத்திலும், (4) "ராம நன்னு ப்ரோவரா" என்னும் கீர்த் தனத்தில், 'ப்ரம்மலோ சிவகேச வாதுலோ' என்னுமிடத் திலும் மும்மூர்த்திகளுக்கும் அதீதமான ப்ரும்ம வஸ்துவைக் குறிப்பிடுகிறார். அப்படியே, (5) "மருகேலரா" என்னும் கீர்த்தனத்தில் 'சராசர ரூப அன்னிநீ வநுச' என்னுமிடத்

திலும், (6) "உண்டேதி ராமு டொகடு" என்னும் கீர்த்தனத்தில், 'ஜகமுநிண்டி யுண்டேதி' என்னுமிடத்திலும், (7) "வேரெவ்வரே" என்னும் கீர்த்தனத்தில், 'ஈரேடு லோக மூலகாதாருடகு நின்னுவினு' என்னுமிடத்திலும், (8) "நிருவிநா நாம தேந்து" என்னும் கீர்த்தனத்தில், 'நேநு எகட ஜூசினநு நீவை யுன்னதி' என்னுமிடத்திலும், (9) "ஊரகே கல்குனு" என்றும் கீர்த்தனத்தில், 'ஸர்வமு ஹரியஞ்சு தெலிசி' என்னுமிடத்திலும், (10) "மனஸா ஸ்வாதீன மைன" என்னும் கீர்த்தனத்தில், 'அன்னிநீ வனுசு எஞ்சினவா னிகி" என்னுமிடத்திலும், (11) "பரம பாவன குணசாலி" என்னும் கீர்த்தனத்தில், 'அன்னி நீவை யுண்டலேதா' என்னுமிடத்திலும், (12) "கருணு ஜலதே" என்னும் கீர்த்தனத்தில், 'நீ மயமு கானி', 'நீ வன்னிட யனி பல்கு துரே' என்னு மிடங்களிலும் ஒரே வஸ்துதான் எல்லாமாயும் எங்கும் நிறைந்தும் பிரகாசிக்கிற தென்பதைக் குறிப்பிடுகிறார்.

"எவரி தோநே தெல்புது" (13) என்னும் கீர்த்தனத்தில், "குண மயமா யாம்புதச ரீர" என்னு மிடத்திலும், (14) "ஸங்கீத ஞானமு பக்தி விநா" என்னும் கீர்த்தனத்தில் 'ஜகமுலு மாயா மயமனி தெலுஸானு' என்னு மிடத்திலும், (15) "எடுலேன பக்தி வச்சுடகே" என்னும் கீர்த்தனத்தில், 'மடுமாய பவமுனு மனதனி யெஞ்சக' என்னுமிடத்திலும், (16) "மனஸா ஸ்வாதீன மைதே" என்னும் கீர்த்தனத்தில், 'கண்ணு கட்டு மாய லனுசு யெஞ்சிவா னிகி' என்னு மிடத்திலும், (17) "பக்துனிசரித்ரமு" என்னும் கீர்த்தனத்தில், 'பவஸி பவமு நிஜமனி எஞ்சக' என்னு மிடத்திலும் (18) "நின்னெ நெர நம்மி யுன்னுனுரா" என்னும் கீர்த்தனத்தில், 'அன்னி கல்ல லநுசு' என்னு மிடத்திலும், (19) "கன்ன தல்லி நீவு" என்னும் கீர்த்தனத்தில், 'மரிம ரீச கலனு ஜூசிநீரநு சுப்ரமசி, கெட்டி மெத்த லன்னியு கல்ல கானி" என்னு மிடத்திலும், (20) "எந்நாள்ளுநீ தோவ ஜூது" என்னும் கீர்த்தனத்தில், 'புவிலோ பொம்ம லாட லாருது' என்னுமிடத்திலும், (21) "ராம பாஹி மேக ச்யாம" என்னும் கீர்த்தனத்தில், "அன்னி கல்லலனி" என்னுமிடத்திலும், லோகம் மாயாமயம் [illegible]யும், கண்கட்டு வித்தை பொம்மலாட்டம் சொப்

பனம் கானல் ஜலம் இவைகள்மாதிரி நிஜமன்று பொய்யே யென்பதையும், (22) "ராம பாஹி மேக ச்யாம" என்னும் கீர்த்தனத்தில், 'நின்னே நிஜமனி' என்னுமிடத்தில் பரமாத்மா மாத்ரமே சத்தியமான வஸ்து என்பதையும் தெரிவித்திருக்கிறார். (23) "பக்துனி சாரித்ரமு" என்னும் கீர்த்தனத்தில், 'சிவ மாதவ பேதமு சேயக' என்னும் கீர்த்தனத்தில் சிவ விஷ்ணு அபேதத்தையும் சொல்லி யிருக்கிறார்.

தவிரவும், (24) "நீகே தய ராக" என்னும் கீர்த்தனத்தில், 'ஏமோ பிஞ்சக நேனுநீ வனுக்ஞானிகி ஏலாகு ஸௌக மிச்சுநே' என்னு மிடத்திலும், (25) "எந்துகு பெத்த லவல புத்திய்யவு" என்ற கீர்த்தனத்தில், 'பேத ரஹித வேதாந்தமுலு தெலிசி' என்னுமிடத்திலும், (26) "இந்த கன்ன னந்தமு" என்னும் கீர்த்தனத்தில் 'தேஹாதி இந்த்ரிய ஸமூஹமுலு மரசி ஸோஹம்' என்ஞசாலு' என்னு மிடத்திலும், (27) "தத்வ மெருக தரமா" என்னும் கீர்த்தனத்தில், 'தத்வமஸியனே வ்ராக்யார்த்தமு ராம நீவே' என்னு மிடத்திலும், (28) "எந்த வேடு கொந்து" என்னும் கீர்த்தனத்தில், 'ஸத்த மாத்ரமா' என்னு மிடத்திலும், (29) "ஸௌந்தர தர தேஹம்" என்றும் கீர்த்தனத்தில், 'சிவமத்வைதம்" என்னு மிடத்திலும், (30) "ஞான மொஸக ராதா" என்னும் கீர்த்தனத்தில், 'பரமாத்முடு ஜீவாத்முடு பதிநாலுகு லோகமுலு ..........தானனே" என்னு மிடத்திலும், (31) "நின் னெநெர நம்மியுன்ன னுரா" என்னும் கீர்த்தனத்தில், 'பேத வாதமுலு தீரக ப்ரம சேவா ரிகி" என்னு மிடத்திலும், (32) "நம்மி வச்சின நன்னு" என்னும் கீர்த்தனத்தில், 'பேத வாத ரஹித' என்னு மிடத்திலும், (33) "கருணா ஜலதே" என்னும் கீர்த்தனத்தில், 'நீவே தானனி கல்கு துரே' என்னுமிடத்திலும், (34) "ராம சீதாராம" என்னும் கீர்த்தனத்தில், "அத்வைத சாம்ராஜ்யமுலு அப்பினட்டு, ஸத் வைராக்ய விதியு ஸாயுஜ்யமே ராம, ஆகம நிகம முலகு அர்த்தமிதி ராம" என்னுமிடத்திலும், (35) "கருணெலா குண்டெ" என்னும் கீர்த்தனத்தில், 'பரமாத்முடு ஜீவாத்முடு யொகடைப ரகு சுண்டு' என்னு மிடத்திலும், ஜீவாத்ம பரமாத் மைக்யமும் பேத மின்மையுமாகிய அத்வைத சாம்ராஜ்யத்தைப் பாடுகிறார்.

## முத்துசாமி தீக்ஷிதர்

முத்துசாமி தீக்ஷிதர் "ப்ருஹ தம்பா" (1) என்னும் கீர்த்தனத்தில், 'ப்ரம்ஹாண்ட ஸ்வரூப ஜகதம்பா' என்னுமிடத்திலும் (2) "ராமசந்த்ரேண ஸம்ரக்ஷிதோ'ஹம்" என்ற கீர்த்தனத்தில், 'ரமா பாரதீ கௌரீ ரமண ஸ்வரூபேண' என்னுமிடத்திலும், (3) "ஸ்ரீ விச்வநாதம் பஜே'ஹம்" என்னும் கீர்த்தனத்தில், 'விரிஞ்சி விஷ்ணு ரூப மயம்' 'ஸ்ருஷ்டி ஸ்திதி விலய திரோதாநா நுக்ரஹ கரணம்' என்னுமிடங்களிலும், (4) "மங்கள தேவதயா" என்னும் கீர்த்தனத்தில், 'ஜங்கம ஸ்தாவர லோக ஜனன ஸ்திதி லயயா' என்னுமிடத்திலும், மும்மூர்த்தி ஸ்வரூபமாயும் ப்ரம்ஹாண்ட ஸ்வரூபமாயுமுள்ள வஸ்து ஒன்றே என்பதைத் தெரிவிக்கிறார்.

மற்றும், (5) 'ப்ரஹதீச் [illegible] ரக்ஷது மாம்" என்னும் கீர்த்தனத்தில், 'ப்ராந்தி ஸ[illegible] ஞ்சா தீதோ' என்னுமிடத்திலும், (6) "ஸ்ரீ வி[illegible]தம் பஜ ரே" என்னும் கீர்த்தனத்தில், 'பஞ்சீக்ருத பஞ்ச மஹா பூத ப்ரபஞ்சாதி மோஹகர லிங்கம்" என்னுமிடத்திலும், (7) "குமார ஸ்வாமினம்" என்னும் கீர்த்தனத்தில், 'பரமாத்மக விச்வகரம், ப்ராந்திஹரம், மூலாஜ்ஞானஹரம்" என்னு மிடங்களிலும், (8) "விச்வநாதம் பஜே'ஹம்" என்னும் கீர்த்தனத்தில், 'நச்வர ப்ரபஞ்சா திஷ்டானம்" என்னுமிடத்திலும், (9) ஸ்ரீ "நாதாதி குருகுஹோ ஜயதி" என்னும் கீர்த்தனத்தில், 'மாயா மய விச்வா திஷ்டானே, மாயா கார்ய கலன ஹீனே, மாயா கபளித ப்ரஹ்ம ரூபோ" என்னுமிடங்களிலும், (10) "ஸ்ரீ மீனாக்ஷி கௌரி ராஜ ச்யாமளே" என்னும் கீர்த்தனத்தில், "பூமி ஜலாக்ன் யனில ககனபூத பஞ்சகா தாரே" என்னுமிடத்திலும், (11) "சாயா வதீமரனந்த வல்லீம்" என்னும் கீர்த்தனத்தில், 'மாயா மய விச்வோத்பத்தி கரீம்' என்னுமிடத்திலும், (12) "ஸ்ரீ மங்களாம்பிகாம்" என்னும் கீர்த்தனத்தில், 'நாம ரூபாத்மிகாம்' என்னுமிடத்திலும், (13) "பஞ்சபூத கிரணாவளிம்" என்னும் கீர்த்தனத்தில், 'பஞ்சீக்ருத ப்ரபஞ்சாதீதம்' என்னுமிடத்திலும், (14) "மாயே த்வம் யாஹி" என்னும் கீர்த்தனத்தில், 'மாயே த்வம் யாஹி மாம் பாதிதும் காஹி' என்[illegible]த்திலும், (15) "ஸ்ரீ கமலாம்பிகாயை" என்னும்

கீர்த்தனத்தில், 'சரா சராதி கல்பனையை' என்னுமிடத்திலும், (16) "பால ஸுப்ரம்ஹண்யம் பஜே" என்னும் கீர்த்தனத்தில், 'பஞ்சபூத மய மாயா மோஹம்' என்னுமிடத்திலும், (17) "ச்யாமளாங்கி மாதங்கி" என்னும் கீர்த்தனத்தில், 'நாம ரூப ப்ரபஞ்ச விஹாரிணி' என்னுமிடத்திலும், (18) "ஹரியுவதீம்" என்னும் கீர்த்தனத்தில், 'நாம ரூப ப்ரகாசினீம்' என்னுமிடத்திலும், (19) "மானஸ குருகுஹ" என்னும் கீர்த்தனத்தில், 'மாயா மய ஹ்ருத்தாபம் த்யஜ ரே' என்னுமிடத்திலும், (20) "த்யாக ராஜோ விராஜதே" என்னும் கீர்த்தனத்தில், 'வாகர்த்த மய புவன ராஜோ' என்னுமிடத்திலும், (21) "குரு குஹஸ்ய தாஸோ'ஹம்" என்னும் கீர்த்தனத்தில், 'ஜனன வ்யாதி ரூப ப்ரபஞ்சாஜ்ஞான கார்ய' என்னுமிடத்திலும், (22) "ஆர்யா மபயாம்பிகாம்" என்னும் கீர்த்தனத்தில், 'அவித்யா கார்ய கலனும்' என்னுமிடத்திலும், (23) "பாஹி மாம் ரத்னசல நாயக" என்னும் கீர்த்தனத்தில், 'அவித்யோதய வியதாதி ப்ரபஞ்ச விகல்பாதீத' என்னுமிடத்திலும், தோன்றுவதெல்லாம் மாயா மயமான பஞ்ச பூதங்களின் நாம ரூப விகாரங்களே என்று தெரிவிக்கிறார்.

தவிரவும், (24) "மீனாக்ஷி மே முதம் தேஹி" என்னும் கீர்த்தனத்தில், 'மான மாத்ரு மேயே' என்னுமிடத்திலும், (25) "ஞானம்பிகே பாலய மாம்" என்னும் கீர்த்தனத்தில், 'ஜ்ஞாத்ரு ஜ்ஞான ஜ்ஞேயாத்மிகே' என்னுமிடத்திலும், அறிவு, அறிபவன், அறியப்படுவது என்னும் மூன்றும் பரதேவதையே என்று சொல்லுகிறார். (26) "கமலாம்பிகே" என்னும் கீர்த்தனத்தில், 'விகளேபர முக்திதான நிபுணே' என்னுமிடத்தில் மோக்ஷதசையில் சரீரமில்லை என்கிற விதேஹ முக்தியை தெரிவிக்கிறார்.

"ஸ்ரீ நீலோத்பலநாயிகே" (27) என்னும் கீர்த்தனத்தில், 'ஸங்கல்ப விகல்பாத்மக சித்த வ்ருத்தி ஜாலே' என்னுமிடத்தில், எல்லாவிதமான ஞான ஸ்வரூபமும் அம்பிகையே என்று தெரிவிக்கிறார்.

"குரு குஹாய பக்தானுக்ரஹாய" (29) என்னும் கீர்த்தனத்தில், 'குணாதீதாய, ரூபரஹிதாய, ஸச்சிதானந்த [illegible]பாய, விகளேபர கைவல்ய தானாய' என்னுமிடத்தில் [illegible]

## முத்துசாமி தீக்ஷிதர்

முத்துசாமி தீக்ஷிதர் "ப்ருஹத் தம்பா" (1) என்னும் கீர்த்தனத்தில், 'ப்ரம்ஹாண்ட ஸ்வரூப ஜகதம்பா' என்னுமிடத்திலும் (2) "ராமசந்த்ரேண ஸம்ரக்ஷிதோ'ஹம்" என்ற கீர்த்தனத்தில், 'ரமா பாரதி கௌரீ ரமண ஸ்வரூபேண' என்னுமிடத்திலும், (3) "ஸ்ரீ விச்வநாதம் பஜே'ஹம்" என்னும் கீர்த்தனத்தில், 'விரிஞ்சி விஷ்ணு ரூப மயம்' 'ஸ்ருஷ்டி ஸ்திதி விலய திரோதாநா நுக்ரஹ கரணம்' என்னுமிடங்களிலும், (4) "மங்கள தேவதயா" என்னும் கீர்த்தனத்தில், 'ஜங்கம ஸ்தாவர லோக ஜனன ஸ்திதி லயயா' என்னுமிடத்திலும், மும்மூர்த்தி ஸ்வரூபமாயும் ப்ரம்ஹாண்ட ஸ்வரூபமாயுமுள்ள வஸ்து ஒன்றே என்பதைத் தெரிவிக்கிறார்.

மற்றும், (5) 'ப்ரஹதீச் [illegible] ரக்ஷது மாம்" என்னும் கீர்த்தனத்தில், 'ப்ராந்தி ஸ[illegible] எங்கும் [illegible]ஞ்சா தீதோ' என்னுமிடத்திலும், (6) "ஸ்ரீ வி[illegible]தம் பஜ ரே" என்னும் கீர்த்தனத்தில், 'பஞ்சீக்ருத பஞ்ச மஹா பூத ப்ரபஞ்சாதி மோஹகர லிங்கம்" என்னுமிடத்திலும், (7) "குமார ஸ்வாமினம்" என்னும் கீர்த்தனத்தில், 'ப்ரமாத்மக விச்வகரம், ப்ராந்திஹரம், மூலாஜ்ஞானஹரம்" என்னுமிடங்களிலும், (8) "விச்வநாதம் பஜே'ஹம்" என்னும் கீர்த்தனத்தில், 'நச்வர ப்ரபஞ்சா திஷ்டானம்" என்னுமிடத்திலும், (9) ஸ்ரீ "நாதாதி குருகுஹோ ஜயதி" என்னும் கீர்த்தனத்தில், 'மாயா மய விச்வாதிஷ்டானே, மாயா கார்ய கலன ஹீனே, மாயா கபளித ப்ரஹ்ம ரூபோ" என்னுமிடங்களிலும், (10) "ஸ்ரீ மீனாக்ஷி கௌரி ராஜ ச்யாமளே" என்னும் கீர்த்தனத்தில், "பூமி ஜலாக்ன் யனில ககனபூத பஞ்சகா தாரே" என்னுமிடத்திலும், (11) "சாயா வதிமர்னந்த வல்லீம்" என்னும் கீர்த்தனத்தில், 'மாயா மய விச்வோத்பத்தி கரீம்' என்னுமிடத்திலும், (12) "ஸ்ரீ மங்களாம்பிகாம்" என்னும் கீர்த்தனத்தில், 'நாம ரூபாத்மிகாம்' என்னுமிடத்திலும், (13) "பஞ்சபூத கிரணவளிம்" என்னும் கீர்த்தனத்தில், 'பஞ்சீக்ருத ப்ரபஞ்சாதீதம்' என்னுமிடத்திலும், (14) "மாயே த்வம் யாஹி" என்னும் கீர்த்தனத்தில், 'மாயே த்வம் யாஹி மாம் பாதிதும் காஹி' என்[illegible]த்திலும், (15) "ஸ்ரீ கமலாம்பிகாயை" என்னும்

கீர்த்தனத்தில், 'சரா சராதி கல்பனையை' என்னுமிடத்திலும், (16) "பால ஸுப்ரம்ஹண்யம் பஜே" என்னும் கீர்த்தனத்தில், 'பஞ்சபூத மய மாயா மோஹம்' என்னுமிடத்திலும், (17) "ச்யாமளாங்கி மாதங்கி" என்னும் கீர்த்தனத்தில், 'நாம ரூப ப்ரபஞ்ச விஹாரிணி' என்னுமிடத்திலும், (18) "ஹரியுவதீம்" என்னும் கீர்த்தனத்தில், 'நாம ரூப ப்ரகாசினீம்' என்னுமிடத்திலும், (19) "மானஸ குருகுஹ" என்னும் கீர்த்தனத்தில், 'மாயா மய ஹ்ருத்தாபம் த்யஜ ரே' என்னுமிடத்திலும், (20) "த்யாக ராஜோ விராஜதே" என்னும் கீர்த்தனத்தில், 'வாகர்த்த மய புவன ராஜோ' என்னுமிடத்திலும், (21) "குரு குஹஸ்ய தாஸோ'ஹம்" என்னும் கீர்த்தனத்தில், 'ஜனனவ்யாதி ரூப ப்ரபஞ்சாஜ்ஞான கார்ய' என்னுமிடத்திலும், (22) "ஆர்யா மபயாம்பிகாம்" என்னும் கீர்த்தனத்தில், 'அவித்யா கார்ய கலனும்' என்னுமிடத்திலும், (23) "பாஹி மாம் ரத்னசல நாயக" என்னும் கீர்த்தனத்தில், 'அவித்யோதய வியதாதி ப்ரபஞ்ச விகல்பா தீத' என்னுமிடத்திலும், தோன்றுவதெல்லாம் மாயா மயமான பஞ்ச பூதங்களின் நாம ரூப விகாரங்களே என்று தெரிவிக்கிறார்.

தவிரவும், (24) "மீனாக்ஷி மே முதம் தேஹி" என்னும் கீர்த்தனத்தில், 'மான மாத்ரு மேயே' என்னுமிடத்திலும், (25) "ஞானம்பிகே பாலய மாம்" என்னும் கீர்த்தனத்தில், 'ஜ்ஞாத்ரு ஜ்ஞான ஜ்ஞேயாத்மிகே' என்னுமிடத்திலும், அறிவு, அறிபவன், அறியப்படுவது என்னும் மூன்றும் பரதேவதையே என்று சொல்லுகிறார். (26) "கமலாம்பிகே" என்னும் கீர்த்தனத்தில், 'விகளேபர முக்திதான நிபுணே' என்னுமிடத்தில் மோக்ஷதசையில் சரீரமில்லை என்கிற விதேஹ முக்தியை தெரிவிக்கிறார்.

"ஸ்ரீ நீலோத்பலநாயிகே" (27) என்னும் கீர்த்தனத்தில், 'ஸங்கல்ப விகல்பாத்மக சித்த வ்ருத்தி ஜாலே' என்னுமிடத்தில், எல்லாவிதமான ஞான ஸ்வரூபமும் அம்பிகையே என்று தெரிவிக்கிறார்.

"குரு குஹாய பக்தானுக்ரஹாய" (29) என்னும் கீர்த்தனத்தில், 'குணாதீதாய, ரூபரஹிதாய, ஸச்சிதானந்த [illegible]பாய, விகளேபர கைவல்ய தானாய' என்னுமிடத்தில் [illegible]

நிர்குண ஸ்வரூபமும் விதேஹ முக்தியும் சொல்லப்பட்டிருக்கிறது. (30) "தியாகராஜாய நமஸ்தே" என்னும் கீர்த்தனத்தில், 'ஸகள நிஷ்கள ஸ்வரூப ஸச்சிதானந்த ஸாதக வ்யாப்தயே, விகல்ப பேத முக்தயே' என்னுமிடங்களில் ஸகுணமும் பரமாத்மாவே, நிர்க்குணமும் பரமாத்மாவே, அவரே ஒருவித பேதமுமற்றவர் என்பதைச் சொல்லுகிறார்.

(31) "ஆனந்தேச்வரேண ரக்ஷிதோ'ஹம்" என்னும் கீர்த்தனத்தில், 'அவயவ த்ரயாதீதேந, அவஸ்தாத்ரய ஸாக்ஷிணா, பஞ்சகோச வ்யதிரிக்தேந, ச்ரவண மனன நிதித்யாஸன ஸமாதி நிஷ்டா பரோக்ஷானுபவ ஸ்வமாத்ராவசேஷித ப்ரகாசமான மஹேச்வரேண' என்னு மிடத்திலும், (32) "ஸ்ரீ கமலாம்பிகயா கடாக்ஷிதோ'ஹம்" என்னும் கீர்த்தனத்தில், 'ஸச்சிதானந்த பரிபூர்ண ப்ரம்ஹா'ஸ்மி' என்னுமிடத்திலும் அத்வைத சாஸ்திரத்தின் ஸித்தாந்தத்தைப் பூர்ணமாய்த் தெரிவிக்கிறார். (33) "மானஸ குருகுஹரூபம்" என்னும் கீர்த்தனத்தில், 'ஸத்வ குணோபாதி ஸஹித ஸதாசிவம்', 'ஸ்வாவித்யா ஸமேத ஜீவோத்பவம்', என்னுமிடங்களில் ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் ஈசுவரத்வமும் ஜீவத்வமும் உபாதியா லேற்பட்டவையே யன்றி, ஸ்வபாவமாகவுள்ளதல்ல என்பதைத் தெரிவிக்கிறார்.

"ஸந்தான ராமஸ்வாமினம்" (34) என்னும் கீர்த்தனத்தில், 'ஸகுண நிர்குண ரூபம்' என்னுமிடத்திலும், (35) "தியாகராஜா தன்யம் ந ஜானே" என்னும் கீர்த்தனத்தில், 'ஸத்ய ஞானானந்த ரூபிணோ' என்னுமிடத்திலும், 'பரமாத்மாவே ஸத்யம், அவரே ஞான ஸ்வரூபீ, ஆனந்தரூபீ' என்றும், (36) "குருகுஹாதன்யம் ந ஜானே'ஹம்" என்னும் கீர்த்தனத்தில், 'அனந்தகோடி ப்ரம்ஹாண்டாகார சிவாதிதராந்த ஸ்வரூபிணோ' என்னுமிடத்தில், ஆகமத்தில் சொல்லப்படும் 36 தத்வங்களும் பரமாத்மாவின் ஸ்வரூபமே என்றும் அத்வைத தத்வத்தைத் தெரிவிக்கிறார்.

"ஸ்ரீ நீலோத்பலநாயிகே" (37) என்னும் கீர்த்தனத்தில், 'ஆனந்தானுபவே' என்னுமிடத்திலும், (38) "ஸரஸ்வதி மனோஹரி" என்னும் கீர்த்தனத்தில், 'பரமாத்வைத ஸ்வரூபிணி' என்னுமி[illegible] (39) "ஆனந்த நடன ப்ரகாசம்" என்னும் கீர்த்த

னத்தில் 'அப்ரமேய மத்வைத ப்ரதிபாத்யம்' என்னுமிடத்திலும், (40) "ஸ்ரீ குருமூர்(த்)தே" என்னும் கீர்த்தனத்தில், 'ஆத்மேச்வர பேதா வரண நிவ்ருத்தே" என்னுமிடத்திலும், (41) "ஸ்ரீ குருகுஹஸ்ய தாஸோ'ஹம்" என்னும் கீர்த்தனத்தில், 'நோ சேத் சித் குருகுஹ ஏவாஹம்' என்னுமிடத்திலும், (42) "த்யாகராஜா தன்யம் ந ஜானே" என்னும் கீர்த்தனத்தில், 'பரமாத்வைத ஸ்வாத்மானந்த ரூபிணே, த்ரித்வ பரிச்சேத ராஹித்ய த்ரைபத பரமாத்வைத ரூபிணே, த்வம் பதார்த்த சோதன சேஷித தத்பத லக்ஷ்யார்த்த ஸ்வரூபிணே' என்னுமிடத்திலும், (43) "குருகுஹா தன்யம் ந ஜானே" என்னும் கீர்த்தனத்தில், 'ஜஹ தஜ ஹல் லக்ஷணயா ஜீவை க்யாத்மனே' என்னுமிடத்திலும், (44) "கமலாம்பிகாயை" என்னும் கீர்த்தனத்தில், 'சிதானந்த பூர்ண கனையை" என்னுமிடத்திலும், (45) "ஸ்ரீ வாஞ்சநாதம்" என்னும் கீர்த்தனத்தில், 'ஜீவேச ஜகத் பேதாபஹம்' என்னுமிடத்திலும், (46) "ஸ்ரீ கமலாம்பி கயா கடாக்ஷிதோ'ஹம்" ,என்னும் கீர்த்தனத்தில், 'ஸச்சிதானந்த பரிபூர்ண ப்ரஹ்மா'ஸ்மி' என்னுமிடத்திலும், (47) "ஸ்ரீ சங்கராசார்யம்" என்னும் கீர்த்தனத்தில், 'பரமாத்வைத ஸ்தாபன ஸீலம்' என்னுமிடத்திலும், (48) "மாரகோடி லாவண்ய மாம் பாலய" என்னும் கீர்த்தனத்தில், 'பரமாத்வைத தாத்பர்யாநுஸந்தான பர' என்னுமிடத்திலும், (49) "சங்க சக்ர கதா பாணிம்" என்கிற கீர்த்தனத்தில், 'ஸஜாதி யாதி ரஹிதம்' என்னுமிடத்திலும், (50) "ஆனந்த நடன ப்ரகாசம்" என்னும் கீர்த்தனத்தில், 'அப்ரமே யாத்வைத ப்ரதிபாத்யம்' என்னுமிடத்திலும், (51) "ஸ்ரீ சூலினீம்" என்கிற கீர்த்தனத்தில், 'ஜீவேச்வரைக்ய சாலினீம்' என்னுமிடத்திலும், ஸ்ரீ தீக்ஷிதரவர்கள் ஜீவப்ரம்ம ஐக்யமாகிற அத்வைத தத்வத்தை வேதாந்த சாஸ்திர முறையாகவே விளக்கி யிருக்கிறார்.

## ஸ்ரீ பத்ராசல ராமதாஸ்

"கோல் கொண்டா" அரசனிடம் இவரது மாமன் மந்திரியா யிருந்தபொழுது, இவர் கி. பி-1611-க்கும் 1687-க்கும் மத்தியில் உத்யோகம் செய்தவர்.

(1) "அந்தா ராமமயம்" என்னும் கீர்த்தனத்தில் ... ந்தந் தா ராமமயம், அந்தரங்கமுனன் ஆத்மா ராமுடு

விந்துலுஸலுபக....பிரஹ்மலுமொதலுக..நதாலுவனம்புலு" என்னு மிடத்திலும், (2) "தாரகமந்த்ரமு கோரின தொரிகெனு" என்னும் கீர்த்தனத்தில் "அன்னி ரூபுலையுன்ன பராத்முனிளு மஹாத்மு" என்னுமிடத்திலும், (3) "ஜாநகீரமணா" என்னும் கீர்த்தனத்தில், "எந்து ஜூசின நீது அந்தமே கானவச்செ" என்னுமிடத்திலும், (4) "எச்சட ஜூசின் ராமுடச்சட நுன்னாடு" என்னும் கீர்த்தனத்தில், "தானொக்கடனந்த ரூப முல நொப்பி யுன்னாடு" என்னுமிடத்திலும், ஒரே வஸ்துவே எல்லாமாய் நிறைந்திருக்கிறதென்னும் அத்வைதத்தை வெளியிடுகிறார். முன் சொன்ன (4) "எச்சட்ஜூசின" என்னும் கீர்த்தனத்திலேயே, "மும் மூர்த்துல நாதி மூலமை நாடு" என்னுமிடத்தில் மும்மூர்த்திகளுக்கும் மூலபூதமானவஸ்து ஒன்று இருக்கிறதென்பதைக் குறிப்பிடுகிறார். (5) "ராமபஜன சேயுடி" என்னும் கீர்த்தனத்தில், "நீரு புக்குலு தருவுலு ப்ரமலு ஸாரமுலேனி ஸம்ஸாரமு ஸம்ஸார பதவுலு மாய ஜாலவு காரடம்புலு யெண்டமாவுலு" என்னுமிடங்களிலும், 'எல்லாம் மாயை, செப்பிடு வித்தைக்காரன் வித்தைபோல் பொய்' யென்பதையும், 'நீர்மேற் குமிழிபோல் க்ஷணத் தோற்ற' மென்பதையும் தெரிவிக்கிறார்.

"ஆராதயாமி" (6) என்னும் மானஸ பூஜா கீர்த்தனத்தில், "ஸ்வவிஜ்ஞான ஸ்வாநுபவ முனந்து சித்ர விசித்ர மாயா கல்ப ரஹித சித் ரூப ப்ரஜ்ஞான கன அசலத்வ அமரத்வ அகணிதானந்தர்தி அசலத்வாமரத்வ ஆத்யந்தரஹிதத்வ நிஷ்ப்ரபஞ்சுடநீகு ஸ்வஸ்வரூபஜ்ஞான புஷ்பமு ஜீவ பரமாத்ம ஐக்ய பாவ பாவாதீத வ்யஷ்டி ஸமஷ்ட்யாதி ஸ்ருஷ்டி ரஹித" என்னுமிடங்களிலும், (7) "தரலீபோதாமு" என்னும் கீர்த்தனத்தில், "ஸோஹ மநியெடி கத்திதீவஸி சேதனே பூனி அட்டே மோஹபாசமூல நெல்ல மொதடி கேத்ருஞ்சி" என்னுமிடத்திலும், (8) 'ஆறு கமலமுல மீத நத்புதமை ஸஹஸ்ரார கமலமுமந்துஜேரி" என்னுமிடத்திலும் அத்வைத ஸ்வரூபத்தை விளக்கியிருக்கிறார். இந்த ஸஹஸ்ர தள கமலத்தை வர்ணிப்பது ஸ்ரீ ராம தாஸருடைய கடைசிக் கீர்த்தனமாயிருக்கிறது.

"நருலார செடி பொய்யேரு" (9) என்னும் கீர்த்தனத்தில் "ப்ரும்ம ...மகமனி தர்மமுலுண்டக..........ப்ரும்ம மிதியதி யநி ...ன்னுமிடத்தில், ப்ரும்மம் அத்விதீயமான ஒரே

பொருளென்றும், "ஸோமுடே ராமுடு வேமாருபல்கின ஏமாரு கொன்ருரு மீரு, வாரித்தருவே ரன்னகாரு, ஸோமுடே பத்ராத்ரி ராமுடவனி பஜியிஞ்சண்டி மீயப்பதோடு" என்னுமிடத்தில் சிவனே விஷ்ணு என்னும் தத்வத்தை "உன் அப்பனுணை" என்று ஸத்யம் செய்து சொல்லுகிருர். "ஆயிரம் சொன்னுலும் சிவனும் விஷ்ணுவும் வேறென்பார் ஏமாந்தவர்களே, அவ் விருவரும் வேறென்பதில்லை" என்கிருர் பத்ராசல ராமதாஸர்.

## புரந்தர தாஸர்

மத்வ மதத்தின் கொள்கைகளே ஸரியான கொள்கைகளென்றும் மத்வ மதத்தை விடவேண்டா மென்றும் சொல்புவரும், அத்வைத மதத்தை அதிகமாய்க் கண்டிப்பவருமான புரந்தர தாஸரும் கூட அவருடைய கீர்த்தனங்களில் சில இடங்களில் பரவசமாய் அத்வைத ஸித்தாந்த தத்வத்தை வெளிப்படுத்துகிருர். உண்மைப் பக்தியின் பயனே அத்வைதத்தின் அநுபவமன்ருே! உண்மையான பக்திமான்களில் புரந்தர தாஸர் நிகரற்றவர். அந்த பக்தியின் பரிபாகம் அவரைத் தம்மை யறியாமலே அத்வைத அநுபவத்தில் கொண்டு விட்டுவிட்டது.

"மனவென்ன மாதுளேது" (1) என்னும் கீர்த்தனத்தில் "தேஹஸம்பந்திகளாதவரெல்லா மாயமா சதி சிக்கி மாயப்ரபஞ்சதலு பத்தவாகிதே" என்னுமிடத்தில் ப்ரபஞ்சம் மாயா மயம் என்பதைக் குறிப்பிடுகிருர். (2) "அணுவாகபல்ல" என்று ஆரம்பிக்கும் 1 ஸுளாதியில் "ஸர்வ விஷ்ணு வாஸுதேவ ஹரி பரிபூர்ண புரந்தர விட்டல" என்னுமிடத்திலும், (2) "ஸாமான்ய வல்ல ஸ்ரீ ஹரிஸேவ" என்னும் கீர்த்தனத்தில் "ஸர்வவு அவநெந்து" 2 என்னுமிடத்திலும், (3) "அல்லிநோடலு ராம" என்னும் கீர்த்தனத்தில் "ஈவேள

1 ஸங்கீதத்திலுள்ள ஏழு தாளங்களுக்கு ஏழு சரணமும் ஒவ்வொரு சரணத்திற்கும் வெவ்வேருன ஏழு ராகங்களுடைய ஒரு உருப்படிக்கு ஸுளாதி யென்று பெயர்.

2 ஸர்வத்ர ஸ்ரீ ஹரி வ்யாப்த னெந்து ஸர்வேச்வரனெந்து ஸர்வாந்தர்யாமி ஈச்வர னெந்து ஸர்வவு அவனெந்து ஸர்வமூர்த்தி ஸ்ரீ புரந்தர விட்டலன ஸர்வுதாத் யாணிசிகர்வகளெய ,ஸரு பே,ாமான்யவல்ல.

நரநாகி யிரபார தெந்து தேவ ஸ்ரீராமசந்த்ர ஜகவெல்ல தாஞத" என்னுமிடத்தில், 'எல்லா வஸ்துக்களும் ஒரே பரமாத்மா' என்னும் அத்வைதத்தை வெளிப்படுத்தி யிருக்கிறார்.

"கண்ணிஞெளகெ நோடோ" (4) என்னும் கீர்த்தனத்தில் "ஆதார மொத லாத ஆறு சக்ர ஸோதி சிபிடபேகு ஈஷணமூரு ... ....அல்லிபேதிசி ப்ரம்மனசேரு" என்னுமிடத்தில், ஆறு ஆதார சக்ரங்களையும் பேதித்து பரமாத்மாவை யடையும் ஜீவன்முக்தியை உபதேசித்திருக்கிறார். (5) "த்ரிசூல டமருக" என்னும் ஸுளாதியில், "த்ரிசூல டமருக பஸித ருத்ராக்ஷிய பசுவாஹனநாமதொாந்துமூருதி குசலத ஜபமணி மாலெ சதுர்முக வஸுதய ஸ்ருஜி ஸுவதொாந்து மூருதி நொஸநல்லி சிரிநாம சங்கசக்ர கதெ பிஸஜவ பிடிதிஹ தொாந்து மூருதி எனவு. வேதானந்த கோடிவாசியலு ஸந்தோஷ திந்த நோடுதிஹ தொாந்துமூருதி" என்னுமிடத்திலும், "ஏகமேவ மூருதி லோகவல்ல ஈதனமூருதி ஏகமேவ புரந்தர விட்டலன மூருதி" என்னுமிடத்திலும், 'சிவன் பிரம்மா விஷ்ணு என்னும் இம்மூவரும் ஒரே பரமாத்மாவின் வெவ்வேறு உருவங்கள்' என்றும், 'உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களுமே அவனுடைய உருவங்கள்' என்றும் இம்மூர்த்திகளுக்கெல்லாம் சாக்ஷியான ஒரு துரிய ஞானமூர்த்தி ஒன்று உண்டு என்றும் அதுவே ஏகமூர்த்தி என்றும் உள்ள பரிசுத்தமான அத்வைத தத்வத்தைக் கோஷிக்கிறார்.

## ஸ்ரீ கோபால க்ருஷ்ண பாரதி

நந்தன் சரித்திரத்தில் (1) "திருநாளைப் போவான் சரித்திரம்" என்னும் பாட்டில், "பூத மயாதிகளாகிய வுலகம் பொய் யிதுமெய் யிதுவல்லவென் றறிந்திடும்" என்னுமிடத்திலும், (2) "சிவலோகநாதனைக் கண்டு" என்னும் பாட்டில், "கற்பிதமான ப்ரபஞ்ச மிதைக் கானல் ஜலம்போலே யெண்ணி" என்னுமிடத்திலும், (3) "பக்தி பண்ணிக்கொண்டிருந்தால்" என்னும் கீர்த்தனத்தில், "கற்பனையாமி ப்ரபஞ்சம் சொப்பனம்போலொப்பி மிரும்" என்னுமிடத்திலும், (4) "நந்தன் சிதம்பரம் வருகிறார்" என்றும் இலாவணியில், "அநாதி மாயா கல்பிதமிந்த நாமரூப ப்ரபஞ்சமெல்லாம்" என்னுமிடத்திலும், (5) "[illegible] படித்ததும்" என்னும் தண்டகத்தில், "ஜகத்தைப்

பொய்யாய்த் தள்ளுவரே" என்னுமிடத்திலும், (6) "ஜய ஜக தீச" என்னும் கீர்த்தனத்தில் "அபாரமாகிய ஸம்ஸாரம், ஜகதீச் வர மாயா விலாஸ கல்பித மிந்த ஜகம்" என்னுமிடத்திலும், (7) "தரிசனம் கண்டார்க்கு" என்னும் பாட்டில் "சொப்பன மென் றிவ்வுலகம் தோன்றி வரும்" என்னுமிடத்திலும், ப்ரபஞ் சம் மாயை யென்றும், ஸ்வப்னம், கானல் ஜலம் இவைகள்போல் பொய்யென்றும் சொல்லியிருக்கிறார்.

"ஜய ஜகதீச" (8) என்னும் கீர்த்தனத்தில் "அநேக ஸஞ் சித வாசனைகள், சிவோஹ'மென்கிற பாவனையால் நிவாரணம் பண்ணும் பெரியோர்கள்" என்னுமிடத்தில், ஜீவாத்ம பரமாத்ம ஐக்கியமாகிற அத்வைத பாவனையையும் சொல்லுகிறார்.

## முத்துத்தாண்டவர்

"என்னையெனக்குத் தெரியச்சொல்லுவாய்" (1) என்னும் பாட்டில் "பூதமும் நானல்ல, பொறியும் நானல்ல......போதக் கருவி புறம்பல்லவுள்ளல்ல ஒளியல்ல இருளல்ல" என்னுமிடத்தி லும், (2) "சித்தரின்னமுண்டோ" என்னும் பாட்டில், "செப்பிடு வித்தைகளெப்படி யுலகத்தில் உடலே செப்பாக உயிரே பந்தாக ........செப்பிடு வித்தைகள் விளையாடினை பின்பு செப்புமில்லை பந்துமில்லை" என்னுமிடத்திலும், (3) "ஆடினதெப்படியோ" என்னும் பாட்டில், "ஒன்றல்ல இரண்டல்ல........அன்றல்ல இன் றல்ல ஆதியந்தமல்ல பூதங்களல்ல புறம்பல்ல வுள்ளல்ல" என்னு மிடத்திலும், (4) "தூக்கிய பாதத்தி ஞேக்கொளிகண்டு" என்னுமிடத்தில் பார்ப்பதெல்லா மதுவாகவே தோணும், தத்து வமெல்லாம் தலைதடுமாறும், தானே நாமான விடங் கண்டு தேறும்" என்னுமிடத்திலும், உலகம் தோற்றமென்றும் தோற் றம் இல்பொருளென்றும் உண்மையாய் உலகெல்லாம் பரமாத் மாவென்றும் அத்வைத சித்தாந்தத்தை வெகு ஸுலபமாக தெரிவிக்கிறார். "கண்டாயோ மனமே" (5) என்னும் பாட்டில் "அண்ட முழுவதும் ப்ரும்மமென்றும் தெரிவிக்கிறார். அந்தப் பாட்டிலேயே "செத்தக் கயிறுதனில் புற்றுப்பாம்பு பிரமை யுற்று தெளிந்து மகிழ்பெற்ற திரள்பேரின்பம்" என்று தெளி வாய் அத்வைத மோக்ஷத்தைக் கூறுகிறார். கடைசியில் (6) "கலந்துகொள்வேன்" என்னும் பாட்டில் "தா[illegible] [illegible]னது

நானதுவாக சொல்லற்கரியதோர் நல்லுறவினில்'' என்னுமிடத்தில், 'மோக்ஷத்திலுள்ள கலப்பென்பது வேற்றுமையற்று அதுவாயிருப்பதே' என்பதைத் தெளிவுபடுத்துகிறார். (7) ''கண்டவர் விண்டிலரே யநுதினம் விண்டவர் கண்டிலரே'' என்னும் கீர்த்தனத்தில், 'அத்வைதாநுபவம் வாக்குக் கெட்டாதது, வாயால் பேசுபவர் அநுபவிகளல்லர்' எனப் பாடுகிறார்.

## ஸ்ரீ தீர்த்த நாராயணஸ்வாமிகள்

'ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணி'யில் (1) ''ஹரிமேகரஸாக்ருதி மதுநா'' என்னும் கீர்த்தனத்தில்,''மருதல ஸலிலம் யத்வத் அபோதாத்'' என்னுமிடத்தில், 'ஸகலமும் கானல் ஜலம்போல் அஜ்ஞானத்தினுல் ஏற்பட்ட பொய்த்தோற்றமே' என்பதைத் தெரிவிக்கிறார். ஆரம்பத்திலேயே (2) ''மங்களாலய'' என்னும் கீர்த்தனத்தில், ''ஆனந்த போத ஸ்வரூப'' என்னு மிடத்திலும், (3) ''அயம் ஹி பரமாத்மா பரமப்ரேமாஸ்பததயா'' என்னும் கத்யத்தில் ''பரமானந்தகன'' என்னுமிடத்திலும், (4) ''பால கோபால க்ருஷ்ண'' என்னும் கீர்த்தனத்தில் ''ஸத்யாகண்ட போதானந்த'' என்னுமிடத்திலும், மற்றும் ''ஆனந்தமகண்டிதம், விஜ்ஞானகனம், நிர்விசேஷ நிரந்தர நிர்மலானந்தம், போதரூபானந்தம், ஸ்வானந்த போதாம்ருத மய புருஷம், ப்ரதிபாவபுஷம்'' என்னும் அநேக விடங்களில் பேதமற்ற ஸச்சிதானந்த ஸ்வரூபமே பரமாத்மா வென்பதைத் தெரிவிக்கிறார்.

''பாலகோபால மாமுத்தர'' (5) என்னும் கீர்த்தனத்தில், ''தத்ஹி த்வமேவாஸி, தத் ஹி த்வமேவாஸி, தத் ஸர்வமேதத் த்வமேவாஸி நூநம்'' என்னுமிடத்திலும் (6) 7-வது தரங்கத்தில் ''ப்ரம்மாநுபூதிரஸிகாம்'' என்னும் ச்லோகத்திலும், ''ஏவம் க்ருஷ்ணாத்ம தத்வஜ்ஞாః க்ருஷ்ணப்ரம்மாத்மநா ஸ்திதாః'' என்னுமிடத்திலும், ''தேஜோபதிஷ்ட மத்வைதம்'' என்னுமிடத்திலும், (7) ''மாதவ மாமவ'' என்னும் கீர்த்தனத்தில், ''ஸத்ய சித் அத்வய லக்ஷண ஸுபகபாஜோ'' என்னுமிடத்திலும், மற்றும் (8) ''அத்வயமகண்டிதம்சேஷ ஜகதாதிம்'' (9) ''பரமிஹ பச்யத புருஷம்'' ''கலயே தேவமிஹ ஸுந்தரம்'' ''ம்ருகயத ராதாமாதவம்'' என்னுமிந்த நான்கு கீர்த்தனங்களில் பூராவும் ஜீவாத்ம பரமாத்ம [illegible] தத்வத்தையே வெளியிட்டிருக்கிறார். அத்வைத

மஹாவாக்கியத்தை காரணரூபத்துடன் போதிக்கும் சாந்தோக்ய உபநிஷத்தின் ஆறுவது அத்யாயத்தையே "அத்வைதமகண்டிதம்" என்னும் கீர்த்தனத்தில் பூர்ணமாக பாடியிருக்கிறார்.

## அருணகிரிநாதர்

திருப்புகழில் (1) "ஆசாரவீனக் குதர்க்க" என்னும் பாட்டில், "மாயா விகாரத்தியக் கறுத்தருள்" என்னுமிடத்திலும், (2) "கடாவினடை" என்னும் பாட்டில், "கனவில் விளையாடும் கதைபோலும்" என்னுமிடத்திலும், (3) "தலைவலயத்து" என்னும் பாட்டில் "பொய்ப்ரபஞ்சம்" என்னுமிடத்திலும், (4) "ஒரு வழிபடாது மாயை" என்னும் பாட்டிலும், (5) "நித்தப்பிணி" என்னும் பாட்டில் "பொய் மாயையிலுழல்வேனை" என்னுமிடத்திலும், இந்த ப்ரபஞ்சம் மாயாகல்பித மென்கிறார்.

"இருவர் மயலோ" (6) என்னும் பாட்டில் "சகலவடிவாய்" என்னுமிடத்திலும், (7) "குகையில் நவநாதரும்" என்னும் பாட்டில் "அறிவும் அறியாமையும் கடந்த அறிவு திருமேனி" என்னுமிடத்திலும், (8) "கரைகடல்" என்னும் பாட்டில் "அனுபூதி வடிவனை" என்னுமிடத்திலும், (9) "சுருதியூடு" என்னும் பாட்டில் "சுகமகோததீயாகி.........பருதிகாயில் வாடாது வடவை மூளில் வேகாது" என்னுமிடத்திலும், (10) "பருதியாய்" என்னும் பாட்டில், "வேதாவாய் மாலாய் சிவமான" என்னுமிடத்திலும், (11) "அங்கை மென்குழல்" என்னும் பாட்டில் "நீயாய் நானாய்" என்னுமிடத்திலும் ப்ரம்மஸ்வரூபத்தை வர்ணிக்கிறார்.

"ஆனதஞான" என்னும் பாட்டில் (12) "உலகேழும் யானாக" என்னுமிடத்திலும், (13) "கிராப்பிணி தீர" என்னும் பாட்டில் "ஜீவாத்மஞான ஊராட்சியதான ஓர் வாக்கு" என்னுமிடத்திலும் (14) "அறுகுநுனி" என்னும் பாட்டில் "ஏகபோகமாய் நீயும் நானுமாய்" என்னுமிடத்திலும், (15) "சுருதிமுடி" என்னும் பாட்டில் "அத்துவிதமான பரசுடரொளியதாய் நின்ற நிட்கள சொரூப" என்ற விடத்திலும், (16) "அநித்தமான" என்னும் பாட்டில் "மனோதீத சிவச்சொரூபமா யோகி" என்னுமிடத்திலும், (17) "மூளும் வினைசேர" என்னும் பாட்டில் "நீயின்றி நானின்றி நாடியினி வேறுதானின்றி வாழ்கின்ற" என்னுமிடத்திலும், (18) "ஆனதபிருதிவி" என்னும் பாட்டில்

" ஆருத சுகவெளத் தானுவுடனினிதென்று சேர்வேன் " என்னுமிடத்திலும், (19) " நாவேறு பாமணத்த " என்னும் பாட்டில் "நீவேறெனுதிருக்க, நான்வேறெனுதிருக்க,நேராக வாழ்வதற்கு" என்னுமிடத்திலும், (20) " தேனுந்து முக்கனிகள் " என்னும் பாட்டில் " ஜீவன் சிவச்சொருபமென " என்னுமிடத்திலும், (21) " ஐந்துபூதமும் " என்ற பாட்டில் " சந்த்ர சூரியர்....... ஏக வடிவமதின் சொருபமதாக நிறைவது சிவயோகம் " என்னுமிடத்திலும், (22) " அமலவாயு வோடாத " எனும் பாட்டில் " எனதி யானும் வேருகி எவரும் யாதும் யானுகும் " என்னுமிடத்திலும், (23) " அக்ரமுதலென " எனும் பாட்டில் " அடங்கும் தனிப் பொருளை........எப்பொருளுமான அறிவை...........முடிவிலொன்றென்றிருப்பதனை நிறைவு குறைவொழிவற நிறைந்தெங்கு நிற்பதனை " என்னுமிடத்திலும், (24) " ஆராதனைராடம் பரத்து " என்னும் பாட்டில், " நீநானற வேறின்றி நிற்க " என்னுமிடத்திலும், (25) " தசையுமுதிரமு நிணமொடு " என்னும் பாட்டில் "எனதற நினதற.......ஒரு தனிமையை மறைகளினிறுதி" என்னுமிடத்திலும் அத்வைத ஸ்வரூபத்தை நன்ருக உரைத்திருக்கிருர்.

## பட்டினத்தார்

'கோயில் நான்மணி மாலை'யில் (1) " பேய்த்தேர் போன்று நீப்பரும் உறக்கத்துக் கனவே போன்று நனவு பெயர்பெற்ற மாயவாழ்க்கையை " என்னுமிடத்திலும், " திருச்சுழிமல மும் மணிக்கோவை'யில் (2)"யாவையுமெனக்குப் பொய்யெனத்தோன்றி....சுவராய்த் தோன்றும் துணிவு போன்றனவே " என்னுமிடத்திலும், (3) " மாயைமா மாயையாய பேயினுக்கும் " என்னுமிடத்திலும், (4) " கற்றவர் கருத்தினூற்று நோக்குழி இந்திரஜால முந்து நீள்கனவு " என்னுமிடத்திலும், " திருவிடைமருதூர் மும் மணிக்கோவை"யில் (5) " நானலதொன்றை தானென நினையும் " என்னுமிடத்திலும், (6) " மாயப்படலம் கிறித் தூய ஞானம் " என்னுமிடத்திலும், 'கோயில் திருவகவ'லில் (7) " உலகப்பொய் வாழ்க்கையையுடலையோம்பற்க" என்னுமிடத்திலும், (8) "மாயா விகாரம், நீரிற்குமிழி, நீர்மேலெழுத்து, கண்துயில் கனவில்கண்ட காட்சி, அதனிலும் பொல்லா மாயக்களஞ்சியம்" என்று சொல்லுமிடத்திலும், (9) " மனவழியலைந்திடும் கனவெனும் வாழ்க்

கையும்" என்னுமிடத்திலும், திருவேகம்ப மாலையில் (10) "எழிலுடம்பு எல்லாம் வெளிமயக்கே" என்னுமிடத்திலும், (11) "எல்லாம் விழி மயக்கமே" என்னு மிடத்திலும், திருத்தில்லைக் கட்டளை கலித்துறையில் (12) "பொய் வைத்த சொப்பனமா மன்னர் வாழ்வும் புவியுமெங்கே" என்னு மிடத்திலும், பொதுப் பாட்டில் (13) "நாடிக்கொண்டீசனை" "செகமாயை வந்து மூடிக் கொண்டோம்" என்னு மிடங்களிலும், "பட்டைக்கிழித்து" என்னும் பாடலில் (14) "கன மாயக்கள்ளி" என்னுமிடத்திலும், "மையாடுகண்ணி" என்னும் பாட்டில் (15) "ஐயோ நின்மாயை உருவெளித் தோற்றம்" என்னுமிடத்திலும், 'இவ்வுலகத்தில் தோன்றுவதெல்லாம் மாயை' என்று சொல்லுகிறார்.

மற்றும், கோயில் நான்மணி மாலையில், (16) "எவ்வுலகிலுங் காண்பனவெல்லாம் நீயேயாகி நின்றதோர் நிலை" என்னுமிடத்திலும், (17) "அதுவும் நீயேயாகிநின்றதோர் நிலையே" யென்னு மிடத்திலும், திருக்கழுமல மும்மணிக் கோவையில் (18) "எவரும் நீயே" என்னுமிடத்திலும், (19) "எங்கணும் நிறைந்தயெங் குருநாதா" என்னுமிடத்திலும், (20) "உறைபொருளெங்கணும் நிறைபரி பூர்ணம்" என்னுமிடத்திலும், திருவிடைமருதூர் மும் மணிக் கோவையில் (21) "தோற்றுவதெல்லாம் தன்னிடம் தோற்ற" என்னுமிடத்திலும், 'திருவொற்றியூர் ஒருபா ஒருபது' இல் (22) "அமைத்தலும், அழித்தலும், ஆங்கதன் முயற்சியும், இமைத்தலும், விழித்தலும் ஆகும் நின் இயல்பே" என்னுமிடத்திலும், (23) "மூவிலை ஒரு நாள் சூலமேந்துதல் மூவரும் யான் என மொழிந்தவாறே" என்னுமிடத்திலும், (24) "வையக முழுதும் நின்வடிவெனப்படுமே" என்னுமிடத்திலும், (25) "எங்கும் உள்ளோய்" என்னுமிடத்திலும், திருதில்லைக் கட்டளை கலித்துறையில், (26) கொடுப்பானும் தேகியென்பானும் மேற்கொடாமல் நின்று தடுப்பானு நீயல்லையோ" என்னுமிடத்திலும், (27) பொதுப் பாட்டில், "ஓங்காரமாய்" என்ற விருத்தத்தில் "பதிறுலகும் நீங்காமல் நீங்கி நிறைவா நிறைந்து நிறையுருவாய்" என்னுமிடத்திலும், ஒரே வஸ்து எல்லாமாய் எங்கும் நிறைந்திருக்கிறதென்றும் மும்மூர்த்திகளுக்கும் பேதமில்லையென்றும் அத்வைத சித்தாந்தத்தைத் தெரிவித்திருக்கிறார்.

## இராமலிங்க ஸ்வாமிகள்

மகா தேவ மாலை "சகலமாய்" என்னும் பாட்டில் (1) "சராசரமாய் அல்லவாய் தானே தானாய்" என்னுமிடத்திலும், (2) "ஜகமாகி" என்னும் பாட்டில் "ஜகமாகி ஜீவனாய் ஈசனாகி சதுர்முகனாய் திருமாலாய் அரன் தானாகி" என்னுமிடத்திலும், "விதியாகி" என்னும் பாட்டில், (3) "விதியாகி அரியாகி கிரீசனாகி விளங்கும் மகேச்சுரனாகி விமலமான நிதியருள் சதாசிவனாய்" என்ற விடத்திலும், "மலைமேலும்" என்னும் பாட்டில் (4) "மலைமேலும் கடல்மேலும் மலரின்மேலும் வாழ்கின்ற மூவுருவில் வயங்கும் கோவே" யென்னுமிடத்திலும், "மறை முடிக்கு" என்னும் பாட்டில் (5) "வெள்ளைப் பிறைமுடிக்கும் பெருமானே, துளபமாலை பெருமானே, செங்கமலப் பிரானே,............ இந்த மூவர்க்கும் மேலாய் நின்ற இறையே" என்னுமிடத்திலும், ஒரே வஸ்துவே எல்லாமாயும் மும்மூர்த்திகளாயும் விளங்குகிறதென்னும் அத்வைத தத்வத்தைத் தெரிவிக்கிறார்.

மகாதேவ மாலையில் (6) "மதியணிந்த முடிக்கனியே" என்னும் பாட்டில், "பொய்யுலகில் பொய் சுமந்து புலம்பாநின்றேன்" என்னுமிடத்திலும், "அருளா நான் வேண்டுதல்" என்னும் பாட்டில் (7) "மருளாய வுலகமெலா மருணீங்கி" என்னுமிடத்திலும், ஆறுவது திருமுறையில் (8) "ஆடாதீர்" என்னும் பாட்டில் "பொய்யுலகை நம்பாதீர்" என்னுமிடத்திலும், அம்மைத் திருப்பதிகத்தில் (9) "வெவ்வினைக் கீடான காயமிது மாயமெனா" என்னுமிடத்திலும் இவ்வுலகெல்லாம் மாயா கல்பிதமென்பதைத் தெரிவிக்கிறார்.

"நல்லமருந் திம்மருந்து" என்னும் பாட்டில் (10) "என்னைத் தானாக்கிக் கொண்ட தயாள மருந்து, நாளது வாகும் மருந்து, சிவோஹ மருந்து" என்னுமிடங்களிலும், "அத்தா நான் வேண்டுதல்" என்னும் பாட்டில் (11) "எத்தாலும் அழியாத வடிவதிலே நானும் எந்தாயு மொன்றாகி இனிதுறல் வேண்டுவனே" என்னுமிடத்திலும், "அருளா நான் வேண்டுதல்" என்னும் பாட்டில், (12) "திருவடிவி லுடையாயும் நானும் புணர்ந்து கலந்தொன்றாகி பொருந்துதல் வேண்டுவனே" என்னுமிடத்திலும், "மகாதேவ மாலை" யில் (13) "தானாகி தானதல்ல

தோன்றுமிலாத் தன்மையனாய்.......தேடுகின்ற நானாகி" யென்னு மிடத்திலும், கணபதி தோத்திரத்தில், (14) "நாதமும் கடந்து நிறைந்து" என்ற பாட்டில் "நின்மயமே நானறிந்து நான்று ளுய பேதமும் கடந்த" என்னுமிடத்திலும் அத்வைத ஐக் யத்தைத் தெரிவிக்கிறார்.

## அருணாசலக் கவிராயர்

ஸ்ரீராம நாடகத்தில் "பரராம ரவிகுல ராமா" என்னும் பாட்டில், (1) "கயிற்றை பாம்பென்று எண்ணிக் கலங்கும் வண்ணம்" என்னுமிடத்திலும், (2) "உனது மகிமையை" என்னும் பாட்டில் "செப்பிலுமில்லை பந்திலுமில்லை" என்னு மிடத்திலும் மாயையைப் பற்றிச் சொல்லுகிறார். (3) "விடு விடா சீதையை" என்னும் பாட்டில் "கர்த்தர் மூவர்க்கும் கர்த்தன் ஆகும் இந்தக் காகுத்தன்" என்னுமிடத்திலும், (4) "ஆதியுமாகி" என்னும் பாட்டில் "ஆதியும் ஆகி அநாதியு மாகி, அகிலமெல்லாம் எங்கும் நிறைந்தாயே" என்னுமிடத் திலும், (5) "அய்யனே உன் மகிமையை" என்னும் பாட்டில், "ப்ரம்மாதி தேவர்களை பெறுவானும் நீ ஆதி நடுவாகி எங்கும் நிறைந்தாயே" "முத்தொழிலும் முக்குணமும் முச்சுடரும் முப்பொருளும் ஆகின்ற மூர்த்தி" என்னுமிடங்களிலும் 'எங்கும் நிறைந்து எல்லாமும் தானாகி மும்மூர்த்திக்கும் மூலகாரணமான வஸ்து ஒன்றிருக்கிறது' என்று குறிப்பிடுகிறார். "சாமி ரகுராம" என்னும் பாட்டில் அந்த வஸ்து ஒன்றிலும் சம்பந்தப்படாமல் "சர்வ சாக்ஷி"யா யிருக்கிற தென்பதையும் தெரிவிக்கிறார்.

## சதாசிவ ப்ரஹ்மேந்திரர்கள்

'ஆத்ம வித்யா விலாஸ:' என்னும் அத்வைதக் கிரந்தத்தை எழுதினவர்களும் ஜீவன்முக்தாக்ரேசரரா யிருந்தவருமான சதாசிவ ப்ரம்மேந்திரர்கள் ஸ்ரீ கிருஷ்ணன்மீதும், ஸ்ரீ ராமன்மீதும் மிகவும் உருக்கமான கீர்த்தனங்களைப் பாடி யிருக்கிறார்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. அத்வைத சுகானுபவமே மூர்த்தீகரித்த பிரம்மேந்திரர்களான அவர்களுடைய கீர்த்தனங்களில் அத்வைதத்தைப் பற்றி சொல் லியிருப்பது ஒரு அதிசயமன்று. அவர்களுடைய அத்வைத

தத்வத்தை குறிப்பிடுகிற கீர்த்தனங்களிலே சில கீர்த்தனங்கள் கீழே காட்டப்பட்டிருக்கின்றன :—

"கேலதி ப்ரஹ்மாண்டே பகவான்" (1) என்னும் கீர்த்தனத்தில், "பரமாத்மா'ஹம் பரிபூர்ணோ'ஹம் ப்ரஹ்மைவாஹம் அஹம் ப்ரஹ்மேதி" என்னுமிடத்திலும், (2) "ஸர்வம் ப்ரஹ்ம மயம், ரே ரே ஸர்வம் ப்ரஹ்மமயம்" என்னும் கீர்த்தனத்திலும், (3) "தத்வத் ஜீவத்வம் ப்ரஹ்மணி தத்வத் ஜீவத்வம்" என்னும் கீர்த்தனத்தில், "யத்வத் தோயே சந்த்ர த்வித்வம், யத்வத் முகுரே ப்ரதிபிம்பத்வம், சுக்தௌ, யத்வத் ரஜத மயத்வம், ரஜ்ஜௌ யத்வத் ஸர்(ப்)ப மயத்வம், ஸ்தாணௌ யத்வத் நரரூபத்வம், பானுகரே யத்வத் தோயத்வம்" என்னுமிடங்களிலும், அத்வைத மதத்தின் ஸ்வரூபத்தை மிகவும் சுருக்கமாயும், ஆனால் மிகவும் தெளிவாயும், விளக்கி யிருக்கிறார்.

## மகாராஷ்டர பக்தர்கள்

ஸ்ரீ துகாராம் ஸ்வாமிகள், (1) "ஹேசிதொர பக்தி" என்னும் அபங்கத்தில் "சங்கல்பாசி மாயா சம்சா ராசி" என்னுமிடத்திலும், (2) "மாயதேசி ப்ரஹ்ம ப்ரஹ்மதேசி மாயா" என்னும் அபங்கத்திலும், (3) "ஆதி சக்தி மாயாதேவி" என்னும் அபங்கத்திலும், (4) "ஆபுலே ஆபண" என்னும் அபங்கத்தில் "பகுரங்கெ மாயா" என்னுமிடத்திலும், (5) "ஆதி அந்தி மாஜா" என்னும் அபங்கத்தில் "மத்யே ஹோய ஜாயம் ருகஜல" என்னுமிடத்திலும், (6) "ம்ருக ஜலடாயி" என்னும் அபங்கத்தின் ஆரம்பத்திலும், (7) "நாஹி ஆஜ மாயா ஜக" என்னுமிடத்திலும், (8) "பூர்ண ப்ரஹ்ம" என்னும் அபங்கத்தில் "மாயா ம்ருகஜல" என்னுமிடத்திலும், (9) "நாம ரூப மாயா" என்னும் அபங்கத்திலும், (10) "நகோ நகோ மஜ" என்னும் அபங்கத்தில் "குந்தும் மாயா ஜாலா" என்னுமிடத்திலும், (11) "ஞானியா தேகரி" என்னும் அபங்கத்தில் "ம்ஹண திம்ருக ஜாலீம்" என்னுமிடத்திலும், (12) "பாலபண கேனே" என்னும் அபங்கத்தில் "தருணத்வ மாயா சம்சாராசி மித்யா மோஹ மாயா ப்ராந்தி" என்னுமிடத்திலும், (13) "சரீர துக்கா சேகோ டாரா" என்னும் அபங்கத்தில் "மாயா மோஹ பாச ஜாலே" என்னுமிடத்திலும், (14) சைவஸீகரும் தாஜி"

என்னும் அபங்கத்தில் "நசுடெ மாயா ஜாலா" என்னுமிடத்திலும் உலகத் தோற்றமெல்லாம் மாயை என்பதை சொல்லியிருக்கிறார்.

இதைப் போலவே ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகள், (15) "கால ஜாதோ க்ஷணக்ஷண" என்னும் அபங்கத்தில் "மாயாஜாலி குந்தலேமன" என்னுமிடத்திலும், (16) "ஏக ஸாரே ராஜே" என்னும் அபங்கத்தில் "மாயா ஜாலீ பாபி" என்னுமிடத்திலும், (17) "ஜீவன் முக்த" என்னும் அபங்கத்தில் "மித்யா தேஹ பான ப்ராரப்தா தீன" என்னுமிடத்திலும், (18) "வ்யர்த்த மாய ஜாலி" என்னும் அபங்கத்திலும், (19) "மாயா ஜாலி ஜாலெ" என்னும் வைராக்ய சதக அபங்கத்திலும், நாமதேவர், (20) "பாஹே பரதாரா ஜனனி சமான" என்னும் அபங்கத்தில் "சாண்டானி உபாதி ப்ரபஞ்சாசி" என்னுமிடத்திலும், (21) "அவகாசி சம்சார" என்னும் அபங்கத்தில் "அவகேசி தொடில மாயா ஜாலா" என்னுமிடத்திலும், (22) மாஜா பாவ தூஜே" என்னும் அபங்கத்தில் "தோடிலீ மாஜீ மாயா" என்னுமிடத்திலும், (23) "தேவ பாண்ட வாசா சக" என்னும் அபங்கத்தில் "மாயா ஜாலதே தோடிலா" என்னுமிடத்திலும், "குண்டோபா என்பவர், (24) "பஜரே கோவிந்தா" என்னும் பதத்தில் "க்ருஹ ஸுத தன தாரா மித்யா மோஹ பஸாரா" என்னுமிடத்திலும், ஆனந்ததனயர் என்பவர், (25) "பரவே ஸமஜா" என்னும் பதத்தில் "மாயா மய ஜக ஸாரே" என்னுமிடத்திலும், நரஹரி ஸோனர் என்பவர் (26) "தேஸ ஜன்மலா வ்யர்த்த" என்னும் அபங்கத்தில், (27) "தேக அவகாக்ஷண பங்குர திசெ ஸ்வப்னவதஸார" என்னுமிடத்திலும், பஹேணிபாய் என்பவர், (28) "மாஜியா ரேமண" என்னும் அபங்கத்தில் "மாலா ம்ருக ஜலபாடி" என்னுமிடத்திலும், நிஜரங்கி என்ற பக்தர், (29) "தே தன்ய ஜகத்தாரி" என்னும் அபங்கத்தில் "பவசாகரம்ருக ஜலவதரே" என்னுமிடத்திலும், நாராயண போவா என்னும் பக்தர், (30) "ப்ராபஞ்சி மமதா" என்னும் அபங்கத்தில் "மாயா கல்பித வித்தவா ஜகரீ" என்னுமிடத்திலும், ஞானதேவர், (31) "நாம ரூப சம்பந்த" "ஜாதிக்ரியா பேத ஹா ஆகாராவிச ப்ரவாத் வஸ்துவிவி நாவிவி" என்னுமிடத்திலும், மற்றும் சில

பக்தர்கள், (32) "வந்தின நித்யகரி" என்னும் பதத்தில், "மருக ஜலஹி மாயா" என்னுமிடத்திலும், (33) விஸ்வாசர் விச்ராமரே" என்னும் பதத்தில், "மித்யாஹி அனேக்ரே" என்னுமிடத்திலும், (34) "ஸ்மரதாம் நித்ய ஹரி" என்னும் பதத்தில், "மகதி மாயா காயகரீ" என்னுமிடத்திலும், (35) "போலநே போல" என்னும் பதத்தில் "ம்ஹணே ம்ருகஜலவத்" என்னுமிடத்திலும், 'மாயையினால் நானாவிதமான எல்லா உருவங்களும் தோன்றுகின்றன' என்பதைத் தெரிவித்திருக்கிறார்கள்.

தவிரவும், ஸ்ரீ துகாராம் ஸ்வாமிகள், (35) "ஸாராசே ஹெஸார" என்னும் அபங்கத்தில் "தயாவா-ரகுவீர ஐக்யபாவே" என்னுமிடத்திலும், (36) "நகரீ நே ஸங்க்" என்னும் அபங்கத்தில் "யா நாவே அத்வைத கரே ப்ரஹ்மஜ்ஞான" என்னுமிடத்திலும் (37) "ஸகுணசெ ப்ரீதி" என்னும் அபங்கத்தில், "ஹோ ஹே அத்வைத கிரீடிவலி பொது நியாகெல ஆத்மாபதிம்ஸ்திர" என்னுமிடத்திலும், (38) "ம்ருகஜலடாயி" என்னும் அபங்கத்தில் "சைதன்ய சித்கனம்" என்னுமிடத்திலும், (39) "தெஹ ஹா சாதரே" என்னும் அபங்கத்தில், "ப்ரஹ்ம ஜெம் தெகணெம் த்வைதஜெஹ்வாம் கேலேம் சரீர தெம் ஜாலெம் ப்ரமஹ்ரூப" என்னுமிடத்திலும், (40) "தருவர பீஜாசியே பொடி. பீஜதருவர ஸெவஷம் உதகாவரில தரங்கா தரங்க உதகாசெ அங்க ஏகேம் ஏக ஸ்மோவனே தைஸேம் தைஸேம் தும்ஹாம் ஆம்ஹாம் ஜாலெ" என்னுமிடத்திலும், (41) "மாயாஜாலா நாஸே" என்னும் அபங்கத்தில் "சாக்ஷாத்கார ஜாலியா சஹஜமாதி" என்னுமிடத்திலும், (42) "பேதநாஹி சர்வாத்மனா" என்னும் அபங்கத்தில் "பேத நாஹி துஜ மஜ" என்னுமிடத்திலும், ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகள், (43) "குருமஹ ராஜ் குரு" என்னும் பதத்தில், "அத்வயபராத்பரு" என்னுமிடத்திலும், (44) 'மானஸ போதத்'தில் "மனா ஸங்கஹா த்வைத நிச்சேஷ மோடி" என்னுமிடத்திலும், நிவ்ருத்தி தேவர், (45) "நித்ய ஹரிகதா" என்னும் அபங்கத்தில் "நாஹி தேதே த்வைத நித்யதா அத்வைத நிஷ்டதலே" என்னுமிடத்திலும், பஹேணியாய் (46) "ஸந்த ஸங்கதீசா" என்னும் அபங்கத்தில் "ப்ரஹ்மரூப ஹொயி ஜனிசர்வ" என்னுமிடத்திலும், நரஹரி தாஸர் (47) "தேவாதுஜாமீசொசார" என்னும் அபங்கத்தில் "ஜீவ சிவ

கருணி" என்னுமிடத்திலும், ஜ்ஞானதேவர் (48) "பை சூன்ய ஜை தாவாலே ஜாஹலே தைபிந்துலே ஏககெலே தைஸே அத்வைத சாங்காவே போலே தை த்வைத கீஜெ" என்னுமிடத்திலும், (49) "ஜைசா கீடலாசா தோஷ ஜாயே தரி பம்தரே தேசி ஹோயே தைசே ஜீவா ப்ரஹ்மத்வ ஆஹே சங்கல்பலோபி" என்னுமிடத்திலும், (50) "சமாதிஹரிசீ சமசுகவிண" என்னும் அபங்கத்தில், "நா ஸாதேல ஜாண த்வைதபுத்தி" என்னுமிடத்திலும், அத்வைத பாவத்தை நன்ருய்ச் சொல்லியிருக்கிருர்கள். ஸ்ரீ துகாராம் ஸ்வாமிகள் (51) "தோகசாரிஹோசாரிகே விச்வநாதவிடல சகே" என்னும் அபங்கத்தில், "துகாமஹணே சராசர பேதநஹி ஹரிஹர" என்னுமிடத்திலும், (52) "ஆதிம்நமும்" என்னுமபங்கத்தில் "ப்ரஹ்மா விஷ்ணு த்ரிநயந தின்ஹிரூபே ரகசிபூர்ண" என்னுமிடத்திலும், ஸ்ரீ நாமதேவர் (53) "விஷ்ணு ஶிபஜலா சிவ தூர்ஹா விலா அத: பாத ஜஹலா தயா நரா" என்னும் அபங்கத்தில் "நாமாஹம்ணேசிவவிஷ்ணு மூர்த்தி ஏக வேதாசாவிவேக ஆத்மாராம்" என்னுமிடத்திலும் ஸமர்த்த ராம தாஸ் ஸ்வாமிகள் (54) "அஹோ கொடேம் ஆஹேமன" என்னும் அபங்கத்தில் "கொடெம் ஆஹேப்ரஹ்மபதி கொடெம் ஆஹே விஷ்ணு மூர்(த்)தி கொடெ ஆஹே த்ரிநயநா" என்னுமிடத்திலும் (55) "அஹோ ஹ்ருதயிம் ஆஹெமன" என்னும் அபங்கத்தில் "சரீரம் ஆஹேப்ரஹ்மபதி நாபிம்ஆஹே விஷ்ணுமூர்(த்)தி ப்ரஹ்மாண்டிதோ த்ரிநயன" என்னுமிடத்திலும், அத்வைத சித்தாந்தத்திற்குச் சிறப்பாயுள்ள சிவவிஷ்ணு மூர்த்திகளின் அபேதத்தை விளக்கியிருக்கிருர்கள்.

## வேதநாயகம் பிள்ளை

வேதநாயகம் பிள்ளை என்பவர் சுமார் 60 வருஷங்களுக்கு முன்பு சீர்காழியில் முன்சீபா யிருந்தார். அவர் கிறிஸ்தவ மதத்தில் பிறந்திருந்தும் அத்வைத சித்தாந்த நிலையைத் தழுவியே தம்முடைய கீர்த்தனங்களைப் பாடி யிருக்கிருர்.

"இந்த வரம் தருவாய்" (1) என்னும் கீர்த்தனத்தில் "மாயா ப்ரபஞ்சத்தில் மாட்டி வையாமல்" என்னுமிடத்திலும், (2) "கருணுகடாக்ஷம் செய்வாயோ" என்னும் கீர்த்தனத்தில் "நாம ரூபமா ப்ரபஞ்சம்" என்னுமிடத்திலும், (3) "அபயம்

நீ யருள்வாய்" என்னும் கீர்த்தனத்தில் "நீர்க்குமிழியை நிக ரும் வாழ்வை நிலையென் றெண்ணினேன்" என்னுமிடத்திலும், (4) "சஞ்சலமாய் நெஞ்சுமிக" என்னும் கீர்த்தனத்தில் "பொய்யுலகை மெய்யெனவே தடுமாறி" என்னுமிடத்திலும், (5) "ஏதோ இன்னம் வாதோ" என்னும் கீர்த்தனத்தில் "நீர்க்குமிழி யெனவே நிலையா வாழ்வு கனவே" என்னுமிடத்திலும், (6) "நாதா கனமேதா" என்னும் கீர்த்தனத்தில் "சொப்பனமே ஒப்பனை அற்ப உடலைப் பொருளென" என்னுமிடத்திலும், (7) "வாவா வாவா" என்னும் கீர்த்தனத்தில் "பொய்யான வாழ்வு தனை மெய்யாக நம்பினேன்" என்னுமிடத்திலும், (8) "ஞானோதயம் வர அருளே" என்னும் பாட்டில் "மாயா விகார ஜகமே" என்னுமிடத்திலும், (9) "மயங்குறுய் மனமே" என்னும் கீர்த்தனத்தில் "வாழ்வு சொப்பனமே" என்னுமிடத்திலும், (10) "நித்தியானந்தத்தை நாடு" என்னும் கீர்த்தனத்தில் "இந்திர ஜாலம் உலக வைபோகம்" என்னுமிடத்திலும், (11) "ஆதி பரமநாதர்" என்னும் கீர்த்தனத்தில் "பொய்யுலக நடையை பொருளென நாடினேன்" என்னுமிடத்திலும், (12) "உடலை நம்பாதே" என்னும் கீர்த்தனத்தில் "இது மெய்யல்ல பொம்மலாட்டம்" என்னுமிடத்திலும், 'உலகத்திலே தோன்றுவதெல்லாம் மெய்யல்ல, பொய் பொம்மலாட்டம் போலும் சொப்பனம் போலும் உள்ளது' என்றும், (13) "தேவாதி தேவா" என்னும் கீர்த்தனத்தில் "முன்னும்நீ பின்னும்நீ மூலகாரண மும்மூர்த்திநீ" என்னுமிடத்தில் மும்மூர்த்திகளுக்கும் மூல பூதமான பரம்பொருளொன்றே உண்மையானது என்னும் அத்வைத சித்தாந்தத்தை அடிக்கடி அறிவுறுத்துகிறார்.

## சங்கீதத்தின் பரம தாத்பர்யம் அத்வைதமே

சங்கீதத்திற் காதாரமான கிரந்தத்தை யியற்றி உலகுக்களித்தவர்களில் முக்கியமானவர் ஸ்ரீ சார்ங்கதேவர் என்பவர். இவர் கி. பி. 1210 முதல் 1217 வரையில் தௌலதாபாத் என்று சொல்லப்படும் தேவ நகரத்தில் அரசாண்ட சிம்ஹண மகாராஜா காலத்திலிருந்தவர். இவர் 'அத்யாத்ம வித்யா விவேக'மென்னும் வேதாந்த கிரந்தத்தையு மியற்றி யிருக்கிறார். இவரியற்

றிய கிரந்தத்திற்கு 'சங்கீத ரத்னுகர'மென்று பெயர். இதற்கு 'கல்விநாத'ரால் எழுதப்பட்ட கலாநிதி என்று பெயருள்ளதும் சிம்ஹ பூபாலரா லெழுதப்பட்ட சங்கீத சுதாகரமென்று பெயருள்ளதுமான இரண்டு முக்கிய உரைகளிருக்கின்றன. இவைகளைத் தவிர இன்னும் சில உரைகளு மிருக்கின்றன. இந் நூலில் ஸ்வரத்திற் கடிப்படையான நாத ப்ரம்மத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லுமிடத்து, அது அத்வைத பரமாகவே சொல்லப்பட்டிருக்கிறது.

கீதம், வாத்யம், ந்ருத்தம் இம் மூன்றும் சேர்ந்து சங்கீதமென்று சொல்லப்படுகிறது. வாத்யம், ந்ருத்தம் இவ்விரண்டிற்கும் கீதம் முக்கியமா யிருக்கிறபடியால், அதைப்பற்றி முதலில் விசாரிக்கப்படுகிறது. கீதம் ப்ரம்மதேவரால் சாமவேதத்திலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது. கீதத்தினுல் ப்ரும்மா, விஷ்ணு, ஈசுவரன், ஸரஸ்வதி, அம்பிகை முதலியவர்கள் சந்தோஷத்தை யடைகிருர்கள். ஒன்றுமறியாத சிறு குழந்தையும் படுக்கையில் அழுது கொண்டிருக்கும்பொழுது கீதத்தைக் கேட்டுச் சந்தோஷத்தை யடைகிறது. காட்டில் சஞ்சரிக்கும் மானும் வேடனுல் பாடப்பட்ட கீதத்தில் லயித்துவிடுகிறது. [சங்கீத ரத்னுகரம், முதல் அத்யாயம், முதல் ப்ரகரணம், 24 முதல் 29 வரை ஸ்லோகங்கள்.] இப்பேர்ப்பட்ட மகிமை வாய்ந்த கீதமானது தர்மார்த்த காமமோக்ஷ சதுர்வித புருஷார்த்தங்களையு மடைவதற்குச் சாதனமா யிருக்கிறது. [ச. ர. 1 சு. 1 ப்ர. $29\frac{1}{2}$ ச்லோ.] வீணு வாதன தத்வத்தை யறிந்தவனும் ச்ருதி ஜாதியில் தேர்ந்தவனும் தாள ஞானமுள்ளவனும் ச்ரமமில்லாமலேயே மோக்ஷத்தை யடைவான் என்று யாக்ஞ்யவல்க்ய ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. [கலாநிதி வ்யாக்யானம்.] கீதத்தின் மகிமையைப்பற்றி இவ்வாறு கூறிவிட்டு பிறகு அதன் ஸ்வரூபத்தைப்பற்றி சொல்லும்போது, சார்ங்கதேவர் மற்றும் கூறுவதாவது: "சித்தானந்த ஸ்வரூபமாயும், ஸ்வயம் ப்ரகாசமாயும், நிரஞ்ஜனமாயும், அத்விதீயமாயும் * எங்கும் நிறைந்ததாயும், விபுவாயுமுள்ள ப்ரும்மம் என்ற ஒரு வஸ்து இருக்கிறது. அந்த வஸ்துவானது நிர்விகாரம், நிரா

* அத்விதீயம் என்பதற்கு சிம்ஹ பூபாலர் ஸஜாதீய விஜாதீய ஸ்வகத பேத மற்றதென்று வ்யாக்யானம் செய்திருக்கிருர்.

காரம், நாசமற்றது, பிறப்பில்லாதது. சகல ஜீவன்களும் அதன் அம்சங்கள். [அம்சம் என்றால் அபின்னம்.] அந்த ஜீவன்கள் அவரவர்களுடைய அனாத் யவித்யா வாசனையினாலும், அனாதி கர்ம வசத்தாலும் அனேக உபாதிகளை யடைகின்றனர். அந்த ஜீவன்கள் ஆத்மாவினின்று பின்னப்பட்டவையல்ல. இந்த ஜகத்தும் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதில்லை. தங்கம் குண்டலமாக ஆவதுபோலும், கயிற்றிலே பாம்பு தோன்றுவது போலும் சிருஷ்டி யுண்டாகிறது. [ச. ர. அத். 1, ப்ரக. 2, ச்லோ. 4, 5, 6, 11, $11\frac{1}{2}$] சச்சிதானந்த ஸ்வரூபமாயுள்ள வஸ்துவா யிருந்த போதிலும் அவித்யையினால் ஏற்பட்ட உபாதி வசத்தினால், அசத்வம், சர்வஜ்ஞத்வ மின்மை, துக்கித்வம், பரிச்சின்னத்வம் முதலிய தர்மங்கள் ஆரோபிக்கப்பெற்று, ஜீவன் என்னும் பெயரை யடைகிறது. காரணத் தன்மையில் ஏகத்வமும் கார்யத் தன்மையில் நாநாத்வமும் ஏற்படுகிறது. தங்கம் என்பதினால் அபேதமும், குண்டலம் மோதிரம் முதலிய உருவங்களாகப் பேதமும் தோன்றுகிறது. அதாவது, உண்மையில் பேதமில்லை; பேதம் வெறுந் தோற்றமே. அதே மாதிரி, ரஜ்ஜு சர்ப்ப மென்னு மிடத்திலும் உண்மையில் சர்ப்பம் கிடையாது, ரஜ்ஜுதா னிருக்கிறது; சர்ப்பமானது பொய்யான தோற்றமே [கலாநிதி வ்யாக்யானம்]. இவ்வாறு சொல்லி, பிறகு ப்ரம்மதேவரின் அனேகவிதமான ஸ்ருஷ்டிகளைப்பற்றிச் சொல்லிவிட்டு, இந்த மனுஷ்ய ச்ருஷ்டியிலேயே புக்தி முக்தி யிரண்டையும் அடையலாமென்றும் * சகுண த்யானத்தினால் புக்தியும் நிர்க்குணத்தினால் முக்தியும் உண்டாகுமென்றும் சொல்லி, பின்னும் சொல்லுகிறார்.

இந்த சகுண நிர்குண ரூப த்யானங்க ளிரண்டிற்கும் சித்த ஏகாக்ரதை அவசியம் வேண்டும். அப்படிச் சித்த மொரு முகப்படுவது சாதாரண மனிதர்களுக்கு மிகவும் கஷ்டம். ஆகையினால், அவர்களுக்காக அனாகதோபாசனை சொல்லப் பட்டிருக்கிறது. குரு உபதேசம் செய்த வழியைப் பின்பற்றி முனிவர்கள் இந்த அனாகதோபாஸனம் செய்வார்கள். ஆனால்

---

* நிர்விசேஷ பரப்ரம்மத்தை சாக்ஷாத்கரிக்கச் சக்தியற்றவர்களை யுத்தேசித்து கருணையினால் சகுண த்யானம் சொல்லப்பட்டிருக்கிறது என்பது 'சங்கீத சுதாகர'த்தில் எடுத்து சொல்லப் பட்ட 'வேதாந்தகல்பதரு' வாக்யம்.

இந்த அநாகதோபாஸனம் உத்தம பக்குவமில்லாதவர்களுக்கு இனிமையாவதில்லை. ஆகையால் அதே அநாகதநாதமானது காது வழியாய் உட்சென்று மனதிற்கு இன்பத்தைத் தரக் கூடியதாயும் சம்சார பந்தத்தைப் போக்கக் கூடியதாயு மிருக்கிறது [ச. ர. அத். 1, ப்ரக. 2, ச்லோ. 163 முதல் 167 வரையில்]. ப்ரும்மா விஷ்ணு மஹேசுவரர்களான மும்மூர்த்திகளும் அந்த நாதப்ரும்ம ரூபமாகவே யிருப்பதால் அந்த நாதப்ரும்மத்தை யுபாசித்தால் மும்மூர்த்திகளு முபாசிக்கப்பட்டவர்களாகிறார்கள். [ச. ர. அத்யா. 1, ப்ரக. 3, ச்லோ. 1, 2] இதன் பிறகு ஸ்வரம் முதலியவைகளின் சிருஷ்டியைப்பற்றி சொல்லிக் கொண்டு போகிறார்.

'ஸ்ரீ சங்கர ரத்னாவளி'யிலுள்ள 'ப்ரபோத சுதாகர'மென்னும் கிரந்தத்தில் நாதானுசந்தானத்தைப்பற்றி அடியிற் கண்டபடி சொல்லப்பட்டிருக்கிறது: "ஸித்தி பெறவும் மனதை ஸ்திரமாய் நிறுத்தவும் நாதானுசந்தானம் உயர்ந்த சாதனமாகும். பேரி ம்ருதங்கம் முதலிய வாத்யங்கள் வாசிக்கும்போதே மனதிற்கு ஒருவிதமான சந்தோஷமுண்டாகிறது. இப்படி யிருக்கும்போது அகண்டமான அநாகத சப்தத்தின் ஆனந்தத்தை சொல்லவும் வேண்டுமா?" [ப்ரபோத சுதாகரம், 144-146] [இந்த அநாகத சப்தானு சந்தானம் கொஞ்சம் சிரமமானதால் அதற்காகவே கீதம் ஏற்பட்டது]. மனதை லயப்படுத்துவதற்கு அனேக சாதனங்க ளிருந்தாலும், நாதானு சந்தானம் அப்போதே பரமானந்தத்தைத் தரக்கூடியது. நாதானு சந்தானத்தினால் மனதிலே சத்வகுணம் உதிக்கும்போது, மின்னல்போல ஒரு ஞான ஒளி தோன்றி மறையும் (ப்ர. 166). யாராவது பகவானைக் குறித்து பாடினாலும் வேணு முதலிய வாத்யங்கள் வாசித்தாலும் மன முருகி புளகாங்கிதமாகி ஆனந்தபாஷ்ப முண்டாகும் [ப்ர. 181].

ஸ்ரீ பாகவதத்திலும், நாரதரைப்பற்றி, "(மேற் சொல்லியவாறு) உருகும் மனதில் பகவான் ஆவிர்ப்பவிக்கிறார். அந்த சமயத்தில் ஒருக்ஷண நேரம் அத்வைத ஸ்பூர்த்தி யுண்டாகிறது. அந்த ஆனந்தானுபவத்தில் மூழ்கினவனாய் ஆனந்தத்தை யனுபவிக்கிறவன் அனுபவிக்கப்படும் ஆனந்தம் என்கிற துவைத ஞானமற்று, தானே ஒரே ஆனந்த ஸ்வரூபியாய் விடுகிறான். இந்த ஆனந்தமே எப்போதும் ஸ்திரமாயிருக்க வேண்டுமானால்,

நாதானு சந்தானத்தினுலும்,சூக்ஷ்ம பக்தியான பராபக்தி ஏற்பட்டு அந்த ஆனந்தானுபவ மெப்போது மிருப்பதுதான் சகஜ ஸ்திதி. ['நாரதருக்கு இந்த ஆனந்தம் முதலில் உண்டாய்ப் பிறகு மறைந்துபோய் விட்டது. பிறகுதான் நிரந்தர த்யானத்தினுல் பரிபூர்ண ஆனந்தமுண்டாயிற்று' என்பது ஸ்ரீமத் பாகவதத்தில் ப்ரதம ஸ்கந்தத்தில் நாரதர் தன்னுடைய பூர்வ ஜன்ம வ்ருத் தாந்தத்தை சொல்லுமிடத்தில், சொல்லப்பட் டிருக்கிறது. [ஆனந்தசாகரே மக்ன: நாபச்ய முபயம் முனே.]



ஸ்ரீ:
ஸ்ரீ குருப்யோ நம:

# அத்வைத சித்தாந்தமும் ராஜ்ய பரிபாலனமும்



(ஸ்ரீ வேப்பத்தூர் சுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள், அண்ணுமலை நகர்)

ஆசையை ஒழிப்பது, சித்தசுத்தி, இந்திரியங்களை அடக்குதல், பரமாத்மா ஒருவரே உண்மைப் பொருள் மற்று உலகமெல்லாம் தோற்றம் என்ற எண்ணம், ஹிம்ஸை வஞ்சனை முதலியவைகளை ஒழித்தல், ச்ரவணம் மனனம் நிதித்யாஸனம் முதலியவைகளை செய்வது முதலியவைகளை ப்ரதானமாகக் கொண்ட அத்வைத சித்தாந்தத்திற்கும் மேல்மேலும் பணம் சம்பாதிப்பது பிறரை அடக்குவது ஹிம்ஸை முதலியவைகளை முக்கிய ஸாதனமாகக் கொண்ட ராஜ்ய பரிபாலனத்திற்கும் சம்பந்தமே இல்லைபோலத் தோற்றுகிறது.

ஆனுல் உபநிஷத்துக்களில், ராஜ்யபாலனம் செய்யும் ஜனகன் அஜாத சத்ரு முதலிய அரசர்களே அத்வைத தத்வத்தை உபதேசித்தவர்களாகக் கூறப்பட்டிருக்கிறது. அத்வைத வித்தையான கீதை, ராஜ்ய தந்த்ர நிபுணரான ஸ்ரீ கிருஷ்ண பகவானுல், க்ஷத்ரியரான அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்டிருக்கிறது. 'एवं परम्पराप्राप्तमिमं राजर्षयो विदुः' (4,2) என்று கீதையில் அத்வைத வித்யையை ராஜரிஷிகள் அறிவார்கள் என்று சொல்

லப்பட்டிருக்கிறது. மனுவும், ராஜதர்மங்களைச் சொல்லுமிடத்தில், (7, 43) அரசன் அத்வைத வித்யையைக் கற்கவேண்டுமென்று சொல்லுகிறார்.

त्रैविद्येभ्यस्त्रयीं विद्यां दण्डनीतिञ्च शाश्वतीम् ।
आन्वीक्षकीञ्चात्मविद्यां वार्तारम्भांश्च लोकतः ॥

கீதா பாஷ்யத்தில் பகவத் பாதர்கள், **इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम् ।** என்ற ச்லோக பாஷ்யத்தில், ஆத்மவித்யா பலத்தாலே தான் க்ஷத்ரியர்கள் ராஜ்ய பரிபாலனம் செய்ய சக்தியுள்ளவர்களாகஆகிறார்கள் என்று நிரூபணம் செய்திருக்கிறார்கள்: **अध्यायद्वयेनोक्तं योगं विवस्वते आदित्याय सर्गादौ प्रोक्तवानहं जगत्परिपालयितॄणां क्षत्रियाणां बलाधानाय । तेन हि योगबलेन युक्ताः समर्था भवन्ति ब्रह्म परिरक्षितुम् । ब्रह्मक्षत्रे परिपालिते जगत्परिपालयितुमलम् ॥**

அத்வைத சித்தாந்த ஞானம் ராஜ்ய பரிபாலனத்தில் எவ்விதம் உபயோகப்படுகிறது என்பதை விசாரிக்கவேண்டும்.

(1) அரசன் தனக்கு துக்கமே கூடாது சுகம் வேண்டுமென்று நினைப்பதுபோல எல்லா ஜனங்களுக்கும் சுகமே வேண்டும் துக்கமே வரக்கூடாது என்ற எண்ணத்துடன் ராஜ்ய பரிபாலனம் செய்யவேண்டுமென்று மகா பாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

प्रज्यकार्यं तु तत्कार्यं प्रजासौख्यन्तु तत्सुखम् ।
प्रजाप्रियं प्रियं तस्य स्वहितन्तु प्रजाहितम् ॥

'நம்முடைய ஆத்ம ஸ்வரூபமே எல்லா சரீரத்திலும் காணப்படுகிறது' என்ற ஞானமிருந்தால் மட்டுமே இவ்விதம் ஜனங்களின் சுகத்தைத் தன் சுகமாகக் கருதி ராஜ்ய பரிபாலனம் செய்யமுடியும்.

(2) தனக்கு வேண்டியவர்கள் என்ற அபிமானமும் விரோதிகள் என்ற த்வேஷமும் இல்லாமல், குற்றவாளிகளைக் குற்றத்துக்குத் தக்கபடி தண்டனை விதிப்பது என்பது முக்யமான பரிபாலன முறை. அவ்விதம் ராகத்வேஷங்கள் உண்டாகாமல் இருப்பதற்கு, "ஆத்ம ஸ்வரூபத்தைத் தவிர வேறு ஒரு தத்வமுமில்லை. எல்லா வஸ்துவும் ஆத்மாவில் உண்டாகி, இருந்து, லயத்தை யடைகிறது. ஆகையால், ஆத்மாவைத் தவிர வேறு

தத்வமேயில்லையாகையால், நாம் யாரிடம் த்வேஷ புத்தியை வைப்பது?" என்று ராகத்வேஷத்தை யுண்டாகாமலிருக்கும்படி செய்ய அத்வைத ஞானம் முக்ய ஸாதனமாகும். இது சாந்தோக்யோபநிஷத்திலே சொல்லப்பட்டிருக்கிறது.

(3) ராஜ்ய பரிபாலனம் செய்பவனுக்கு இந்திரிய ஜயம் அவசியம். இந்திரியங்களை ஜயிக்காமல் அவைகள் போகும் வழியே விட்டால் மனதை ஓரிடத்தில் நிலைநிறுத்த முடியாது. மனதை நிலைநிறுத்தாமல் நன்றாக ராஜ்ய பரிபாலனம் செய்ய முடியாது. ஆகையால் அரசனுக்கு இந்திரிய நிக்ரஹம் வேண்டுமென்று மனு (7, 44) சொல்லுகிறார்.

इन्द्रियाणां जये योगं समातिष्ठेद्दिवानिशम् ।
जितेन्द्रियो हि शक्नोति वशे स्थापयितुं प्रजाः ॥

ராஜ தர்மங்களில் இந்திரிய ஜயம் முக்யமானது என்று இதற்கு குல்லூகபட்டர் உரை கூறுகிறார். சாசுவதமான இந்திரிய ஜயம் ஆத்ம வித்யையினாலேதான் கிடைக்கும்.

(4) ராஜாக்களுக்கு ஏராளமான பண நஷ்டமும் பந்துக்களின் வியோகமும் யுத்தங்களாலும் இதர காரணங்களாலும் அடிக்கடி ஏற்படும்; சில சமயங்களில் அதிக லாபமும் ஏற்படும். அக்காலங்களில் அதிக மனவருத்தமடைந்தாலும் அதிக சந்தோஷமடைந்தாலும், சரிவர பரிபாலனம் செய்யமுடியாது. ஆகையால், "சுகமும் துக்கமும் எப்பொழுதுமிருக்கும்; ஸத் அல்ல, அஸத்துமல்ல; ஆனால் தோன்றித் தோன்றி மறையும் அனிர்வசனீயம் மித்யை" என்ற அத்வைத சித்தாந்த ஞானத்தால் மனதை அதிக வருத்தத்திலும் அதிக சந்தோஷத்திலும் முழுகவிடாமலிருக்கவேண்டும். பணம் அநித்யமென்று நாம் அறிந்தும் அதில் ஆசை வைக்கிறோம். ஒரு கிளிஞ்சிலை வெள்ளியென்று நாம் அறிந்ததால் உண்டான ஆசை, 'அந்த வெள்ளி வாஸ்தவமில்லை மித்யை' என்ற ஞானம் வந்தால், உடனே போய் விடுகிறது. ஆகையால், சுகதுக்கங்கள் அநித்யங்கள் என்று தெரிவதினால் ஹர்ஷமும் விஷாதமும் போகாது மித்யையென்று தெரிந்தால் மட்டுமே போகும். இதைப் பிரும்மாநந்த கிரி கீதா வ்யாக்யானத்தில் கூறுகிறார்: 'सुखदुःखादेरात्मनि मिथ्यात्वे निश्चिते

सति तत्कृतहर्षविषादापनोदेन कर्तव्यकार्यनिर्वहणं भवति ।" பந்துக்கள் வியோக மேற்படுமென்று மிகவும் துக்கத்தை யடைந்த அர்ஜுனனுக்காகவே இதை என்ற ஆத்மவித்யை பகவானால் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஜனக மகாராஜா அச்மா என்னும் மஹரிஷியைப் பார்த்து, ராஜ்யத்தில் பண நஷ்டமும் பந்துக்களின் வியோகமும் ஏற்படுஞ் சமயத்தில் எப்படி நடந்து கொண்டால் சௌகரியமேற்படுமென்று கேட்டதாக பாரதத்திலே (சாந்தி. 27, 4) சொல்லப்பட்டிருக்கிறது.

आगमे यदि वापाये ज्ञातीनां द्रविणस्य च ।
नरेण प्रतिपत्तव्यं कल्याणं कथमिच्छता ॥

வெவ்வேறு இடங்களிலிருந்து போகும் வழிப்போக்கர்கள் வழியில் சேர்ந்து கொஞ்சகாலம் இருந்து அவரவர்கள் வழியே பிரிந்து போவதுபோல, நம் கர்மபலனை யனுபவிக்கவந்த அனேக ஜீவர்களான பிள்ளை பார்யை பந்துக்கள் இவர்களோடு கொஞ்ச நாள் சேர்ந்திருந்து விட்டு வெவ்வேறு இடத்துக்குப் போகப்போகிறோம். நம்முடைய ஆத்ம ஸ்வரூபம் அழிவில்லாதது என்பதை அறிந்து, எதற்காக நாம் வருத்தப்படவேண்டுமென்று மனதை நிலைநிறுத்தவேண்டுமென்று அச்மா பதில் உரைக்கிறார்.

पथि संगतमेवेदं दारबन्धुसुहृज्जनैः ।
क्वास क्व च गमिष्यामि कोन्वहं किमिहास्थितः ।
तस्मात्किमनुशोचेयमित्येवं स्थापयेन्मनः ॥

வழிப்போக்கர்கள் வழியில் சந்திப்பது போலவும், நதீப்ரவாகத்தில் வெவ்வேறு இடங்களிலிருந்து மிதந்து வரும் மரங்கள் சேருவதுபோலவும், ஆகாயத்தில் பல திக்குகளிலிருந்து கிளம்பும் மேகங்களின் சேர்க்கை போலவும், சமுத்ரத்தில் ப்ரயாணிகள் சந்திப்பதுபோலவும் நாம் தகப்பன் பிள்ளை பந்துக்கள் முதலானவர்களைக் கொஞ்சகாலம் சந்திக்கிறோம். ஆகையால் அறிந்தவர்கள் இவர்களுடைய வியோகத்தால் துக்கத்தை யடையமாட்டார்கள் என்று அழகாய் 'ப்ரபோத சந்திரோதயத்தில் ஸ்ரீ கிருஷ்ண மிச்ர யதீச்வரர் சொல்லி யிருக்கிறார்.

पान्थानामिव वर्त्मनि क्षितिरुहां नद्यामिव भ्रश्यतां
मेघानामिव पुष्करे जलनिधौ सांयात्रिकाणामिव ।

संयोगः पितृमातृबन्धुतनयभ्रातृप्रियाणां यदा
सिद्धे दूरवियोग एव विदुषां शोकोदयः कस्तदा ।"

எல்லாக் குடும்பிகளுக்கும் அதிக சிரம காலத்திலே துக்கத்தி லும் அதிக சௌகரிய காலத்திலே சந்தோஷத்திலும் ஈடுபடாம லிருப்பது அவசியம் தான். ஆனால் உலகத்தையே குடும்பமா யுள்ள அரசனுக்கு அடிக்கடி ஹர்ஷ விஷாதங்கள் ஏற்படக் கூடியவை யாகையால், அவனுக்கு ஆத்ம ஞானம் அத்யாவச்யக மானது. மனு ஸ்ம்ருதியின் வ்யாக்யாதாவான குல்லூக பட்ட ரும் ब्रह्मविद्याञ्च अभ्युदयव्यसनयोः हर्षविषादप्रशमहेतुं शिक्षेत என்று கூறியுள்ளார்.

(5) அதிகமான ஈடுபாடு இல்லாமல் செய்யும் கார்யத்திலே தான் பலன் சித்திக்கிறது. தபால் அவசியம் வரவேண்டுமென்று ஈடுபட்டு, தபால்காரனைப் பார்த்துக் கொண்டே யிருந்தால், தபால் வருவதில்லை. மமதாபிமானத்தை விட்டு அரசன் ராஜ்ய பரிபாலனம் செய்யவேண்டுமென்று சகாதேவன் யுதிஷ்டரருக் குச் சொல்லுவதாக பாரதத்திலே கூறப்பட்டிருக்கின்றது. அஸங்கமான ஆத்மாவின் ஸாக்ஷாத்காரத்தால் மமதாத்யாஸம் நிவிருத்தி யடைகிறது. அவ்விதம் அபிமான மில்லாமல் செய்த காரியத்திற்கு பலன் அதிகமாக கிடைக்கும்.

இங்கு ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்தவருக்கு வேறு உலகமே தோன்றுது. ஆகையால் 'அவர் ராஜ்யபரிபாலனம் செய்ய முடியுமா?' என்ற சந்தேகம் உண்டாகும். கண்ணாடியில் பிரதிபலிக்கும் சூரியன் உண்மையல்லவென்று அறிந்திருந்த போதிலும் அச் சூரியனைப் பார்க்கவும் பார்க்கிறோம். ' அவனைக் கொண்டு சில விடங்களிலுள்ள இருளை நீக்குதல் முதலிய சில காரியங்களையும் செய்கிறோம். அதுபோல ஆத்மஞானி உலகம் மெய்யல்ல வென்று தோற்றிலும், அவ்வுலகத்தைப் பார்க்கவும் பார்த்து அவ்வுலகில் மோகத்தினால் துக்கப்படும் ஜீவன்களுக்கு உதவியும் புரிவான். ஞானி தத்வத்தையும் அறியலாம், தத்வ மில்லாத பொருளைப் பார்க்கவும் பார்க்கலாம். ராஜ்யத்தையும் இவனே நன்றாக பரிபாலனம் செய்யலாம் என்பதை வித்யா ரண்ய ஸ்வாமிகள் பின்வருமாறு கூறி யிருக்கிறார்.

न बुद्धिं मर्दयन्दृष्टो घटतत्त्वस्य वेदिता ।
उपमृद्नाति चेद्बुद्धिं ध्याताऽसौ न तु तत्त्ववित् ।
तदित्थं तत्त्वविज्ञाने साधनोऽनुपमर्दनात् ।
ज्ञानिना चरितुं शक्यं सम्यग्राज्यादिलौकिकम् ॥

(6) அத்வைத சித்தாந்தத்தைக் கற்கும்போது இதர மதத்தில் த்வேஷம் உண்டாவதில்லை. எல்லாவற்றிலும் சமரஸ புத்தி யுண்டாகிறது. அத்வைத மதம் எல்லா மதத்திற்கும் அவகாசத்தைக் கொடுக்கிறது. "சைவம் வைஷ்ணவம் முதலான மதப் பிரகாரம் அந்தந்த மூர்த்திகளை உபாஸிப்பதால் அவரவர்கள் சொல்லும் பலன் ஏற்படுவது உண்மை. அவைகள் எல்லாவற்றின் பலனாக அத்வைத ஸாக்ஷாத்காரமாகவும் ஏற்படும்" என்று அத்வைத சாஸ்திரம் போதிக்கிறது. மேலும், அத்வைத சாஸ்திரத்தில் अवच्छेदवादः आभासवादः प्रतिबिम्बवादः दृष्टि-सृष्टिवादः என்று பலவித வாதங்கள் இருக்கின்றன.

यया यया भवेत्पुंसः व्युत्पत्तिः प्रत्यगात्मनि ।
सा सैव प्रक्रिया ज्ञेया साध्वी सा चानवस्थिता ॥

* "பலவிதமான மனிதர்கள் அவரவர்கள் ருசியை யனுசரித்து, வேதமார்க்கம், சைவம், வைஷ்ணவம், ஸாங்கியம், யோகம் என்னும் பல மார்க்கங்களை, 'இதுவே உயர்ந்தது' என்ற எண்ணத்தால் அடைந்து அதன் வழியாக ஈச்வரனையே அடைகிறார்கள். ஆனால் சிலர் நேர் மார்க்கமான வைதிக மார்க்கத்தைத் தழுவி நேராக ஈச்வரனை யடைகிறார்கள். மற்றவர்கள் சுற்று மார்க்கத்தைத் தழுவி கடைசியாக ஈச்வரனையே யடைகிறார்கள். ஆகாயத்திலிருந்து விழுந்த ஜலமெல்லாம் நேராகவும் பல நதிகள் வழியாகவும் சமுத்ரத்தையே அடைவது போல" என்று அத்வைத ஞானியான புஷ்ப தந்த கவி 'சிவ மஹிம்ந ஸ்தோத்ர'த்தில் ஈசுவரனைப் பார்த்து சொல்லுகிறார்.

त्रयी सांख्यं योगः पशुपतिमतं वैष्णवमिति
प्रभिन्ने प्रस्थाने परमिदमदः पथ्यमिति च ।

* முடிவான அத்வைத ஸாக்ஷாத்காரம் லக்ஷ்யமே யொழிய, அதற்குக் கொண்டுபோய் விடும் வழிப் பிரகாரங்கள் எவையும் சம்மதமே.

रुचीनां वैचित्र्यादृजुकुटिलनानापथजुषां
नृणामेको गम्यस्त्वमसि पयसामर्णव इव ॥

இந்த சித்தாந்த ஞானமுள்ளவர்க்கு ஒரு மதத்திலும் ஒரு மதத்தினரிடத்திலும் வைஷம்ய புத்தி யுண்டாகாது; சமரஸ புத்தி யுண்டாகும். சமரஸ புத்தியோடு செய்யும் ராஜ்ய பரிபாலனம் மிகவும் ஹிதமானது, உயர்ந்தது. அரசாங்கத்திற்கு முதல் யோக்யதை சமரஸ புத்தியே.

இனிமேல் 'அத்வைத சித்தாந்தத்திற்குள் ராஜ்ய பரிபாலனம்' என்பதை கவனிப்போம்.

ஜகத் ப்ரபுவான பரமாத்மாவுக்கு மாயா சம்பந்தத்தால் மனது என்ற கியாதிபெற்ற குமாரன் பிறந்தான். அவன் மூன்று உலகங்களை ஸ்ருஷ்டி செய்தான். அவனுக்கு ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி யென்று இரண்டு பத்னிகள். ப்ரவ்ருத்தியினிடத்தில் மோஹத்தைப் பிரதானமாகக் கொண்ட ஒரு ஸந்ததி யுண்டாயிற்று. காமம், லோபம், த்ருஷ்ணை, க்ரோதம், பாருஷ்யம், ஹிம்ஸை, மாத்ஸர்யம், மதம், மானம் முதலியவை அந்த சந்ததியைச் சேர்ந்தவர்கள். இவர்கள் ஜகத் ப்ரபுவான ஆத்மாவைப் பந்தப்படுத்தி, ஸ்வராஜ்யத்தை இழக்கும்படி செய்து, தெருக்களில் மிகவும் தீனனாய்த் திரியும் நிலைமைக்குக் கொண்டு வைத்துவிட்டார்கள்.

असावहंकारपरैः दुरात्मभिः निबध्य तैः पापशठैर्मदादिभिः ।
चिरं चिदानन्दमयो निरञ्जनो जगत्प्रभुर्दीनदशामनीयत ॥

இந்த சந்ததியை ஒழிக்க இந்த வம்சத்திலுண்டான வேறு சந்ததியார் தான் வேண்டும். நமக்கு நமது சகோதரர்களே சத்ருக்கள். ஆகையால் மனதுக்கு வேறு பத்னியான நிவ்ருத்தியிடத்திலுண்டான சந்ததியைச் சேர்ந்த நித்யாநித்ய வஸ்து விசாரத்தால் காமத்தையும், பொறுமையால் குரோதம் பாருஷ்யம் ஹிம்ஸை இவற்றையும், சந்தோஷத்தால் லோபம் த்ருஷ்ணை தைர்யம் வைராக்யம் திருட்டு இவைகளையும், அஸூயையால் மாத்ஸர்யத்தையும் ஒழித்துப் பிறகு உண்டான ஆத்ம வித்யையினால் மனது முதலிய எல்லாப் பந்தத்தையும் நாசமாக்கி, ஜகத் ப்ரபுவான ஆத்மாவை தீன தசையிலிருந்து ஸ்வாபாவிகமான

ஆத்ம ராஜ்யத்தில் வைக்கவேண்டும். வெளிச் சத்துருக்களையும் பரிவாரங்களையும் அடக்கி ஆளுவதைவிடக் கடினமான மேற்கூறிய உள் சத்துருக்களையும் பரிவாரங்களையும் அடக்கிப் பரிபாலனம் செய்கிற ஆத்ம ஞானிக்கு வெளி ராஜ்ய பரிபாலனம் செய்வது வெகு சுலபமான காரியம்.

உலகத்தில் உயர்ந்த ராஜ்ய பரிபாலனத்திற்குத் திருஷ்டாந்தம் ஜனகரும் ஸ்ரீ ராமரும். இன்றும் யாராவது பற்றில்லாமல் குடும்ப வாழ்க்கையையோ ஒரு பெருங் காரியத்தையோ நன்றாகப் பரிபாலித்து வந்தால், அவரைக் குறித்து ஜனங்கள் சொல்லுவதாவது, "இவர் ஜனகர் ராஜ்ய பரிபாலனம் செய்ததைப் போல் காரியங்களைச் செய்கிறார்."

இன்றும் அரசியலில் முக்கியமான காந்தி முதல் ஒரு சிறு குடியானவன் வரையில் ஒரு நல்ல ராஜ்யத்திற்கு உபமானம் சொல்லவேண்டுமானால், "இது ராம ராஜ்யம், ராம ராஜ்யமே நாம் வேண்டுவது" என்று சொல்லி வருகிறார்கள்.

அத்வைத சாஸ்திரங்களில் முதன்மையாய் விளங்குபவன ப்ருஹதாரண்யக உபநிஷத்தும் ஞானவாசிஷ்டமும். பிருகதாரண்யக உபநிஷத்தில் நடுநாயகமாய் அத்வைத வித்யையிலே கரைகண்டு விளங்குபவர் ஜனக மகாராஜா; பாரதம், தேவீ பாகவதம் முதலியவைகளிலும், யாக்ஞ்யவல்க்ய மகர்ஷி சுகப் பிரும்மம் இவர்களுடன் ஆத்ம ஞானியாக விளங்குகிறார்.

ஸ்ரீ ராமரும் ஞானவாசிஷ்டத்தில் பரமாத்வைத நிஷ்டையுடன் கதாநாயகராய் விளங்குகிறார். அத்வைத தத்வமே உருவாகி நின்ற ஜனக மகாராஜாவும் ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியுமே இன்றும் உலகத்தில் உத்தம ராஜ்ய பரிபாலனத்திற்கு வழிகாட்டிகளாய் நிற்கிறார்கள். அத்வைத தத்வமே உண்மையான ராஜ்ய பரிபாலனத்திற்குச் சிறந்த அஸ்திவாரம்.

ஜனகருடைய ராஜ்யமும் ஸ்ரீ ராமனுடைய ராஜ்யமும் நவீன சரித்திர ஆராய்ச்சியின் காலவரைக்கு முற்பட்டவை. சரித்திர வரைக்குட்பட்ட சமீப காலத்திலும், நம் நாட்டில் நமது ஹிந்து தர்மத்தை ஆபத்துக் காலத்தில் ரக்ஷித்து நிலைநாட்டிய உத்தம ராஜ்யங்கள் பண்டையன போன்ற இரண்டு ராஜ்யங்கள்,

அதிலும், முதல் ராஜ்யம் அத்வைத அனுபவ மூர்த்தியான ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளுடைய விஜயநகர ராஜ்யம். ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளுடைய பஞ்சதசி, அனுபூதி ப்ரகாசம், ஜீவன்முக்தி விவேகம் முதலிய உயரிய அத்வைத நூல்களே இன்றும் முமுக்ஷுக்களுக்கு ஆத்மானுபவ விஷயத்திலே வழி காட்டிகளாக நிற்கின்றன. நம் பரத நாட்டிற்கு அரசியல்-துறையிலும் சமயத் துறையிலும் பிற நாட்டிலிருந்து வந்த துருஷ்கர்களால் ஆபத்தேற்பட்ட காலத்தில் சுமார் 400 வருஷங்கள் வரையில் தக்ஷிண பாரதத்தை நமக்கு ரக்ஷித்துக் கொடுத்தது ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளுடைய ஸ்ரீ விஜயநகர சாம்ராஜ்யமே.

மற்றொரு ராஜ்யம் மகாராஷ்ட்ரத்தில் சிவாஜியினுடைய ராஜ்யம். விஜயநகர ராஜ்யத்திற்கடுத்தபடி, இந்தியாவில் துஷ்டர்களான அயலார்களை யெல்லாம் நடுங்கச் செய்தது இந்த சிவாஜியினுடைய ராஜ்யமே. இந்த ராஜ்யத்திற்கும் வேராய் நின்றது அத்வைத அனுபவமே. சிவாஜியின் குரு ஸ்ரீ ஸமர்த்த ராம தாஸ் ஸ்வாமிகள். ஸ்ரீ ராமதாஸ் ஸ்வாமி சதா ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியினுடைய தாஸரே.

இன்றும் மகாராஷ்ட்ரத்திலும் தஞ்சையிலும் இவருடைய சிஷ்ய பரம்பரை மடங்கள் நூற்றுக் கணக்காக விளங்குகின்றன. இவர் ஸ்ரீ ஆஞ்ஜனேய மூர்த்தியின் அவதாரமென்று இன்றும் மகாராஷ்ட்ரர்கள் நம்புகிறார்கள். இவரும் அனேகமாகக் காட்டிலேயே வசித்தார்; எப்பொழுதும் பிரும்மசர்யத்தையே கடைப்பிடித்தவர். ஸ்ரீ சிவாஜி அனேகமாய் ஒவ்வொரு நாளும் இவரைத் தரிசித்துச் சேவியாமலிரார். சிவாஜிக்கு குழந்தைப் பருவம் முதல் இவர் ராம ராஜ்யத்தையே அறிவுறுத்தி வந்தார். இவரது கிருபையால் ஏழையான சிவாஜிக்கு இது பலித்தது. [ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமியினுடைய கிருபையால் புக்கன் என்னும் ஓர் ஏழைச் சிறுவன் சக்ரவர்த்தியானன். அத்வைத வித்யாசார்யரென்று நூல்களில் ப்ரசித்திபெற்ற ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் என்னும் மகானின் கிருபையால் ஓர் ஏழை மாடு மேய்க்கியான செவ்வப்பன் என்ற சிறுவன் தஞ்சைச் சிங்காதனமேறினன்.] சிவாஜி தான் சம்பாதித்த ராஜ்யங்களை யெல்லாம் ஒவ்வொரு நாளும் இவரிடம் கொண்டுவந்து திருவடிகளில் சமர்ப்பிப்பான். இவர் அவனையே பரிபாலனம் செய்யும்படி

கிருபை புரிவார். ஸ்ரீ ராமசந்திர மூர்த்திக்கு ஸ்ரீ வசிஷ்டர் ஞானவாசிஷ்ட மூலமாய் அத்வைத தத்வத்தை யுபதேசித்தது போல், ஸ்ரீ ஸ்மர்த்த ராமதாஸ் ஸ்வாமிகளும் தம் தாஸனை சிவாஜிக்கு அத்வைதானுபவ போதம் ஏற்படவேண்டி, "தாஸ போதம்" என்னும் நூலை யியற்றி யருளினர். இன்றும் மகா ராஷ்ட்ர தேசத்தில் அத்வைத நூற்களில் இந்த "தாஸ போத"மும் இவருடைய மற்றொரு நூலான "மானஸபோத"முமே சிறப்புற்று விளங்குகின்றன. சிவாஜியின் உத்தமமான மகா ராஷ்ட்ர சாம்ராஜ்யத்திற்கும் மூலம் அத்வைத அனுபவமே.

உலகத்திலே திரும்பவும் ஜனக ராஜ்யமும் ராம ராஜ்யமும் நிலவ வேண்டுமானால், உலகம் த்வேஷமின்றி அன்புடன் செழிக்கவேண்டுமானால், உலகம் அத்வைத சாஸ்திரத்தை அன்புடன் வளர்க்கவேண்டும். ராஜ்யத்தின் அடி ஸ்தானத்தில் அத்வைத அனுபவிகள் அருள் சுரந்து நிற்கவேண்டும்.

சிவம்



ஸ்ரீ குருப்யோ நம:

# தமிழிலுள்ள அத்வைத வேதாந்த நூல்கள்

[குறிப்பு ;— தமிழிலுள்ள அத்வைத வேதாந்த நூல்களும், அவை கிடைக்கும் இடங்களும் அடியிற் காட்டப்பெறுகின்றன. போர்க் காலத்தில் அவைகளின் விலையை நிச்சயித்துக் கூற வியலவில்லையாகையால், அவற்றின் விலை எழுதப்பெறவில்லை.

| எண் | நூல் | ஆசிரியரும் அவரைப் பற்றிய காலக் குறிப்பும் | கிடைக்குமிடம் | இதரக் குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| 1 | கைவல்ய நவநீதம் (செய்யுளும், உரையும்) | செய்யுள் இயற்றியவர் :— ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள். (காலம் தெரியவில்லை)<br>உரை செய்தவர் :— ஸ்ரீ கோவிலூர் பொன்னம்பல சுவாமிகள் (சுமார் 40 வருஷங்களுக்கு முன் இருந்தவர்) | ஸ்ரீமத் சோமசுந்தர சுவாமிகள் கோ. சித. மடம் சிதம்பரம். | |
| 2 | பகவத் கீதை (செய்யுளும் உரையும்) | செய்யுள் இயற்றியவர் :— ஸ்ரீ பட்டனர் (காலம் தெரியவில்லை)<br>உரை யாசிரியர் :— ஸ்ரீ கோவிலூர் பொன்னம்பல சுவாமிகள். | ஷை விலாசம் | |
| 3 | கீதை (சுலோகமும் பொழிப்புரையும்) | த. சுந்தரராஜ சர்மா, (திருமங்கலத்தில் வசிக்கிறார்) | த. சுந்தரராஜ சர்மா, திருமங்கலம். | பாராயணத்தை முன்னிட்டுச் சிறிய அளவில் வெளியிடப்பட்டது. |
| 4 | கீதை (பெரியது. ஸ்ரீமதாசாரிய பாஷ்யத்துடன்) | ஷை | ஷை | |
| 5 | விசார ஸாகரம் (தமிழ்ப் புத்தகம் வசனம்) | தமிழில் மொழி பெயர்த்தவர் :— அ. சிவராவ் அவர்கள் (15 வருஷங்களுக்குமுன்)<br>திருத்தஞ் செய்தவர்கள் :— தஞ்சை வெ. குப்புசாமி ராஜு அவர்கள் (ஷை காலம்) | வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ். சாரதா மந்திர புத்தக சாலை, வடக்குவீதி | |

| | | | | |
|---|---|---|---|---|
| | ஷை (ஹிந்தியில் தோகா வடிவம்) | ஹிந்தி பாஷையில் இயற்றியவர் :—ஸ்ரீ சாது நிச்சல தாச ரவர்கள் (சுமார் 60 வருஷங்களுக்குமுன்) | தஞ்சாவூர். | |
| 6 | விருத்திப் பிரபாகரம் (வசனம்) | தமிழில் மொழி பெயர்த்தவர் :—தஞ்சை ஸ்ரீ வெ. குப்புசாமி ராஜூ அவர்கள் | | |
| | | ஹிந்தியில் இயற்றியவர் :—சாது ஸ்ரீ நிச்சல தாச ரவர்கள் | ஷை விலாசம். | |
| 7 | விசார சந்திரோதயம் (தமிழில் வசனம்) | இம் மூன்றும் ஹிந்தியில் இயற்றியவர் :—பீதாம்பரஜீ (சுமார் 40 வருஷங்களுக்குமுன்) | ஷை விலாசம். | |
| 8 | பால போதம் (தமிழில் வசனம்) | | | |
| 9 | விருத்தி ரத்நாவளி (தமிழில் வசனம்) | தமிழில் மொழி பெயர்த்தவர் :—தஞ்சை ஸ்ரீ வெ. குப்புசாமி ராஜூ அவர்கள் | | |
| 10 | நாநா ஜீவ வாதக் கட்டளை (வசனம்) | சேஷாத்திரி சிவனார் (சுமார் 150 வருஷங்களுக்குமுன் இருக்கலாம்) | | இது முதல் ஒன்பது புத்தகங்களை, மூல மாத்திரம்திருப்பூவணம் மடம் ஸ்ரீ காசிகானந்த சுவாமிகள் அச்சிட்டிருக்கிறார்கள். வைராக்கிய சதகத்துக்கும், வைராக்கிய தீபத்துக்கும், திருப் போரூர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் உரை இருக்கி |
| 11 | கீதாஸாரத் தாலாட்டு (செய்யுள்) | திருவேங்கடநாதர் (சுமார் 500 வருஷங்களுக்குமுன்) | | |
| 12 | சசிவன்ன போதம்* (செய்யுள்) | எறும்பூர் தத்துவராய சுவாமிகள் (சுமார் 1000 வருஷங்களுக்கு முன்) | | |
| 13 | மகாராஜா துறவு (செய்யுள்) | விருத்தாசலம் குமாரதேவ சுவாமிகள் | ஸ்ரீ காசிகானந்த சுவாமிகள் மடம், திருப்பூவனம், இராமநாதபுரம் ஜில்லா. | |
| 14 | வைராக்கிய சதகம் (செய்யுள்) | திருப்போரூர் சாந்தலிங்க சுவாமிகள் (சுமார் 300 வருஷங்களுக்கு முன்) | | |
| 15 | வைராக்கிய தீபம் (செய்யுள்) | திருப்போரூர் சாந்தலிங்க சுவாமிகள் (சுமார் 300 வருஷங்களுக்கு முன்) | | |
| 16 | வேதாந்த சூடாமணி (செய்யுள்) | நல்காற்றூர் சிவப்ரகாச சுவாமிகள் (சுமார் 300 வருஷங்களுக்கு முன்) | | |
| 17 | இலக்ஷண விருத்தி (செய்யுள்) | காரைக்குடிக்கடுத்த கோவிலூர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் (70 வருஷங்களுக்குமுன்) | | |

* இதற்குக் கோ. வடிவேலு செட்டியார் எழுதிய உரை சென்னை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் கிடைக்கும்.

| எண் | நூல் | ஆசிரியரும் அவரைப் பற்றிய காலக் குறிப்பும் | கிடைக்குமிடம் | இதரக் குறிப்புகள் |
|---|---|---|---|---|
| 18 | கைவல்யம் (மூலமாத்திரம்) | தாண்டவராய சுவாமிகள் (காலம் தெரியவில்லை) | | றது. சிதம்பர சுவாமிகள் 300 ஆண்டுகளுக்கு முன் இருந்தவர். |
| 19 | அஞ்ஞவதைப் பரணி (செய்யுள்) | எறும்பூர் தத்துவராய சுவாமிகள் (சுமார் 1000 வருஷங்களுக்குமுன்) | | |
| 20 | விவேக சூடாமணி (செய்யுள்) ஸம்ஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்ப்பு | ஸம்ஸ்கிருதத்தில் எழுதியவர் :—ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள்<br>தமிழில் எழுதியவர் :—திருவிடைமருதூர் பிக்ஷு சாஸ்திரிகள் என்னும் உலகநாத ஸ்வாமிகள் (சுமார் 80 வருஷங்களுக்கு முன்) | | |
| 21 | பஞ்ச தசி (செய்யுள்) | வடமொழியில் இயற்றியவர் :—ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகள்<br>தமிழில் இயற்றியவர் :—நித்தியானந்த சுவாமிகள் (75 வருஷங்களுக்குமுன் இருக்கலாம்)<br>சென்னை, சூளை, வீர. சுப்பையா சுவாமிகள் (15 வருஷங்களுக்குமுன்) | ஸ்ரீ காசிகானந்த சுவாமிகள் மடம், திருப்பூவனம், இராமநாதபுரம் ஜில்லா. | |
| 22 | ஈசுவர கீதை (செய்யுள்) | மொழி பெயர்த்தவர் :—எறும்பூர் தத்துவராய சுவாமிகள் | | 'ஈசுவர கீதை' கூர்ம புராணத்திலும், 'பிரம்ம கீதை' சூத ஸம்ஹிதையிலும் இருக்கின்றன. |
| 23 | பிரம்ம கீதை (செய்யுள்) | ,, ,, எறும்பூர் தத்துவராய சுவாமிகள் | | |
| 24 | ஞானவாசிட்டம் (செய்யுள்) | வீரை. ஆளவந்தார் | | |
| 25 | ஷை ஞானவாசிட்டச் செய்யுளும் உரையும் | உரை யியற்றியவர் :—சென்னை, வீர. சுப்பைய சுவாமிகள் (15 வருஷங்களுக்குமுன்) | ஸ்ரீ அனந்தானந்த சுவாமிகள் 4/5, ஆனந்தாசிரமம், வேப்பேரி, சென்னை. | |
| 26 | வேதாந்த பரிபாஷை (வசனம்) | வடமொழியில் எழுதியவர் :—தருமராஜ தீக்ஷிதர்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் :—ராமசந்திர சாஸ்திரிகள் | | |

| | | | |
|---|---|---|---|
| 27 | சித்தாந்த பிந்து (வசனம்) | தசசுலோகியை ஸம்ஸ்கிருதத்தில் இயற்றியவர்கள் :— ஸ்ரீமதாதி சங்கர பகவத் பாத ஸ்வாமிகள்<br>தசசுலோகியின் வியாக்யானமாகிய இந்த ஸித்தாந்த பிந்துவை ஸம்ஸ்கிருதத்தில் இயற்றியவர்கள் :— ஸ்ரீ மதுஸூதன ஸரஸ்வதி<br>இதனைத் தமிழில் மொழி பெயர்த்தவர் :—இராமச்சந்திர சாஸ்திரிகள் | திருப்பூவண மடத்தைக் கேட்டால் தெரியும்.<br>ஷை ஈசானிய மடம், திருவண்ணாமலை. |
| 28 | வேதாந்த மனன சிந்தாமணி (வசனம்) | திரட்டியவர்கள் :—சென்னை, வியாசர்பாடி கரபாத்திர சிவப்ரகாச சுவாமிகள் | ,, |
| 29 | வேதாந்த சித்தாந்த ஸங்கிரஹம் | ஸம்ஸ்கிருதத்தில் இயற்றியவர்கள் :—ஸ்ரீமத் ஆதி சங்கர பகவத் பாதர்சாரிய ஸ்வாமிகள்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் பெயர் தெரியவில்லை | ,, |
| 30 | ஆத்ம புராணம் (தமிழ் வசனம்) | ஸம்ஸ்கிருதத்தில் எழுதியவர் :—ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகள்<br>ஸம்ஸ்கிருதத்தில் வியாக்கியானம் எழுதியவர் :— காகாராம பண்டிதர்<br>மூல சுலோகத்தையும், வியாக்கியானத்தையும் ஹிந்தி பாஷையில் மொழிபெயர்த்தவர் :—சித்கனானந்த கிரி ஸ்வாமிகள்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் :—சென்னை வீர. சுப்பையா சுவாமிகள் | கரபாத்திர சிவப்ராக சுவாமிகள் மடம், வியாசர்பாடி, பெரம்பூர் பாரக்ஸ் போஸ்ட், சென்னை. |
| 31 | பகவத் கீதை கூடார்த்த தீபிகை (தமிழில் வசனம்) | ஹிந்தி பாஷையில் இயற்றியவர் :—சித்கனானந்தகிரி ஸ்வாமிகள்<br>தமிழில் இயற்றியவர் :—சென்னை வீர. சுப்பையா சுவாமிகள் | ஸ்ரீ ஷண்முக சுவாமிகள், கோ. ஆ. பொ. மடம், பொருள்வைத்த சேரி, சிக்கல். |
| 32 | | | |
| 33 | பாடு துறை (செய்யுள்)<br>அட்டங்கன் முறை (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள்<br>தத்துவராய சுவாமிகள் | இவ்விரண்டும் தமிழ்ப்புத்தகசாலைகளில் கிடைக்கும். |

| எண் | நூல் | ஆசிரியரும் அவரைப் பற்றிய காலக் குறிப்பும் | கிடைக்குமிடம் | இதரக் குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| 34 | குறுந்திரட்டு (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள் | இவ்விரண்டும் விலைக்குக் கிடைப்பது அருமை. | |
| 35 | பெருந்திரட்டு (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள் | | |
| 36 | பிரம்ம ஸூத்ர சாங்கர பாஷ்யம் (வசனம்) | வடமொழியில் இயற்றியவர் :—ஸ்ரீ ஆதி ஆசார்ய பகவத் பாத ஸ்வாமிகள்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் :—ஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள் (சென்னையில் வசிக்கிறார்) | 72, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை. | |
| 37 | பஞ்சதச ப்ரகரணம் (புத்தகம் 2 பாகம்) (வசனம்) | தமிழில் மொழி பெயர்த்தவர் :—தஞ்சை வெ. குப்பு ஸ்வாமி ராஜு | வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ், வடக்குவீதி, தஞ்சாவூர். | |
| 38 | தக்ஷிண மூர்த்தி அஷ்டகம் (வசனம்) | மொழி பெயர்த்தவர் :—த. சுந்தரராஜ சர்மா | த. சுந்தரராஜ சர்மா, திருமங்கலம், மதுரை. | |
| 39 | ஐதரேய உபநிஷத் பாஷ்யம் (வசனம்) | மேற்கோளுடன் ஆசார்ய பாஷ்யத்தை அனுசரித்து மொழி பெயர்த்தவர் ஷை | ஷை | |
| 40 | ஸநத் ஸுஜாதம் (வசனம்) | மொழி பெயர்த்தவர் ஷை | ஷை | |
| 41 | சாத்திரக்கோவை (செய்யுள்) இதில், | | பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ், பிரம்பூர் பாரக்ஸ் போஸ்ட், மதராஸ். | |
| | (1) மஹாராஜா துறவு | குமார தேவர் | | |
| | (2) சுத்த சாதகம் | ஷை | | |
| | (3) விஞ்ஞான சாரம் | ஷை | | |
| | (4) அத்துவித வுண்மை | ஷை | | |
| | (5) பிரம்மானுபூதி விளக்கம் | ஷை | | |
| | (6) ஞான வம்மானை | ஷை | | |

| | | | |
|---|---|---|---|
| (7) வேதாந்த தசாவத்தைக் கட்டளைச் சுருக்கம் | ஷை | பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ் பிரம்பூர் பர்ரக்ஸ் பேர்ஸ்டு, சென்னை | (1—23) வரை ஒரே புத்தகமாக மூலம் மட்டும் வெளியிடப்பட்டிருக்கிறது. (எல்லாம் செய்யுள் வடிவம்.) |
| (8) வேதாந்த தச காரியக் கட்டளை | ஷை | | |
| (9) சகச நிட்டை | ஷை | | |
| (10) உபதேச சித்தாந்தக் கட்டளை | ஷை | | |
| (11) பிரமசித்தி யகவல் | ஷை | | |
| (12) சிவதரிசன வகவல் | ஷை | | |
| (13) ஆகமநெறி யகவல் | ஷை | | |
| (14) வேதநெறி யகவல் | ஷை | | |
| (15) பிரம்மானுபவ ,, | ஷை | | |
| (16) சிவ சமரச வாத வகவல் | ஷை | | |
| என்னும் பதின்று சாத்திரங்களும், | | | |
| (17) நெஞ்சு விடு தூது | ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் | | |
| (18) ஸ்ரீ குமார தேவ சுவாமிகள் பதிகம் | ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் | | |
| (19) விருத்தாசலம் பெரியநாயகி யம்மன் விருத்தம் | குமார தேவர் | | |
| (20) சிவக்ஷேத்திரக் கோவைத் திரு வெண்பா | குரு நமசிவாய தேவ சுவாமிகள் | | |
| (21) பழமலைநாதர் பிக்ஷாடன நவ மணி மாலை | ஷை | | |

| எண் | நூல் | ஆசிரியரும் அவரைப் பற்றிய காலக் குறிப்பும் | கிடைக்குமிடம் | இதரக் குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| 18 | கைவல்யம் (மூலமாத்திரம்) | தாண்டவராய சுவாமிகள் (காலம் தெரியவில்லை) | | நது. சிதம்பர சுவாமிகள் 300 ஆண்டுகளுக்கு முன் இருந்தவர். |
| 19 | அஞ்ஞவதைப் பரணி (செய்யுள்) | எறும்பூர் தத்துவராய சுவாமிகள் (சுமார் 1000 வருஷங்களுக்குமுன்) | | |
| 20 | விவேக சூடாமணி (செய்யுள்) ஸம்ஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்ப்பு | ஸம்ஸ்கிருதத்தில் எழுதியவர் :—ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள்<br>தமிழில் எழுதியவர் :—திருவிடைமருதூர் பிக்ஷு சாஸ்திரிகள் என்னும் உலகநாத ஸ்வாமிகள் (சுமார் 80 வருஷங்களுக்கு முன்) | | |
| 21 | பஞ்ச தசி (செய்யுள்) | வடமொழியில் இயற்றியவர் :—ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகள்<br>தமிழில் இயற்றியவர் :—நித்தியானந்த சுவாமிகள் (75 வருஷங்களுக்குமுன் இருக்கலாம்)<br>சென்னை, சூளை, வீர. சுப்பையா சுவாமிகள் (15 வருஷங்களுக்குமுன்) | ஸ்ரீ காசிகானந்த சுவாமிகள் மடம், திருப்பூவனம், இராமனாதபுரம் ஜில்லா. | |
| 22 | ஈசுவர கீதை (செய்யுள்) | மொழி பெயர்த்தவர் :—எறும்பூர் தத்துவராய சுவாமிகள் | | 'ஈசுவர கீதை' கூர்ம புராணத்திலும், 'பிரம்ம கீதை' சூத ஸம்ஹிதையிலும் இருக்கின்றன. |
| 23 | பிரம்ம கீதை (செய்யுள்) | ,, ,, எறும்பூர் தத்துவராய சுவாமிகள் | | |
| 24 | ஞானவாசிட்டம் (செய்யுள்) | வீரை. ஆளவந்தார் | | |
| 25 | ஷை ஞானவாசிட்டச் செய்யுளும் உரையும் | உரை யியற்றியவர் :—சென்னை, வீர. சுப்பைய சுவாமிகள் (15 வருஷங்களுக்குமுன்) | ஸ்ரீ அனந்தானந்த சுவாமிகள் 4/5, ஆனந்தாசிரமம், வேப்பேரி, சென்னை. | |
| 26 | வேதாந்த பரிபாஷை (வசனம்) | வடமொழியில் எழுதியவர் :—தருமராஜ தீக்ஷிதர்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் :—ராமசந்திர சாஸ்திரிகள் | | |

| எண் | நூல் | இயற்றியவர் / மொழிபெயர்த்தவர் | கிடைக்குமிடம் |
|---|---|---|---|
| 27 | சித்தாந்த பிந்து (வசனம்) | தசசுலோகியை ஸம்ஸ்கிருதத்தில் இயற்றியவர்கள் :— ஸ்ரீமதாதி சங்கர பகவத் பாத ஸ்வாமிகள்<br>தசசுலோகியின் வியாக்யானமாகிய இந்த ஸித்தாந்த பிந்துவை ஸம்ஸ்கிருதத்தில் இயற்றியவர்கள் :— ஸ்ரீ மதுஸூதன ஸரஸ்வதி<br>இதனைத் தமிழில் மொழி பெயர்த்தவர் :—இராமச்சந்திர சாஸ்திரிகள் | திருப்பூவண மடத்தைக் கேட்டால் தெரியும்.<br>ஷை<br>ஈசானிய மடம், திருவண்ணாமலை. |
| 28 | வேதாந்த மனன சிந்தாமணி (வசனம்) | திரட்டியவர்கள் :—சென்னை, வியாசர்பாடி கரபாத்திர சிவப்ரகாச சுவாமிகள் | ,, |
| 29 | வேதாந்த சித்தாந்த ஸங்கிரஹம் | ஸம்ஸ்கிருதத்தில் இயற்றியவர்கள் :—ஸ்ரீமத் ஆதி சங்கர பகவத் பாதர்சாரிய ஸ்வாமிகள்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் பெயர் தெரியவில்லை | ,, |
| 30 | ஆத்ம புராணம் (தமிழ் வசனம்) | ஸம்ஸ்கிருதத்தில் எழுதியவர் :—ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகள்<br>ஸம்ஸ்கிருதத்தில் வியாக்கியானம் எழுதியவர் :— காகாராம பண்டிதர்<br>மூல சுலோகத்தையும், வியாக்கியானத்தையும் ஹிந்தி பாஷையில் மொழிபெயர்த்தவர் :—சித்கனானந்த கிரி ஸ்வாமிகள்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் :—சென்னை வீர. சுப்பையா சுவாமிகள் | கரபாத்திர சிவப்ராக சுவாமிகள் மடம், வியாசர்பாடி, பெரம்பூர் பாரக்ஸ் போஸ்ட், சென்னை. |
| 31 | பகவத் கீதை கூடார்த்த தீபிகை (தமிழில் வசனம்) | ஹிந்தி பாஷையில் இயற்றியவர் :—சித்கனானந்தகிரி ஸ்வாமிகள்<br>தமிழில் இயற்றியவர் :—சென்னை வீர. சுப்பையா சுவாமிகள் | ஸ்ரீ ஷண்முக சுவாமிகள், கோ. ஆ. பொ. மடம், பொருள்வைத்த சேரி, சிக்கல். |
| 32 | பாடு துறை (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள் | இவ்விரண்டும் தமிழ்ப்புத்தகசாலைகளில் கிடைக்கும். |
| 33 | அட்டங்கன் முறை (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள் | |

36

| எண் | நூல் | ஆசிரியரும் அவரைப் பற்றிய காலக் குறிப்பும் | கிடைக்குமிடம் | இதரக் குறிப்புக்கள் |
| --- | --- | --- | --- | --- |
| 18 | கைவல்யம் (மூலமாத்திரம்) | தாண்டவராய சுவாமிகள் (காலம் தெரியவில்லை) | | நது. சிதம்பர சுவாமிகள் 300 ஆண்டுகளுக்கு முன் இருந்தவர். |
| 19 | அஞ்ஞவதைப் பரணி (செய்யுள்) | எறும்பூர் தத்துவராய சுவாமிகள் (சுமார் 1000 வருஷங்களுக்குமுன்) | | |
| 20 | விவேக சூடாமணி (செய்யுள்) ஸம்ஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்ப்பு | ஸம்ஸ்கிருதத்தில் எழுதியவர் :—ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள்<br>தமிழில் எழுதியவர் :—திருவிடைமருதூர் பிக்ஷு சாஸ்திரிகள் என்னும் உலகநாத ஸ்வாமிகள் (சுமார் 80 வருஷங்களுக்கு முன்) | | |
| 21 | பஞ்ச தசி (செய்யுள்) | வடமொழியில் இயற்றியவர் :—ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகள்<br>தமிழில் இயற்றியவர் :—நித்தியானந்த சுவாமிகள் (75 வருஷங்களுக்குமுன் இருக்கலாம்)<br>சென்னை, சூளை, வீர. சுப்பையா சுவாமிகள் (15 வருஷங்களுக்குமுன்) | ஸ்ரீ காசிகானந்த சுவாமிகள் மடம், திருப்பூவனம், இராமனதபுரம் ஜில்லா. | |
| 22 | ஈசுவர கீதை (செய்யுள்) | மொழி பெயர்த்தவர் :—எறும்பூர் தத்துவராய சுவாமிகள் | | 'ஈசுவர கீதை' கூர்ம புராணத்திலும், 'பிரம்ம கீதை' சூத ஸம்ஹிதையிலும் இருக்கின்றன. |
| 23 | பிரம்ம கீதை (செய்யுள்) | ,, ,, எறும்பூர் தத்துவராய சுவாமிகள் | | |
| 24 | ஞானவாசிட்டம் (செய்யுள்) | வீரை. ஆளவந்தார் | | |
| 25 | ஷை ஞானவாசிட்டச் செய்யுளும் உரையும் | உரை யியற்றியவர் :—சென்னை, வீர. சுப்பைய சுவாமிகள் (15 வருஷங்களுக்குமுன்) | ஸ்ரீ அனந்தானந்த சுவாமிகள் 4/5, ஆனந்தாசிரமம், வேப்பேரி, சென்னை. | |
| 26 | வேதாந்த பரிபாஷை (வசனம்) | வடமொழியில் எழுதியவர் :—தருமராஜ தீக்ஷிதர்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் :—ராமசந்திர சாஸ்திரிகள் | | |

| | | | |
|---|---|---|---|
| 27 | சித்தாந்த பிந்து (வசனம்) | தசசுலோகியை ஸம்ஸ்கிருதத்தில் இயற்றியவர்கள் :— ஸ்ரீமதாதி சங்கர பகவத் பாத ஸ்வாமிகள்<br>தசசுலோகியின் வியாக்யானமாகிய இந்த ஸித்தாந்த பிந்துவை ஸம்ஸ்கிருதத்தில் இயற்றியவர்கள் :— ஸ்ரீ மதுஸூதன ஸரஸ்வதி<br>இதனைத் தமிழில் மொழி பெயர்த்தவர் :—இராமச் சந்திர சாஸ்திரிகள் | திருப்பூவண மடத்தைக் கேட்டால் தெரியும்.<br>ஷை<br>ஈசானிய மடம், திருவண்ணமலை. |
| 28 | வேதாந்த மனன சிந்தாமணி (வசனம்) | திரட்டியவர்கள் :—சென்னை, வியாசர்பாடி கரபாத்திர சிவப்ரகாச சுவாமிகள் | ,, |
| 29 | வேதாந்த சித்தாந்த ஸங்கிரஹம் | ஸம்ஸ்கிருதத்தில் இயற்றியவர்கள் :—ஸ்ரீமத் ஆதி சங்கர பகவத் பாதர்சாரிய ஸ்வாமிகள்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் பெயர் தெரியவில்லை | ,, |
| 30 | ஆத்ம புராணம் (தமிழ் வசனம்) | ஸம்ஸ்கிருதத்தில் எழுதியவர் :—ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகள்<br>ஸம்ஸ்கிருதத்தில் வியாக்கியானம் எழுதியவர் :— காகாராம பண்டிதர்<br>மூல சுலோகத்தையும், வியாக்கியானத்தையும் ஹிந்தி பாஷையில் மொழிபெயர்த்தவர் :—சித்கனனந்த கிரி ஸ்வாமிகள்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் :—சென்னை வீர. சுப்பையா சுவாமிகள் | கரபாத்திர சிவப்ராகசுவாமிகள் மடம், வியாசர்பாடி, பெரம்பூர் பாரக்ஸ் போஸ்ட், சென்னை. |
| 31 | பகவத் கீதை கூடார்த்த தீபிகை (தமிழில் வசனம்) | ஹிந்தி பாஷையில் இயற்றியவர் :—சித்கனனந்தகிரி ஸ்வாமிகள்<br>தமிழில் இயற்றியவர் :—சென்னை வீர. சுப்பையா சுவாமிகள் | ஸ்ரீ ஷண்முக சுவாமிகள், கோ. ஆ. பொ. மடம், பொருள்வைத்த சேரி, சிக்கல். |
| 32 | பாடு துறை (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள் | இவ்விரண்டும் தமிழ்ப்புத்தகசாலைகளில் கிடைக்கும். |
| 33 | அட்டங்கன் முறை (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள் | |

| எண் | நூல் | ஆசிரியரும் அவரைப் பற்றிய காலக் குறிப்பும் | கிடைக்குமிடம் | இதரக் குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| 34 | குறுந்திரட்டு (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள் | இவ்விரண்டும் விலைக்குக் கிடைப்பது அருமை. | |
| 35 | பெருந்திரட்டு (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள் | | |
| 36 | பிரம்ம ஸூத்ர சாங்கர பாஷ்யம் (வசனம்) | வடமொழியில் இயற்றியவர் :—ஸ்ரீ ஆதி ஆசார்ய பகவத் பாத ஸ்வாமிகள்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் :—ஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள் (சென்னையில் வசிக்கிறார்) | 72, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை. | |
| 37 | பஞ்சதச ப்ரகரணம் (புத்தகம் 2 பாகம்) (வசனம்) | தமிழில் மொழி பெயர்த்தவர் :—தஞ்சை வெ. குப்பு ஸ்வாமி ராஜு | வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ், வடக்குவீதி, தஞ்சாவூர். | |
| 38 | தக்ஷிணா மூர்த்தி அஷ்டகம் (வசனம்) | மொழி பெயர்த்தவர் :—த. சுந்தரராஜ சர்மா | த. சுந்தரராஜ சர்மா, திருமங்கலம், மதுரை. | |
| 39 | ஐதரேய உபநிஷத் பாஷ்யம் (வசனம்) | மேற்கோளுடன் ஆசார்ய பாஷ்யத்தை அனுசரித்து மொழி பெயர்த்தவர் ஷை | ஷை | |
| 40 | ஸகத் ஸுஜாதம் (வசனம்) | மொழி பெயர்த்தவர் ஷை | ஷை | |
| 41 | சாத்திரக்கோவை (செய்யுள்) இதில், | | பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ், பிரம்பூர் பாரக்ஸ் போஸ்ட், மதராஸ். | |
| | (1) மஹாராஜா துறவு | குமார தேவர் | | |
| | (2) சுத்த சாதகம் | ஷை | | |
| | (3) விஞ்ஞான சாரம் | ஷை | | |
| | (4) அத்துவித வுண்மை | ஷை | | |
| | (5) பிரம்மானுபூதி விளக்கம் | ஷை | | |
| | (6) ஞான வம்மானை | ஷை | | |

| | | | |
|---|---|---|---|
| (7) வேதாந்த தசாவத்தைக் கட்டளைச் சுருக்கம் | ஷை | பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ் பிரம்பூர் பர்ரக்ஸ் போர்ஸ்டு, சென்னை | (1—23) வரை ஒரே புத்தகமாக மூலம் மட்டும் வெளியிடப்பட்டிருக்கிறது. (எல்லாம் செய்யுள் வடிவம்.) |
| (8) வேதாந்த தச காரியக் கட்டளை | ஷை | | |
| (9) சகச நிட்டை | ஷை | | |
| (10) உபதேச சித்தாந்தக் கட்டளை | ஷை | | |
| (11) பிரமசித்தி யகவல் | ஷை | | |
| (12) சிவதரிசன வகவல் | ஷை | | |
| (13) ஆகமநெறி யகவல் | ஷை | | |
| (14) வேதநெறி யகவல் | ஷை | | |
| (15) பிரம்மானுபவ ,, | ஷை | | |
| (16) சிவ சமரச வாத வகவல் | ஷை | | |
| என்னும் பதின்று சாத்திரங்களும், | | | |
| (17) நெஞ்சு விடு தூது | ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் | | |
| (18) ஸ்ரீ குமார தேவ சுவாமிகள் பதிகம் | ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் | | |
| (19) விருத்தாசலம் பெரியநாயகி யம்மன் விருத்தம் | குமார தேவர் | | |
| (20) சிவக்ஷேத்திரக் கோவைத் திருவெண்பா | குரு நமசிவாய தேவ சுவாமிகள் | | |
| (21) பழமலைநாதர் பிக்ஷாடன நவமணி மாலை | ஷை | | |

| எண் | நூல் | ஆசிரியரும் அவரைப் பற்றிய காலக் குறிப்பும் | கிடைக்குமிடம் | இதரக் குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| 34 | குறுந்திரட்டு (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள் | இவ்விரண்டும் விலைக்குக் கிடைப்பது அருமை. | |
| 35 | பெருந்திரட்டு (செய்யுள்) | தத்துவராய சுவாமிகள் | | |
| 36 | பிரம்ம ஸூத்ர சாங்கர பாஷ்யம் (வசனம்) | வடமொழியில் இயற்றியவர் :—ஸ்ரீ ஆதி ஆசார்ய பகவத் பாத ஸ்வாமிகள்<br>தமிழில் மொழி பெயர்த்தவர் :—ஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள் (சென்னையில் வசிக்கிறார்) | 72, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை. | |
| 37 | பஞ்சதச ப்ரகரணம் (புத்தகம் 2 பாகம்) (வசனம்) | தமிழில் மொழி பெயர்த்தவர் :—தஞ்சை வெ. குப்பு ஸ்வாமி ராஜு | வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ், வடக்குவீதி, தஞ்சாவூர். | |
| 38 | தக்ஷிண மூர்த்தி அஷ்டகம் (வசனம்) | மொழி பெயர்த்தவர் :—த. சுந்தரராஜ சர்மா | த. சுந்தரராஜ சர்மா, திருமங்கலம், மதுரை. | |
| 39 | ஐதரேய உபநிஷத் பாஷ்யம் (வசனம்) | மேற்கோளுடன் ஆசார்ய பாஷ்யத்தை அனுசரித்து மொழி பெயர்த்தவர் ஷை | ஷை | |
| 40 | ஸநத் ஸுஜாதம் (வசனம்) | மொழி பெயர்த்தவர் ஷை | ஷை | |
| 41 | சாத்திரக்கோவை (செய்யுள்) இதில், | | பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ், பிரம்பூர் பாரக்ஸ் போஸ்ட், மதராஸ். | |
| | (1) மஹாராஜா துறவு | குமார தேவர் | | |
| | (2) சுத்த சாதகம் | ஷை | | |
| | (3) விஞ்ஞான சாரம் | ஷை | | |
| | (4) அத்துவித வுண்மை | ஷை | | |
| | (5) பிரம்மானுபூதி விளக்கம் | ஷை | | |
| | (6) ஞான வம்மானை | ஷை | | |

| | | | | |
|---|---|---|---|---|
| (7) வேதாந்த தசாவத்தைக் கட்டளைச் சுருக்கம் | ஷை | | பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ் பிரம்பூர் பர்ரக்ஸ் பேர்ஸ்டு, சென்னை | (1—23) வரை ஒரே புத்தகமாக மூலம் மட்டும் வெளியிடப்பட்டிருக்கிறது. (எல்லாம் செய்யுள் வடிவம்.) |
| (8) வேதாந்த தச காரியக் கட்டளை | ஷை | | | |
| (9) சகச நிட்டை | ஷை | | | |
| (10) உபதேச சித்தாந்தக் கட்டளை | ஷை | | | |
| (11) பிரமசித்தி யகவல் | ஷை | | | |
| (12) சிவதரிசன வகவல் | ஷை | | | |
| (13) ஆகமநெறி யகவல் | ஷை | | | |
| (14) வேதநெறி யகவல் | ஷை | | | |
| (15) பிரம்மானுபவ ,, | ஷை | | | |
| (16) சிவ சமரச வாத வகவல் | ஷை | | | |
| என்னும் பதின்று சாத்திரங்களும், | | | | |
| (17) நெஞ்சு விடு தூது | ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் | | | |
| (18) ஸ்ரீ குமார தேவ சுவாமிகள் பதிகம் | ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் | | | |
| (19) விருத்தாசலம் பெரியநாயகி யம்மன் விருத்தம் | குமார தேவர் | | | |
| (20) சிவக்ஷேத்திரக் கோவைத் திரு வெண்பா | குரு நமசிவாய தேவ சுவாமிகள் | | | |
| (21) பழமலைநாதர் பிக்ஷாடன நவ மணி மாலை | ஷை | | | |

| எண் | நூல் | ஆசிரியரும் அவரைப் பற்றிய காலக் குறிப்பும் | கிடைக்குமிடம் | இதரக் குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| | (22) பெரியநாயகி யம்மை விருத்தம் (23) பெரியநாயகி யம்மை கலித்துறை | குரு நமசிவாய தேவ சுவாமிகள் ஷை | பி. நா. சி. பிரதரஸ், பிரம்பூர் பாரக்ஸ் போஸ்ட், மதராஸ் | |
| 42 | வாசுதேவ மனனம் என்ற விவேக சாரம் (வசனம்) | வடமொழியில் வாசுதேவ யோகிந்திரர்; தமிழில் :— காஞ்சிபுரம் வா. சரவணமுத்து பிள்ளை | ஷை | |
| 43 | பிரபோத சந்திரோதயம் என்னும் மெய்ஞ் ஞான விளக்கம் (செய்யுள்) | மாதைத் திருவேங்கட ஸ்வாமிகள் (350 வருஷங்களுக்குமுன்) | கோ. சித. மடாலயம் சிதம்பரம். | |
| 44 | கைவல்ய நவநீதம் (வசனம்) | ஆரணி. குப்புஸ்வாமி முதலியார் | 'ஆனந்த போதினி' ஆபீஸ், சௌகார் பேட்டை, மதராஸ் | |
| 45 | ஈச, கேநோப நிஷத்துக்கள் (வசனம்) (ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாத பாஷ்யத்துடனும், தமிழ் மொழி பெயர்ப்புடனும்) | ஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள் | 72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை. | |

இந்தப் பட்டியல், திருவண்ணுமலை ஈசானிய மடம் ஸ்ரீ நடேச சுவாமிகளும் நாகைப்பட்டினம் பிரும்மஸ்ரீ V. K. வேங்கடராம சாஸ்திரிகளும் எழுதிய குறிப்புக்களைக் கொண்டு எழுதப்பெற்றது.